அன்னாசயம் = அன்னவாசயம்

அன்னாசயவிரணம் = வயிற்றிலுண்டாகும் புண்

அன்னாசி = பரங்கித்தாழை

அன்னாசு = அன்னாசிப்பூ

அன்னார் = கல்நார்

அன்னிகாருகம் = மலப்புழு

அன்னியகம் = இருவாட்சி; மல்லிகை,

அன்னியசாரம் = குங்கிலியம்

அன்னியசுவேதம் = வசம்பு

அன்னியதோ வாதநோய் = கண், நெற்றி முதலிய இடங்களில் மிக்க வலியை யுண்டாக்குமோர் கண்ணோய்

அன்னியபதார்த்தம் = மாமிசபண்டம்

அன்னியபிருட்டம் = குயில்

அன்னியபிருத்து = காக்கை

அன்னியம், அன்னிய விருதம் = குயில்

அன்னிய புட்டம் = குயில்

அன்னியம் = குயில், சிறு கரும்பு

அன்னியவாபம் = தன் முட்டைகளை வேறு பறவைகளின் கூடுகளில் வைக்கும் குயில்

அன்னிய வோடாலிகாகிரகம் = தாய் அல்லது குழந்தையைத் தாக்கும் ஓர்வகைக் கிரக தோடம்

அன்னியேத்துக வாதம் = உப்பு அல்லது சீதளப்பண்டங்களை உண்பதால் வாயு, பித்தத்துடன் கூடி, முதுகு, கழுத்து விலாப்பக்கம் முதலிய இடங்களில் பரவி வலி ஏற்படுத்தும் வாதநோய்

அன்னிலா = சீத்தா அனிநுணா

அன்னீயம் = கரும்பு

அன்னுகம் = பேய்ப்பசலை பேய்ப்பருத்தி

அன்னுவாசனம் = அபானவாயினுள்ளே புகட்டும் நெய்ப்பற்றுள்ள ஓர் மருந்து

அன்னெறிச்சான், அன்னெறிஞ்சான் = சிவனார் வேம்பு

அன்னை = கொன்றை மரம்

அன்னோபிதம் = மஞ்சள், குன்றிமணி

ஆ

ஆ = ஆச்சாமரம், பசு, எருமை, பெண் எருமை, பெண்மரை, விலங்கின் பெண், வைகாசி மாதம், பொதுப்பெயர், நெல்லிக்காய், வலியைக் குறிக்கும் சொல்

ஆககம் = மூக்கினுள் சவ்வுக்குக் காணும் தாபிதம் (அழற்சி)

ஆகசம் = உடலிலிருந்துண்டானது

ஆகசி = திப்பிலி

ஆகசேறு = கொன்றை

ஆகச்சம் = ஆடாதோடை

ஆகணம் = சுரை

ஆகண்டகணம் = பெருங்காயம்

ஆகண்டம் = தொண்டைவரை

ஆகத்தின்மையம் = புருவமத்திமம்

ஆகத்தையுருக்கி = எலும்பையுருக்கி அதாவது அஸ்தி பேதி, உடலையுருக்கி

ஆகநாமி = அவரை

ஆகநிகம் = எலி, பன்றி

ஆகந்துகசுரம் = நோய்களின் கடுமை, காயம், விஷம், பூண்டு, களை முகர்தல், அச்சம், பலவீனம், தோடம் முதலிய காரணங்களால் ஏற்படுங்காய்ச்சல், சில நாட்கள் கழிந்த பிறகு நிசசுரமாக மாறிவிடும்

ஆகந்துக சோகை = இரத்தக் கேட்டினால் ஒரு உறுப்பில் உண்டான வீக்கம்; பிற உறுப்புகளுக்கும் பரவும் சோகை நோய்

ஆகந்துகம சூரிகை = உடம்பில் ஒரு (நெற்றி, முகம்) உறுப்பில் அம்மை கண்டு பிறகு உடம்பு முழுவதும் பரவும் சின்ன அம்மை

ஆகந்துகம் = திடீரென ஏற்பட்டது உணவுகளில் காரண மில்லாமல் வெளிக் காரணங்களினால் ஏற்பட்டது

ஆகந்துக விரணம் = நெருப்பினாலும் அடி, வெட்டு, குத்து முதலியவைகளினாலும் ஏற்பட்ட புண்,

ஆகம = சுரை

ஆகமசிறுவீடு = கோணி

ஆகமணல் = நாகமணல்

ஆகமத்தாரை = கொட்டைப்பாசி

ஆகமந்தம் = உடற்சோர்வு

ஆகமம் = மரப்பொது

ஆகமவுருத்தி = வீரம் பேதத்தி லொன்று

ஆகமனகாலம் = பிரசவ காலம்

ஆகம் = உடல், மார்பு, சுரை, குப்பைமேனி, நிமிளை, மனம்

ஆகம்பனம் = நடுக்கம்

ஆகம்பிதம் = தலையாட்டல், நடுக்கம்

ஆகயமாஞ்சில் = கௌரிபாடாணம்

ஆகரம் = சாலாங்கபாடாணம் உட்கொள்ளும் வாயு, மூச்சு, இஞ்சி

ஆகரி = திப்பிலி, தாதுப்பொருள், சிறுகட்டுக்கொடி

ஆகரி திராவகம் = தாதுப்பொருளினின்று இறக்கி வடிகட்டிய திராவகம்

ஆகரிநஞ்சு = தாதுவிடம்

ஆகரி விவரணம் = தாதுவர்க்கத்தின் விவரத்தைச் சொல்லும் நூல்

ஆகருஷ்ண தம்பனம் = உடம்பை வில்லைப் போல் முன்பக்கமாக இழுத்து வளையச் செய்து நிமிர முடியாமல் பிரமையை யுண்டாக்கு மோர் நிலைமை

ஆகர்ப்பும் = வயிற்றுக்குள்ளிருக்கும் குழந்தை உள்பட

ஆகலம் = நெல்லி, தண்ணீர்

ஆகலை = மிருகத்தின் காற்குளம்பு

ஆகவாசு = புங்கு

ஆகளைரசம் = அபினி

ஆகற்டம் = வெள்ளை நாயுருவி

ஆகற்பம் = நோயை அதிகப் படுத்துதல்

ஆகனம் = இருப்புலக்கை

ஆகனிகம் = எலி, பன்றி

ஆகாசக் கடம்பு = புகையூறல்

ஆகாக் கடுக்காய் = இரட்டைக் காயுள்ள கடுக்காய் இது மருந்திற்குதவாது

ஆகாக் களங்கு = மிருதாரசிங்கி இது பாடாண வகையைச் சேர்ந்தது

ஆகாச கங்கை = வெடியுப்புத் திராவகம், பனி நீர், அமுரி நீர்

ஆகாச கட்டம் = பித்தளை

ஆகாச கத்திரி = வெண்டை

ஆகாசகபாலம் = தலையினுச்சி, உச்சிக்குழி

ஆகாசகம்பி = கம்பியுப்பு மூலி, வெடியுப்பு அதாவது ஆறாங்காய்ச்சல் வெடியுப்பு

ஆகாசகரடம் = புகையூறல், ஒட்டடை

ஆகாசகருடக் கிரீகம் = (பேய்ப்பாலை)

ஆகாசகருடன், ஆகாசக்கருடன் = கொல்லன் கோவை, பேயத்தி, பேய்ச் சீந்தில், புகையூறல்

ஆகாச கருடாசலம் = பேருடை அல்லது பெரிய உடை, மரம்

ஆகாச கருடாதி = பேயத்தி

ஆகாச களங்கு = மிருதார சிங்கி

ஆகாசக்கல் = ஆகாயத்தில் பறக்கும் அணு

ஆகாசகாமி = ஆகாயத்திற்பாயுங் குதிரை

ஆகாசகிரிடன் = புகையூறல்

ஆகாசகெருடன், ஆகாசகெருட்டை = கொல்லன் கோவை, பேய்ச்சீந்தில், கொட்டைப் பாசி, சீந்தில், அமுதசர்க்கரை, புகையூறல், நிலச் சர்க்கரை, அழிஞ்சில், சாகாமூலி, ஒட்டடை

ஆகாசகெவுளி, ஆகாசகெவுனி = சூதம்

ஆகாசக்கொடி = ஆகாசக் கருடன் கொடி

ஆகாசசிவனார் உப்பு, ஆகாசசிவனார்விந்து = வெடியுப்பு

ஆகாச தந்தம் = உடலின் நகம்

ஆகாசதரன் = ஒட்டடை

ஆகாசதானம் = கொட்டைப் பாசி அல்லது குளத்துப்பாசி

ஆகாசத்தக்கை = வெள்ளரி

ஆகாசத்தங்குசம் = பேய்ப்பாகல், அந்தரத்தாமரை

ஆகாசத் தாமரை = கொட்டைப்பாசி, கொட்டைப் பாக்கு, ஒரு நீர்ப்பூண்டு, காட்டுப் பசுவின் பால், குளிர்த்தாமரை

ஆகாத்திரன் = வீரம்

ஆகாசத்தூளி = ஒட்டடை

ஆகாசத்தூள் = ஒட்டடை, புகையூறல்

ஆகாசபட்சி = சாதகப்புள்

ஆகாசப்பகுதி = பூநீறு

ஆகாசபலம் = விண்வீழ் கொள்ளி எனும் எரிமீன்

ஆகாசபறவை = நாரை

ஆகாசபாவனம் = கொடியார் கூந்தல்

ஆகாசப்புரவி = முப்பு

ஆகாசமாஞ்சில் = சிறுசடா மாஞ்சில்

ஆகாசமூலி = ஆகாசத் தாமரை

ஆகாச மூலித்தாள் = ஆகாசத்தூள், ஒட்டடை

ஆகாசமெருகு = பூநீரினின்று, தயாரிக்கும் ஒரு வகை மெழுகு

ஆகாசம் = வாயு மண்டலம், கல்பாடாணம், கருவிளங்காய், மாடு, ஐம்பூதத்தொன்று

ஆகாசவமுர்தம் = தென்னங்கள்

ஆகாசவர்ணன் = அலரிப்பூ

ஆகாசவல்லி = கொத்தான், சீந்தில் கொடி, ஒருவகை பூண்டு, படர்கொடி, வெள்ளல்லி, அல்லி, செவ்வல்லி, செவ்வாம்பல், சிற்றல்லி, சிற்றாம்பல்

ஆகாச விந்து = விந்து

ஆகாசவினாசினி = கழுதை, புள்ளிமான்

ஆகாசவுருவி = புல்லுருவி

ஆகாசவெளியுப்பு = சவர்க்காரம்

ஆகாசவெள்ளரி = முள்வெள்ளரி

ஆகாசவேணி = பேய்ப்பீர்க்கு

ஆகாசி = சீந்தில், கெருடன்

ஆகாஞ்செரு = கொன்னை

ஆகாடம், ஆகாட்டம் = நாயுருவி, செந்நாயுருவி வெண்ணாயுருவி

ஆகாத கடுக்காய் = இரட்டைக் காயுள்ள கடுக்காய் இது மருந்திற்குதவாது

ஆகாதவிடத் திரணச் சோதி = நச்சுப்புல்

ஆகாநிலை = எலிக்காதிலை

ஆகாப்பசு = குடிப்பதற்கு உதவாத பாலையுடைய பசு, அரணை நோய்ப் பசு, தாரா நோய்ப் பசு, வெண் புள்ளிப் பசு, இடுகாட்டெலும்பு உண்ணும் பசு, மலமருந்தும் பசு

ஆகாப்பழ மாக்கிய சக்தி = வேம்பு

ஆகாப் பாத்திரம் = மருந்து வகைகளைக் காய்ச்சுவதற்கு உபயோகப்படாத நவலோகத்தினால் செய்த பாத்திரம்

ஆகா மூலிகை = கடற்காற்று வாடை யிலிருக்கும் மூலிகை, சுடுகாடு முதலிய இடங்களில் முளைக்கும் பூண்டு, பச்சிலை இவை மருந்திற்கு உதவாது

ஆகாய கக்கரி = ஒருவகைக் கக்கரிக் காய், ஆகாயமுள் வெள்ளரி, இது மருந்தின் வேகத்தைப் போக்கும்

ஆகாய கத்தரி = வெண்டை

ஆகாயகரிக்காய் = ஆகாயகக்கரி

ஆகாய கருடன் = கொல்லன் கோவை

ஆகாயக்கக்கரி = ஆகாய கக்கரி

ஆகாயக்கல் = ஆகாயத்தில் பறக்கும் அணு

ஆகாய சூலை = குதிரைகளுக்குக் காணுமோர் நோய்

ஆகாய தந்தம் = உடல் நகம்

ஆகாயத் தாமரை = நந்தியா வட்டை

ஆகாய நுண்ணணு = பரமாணு

ஆகாய பானம் = மேகம்

ஆகாயப்பாசி = உசிலம்பாசி ஒருவகைப் பூண்டு

ஆகாயப்பூரிதம் = பேய் முசுட்டை

ஆகாய மஞ்சி, ஆகாய மாஞ்சி, ஆகாய மாஞ்சில் = சிறுசடாமாஞ்சில்

ஆகாய மிளகு = வால் மிளகு

ஆகாய முள்வெள்ளரி = ஆகாயகக்கரி

ஆகாய மூலி = ஆகாயத் தாமரை, பூமியின் உதவியின்றி காற்றின் சத்தைக் கொண்டு முளைத் துயிர் வாழும் பச்சிலைகள்

ஆகாயம் = வானம், பஞ்சபூதப் பிரிவுகளிலொன்று ஆதார மற்ற வேர்களையுடைய பூண்டுகளையும் புல்லுருவிகளையும் குறிப்பதற்கு முதன் மொழியாக வரும் சொல், வெண்ணாயுருவி கௌரி பாடாணம்

ஆகாயம் நிலைத்தவன் = சாயாவிருட்சம்

ஆகாயவல்லி = கொத்தான் சீந்திற் கொடி, ஒருவகைப் படர்கொடி

ஆகாயவழுதுணை = வெண்டை

ஆகாயவெளி = மூளையின் வெளி, மூளை

ஆகாய வெள்ளரி = ஆகாயகக்கரி

ஆகாரசம் = சோறு, சாப்பாடு

ஆகாரசம்பனம் = நிணநீர்

ஆகாரசுத்தி = நெய்

ஆகாரநிசரண மார்க்கம் = மலவாயில்

ஆகாரம் = நெய், இரை, சோறு, வெடியுப்பு, ஆகாசத்தூள்

ஆகாரவேசி = வசம்பு, உடம்பு

ஆகாரி = பூனை, உயிர்

ஆகாரியம் = ஒருவிதக் கட்டு, சத்திர சிகிச்சையினால் உடம்பினின்று வெளிப் படுதற்குரிய நோய்கள்

ஆகாவரிதகி = அழுகண்ணி

ஆகிகுந்தம் = புனுகு மரம்

ஆதிபத்திரம், ஆகிய பத்திரம் = தாமரை

ஆகிய பரங்கி = கருநெல்லி

ஆகிரந்தம், ஆகிரந்தனம், ஆகிராந்தம் = புங்க மரம்

ஆகிருதி = உடல்

ஆகிருநத்தம், ஆகிருநந்தனம் = புங்கமரம்

ஆகிருநனந்தம் = புங்க

ஆகினி ஆகிருந்தன = ஈரப்பலா

ஆகு = எலி, தாமரை, பெருச்சாளி, கொப்பூழ், பன்றி, புனுகு, பூனை, மொச்சைக் காய் போன்ற பயிறு வகைகள், பாடாணம், வெள்ளைப் பாடாணம், கௌரிப் பாடாணம்

ஆகுகதம் = நாவல்

ஆகுகர்ணி = எலிச்செவி

ஆகுஞ்செயலாள் = செவ்வகத்தி

ஆகுதம் = இஞ்சி, சுரம், இரண்டும்

ஆகுபர்ணி = ஒருவகைப் பூடு

ஆகுபாஷாணம் = எலிப்பாடாணம் (அல்) வெள்ளைப் பாடாணம், காந்தக்கல்

ஆகுபுகு, ஆகுபுக்கு = பூனை

ஆகும் பாத்திரம் = குடிநீர், எண்ணெய், இலேகியம் முதலியவற்றைக் காய்ச்சு வதற்காக உபயோகிக்கும் மட்பாண்டம், வெண்கலம், பொன், வெள்ளி, செம்பு முதலியவைகளிலான பாத்திரங்களையும் உபயோகிப்பர் ஆனால், அவை அவ்வளவு சிறந்ததல்ல

ஆகுலம் = பொற்கொன்றை

ஆகுலி = ஆவாரை (பொது), வழுதலை, சிற்றரத்தை

ஆகுவாகனன் மெச்சுஞ்சாறு = வில்வச்சாறு, கையான் சாறு

ஆகுவாகனன் மெச்சுமிலை = வில்வயிலை

ஆகுவால் = பெருச்சாளி வால்

ஆகுவிஷம் = எலிபாடாணம்

ஆகுனி வாதம் = உடம்பெங்கும் குத்தலையும் வீக்கத்தையும் உண்டாக்கும் ஒரு வாத நோய்

ஆகேருகம் = தண்ணீர்விட்டான்

ஆகேவகமுள்ளி = பேய்முள்ளி

ஆகேறு = கொன்றை, சரக்கொன்றை

ஆகைதம் = அரத்தை

ஆகோதம் = சரக்கொன்றை, கொன்றை

ஆக்கணாங் கெளிறு = ஒருவகைக் கெளிற்று மீன்

ஆக்கதம் = முதலை

ஆக்கம் = பொன்

ஆக்காதாரி மூலி = பொற்றலைக் கையாந்தகரை

ஆக்காதி, ஆக்காரி = வேம்பு

ஆக்கிராணம் = மூக்குப்பொடி, மூக்கு, மூக்கதிற்கிடு மோர் மருந்துப் பொடி பஞ்ச நாடியிலொன்று, நவச்சாரவுப்பு, சளி, மார்புக் கோழை, முகர்ந்து பார்த்தல் கபவாத சுரம் முதலான நோய்களுக்கு மூக்கிலிடும் காரமான உப்பு

ஆக்கிராணவிந்திரியம் = மூக்கு

ஆக்கிராணவுப்பு = முகரும் உப்பு (நவச்சாரவுப்பு)

ஆக்கிராணித்தல் = முகர்ந்து பார்த்தல், மூக்கிற் தூளிடுதல், மூக்கினால் இழுத்தல்

ஆக்கிருணம், ஆக்கினிபுங்கு = மூக்கு

ஆக்கினியம் = நெருப்பு

ஆக்கினீயம் = ஆனி மாதம்

ஆக்கினேயம் = இரத்தம், நெய், பொன், விபூதி

ஆக்கினை = புருவமத்தி, பலாமரம்

ஆக்குரோடம் = மார்பு

ஆக்குலயம் = ஆவாரை

ஆக்குலாதி = பேரரத்தை

ஆக்குல்லியம் = ஆவாரை

ஆக்குறம் = வெள்ளுள்ளி

ஆக்கெரு = கொன்னை

ஆக்கெளுத்தி = ஒருவகைக் கடற்கெளிற்று மீன்

ஆக்கை = பிருவக்குட்டி

ஆக்கைக் குவிரோசனம் = பாக்கு

ஆக்கொத்துமம் = கொன்றை

ஆக்கொல்லி = ஒருபுழு, தில்லைமரம்

ஆக்கோத்துமம் = கொன்றை

ஆங்கலம் = வில்வம்

ஆங்காரசத்தி = கொடிவேலி

ஆங்காரம் = பீர்க்கம்

ஆங்காரருத்திரி = கொடிவேலி

ஆங்காரவாளி = பெருங்குறிஞ்சான்

ஆங்காரி மூலி = வெள்ளைக் குன்றிமணி

ஆங்கியம் = உடலின் நிலை

ஆங்கிரிவு = விந்து

ஆங்குதல் = போதுமளவாதல்

ஆங்கொட்டை = சேங்கொட்டை

ஆங்கோலம் = அழிஞ்சில்

ஆசங்கமூலி = சங்கங்குப்பி

ஆசடா = கீழாநெல்லி

ஆசட்சு = கண்

ஆசமகுலம் = செழுமலர்க் கொன்றை

ஆசமரம் = கற்பாடாணம்

ஆசமனகம் = எச்சில் படிகம்

ஆசமனம் = உட்கொள்ளல், வெட்டிவேர், சிறுகச் சிறுக நீர் உட்கொள்ளல்

ஆசமனி = நீர்வாங்கி

ஆசமனீயத் திரவியம் = நீரிலிட்டு உட்கொள்வதற்குத் தகுந்த ஆறுவகைச் சரக்குகள் ஏலம், கிராம்பு, சாதிக்காய், சண்பக மொட்டு, பச்சைக்கற்பூரம், பூலாங்கிழங்கு

ஆசமனீயம் = கொப்புளிக்கும் மருந்து நீர்

ஆசமித்தல் = குடித்தல், விழுங்கல், நீர் சிறுக உட்கொள்ளல்

ஆசம் = நெய், கற்பாடாணம், உரைகல், கூந்தற்பனை, கருஞ் சீரகம்

ஆசயம் = உறைவிடம், உடம்பினுட்பை, (இரத்தாசயம்) கபம் முதலியவை உண்டாவதற்கு ஆதாரமாயுள்ள பாகம், இரைப்பை, குடல், மூத்திரம் முதலிய உள்ளுறுப்புகள், பலா, நறு நெய்

ஆசரயாசி = சரக்கொன்றை

ஆசராக்கம்பளி = மயிர்

ஆசலடம் = வெள்ளைக் குன்றிமணி

ஆசலை = ஆடாதோடை

ஆசவத்திரு = பனைமரம்

ஆசவம் = இலுப்பைப்பூக்கள்ளு, கள், சாராயம், பூவின் சாறு, வெல்லம், சருக்கரை, இவற்றினின்று வடிக்கு மோர் மது பனைமரம், மருந்துகளை இடித்து தண்ணீர், நெய் முதலியவைகளைச் சேர்த்து காய்ச்சாமலே குழிப்புடம், தானிய புடம் முதலியவைகளினால் இறக்கப்படுமோர் மதுவர்க்கம்

ஆசவாஞ்சிளி = முயல்

ஆசவாடம், ஆசவாடியம் = உருசி

ஆசவாரிட்டம் = காய்ச்சாமலே இறக்கப்படும் மது

ஆசவுகம் = தீட்டு

ஆசளி = பலாமரம், பெருங்காயம்

ஆசறுதிப்பல் = கடைவாய்ப்பல்

ஆசனக்கடுப்பு = மலவாயிலில் உண்டாகும் எரிச்சல்

ஆசனக்கட்டி = மலவாயிலில் உண்டாகுங் கட்டி

ஆசனக் கணு = உட்காருவதற்கு ஆதரவாகவிருக்கும் இரு பக்கத்து பிட்டத்திற்குள் அமையப் பெற்ற ககனவெலும்பின் கீழ்க்குமிழ்கள்

ஆசனக் கண் = மலவாயிலைச் சுற்றி புண்களுண்டாகி அம்பு போல் குத்தலும் தினவும் எரிச்சலு காணும் ஒரு வகைக் குதநோய்

ஆசனக் கவர் = இடுப்பெலும்பின் கீழ்ப்பகுதியில் பிட்டத்திற்கு நேராகவுள்ள இரண்டு பக்கத்து எலும்புகள்

ஆசனக் கிருமி = ஒருவகை மலப்புழு குழந்தைகளின் மலவாயிலிருந்து நமைச்சலையுண்டாக்கும்

ஆசனக்குடல் = மலக்குடல்

ஆசனங் குளிர்தல் = இருப்பிடம் குளிர்ந்து காணலாகிய ஒரு மரணக் குறி

ஆசனச் சந்தென்பு = கூபகத்தின் முகப்பிலும் பக்கங்களிலும் இருக்கின்ற எலும்புகள்

ஆசனச் சிலந்திக் கட்டு = குதத்தினுள் சளிச் சவ்வின் பாகத்திலேற்படும் மிருதுவான சதைவளர்த்தி

ஆசன சவ்வு = ஆசன வெலும்பில் பொகுட்டுக்குச் சற்று மேம்புறத்தில் இருக்கும் எலும்புப் பகுதி

ஆசனச் சுருக்கம் = மலவாயில் சுருங்குதல், மலத்துவாரம் சிறிதாகச் சுருங்குதல் இதனால் மலபந்த முண்டாகும்

ஆசனத்தடை = ஆசனத்திலேற் படும் மறிப்பு

ஆசனத்தளுக்கு = வெள்ளி

ஆசனத்தாபன ரோகம் = உடம்பின் சூட்டினால் மலவாயிலிலுண்டாகும் எரிச்சல்

ஆசனத் திமிர்வாதம் = குதத்துள்ளும் மலவாயிலிலும் உற்பத்தியாகி அவ்விடத்துச் சதைப் பாகத்தை உணர்ச்சியறச் செய்யுமோர் திமிர்வாதம்

ஆசனத்திரி = மலவாயிலினுட் செலுத்து மோர் விதக்காரச்சீலை

ஆசனத் தினைவு = மலவாயிலிலுண் உண்டாகும் ஒருவித நமைச்சல்

ஆசனத் தோயம் = இடுப்பின் பாகத்தைத் தண்ணீரில் அமிழ்த் தலாகிய ஒருவகை சிகிச்சை

ஆசனநரம்பு = பிட்டத்தைச் சுற்றி ஓடும் நரம்பு

ஆசனப்பரு = அத்திக்காயைப் போல் மலவாயிலில் அல்லது அதனருகில் காணும் கிரந்தி மருத்துவ

ஆசனப் பவுத்திரம் = வாதங்கள் அதிகரித்து குதத்தில் துவாரங்களை யுண்டாக்கி அதன் வழியாக மலம், சிறுநீர் இவற்றை வெளியிடச் செய்யும் இரணநோய்

ஆசனப் பிதுக்கம் = உறுப்புத் தள்ளல், வாதத்தினால் குதத்தில் ஒரு பகுதி வெளிப் பிதுங்கிக் காணல்

ஆசனப் பிளப்பு = மலவாயிலின் சதையில் காணும் வெடிப்பு

ஆசனப்புண், ஆசனப்புரை = குதத்திலேற்படும் இரணம், மூல நோய், பவுத்திரம், குழந்தைகளுக்கு குதத்திலேற்படும் புண்

ஆசனப் பௌத்திரம் = ஆசனப்பவுத்திரம்

ஆசனப் புற்று = குதவாயிலில் மேக சம்பந்தத்தினால் அத்திக்காயைப் போல் கட்டி எழும்பி இரணமாகிப் பிசுபிசுப் பான நீரொழுக்கை உண்டாக்கு மோர்நோய்

ஆசனம் = குதம், மலவாயில்

ஆசனம் வெளியுறல் = மலவாயில் விரிந்து மலர்தல், குதத்தின் உட்பாகம் விரிவதனால் அதன் தசைப்பாகம் வெளிப்பிதுங்கிக் காணல்

ஆசனரூடி = உறுப்புத்தள்ளல்

ஆசனரோகம் = குதத்தில் உண்டாகும் மூலம், பவுத்திரம், உறுப்புத்தள்ளல் ஆகிய நோய்கள்

ஆசனவடைப்பு = ஆசனவாயில் இல்லாத பிறவிக் குற்றம்

ஆசனவஸ்தி = குதத்தில் செலுத்து மோர்விதக் கருவி

ஆசனவர்த்தி = மருந்தைத் துணியில் தடவி திரியாகத் திரித்து குதத்திற்குள் ஒரு அங்குலம் வரை செலுத்தும் திரி

ஆசன வளையம் = மலத் துவாரத்தைச் வளையம் சுற்றிலுமுள்ள போன்ற சதைப் பற்று ஒன்றரை விரற்கடை இடையே 4 விரற்கடை அளவுள்ளதாய் மூன்று உண்டு இவை உள் மலத்தை வெளிப்படுத்தவும், ஆசன வாயிலைச் சுருக்கவும் பயன்படும்

ஆசனவிருத்தி = உறுப்புத் தள்ளல்

ஆசனவெடிப்பு = ஆசனப்பிளப்பு

ஆசன வெலும்பு = ஆசனச் சந்தெலும் பின் கீழ்ப்பகுதியாய் உள்ள எலும்பு

ஆசன வொழுக்கு = ஊன்கலந்த நீர் ஆசனத்தினின்று ஒழுகல், குதத்தினின்று உண்டாகும் இரத்த வொழுக்கு, சீதவொழுக்கு

ஆசனன காலம் = மரணப் பொழுது (இறக்கும் நேரம்)

ஆசனனப் பிரசவம் = குழந்தை பெற்ற பிறகு நஞ்சுக்கொடி வெளிப்படல், பிரசவம் நிகழும் முன் வயிறு தளர்ந்து பனிக்குடம் உடைதல் போன்ற வேதனைகள் ஏற்படும் நிலைமை

ஆசனனம் = பிற்பகல்

ஆசனி = பெருங்காயம், பலாமரம், சாமரம், நீர்ப்பாகல்

ஆசாசி = சீந்தில், கருடன்

ஆசாச்சம் = பெருங்குறிஞ்சி

ஆசாடம் = பொதியமலை, ஆடி மாதம், முருக்கு மரம்

ஆசாடி = கலியாண முருக்கன்

ஆசாணங்கை, ஆசாநங்கை = காட்டாமணக்கு

ஆசாரணி = செருப்படை

ஆசாரம் = சாலங்க பாடாணம், பெருமழை, சத்தம், புடவை (சீலை)

ஆசாரி = கிளிஞ்சி

ஆசாரிப்புளி = ஒருவகை சீனத்து மரம், சாம்பல் நிறம், வழவழப்பான பட்டை, புளிப்பான இலைகள், சிறிய பூக்கள், முயல்

ஆசானமூலி = செவ்வாமணக்கு

ஆசானவனுயிர் = முயல்

ஆசானுங்கிப்பூடு = வேட்டு வாயதித்தான்

ஆசி = கொட்டைப்பாக்கு

ஆசிகம் = ஆட்டுப் புழுக்கை, கருஞ்சீரகம்

ஆசிகரோகம் = கருவிழியில் ஆட்டுப் புழுக்கையைப் போல் கொப்புளங்கண்டு பிதுங்கி குருக்கள் அதிகமாகி

வலியையும் செந்நீர் ஒழுக்கையும் உண்டாக்கும் ஒரு வகைக் கண்நோய்

ஆசிக்கல் = காந்தக்கல், காகச் சிலை இது உபரசச் சரக்குகளில் ஒன்று

ஆசிதக் குருக்கன் = காகபாடாணம், வைப்புப்பாடாணங்களில் ஒன்று

ஆசியக் வாதம் = கொதிப்பினால் வாயில் இரணங்களுண்டாகி கண்டத்தில் குறுகுறுப்பும் மார்பில் வலியையுண்டாக்கும் ஒரு வாத நோய்

ஆசிய சீரகம் = கருஞ்சீரகம்

ஆசிய சூதப்புல் = பேய்வரகு

ஆசியதகரான்னம் = விடம் கலந்த சோறு

ஆசியபத்திரம் = தாமரை

ஆசியபாக பித்தம் = பித்தம் அதிகமாகி வாயில் புண் ஏற்பட்டு மார்பெரிச்சல், மலம் கட்டுப்படல், பசியின்மை, ஏப்பம், சுரம், கொட்டாவி, விக்கல் முதலிய குணங்களைக் காட்டும் பித்த நோய்

ஆசியபாகம் = முகத்தின் உறுப்புகள்

ஆசியபாக வாதம் = முகத்தின் உறுப்புகளைத் தாக்கும் ஒரு வாத நோய்

ஆசியபோதம் = பேய்வாதுமை, கசப்புவாதுமை

ஆசியம் = முகம், வாய், கருஞ் சீரகம், பெருஞ்சீரகம்

ஆசியல் = கருஞ்சீரகம்

ஆசியவாங்கலம் = கலப்பை, முகம்

ஆசியவாசியம் = ஓமம்

ஆசிய வாதம் = முகத்தில் உறுப்பு களைத்தாக்கும் ஒரு வாத நோய்

ஆசியாசவம் = (வாயிலூறும் எச்சில்) உமிழ் நீர்

ஆசியாசுகம் = உணவில் வெறுப்பு

ஆசியாட்சே பவாதம் = முகத்தின் உறுப்பு களைத் தாக்கும் ஒருவாத நோய்

ஆசியோதனம் = கண்ணுக்குள் விடும் மருந்து, நவத்துவாரங்களில் செலுத்தும் எண்ணெய்

ஆசியோபலேபம் = சளியால் வாயிலேற்படும் தடை

ஆசிரந்தம் = புங்கு

ஆசிரம் = நெருப்பு

ஆசிரவம் = அரிசி கொதிக்கும் போதுண்டாகும் நுரை

ஆசிராவம் = செரியாமைக் கழிச்சல்

ஆசிரிடிசங்கம் = சங்கங்குப்பி

ஆசிருத்தம் = புங்கு

ஆசிர்விஷம் = விடப்பாம்பு

ஆசினி = ஈரப்பலா, ஆகாயம், மரவுரி, நாய்ப்பாகல், பெருங்காயம், மரவயிரம், பாலைமரம்

ஆசியம் = கருஞ்சீரகம்

ஆசு = சீதாங்கபாடாணம், அல்லிமொக்கு, முகம்

ஆசுகம் = காற்று, பறவைப்பொது, சூதகம்

ஆசுகன் = வாயு

ஆசுகி = பறவைப்பொது

ஆசுக்காயம் = பேய் வெங்காயம்

ஆசுசம் = சூதகம்

ஆசுச்சிகிச்சம் = தற்காலச் சிகிச்சை

ஆசுணம் = அசோகு, அரசமரம்

ஆசுதா பனம் = பலமுண்டாக்கு மருந்து எண்ணெய் அல்லது நெய் முதலிய பொருளை ஆசான வழியாய்ச் செலுத்துதல்

ஆசுதித்த நீர் = காய்ச்சி வடிகட்டிய தண்ணீர், வாலையிலிறக்கிய தண்ணீர்

ஆசுபத்திரம் = அகச்சூலி (ஒரு வகை மரம்)

ஆசுபத்திரி = அல்லியிலை, சாம்பிராணிமரம்

ஆசுபோடம் = பல பூண்டுகளைக் குறிக்கும் பெயர், நடுக்கம்

ஆசுரங்கமூலி = பிரமியிலை

ஆசுரம் = இஞ்சி, வெள்ளை வெங்காயம், செவ்வுள்ளி, இரண வைத்தியம், கத்தியாலறுத்தல், சூடு போடல்

ஆசுராகிதம் = பேரிக்காய்

ஆசுரி = இரணவைத்தியன், கடுகு

ஆசுவரியம் = அரசு

ஆசுவாசம் = இளைப்பாறுதல்

ஆசுவாது = சிறுவீடுகொள்

ஆசு வீசம் = ஐப்பசிமாதம்

ஆசுவேதா = ஈகை

ஆசூசம் = தீட்டு

ஆசூரம் = வெள்வெங்காயம் தாமரை

ஆசை = பொன், பேய்ச்சீந்தில்

ஆசைக்குடோரி = முத்தெருக்கன்

ஆசைக் குரியான் = மருகு அதாவது ஒரு வாசனையிலைப் பூண்டு

ஆசைப்பனை = பனங்கள்

ஆசையபத்திரம், ஆசையபத்திவம் = தாமரை

ஆசையம் = பொன்னாகம்

ஆசைவப்பனை = பனங்கள்

ஆசைவம் = கள்

ஆசைவைத் திருமானை = மரம்

ஆசோதை = ஓய்வு

ஆசௌசம் = தீட்டு

ஆச்சமரம், ஆச்சமாகம் = மூகைப்புல், மூவகைப்புல்

ஆச்சமாதிகம் = மலைவெற்றிலை

ஆச்சரியக் குளிகை = வியக்கத்தக்க செய்கைகளை உண்டாக்குமோர் வகைக் குளிகை

ஆச்சரிய நாடி = ஒரு வகை நாடி

ஆச்சரியம் = ஒரு நோய்

ஆச்சா, ஆச்சாசினி = ஒருவகைமரம், ஆச்சா மரம், சால மரம், காட்டு மரம், சுள்ளி (மடையன் சாம்பிராணி)

ஆச்சாதனபலம் = பருத்தி

ஆச்சாதபலை = பருத்திக்கொட்டை

ஆச்சாமரம் = ஆடாதோடை, சாலமரம், சுள்ளி, காட்டுடுகுமரம்

ஆச்சாலணை = பருத்தி

ஆச்சிய கந்தம் = குண்டிக்காயினின்று நெய்ப் பசையுள்ள அதாவது ஊன் கலந்த மூத்திரம் ஒழுகப்பெற்ற ஒருவகை மேகநோய் (துணியை இம்மூத்திரத்தில் தோய்த்துக் கொளுத்தினால் எரியும்)

ஆச்சியசுத்தி = நெய்யினால் சுத்தி செய்தல்

ஆச்சியம் = நெய்

ஆச்சி யோதனம் = கண்ணின் பார்வையின் மத்தியில் திரவ மருந்தைத் துளித் துளியாய் விட்டுச் செய்யும் ஒரு வகை சிகிச்சை, நெய் பெய்த சாதம்

ஆச்சிலை = கோமேதகம்

ஆச்சுகாசி = மஞ்சள் கோங்கு

ஆச்சுலரி = அரசு

ஆச்சுவத்தம் = அரசமரக்காய்

ஆச்சுவரி = ஆச்சுலரி

ஆச்சை = துவரை

ஆஷக்கிந்தம், ஆஷக்கிருந்தம் = வசம்பு

ஆஞ்சரினம் = காட்டுத்துளசி

ஆஞ்சான் = இளமரத்துத் தண்டு

ஆஞ்சி = ஏலம், சோம்பு, ஆவந்தி, அசைவு, அதிர்ச்சி

ஆஞ்சில் = சங்கு ஒருவிதப் பூண்டு, சங்கஞ்செடி, இசங்கு

ஆடகக்குடோரி = மயிலாடுங் குருத்து

ஆடகண்டம் = பெருங்காயம்

ஆடகத்தி = குங்குமபாடாணம், பேய்க்கடலை

ஆடக மருத்தம் = பொன்

ஆடகம் = ஆமணக்கு, சிறுநாகப்பூ, துவரை, நால்வகைப் பொன்களில் ஒன்று, பொன் (கிளிநிறம் போன்ற ஒருவகை உயர்ந்த 500 மாற்றுள்ள பொன்), சிறு குறிஞ்சா, சிறு காஞ்சொறி 64 பலம் எடை, நாலுபடி கொண்ட அளவு

ஆடகாமாமூலம் = சிறிய முள்ளங்கி

ஆடகாவிகம் = மரவுரி

ஆடகி = துவரைச்செடி உழமண், ஆமணக்கு

ஆடகிபத்திரம் = துவரையிலை

ஆடகு = துவரை

ஆடகுசம் = ஆடாதோடை

ஆடசுடம் = செப்புமலை, செப்பு நெருஞ்சில்

ஆடகை = துவரை

ஆடசை = துவரை, தும்பை

ஆடபிராக்கு = மேகவெள்ளைக்காக உபயோகிக்கும் ஒரு கடைச்சரக்கு

ஆடபோடம் = மாகாளிக் கிழங்கு, எருக்கு, சூரியன், காட்டு மல்லிகை

ஆடமடக்கு = ஆமணக்கு

ஆடமருது = ஒருவகை மருதமரம்

ஆடமாகிதம் = மலைச் செந்தொட்டி

ஆடம் = ஆமணக்கு, 24 படி கொண்ட ஒரு அளவு, இலந்தை நகம்

ஆடம்பரம் = கண்மடல்

ஆடருப்பான் கொட்டை = ஏறழிஞ்சில்

ஆடருஷகம் = ஆடாதோடை, காக்கட்டான்

ஆடருஷா = ஆடாதோடை

ஆடலை = பூவாத மரம், அரசு, பூவிளா, அத்தி, குவிலல்

ஆடா = நெருப்புக்கு ஓடாத பொருள்

ஆடாகம் = வெள்ளை நாயுருவி

ஆடாசம் = கெந்தியுரி பாடாணம்

ஆடா திருக்கை = ஒருவகைத் திருக்கை மீன்; உடலைவிட வால் பெரிதாக இருக்கும்; முள் இருக்கும்; வாலினால் அடித்தால் அபாயம் விளையும்

ஆடா தோடை = ஆடுதொடாமூலி வாசை, 'நெடுமால்'

ஆடாதோடை மேல் புல்லுருவி = ஆடதொடை மேல், முளைத்திருக்கும் புல்லுருவி

ஆடாரசம் = கௌரி பாடாணம்

ஆடாருசிகம் = குக்கில்

ஆடாருசு = ஏலம்

ஆடி = உவர் மண்ணோடு மணல் சேர்த்துருக்கிச் செய்யும் பளிங்கு, காற்று, செருப் படிவேர்

ஆடிதிகைந்தான் = சிற்றாமுட்டி

ஆடிப்பூச்சு = கானல்

ஆடியகால் = செருப்படை

ஆடியகூத்தன் = துருசு, தில்லை

ஆடியாம் = காடி

ஆடியோடுஞ் சரக்கு = முதலில் நெருப்பிற் குருகிப் பிறகு நில்லாது மறைந்து பதங்கிக்கும் சரக்கு (உம்) இரசம், கெந்தகம்

ஆடு = இரும்பு, ஆடுமாடுகள்

ஆடுங்கூத்தன் = துருசு

ஆடுசதை = கெண்டைச்சதை

ஆடுஞ்வ் = நெருப்பிற்கு நில்லாது புகைந்தோ, ஆவியாகவோ எழும்பிப் போகும் சரக்கு, உருகியாடி எழும்பிப் போகும் சரக்கு

ஆடுண்ணாவாலம், ஆடுண்ணாவேளை, ஆடுதின்னாப் பாளை, ஆடுதிண்டாப்பாளை, ஆடுதின்னாளை, ஆடுதொடாப்பாளை, ஆடுதொடாமூலி = ஆடுதின்னாப்பாளை, (பாதாள மூலி)

ஆடுமாலை = இளம்பெண்

ஆடுமுப்பு = கட்டுப்பு

ஆடுரகனம் = படி

ஆடுவாலன் திருக்கை = ஆடாதிருக்கை

ஆடுவாள்கண்டள் = சிற்றாமுட்டி

ஆடெழும்பு நேரம் = காலை பத்து நாழிகை

ஆடை = பால் முதலியவற்றின் மேலெழும்பும் ஏடு, நாவிற்படரும் மா, கண்படலம், பனங் கிழங்கின் உட்தோல்

ஆடைக்காதி = மலைப்பருத்தி

ஆடைசோதினி = எலுமிச்சை

ஆடைப்பிரளம் = மரவட்டை

ஆடைமண் = சத்திமண், அதாவது, உவர்மண்

ஆடைமேல் = கழுத்து

ஆடையவவன் = பேராமுட்டி

ஆடையெடுத்த பால் = குழந்தை, நோயாளி, பலவீனர் முதலியோருக்கு எளிதில் செரிக்க கொடுக் கும் ஏடு நீக்கிய பால்

ஆடையொட்டி = ஒட்டுப்புல், பேய்ப்புல், ஒருவகைப் பூண்டு

ஆடையொட்டி நீர் = விந்து

ஆடோபகம் = இமை துடித்தல்

ஆடோபம் = வாயுவினால் பாதித்தல், வீங்கல்

ஆட்கண்டம் = பெருங்காயம்

ஆட்காட்டி = சுட்டுவிரல், ஆள் காட்டிப்பறவை

ஆட்காட்டிக் குருவி = மனிதரைக் கண்டவுடன் கூச்சலிடுங்குருவி

ஆட்கொல்லி = தில்லைமரம்; பொன்

ஆட்சி = துவரை

ஆட்சிகம் = நிமிளை

ஆட்சேபகம் = வலிப்பு, இசிவு (கால், கை உதைத்துக் கொள்ளல்)

ஆட்சேபக வாதம் = வலிப்பையும், நடுக்கலையும் பிரமையையுண்டாக்கும் ஒரு வாதநோய்

ஆட்சை = சோறு, சாப்பாடு, தாமரை

ஆட்டருஷா, ஆட்டருவீர் = ஆடாதோடை

ஆட்டங்கால் = வெள்ளைப் பூண்டு

ஆட்டமுரி = வெள்ளாட்டு மூத்திரம்

ஆட்டம் = தலையாட்டம், அசைவு, அதிர்ச்சி

ஆட்டலாங் கொடி = சோமலதை (அறியப்படாத மூலிகை)

ஆட்டாங்கள்ளி, ஆட்டாங்கள்ளு, ஆட்டாங்கன்னி = திருகுக்கள்ளி, கொடிக்கள்ளி

ஆட்டாங் கொடி = சோமலதை எனும் அறியப்படாத மூலிகை

ஆட்டாங் கொறுக்க = மலைத் துவரை

ஆட்டாங் கோரை = சிறு கோரைப்புல், முத்துக்காசு

ஆட்டாம்பிழுக்கை = ஆட்டுச்சாணி

ஆட்டி = பெண்

ஆட்டிமந்திரம் = குமிளம், விரை

ஆட்டிய வாதம் = உழைப்பில்லாமல் உணவு வகைகளை உட்கொள்வதனால், திமிர், கணம், வலி, இளைப்பு, வீக்கம், மலச்சிக்கல் போன்ற குணங்களையுண்டாக்கும் வாதநோய்

ஆட்டிவஞ்சம் = புளி

ஆட்டினி = மலைப்பூவரசு

ஆட்டுகம் = ஆடாதோடை

ஆட்டுக்கசப்பு = ஆட்டின் பித்து

ஆட்டுக்கல் = அமுதபாடாணத்தில் ஒன்று, ஆட்டுரோசனை, கோரோசனை, அடம்பு

ஆட்டுக் காலம்பு = அடப்பங்கொடி

ஆட்டுக்கால் = பூமருதம், அப்பங்கெடி

ஆட்டுக்காற்கல் = கொக்கைக்கல்

ஆட்டுக்குட்டி = பறழ்

ஆட்டுக் கொம்பவரை = ஆட்டுக்கொம்பைப் போன்ற ஒருவகை அவரைக்காய்

ஆட்டுக் கொம்புப் பாலை = ஆட்டுக் கொம்பைப் போல் இலைகளையுடைய ஒரு வகைப் பாலை

ஆட்டுக்கொம்பு வாழை = ஆட்டுக்கொம்பைப் போலிருக்கும் வாழை

ஆட்டுக்கொம் பொதி, ஆட்டுக்கொம் பொதியை = ஆட்டுக்கொம்பைப் போன்ற காயை யுடைய ஒதி மரம்

ஆட்டுக்கோட்டுப் பாலை = ஆட்டுக்கொம்புப் பாலை

ஆட்டுக் கோரோசனை = அமுதபாடாணத் தொன்று, ஆட்டு ரோசனை

ஆட்டு சக்கரணி = மலையரளி (நாய்த்தேக்கு)

ஆட்டுசம் = ஆடாதோடை

ஆட்டுச்சதை = கெண்டைச்சதை

ஆட்டுச்சாகிசம் = மலையெருக்கு

ஆட்டுச்செவி = ஆடுதீண்டாப்பாளை

ஆட்டுச்செவிக் கள்ளி = ஆட்டின் காதைப் போன்று இலையுடைய ஒரு வகைக்கள்ளி

ஆட்டுச் செவிப்பதம் = வழுக்கைப்பதம், இளநீர் வழுக்கைப் பதம், இளவழுக்கைப் பிண்டப்பதம்

ஆட்டுச் சவிமருந்து = பெருஞ்சிரிங்கி, அச்சிரிங்கி, தட்சண வர்த்தாதி, மாகாளி, விஷகரி, சிரிங்கிகம், அயச்செம்பிலிடுக்கி, சட்சுகியம், கபவிரணகரி என்ற பல பெயர்கள் உண்டு

ஆட்டுத்துகள் = இரும்புத் தூள், அரப்பொடி

ஆட்டுத்துழாய் = மலைத்துளசி

ஆட்டுப் பால் = மூத்திரகுண்டி நோய், பித்த நோய், சயம், இருமல் போன்ற நோய்களைக் குணமாக்கும் வெள்ளாட்டுப்பால்

ஆட்டுப்பிசின் = அபினி

ஆட்டு முட்டி = அதிமதுரம்

ஆட்டுரோசனை = ஆட்டின் பித்து

ஆட்டூரம் = மலைவேம்பு

ஆட்டை = ஓர் ஆண்டு

ஆட்டைச்சோதி = சோதி விருட்சம்

ஆட்டைப் பூடு = வருடத்திற்கொரு முறை விளையும் பூண்டு

ஆட்பிடியன் = முதலை

ஆணகம் = சுரைக்காய், கோளகபாடாணம்

ஆணங்கம் = ஆண்குறி

ஆணங் காய் = ஆண் பனையின்காய், ஆண்பனைப் பாளை

ஆணம் = சாறு, குழம்பு, காட்டு வேப்பிலை, காட்டுக் கொழுஞ்சி

ஆணவம் = கோளகபாடாணம்

ஆணா = காட்டுவேப்பிலை மரம், காட்டுக்கொழுஞ்சி

ஆணாகவாரை = ஆவாரை

ஆணாப்பிறந்தோன், ஆணாய்ப்பிறந்தவன் = ஆவிரை, கழுக்கானி ஆவாரை

ஆணி = ஆணிமுத்து, துருசு, புண்ணாணி, உச்சிவேர், காயாணி, கருவிழியி லுண்டாகும் ஒரு வித நோய், பாதங்களில் அரத்தைப் போலுண்டாகும் முடிச்சு, பொன்னின் மாற்றறிவதற்காக உபயோகிக்கும் பொன்னாற் செய்த உரையாணி அல்லது ஊசி தச்சன் உபயோகிக்கும் ஆணி, துருசு

ஆணிக்கல் = பொன் உரைக்குங்கல், பொன் நிறுக்குங்கல்

ஆணிக் கால் = பருக்கல்லின் மேல் நடத்தல், காலில் முள் தைத்தல் போன்றவற்றால் சதைவளர்ந்து வலி கொள்ளல்

ஆணிக் குருத்து = பனை, தெங்கு முதலியவைகளின் நடு அல்லது மூலக் குருத்து

ஆணிக்வ் = மரணகாலத்தில் கண் நிலை குத்திடல், இது ஒரு மரணக்குறி

ஆணிச்சவ்வு = வெள்விழியை ஒட்டியுள்ள கருப்பு சவ்வு, விழிப்படலம்

ஆணிச்சிதல் = முகப்பருவின் முளை, சீழ்பிடித்த குழிப்புண்

ஆணிச்சி = மூலச்சிதல்

ஆணிச்சீழ் = கருவிழியினின்றும் வடியும் சீழ்

ஆணிச் செருக்கம் = இலவணபாடாணம்

ஆணித்தங்கம் = மாற்றுயர்ந்த தங்கம்

ஆணித்தரம் = முதல் தரம், நல்ல முத்து, கெட்டி முத்து

ஆணிப்பலம் = சாதிக்காய்

ஆணிப் படலம் = ஒருவகைக் கண்ணோய்

ஆணிப்பரங்கி = மாணிக்கம்

ஆணிப் பரிகாரம் = சதையின் மேல் எழும்பிய காய்ப்பு நீங்குதற்குச் செய்யும் சிகிச்சை கருவிழியில் ஆணி பாய்ந்ததைக் குணப்படுத்த செய்யும் கண்வைத்தியம்

ஆணிப்பாடாணம், ஆணிப்பாஷாணம் = கோளக பாடாணம்

ஆணிப் பாய்தல் = காலில் ஆணி குத்திப் பாய்தல், முள் தைப்பதனால் ஏற்படும் ஆணி

ஆணிப்பிடிச்சி = சீனக்காரம்

ஆணிப்புண் = உள்ளே ஆணி பாய்ந்த சிலந்திப்புண்

ஆணிப்பூ, ஆணிப்பூடு = கண் காசம், கண்ணில் விழும் பால்நிறமான வெள்ளை மாசு கண்நோய்

ஆணிப்பொன் = மாற்றுயர்ந்த பொன்

ஆணிமா, ஆணிமாரம் = இந்துப்பு

ஆணிமுத்து = சிப்பிமுத்து

ஆணிமுளை = கட்டி, புண் முதலியவைகளின் நடுவிலுள்ள ஆசனத்தினுட்புறம் ஆணியைப்போல் கெட்டியாக இருக்கும் ஒருவகை மூலநோய்

ஆணி மூலம் = ஆசனத்தினுட்புறம் ஆணியைப் போல் கெட்டியாக இருக்கும் ஒரு வகை மூலநோய்

ஆணியிஷயதார் = ஓரிதழ்த் தாமரை

ஆணியிடுதல் = மரணகாலத்தில் கண் நிலை குத்திடல்; இது ஒரு மரணகுறி

ஆணியிருமல் = ஒரு கடினமான இருமல்

ஆணிரோகம் = ஆணிக்கால் நோய்

ஆணுப்பிறந்தான் = ஆவாரை

ஆணுறுப்பு = மகரந்தப்பொடி (தூள்) ஆண்குறி

ஆணை = பசு

ஆணோறை மயக்கம் = கற்பூரவல்லி

ஆண் = சூதம், ஆண் மரம், ஆண்மகன்

ஆண்கட்டு = விந்துகட்டுதல்

ஆண்கழற்சி = பலகாய்களுக்குள்ளே நுழைய வைத்துப் பொதிந்தாலும் மேலெழும்பி வந்து நிற்கும் கழற்சிக்காய்

ஆண்குமஞ்சன், ஆண்குமஞ்சான் = குங்கிலியம்

ஆண் குறட்டை = பேய்ப்புடோல், ஒரு வகை குறட்டை

ஆண்குறி = இலிங்கம், அண்டம், புரவி, கோசம்

ஆண்குறி பாடாணம் = இலிங்கபாடாணம்

ஆண் குறிப்புண் = பல மாதர்களையும், நோய் கொண்டவளையும் புணருவதால் ஆண் குறியில் காணும் மேகப்புண்

ஆண்குறிப்பூ = இலிங்கமலர்

ஆண் குறிமலர் = இலிங்கத்தின் மலர், அத்திக்காயைப் போன்ற பருக்கள் ; ஆண்குறியிலேற்படும் ஒருவகை நோய்

ஆண்கொடிவேலி = வெள்ளைக் கொடிவேலி

ஆண்கோலம் = அழிஞ்சில்

ஆண்சரக்கு = காரச்சரக்கு, உப்புச் சரக்கு அவையாவன கல்லுப்பு, வெடியுப்பு

ஆண்சரக்குச்சத்து = காரச்சரக்கின் சத்து அதாவது கசப்புச் சரக்கு

ஆண்சாரிகம் = மனமுருகிச் செடி

ஆண்சிரட்டை = தேங்காயின் அடிப் பாதியோடு

ஆண்செருப்படை = சிறுசெருப்படை

ஆண்டகம் = மனோரஞ்சிதம்

ஆண்டகைமை = வீரம்

ஆண்டரசம் = கெந்தியுரி பாடாணம்

ஆண்டலை = கோழி, பூவாது காய்க்கும் மரம், பூவில்லாமரம், அரசமரம், ஒட்டடை

ஆண்டலைப் பறவை = ஆண் பிள்ளைத் தலையை போல் தலையுள்ள ஒரு வகைப் பறவை

ஆண்டலைப்புள் = கோழி

ஆண்டாள் = பூவில்லாமரம்

ஆண்டாள் மல்லிகை = ஒரு வகை மல்லிகைப்பூ

ஆண்டிக்கிப் பொன்னிச்சி = இரத்தபாடானம்

ஆண்டிச்சி = குங்குமப் பாடாணம்

ஆண்டித்தாரா = ஒருவகை வாத்து

ஆண்டி மதிக்குலம் = இரசிதபாடாணம்

ஆண்டிய மண்கலம் = மண்ணோடு

ஆண்டிரவாழை = மலைவாழை

ஆண்டு = சுக்கு, வயது, வருடம்

ஆண்டு நூறுப்பட்டை = நூறு வருடஞ்சென்ற வேம்பு, பூவரசு, ஓதிகை முதலிய மரங்களின் பட்டை

ஆண்டு மூய்தல் = மேன்மேலும் வளராது நின்று போதல்

ஆண்டை = காடு, தேட்கொடுக்கிப்பூடு, புருவமத்திமம், ஆதொண்டை, அழிஞ்சில், ஆண்மரம், காத்தொட்டி, தேள் கொடியிலை

ஆண்தண்டு = இலிங்கம், வலக்காதின் தண்டு

ஆண்துடரி = ரகச்செடி, நீர்க்கடுப்பு, நீரிழிவு முதலியன இதனால் நீங்கும்

ஆண்பட்சி தோடம் = மாலை வேளையில் குழந்தைகளை வெளியில் கொண்டு செல்வதால் ஏற்படும் நோய்

ஆண்பனை = காய்க்காத பனைமரம், செம்மரம்

ஆண்பிறந்தான் = கழுக்காணி, ஆவரை

ஆண்மஞ்சள் = கறி மஞ்சள்

ஆண்மதப்பூ = மதனப்பூ

ஆண்மரம் = விடத்தை முறிக்கும் தன்மையுடைய அழிஞ்சில், காய்க்காத மரம், கருங்காலி மரம், சேரான் மரம், உள் வயிரம் பாய்ந்த மரம்

ஆண்மாதுளை = பூமாதுளை

ஆண்மூங்கில் = கெட்டி மூங்கில், கல்மூங்கில்

ஆண்மைதரு கிழங்கு = நிலப்பனைக்கிழங்கு, பூமிசருக்கரைக் கிழங்கு

ஆண்மையுள்ளோன் = பொட்டிலுப்பு

ஆண்வசம்பு = ஒருவகைவசம்பு

ஆண்வண்டு = சுரும்பு அல்லது தும்பு

ஆதகம் = இஞ்சி

ஆதகாமிகம் = கிளுவை, மாங்கிளுவை

ஆதகு = கூந்தற்பனை

ஆதகேரகம் = மாட்டுக் குளம்படி

ஆதங்கம் = சுரம், புயம், நோய்

ஆதச்சேறு = கொன்றை

ஆதண் = நோய், வருத்தம்

ஆதண்டம், ஆதண்டை = காத்தொட்டி, வற்றலுக்காக உதவும் ஒரு முட்செடி

ஆதண்டைத் தைலம் = பச்சை ஆதண்டை வேருடன் எலுமிச்சை, நாரத்தை வேறு சரக்கு களை எண்ணெயிலிட்டு காய்ச்சி வடித்த தைலம்

ஆதண்ணாம் = காரச்செடி

ஆதபசிவினி = சடாமாஞ்சில்

ஆதபசுரம் = கோடைக்காலங்களில் பித்தம், கோளாறடைந் துண்டாகும் ஒருவகைச் சுரம்

ஆதபத்திரம் = கூந்தற்பனை

ஆதபத் தைலம் = சூரிய புடத்தில் வைத்தெடுத்த தைலம்

ஆதபநீயம் = ஒருவித நெல்

ஆதபம் = வெயில், ஒளி

ஆதமகுத்தை = பூனைக்காஞ்சொரி, காஞ்சொரி

ஆதமசபதி = செப்பு நெருஞ்சில்

ஆதமதந்தம் = சிலந்தி

ஆதமநிகை = சிற்றாமுட்டி

ஆதமர்த்தை = பாபரக்காய்

ஆதம் = கூந்தற்பனை, உயிர், சுரை, செப்பு, நெருஞ்சில், சந்தன மரம், காட்டாமணக்கு

ஆதம்பரம் = மாதேவி (ஒரு மரம்)

ஆதம்புட்பம் = கல்பூ

ஆதம்பெத்தை, ஆதம்பெற்றி, ஆதம்பேதி, ஆதம்பேத்தி, ஆதம்போத்தி = செப்பு நெருஞ்சில்

ஆதயம் = திப்பிலி

ஆதலை = காட்டாமணக்கு

ஆதவத் தைலம் = சூரிய புடத்தில் வைத்தெடுத்த தைலம்

ஆதவம் = கொன்றைப்பூ

ஆதவழியுப்பு = கறியுப்பு

ஆதவன் = சூரியன்

ஆதவாங்கலி = சிறு குறிஞ்சா

ஆதவாழ்படு = வாலைப்பூநீர்

ஆதவி = அத்தி

ஆதளம் = வெள்ளைக் காட்டாமணக்கு

ஆதளை = ஆமணக்கு, மாதுளை, எலியாமணக்கு, ஏரிக்கரைக் காட்டாமணக்கு, சீமையாமணக்கு, காட்டாமணக்கு

ஆதளை யெண்ணெய் = எலியாமணக் கெண்ணெய்

ஆதறவாணி = சேராங்கொட்டை

ஆதனை = காட்டாமணக்கு, காத்தொட்டி

ஆதன் = உயிர்

ஆதாணி = பெருங்காயம்

ஆதாப்பழத்தி = கோவை

ஆதாரக்கோவை = ஆகாசக்கருடன்

ஆதாரதண்டம் = முதுகெலும்பு

ஆதாரக்தோற்றத் தினுப்பு = இந்துப்பு

ஆதாரநரம்பு நரம்பு = முதுகெலும்பிலுள்ள

ஆதாரநாடி = இதயத்தின் இடது அறையிலிருந்து செல்லும் தமனி (முதன்மையானநாடி)

ஆதார பேதம் = உடம்பிலுள்ள வாத பித்த சிலேற்றுமம் தாது மூத்திராதிகள் முதலிய 12 வித்தியாசங்கள்

ஆதார மூலத்துச்சாரம் = அமுரியுப்பு

ஆதாரம் = உடல், (மழை), அமுரியுப்பு

ஆதாரயேகசித்தி = சுணங்கன்விருட்சம்

ஆதாரவேர் = ஆணிவேர், மொச்சை

ஆதாரி = ஈகை

ஆதாளச்சி = பேய்க்கடலை

ஆதாளி = தாமிரத்தைப் பற்பமாக்கும் ஒருவகை மூலிகை, காடி

ஆதாளிமன்னன் = கரடி

ஆதாளை = காட்டாமணக்கு

ஆதான கோசம் = இதயத்தின் மேலறைகள்

ஆதாளை = ஆமணக்கு, மாதுளை

ஆதி = சூரியன், மனோவியாதி, காய்ச்சற்பாடாணம், துவக்கம் (முதல்), மிருத பாடாணம், இரதபாடாணம், அரிதாரம், சிவப்பாமணக்கு, பழைய, மூலம், பிண்டம், ஆடாதோடை, முப்பு

ஆதிகடுஞ்சாரி = நவாச்சாரம்

ஆதிகம் = சிறுகுறிஞ்சா, சிறு சேவிகக்கொடி, அழிஞ்சில், துருசு, இரதபாடாணம், மிருதபாடாணம்

ஆதிகரணி = ஒருவகைப்பூடு

ஆதிகல் = இரும்பு, பேதும்பை அன்னபேதி

ஆதிகல் நாதம் = இரும்பினாசம் (அல்) அன்னபேதி

ஆதிகரம் = இலவணம், உப்பு

ஆதிகருடன் = கரிப்பாலை

ஆதிகலை = சூரியகலை

ஆதிகாந்தம் = மஞ்சட் பூவுடைய வோர் நீர்க்கொடி

ஆதிகாரகம் = மாமாலைச்செடி

ஆதிகாரம் = வெடிகாரம்

ஆதிகுடி = சவுக்காரம்

ஆதிகுரு = துருசு, முப்புக்குரு

ஆதிகுருநாதன் = துருசு

ஆதிகூர்மம் = ஆமை

ஆதிகெருடன் = கரிப்பாலை

ஆதிக்கடுஞ்சாரி = நவாச்சாரம்

ஆதிக்கா மானசீவி = கருநெல்லி, மூத்திரம், இளநீர் போன்ற நிறமும் வாசையும் உடையதாய், தாகம், தேகவாட்டம் உண்டாகச் செய்யுமோர் மேகநோய்

ஆதிக்கல் = ஆதிகல்

ஆதிக்கல்நாதம், ஆதிக்கல் பேதம், ஆதிக்கன்னாதம் = ஆதிகல்நாதம்

ஆதிக்காரம் = ஆதிகாரம்

ஆதிக்குடி, ஆதிக்குடியான், ஆதிக்குடோரி = ஆதிகுடி

ஆதிக்குப்பி = உழமண்ணினால் செய்த காசிக்குப்பி

ஆதிக்குமரி = கௌரி பாடாணம்

ஆதிக்குரி = பூவழலை

ஆதிக்குரு = பஞ்சலோகங்களையும் பேதிக்கச் செய்யும் பூநீரு, முப்பு, துருசு, பூவழலை

ஆதிக்கொடி, ஆதிசத்திவேர் = நஞ்சுக்கெடி

ஆதிசரக்கு = சிங்கி பாடாணம், சூதம்

ஆதிசாரம் = சுவாதிட்டானம் (ஆறு ஆதாரங்களுளொன்று)

ஆதிசெயநீர் = வழலையுப்பு செயநீர்

ஆதிசோதிக்கல் = காவிக்கல்

ஆதிச்சியநாகம் = பொன்

ஆதிதராசிவம் = சிவசாரம்

ஆதிதனுராகம் = மாணிக்கம்

ஆதிதேஜசு = மஞ்சள் பூவுடைய ஒரு நீர்க்கொடி

ஆதித்த காந்தை = சூரியகாந்தி

ஆதித்த சேணம் = பேராமல்லி

ஆதித்தநாராயணன் = வயிரம்

ஆதித்தபுடம் = சூரியபுடம்

ஆதித்தம் = காவிக்கல், துருசு

ஆதித்தன் = சூரியன், பூவழலை, சிவப்பு மாணிக்கம், சோதிமணி, முத்து, இலவண பாடாணம்

ஆதித்தன்கூரை, ஆதித்தன் கூர்மை = இலவண பாடாணம்

ஆதித்தன்சத்தி = அரிதாரம்

ஆதித்தன் வித்து = பொன்

ஆதித்தன் வெள்ளை = லெவணபாடாணம்

ஆதித்ய பரணி = சூரியகாந்தி

ஆதித்தியம் = எருக்கு

ஆதித்தியவல்லி = வேம்பாடன்

ஆதிநறும்பூ = கெந்தி

ஆதிநாடி = ஆதாரநாடி

ஆதிநாராயணன் = வச்சிரக்கல், காய்ச்சற் பாடாணம், வாத மடக்கி, விஷ்ணுகரந்தி

ஆதிபட்சி = காக்கை

ஆதிபதி = விந்து

ஆதிபரம் = சாதிக்காய், நெல்லிச்சாறு

ஆதிமகாகுரிசு, ஆதிமகாகுரு = துருசு

ஆதிமகா நாதம் = பூர்வ உலோகமணல் அதாவது இரும்பு மணல்

ஆதிமகாமூலி = கொடிவேலி

ஆதிமகாவிந்து = கார்முகிற்பாடாணம்

ஆதிமண் = தலைப்பிண்டம்

ஆதிமருந்து = திரிகடுகு (சுக்கு, மிளகு, திப்பிலி)

ஆதிமலடு = பெண்களுக்கு உடல் தடித்து இடுப்பு பருத்து வயிற்றில் மூன்று மடிப்புகள் விழுந்தால் ஏற்படும் கருத்தரிக்க முடியாத மலட்டு நோய்

ஆதிமால் = சாதிக்காய்

ஆதிமுக்குரிசி = சவுக்காரம்

ஆதிமுதல் = பூவழலை

ஆதிமூலம் = கிழங்கு மூலம்

ஆதிமூலி = விந்து

ஆதிமொக்கு = மதனப்பூ

ஆதியடம் = கொசத்திராவகம்

ஆதியண்ட பிண்டவுப்பு = வைத்தியமுப்பு

ஆதியண்ட வழுக்கை = இளவழுக்கைச்சாறு அதாவது மூன்று மாதத்திய தலைப் பிண்டத்தின் சாறு

ஆதியதிதனு = பொன்

ஆதியந்தம் = வழலை

ஆதியவை = வெட்பாலை

ஆதியறுகுவேர் = நஞ்சுக்கொடி

ஆதியாமம் = மூகைப்புல் (மூவகைப்புல்)

ஆதியிற் பூர்த்த பூ = தலைப்பிண்டம்

ஆதியுப்பு = சவர்க்காரம், முப்பு

ஆதியெரு = வைத்திய, முப்பு

ஆதிரத்தினம் = மாணிக்கம்

ஆதிரம் = நெய், இஞ்சி

ஆதிரவிச்சாலை = காவிக்கல் பூமி

ஆதிரவிச்சிலை = காவிக்கல் அல்லது செங்கழுநீர்க்கல்

ஆதிரவிச்சீலை = காவிக்கல்

ஆதிரவுத்திரம், ஆதிரவித்திரன் = வீரம், சவ்வீரபாடாணம்

ஆதிராதி = பாசிப்பயறு

ஆதிருதி = இஞ்சி

ஆதிரூபம் = நோயின் முதற்குறி

ஆதிரையரையோன் = பல்லி

ஆதிரோதயம் = சாதிக்காய்

ஆதிரௌத்திரம் = ஆதிரவத்திரம்

ஆதிர்யுத்திரன் = சவ்வீரம்

ஆதிலட்சுமி = அரிதாரம்

ஆதிலவணம் = சவர்க்காரம், மூப்பு

ஆதிலாம் = கசகசா

ஆதிலிந்து = நீலாஞ்சனவிடம்

ஆதிலேபம் = மரவட்டை

ஆதிலொத்து கத்தோல் = வெள்ளை அத்திப்பட்டை

ஆதிவராகன் = சோரபாடாணம்

ஆதிவருந்திரம் = சவர்க்காரம், முப்பு

ஆதிவாகியம் = உடம்பு

ஆதிவிந்து = நீலபாடாணம், கார்முகிற் பாடாணம், இரசம், மழை

ஆதிவிராகன் = சோர பாடாணம், சூதபாடாணம்

ஆதிவிராசன் = மான்செவிக் கள்ளி, சோரபாடாணம்

ஆதிவிராடியன் = சோரபாடாணம், சூதபாடாணம்

ஆதிவிராட்டியம் = வெள்ளைப் பாடாணம்

ஆதிவிராட்டியன் = சோரபாடாணம், சூதபாடாணம்

ஆதிவிருமம் = அறுகம்புல்

ஆதி வெள்ளைச் சிந்தூரம் = வீரம்

ஆதுமம் = அரத்தை

ஆதுயம் = கள்

ஆதுரசாலை = நோயாளிகளைக் கிடத்துமிடம்

ஆதுரம் = நோய்

ஆதுரன் = நோயாளி

ஆதுவம் = கள், பனங்கள்

ஆதெரிசனம், ஆதொண்டம், ஆதொண்டன் = கண்ணாடி

ஆதொண்டை = காத்தொட்டிக் கொடி, பேய்ப்புடல், துரட்டி, மரம், தொண்டை

ஆத்த கேசரி = சூடன்

ஆத்தசம் = மொச்சை

ஆத்தரம் = ஈஞ்சல்

ஆத்தரளி, ஆற்றலரி = ஆத்தலரி (கடலைப்பூஞ்செடி)

ஆத்தா = சீத்தா மரம், இராம சீத்தா, மணிலா, ஒரு மரம்

ஆத்தார மூத்தான், ஆத்தாரமூத்தாள் = பூனைக்காலி

ஆத்தாள் நாதம் = அப்பிரகம்

ஆத்தாள் மூத்தாள் = பூனைக்காலி

ஆத்தி = ஆத்திமரம் (அரிக்கா, அரிநார், ஆர்ச்சி போன்ற பல பெயர்களுண்டு)

ஆத்திகம் = அத்தி

ஆத்திக்கனி = வெருகன் கிழங்கு

ஆத்தி சீரடம் = பூநீறு

ஆத்திசூலை = குதிரைகளுக்குக் காணும் ஒரு வயிற்றுவலி

ஆத்திஷ்டி, ஆத்திட்டி = நீர்முள்ளி

ஆத்திபோகிதம் = யானைக் குன்றிமணி

ஆத்திமரம் = மலையத்தி

ஆத்தி மல்லிகை = காயசித்தியை உண்டாக்கும் மூலிகை; இலிங்கத்தைக் கட்டும்

ஆத்தி மாங்கிசம் = வெட்சி

ஆத்திமேல் புல்லுருவி = ஆத்தி மரத்தின் மேல் வளரும் புல்லுருவி

ஆத்தினமைக்காலி = வெண்கருங்காலி

ஆத்திரகம் = ஈஞ்சில், இஞ்சி

ஆத்திரசம், ஆத்திரதம் = இஞ்சி

ஆத்திரத்தின் ஆகு = சாத்திரவேதி

ஆத்திரமாதை = காட்டுளுந்து

ஆத்திரமூலம் = இரத்தத்தினால் பித்தத்தினால் ஏற்பட்டு எப்பொழுதும் இரத்தக் கசிவையுண்டாக்கி வருமோர்வித மூலநோய்

ஆத்திரம் = இஞ்சி, தேவதாரி

ஆத்திரேயை = அன்னரசம்

ஆத்தினி = வெருகன்கிழங்கு, யானைக்காற் சுவடி எனும் செடி

ஆத்தின்கல் = இரதக்கல்

ஆத்துகம் = ஆமணக்கு

ஆத்து கொம்பொதியமரம் = ஆட்டுக்கொம் பொதி

ஆத்துக்காலி = பூனைக்காலி

ஆத்துச்சங்கிலை = ஆற்றுச்சங்கிலை

ஆத்துப்பழுத்தான் = பூனைக்காலி

ஆத்துப்பாசி = ஆற்றுப்பாசி

ஆத்துப் பூத்தான் = செப்பு நெருஞ்சில், விஷ மூங்கில், பொன், பூனைக்காலி, துவரை, ஆத்துமுள்ளி

ஆத்துமகுப்தா = பூனைக்காலி

ஆத்துமகூண்டு = உடம்பு

ஆத்துமகேசரி = நிலக்கடலை

ஆத்தும கொடிமணி = மணிக்குடல்

ஆத்துமகோடம் = காகம்

ஆத்து மசலம் = சிறுநீர், விந்து

ஆத்தும சல்லியை = தண்ணீர் விட்டான் கிழங்கு

ஆத்து மதகை = காட்டாமணக்கு

ஆத்துமதரிசகம், ஆத்து மதரிசம் = கண்ணாடி

ஆத்துமத்தா, ஆத்துமபத்தர், ஆத்தும புத்தர் = பூனைக்காலி

ஆத்துமம் = அரத்தை

ஆத்துமரட்சை = ஒருவகைக்கொடி

ஆத்துமா = உடல், காற்று, சூரியன், நெருப்பு

ஆத்துமாவின் சூதம் = கற்பூரசிலா சத்துச்சாரம்

ஆத்து மானம் = வயிற்றுப்பிசம்

ஆத்துமான வாதம் = அடிவயிற்றில் வாயு தங்கி அதனால் குடல் வலி, வயிற்றிரைச்சல் வயிற்றுப்பிசம் முதலிய குணங்களைக்காட்டு மோர் வகை வாதநோய் வயிற்றில் இரைச்சல், உப்பிசத்தைத் தருதலால் இப்பெயர்

ஆத்து முத்தான் = பூனைக்காலி

ஆத்துமுள்ளி = கண்டங்கத்தரி

ஆத்தும்புத்தரி = பூனைக்காலி

ஆத்துவாகம் = இஞ்சி

ஆத்துவிடவிந்து = கற்பூரசிலாசத்து

ஆத்மபேதி = செப்பு நெருஞ்சில், காட்டாமணக்கு, ஆம்பல்

ஆத்மலஷ்மி = தாளகம்

ஆத்துள்மலை = நாகபச்சை

ஆநீருண்டோன் = அகத்தி

ஆநீர் = பசுவின் சிறுநீர்

ஆந்திரக்கிருமி = குடற்புழுக்கள்

ஆந்திர சூலை = பொதுவாகக் குடலுக்கு ஏற்படும் குத்தல் வலி, சூலத்தினால் குத்தினால் போலுண்டாகும் ஒரு விதக் குடல்வலி, உணவு செரியாமையால் குடலில் காணும் குத்தல் நோய் வாயு தங்குவதனால் ஏற்படும் வலி குடலில் மலம் தங்குவதால் ஏற்படும் வலி

ஆந்திரதம் = இஞ்சி

ஆந்திரபித்தவாதம், ஆந்திரமருந்து = குடல்வாயு

ஆந்திரம் = குடல், மரணம்

ஆந்திராவிருத்தி ரோகம் = குடலண்ட விருத்தி

ஆந்திரிகம் = குடல் முதலிய உறுப்புகள்

ஆந்தை = பேராமுட்டி, பிராமுட்டி, (புறாமுட்டிப்பூடு) பாழடைந்த சுவரிடுக்கு, மரப்பொந்து ஆகிய இடங்களில் பகலில் மறைந்திருந்து இரவில் கூச்சலிடும் ஒரு சகுனப்பறவை

ஆந்தையீடன் = பேராமுட்டி

ஆபகம் = நீர்த்துளி, துவரை

ஆபடிகம் = இந்திரநீலம்

ஆபணியம், ஆபணீயம் = கடைச்சரக்கு

ஆபரங்கோரை = முத்தக்காசு

ஆபனம் = மிளகுக்கொடி, மிளகு

ஆபாதசூடம் = உச்சி முதல் உள்ளங்கால்வரை முழு உடம்பு

ஆபினம் = பசுவின் முலைமடி

ஆபீடம் = தாமரைத்தாது, ஒரு வகை நிமிளைச் சத்து

ஆபீதம் = தாமரைக்கேசரம்

ஆபீனம் = பசுவின் மடி, கொழுப்பு

ஆபூஷம், ஆபூடம் = துத்தநாகம்

ஆபூபீகம் = மாப்பண்டம்

ஆபூப்பியம் = நஞ்சுக்கொடி, மாவு

ஆபோசனம் = விழுங்குதல், உணவு

ஆப்பால் = பசும் பால்

ஆப்பியந்திர = பிராணவாயு வாயு முதலிய வாயுக்கள்

ஆப்பி = காளான், கோமியம்

ஆப்பியானம் = உடம்பின் கொழுப்பு

ஆப்பில் = சீமை இலந்தை

ஆப்பு = எட்டி மரம், நொய், மூளை, உடம்பு, காஞ்சுவரை, உணவு, கட்டு

ஆப்புராகி = வெள்ளைக்குன்றிமணி

ஆப்புரி = ஆப்பு

ஆப்புவேணிகம் = வெண்கண்டங் கத்திரி

ஆப்புளண்டம் = கையாந்தகரை

ஆப்புளாகி = வெண்கீரைத் தண்டு

ஆப்பெலும்பு, ஆப்பென்பு = ஆப்பைப் போன்ற ஒருவகை எலும்பு, மணிக்கட்டின் எட்டு எலும்புகளிலொன்று பாதத்திலிருக்கும் ஆப்பைப் போன்ற மூன்று எலும்புகள்

ஆம = நீர்

ஆமக = சமைக்காத, பச்சையான

ஆமகம் = துவரை

ஆமகற்பம் = இளஞ்சூல்

ஆமகீதளம் = இலவங்கபத்திரி

ஆமகோகிலம் = வெண்குன்றி மணி

ஆமகோளம், ஆமகோளா = கடுக்காய்ப்பூ, காட்டுப்பசு

ஆமக் கடுப்பு = சீதம் விழுவதால் ஆசன வாயிலிலுண்டாகும் எரிச்சலோடு கூடியவலி

ஆமக்கட்டு = சீதக்கட்டு

ஆமக் கணம் = குழந்தைகட்குச் சீதவழும்பு விழும் ஒருவகைக் கண்நோய்

ஆமக் கழிச்சல் = குழந்தைகட்குண்டான ஒருவகைச் சீதபேதி, சிறுகுடலில் நிணநீர்த்தாரை அழிவுற்று அதனால் ஆமம் பெருகி ஏற்படுங் கழிச்சல்

ஆமக் காய்ச்சல் = செரியாமையால் ஏற்படும் சுரம்

ஆமக்கினி = கடுகுரோகணி

ஆமக்கீரை = சிறுசெவ்வந்தி

ஆமசன்னி = செரியாமையால் ஏற்படும் சன்னி

ஆமகரம் = செரியாமையால் ஏற்படும் சுரம்

ஆமசுலை = செரியாமையால் ஏற்படும் வயிற்றுவலி

ஆமடம் = ஆமணக்கு

ஆமடி = எட்டி காஞ்சிரம் (காஞ்சிரை, காஞ்சுரை)

ஆமடிக நவ்வல் = வெண்ணாவல்

ஆமடிகம் = எட்டி

ஆமணக்க நெய் = ஆமணக்கு கொட்டையிளின்று காய்ச்சி அல்லது காய்ச்சமாலேயே எடுக்கும் நெய்

ஆமணக்குக் கொட்டை = முத்து கொட்டை

ஆமணக்கு = ஏரண்டம் பஞ்சாங்குலம், செவ்வாமணக்கு, சூரியகாந்த ஆமணக்கு மலையாமணக்கு, கடலா மணக்கு, காட்டாமணக்கு, ஏரிக்கரைக்

காட்டாமணக்கு, எலியாமணக்கு, புல்லாமணக்கு, சிற்றாமணக்கு, பறங்கியாமணக்கு, பேராமணக்கு,

மணியாமணக்கு, படுக்கையா மணக்கு, அறுபதாங்கொட்டை சிற்றாமணக்கு

ஆமணக்கு முத்து = கொட்டைமுத்து

ஆமணத்தி, ஆமணத்திரம் = கோரோசனை

ஆமண்டகம், ஆமண்டம் = ஆமணக்கு, சிற்றாமணக்கு

ஆமதோடம் = குழந்தைகளுக்கு அசீரணத்தால் ஏற்படும் தோடம்

ஆமத்தியகம் = ஐவணத் திரையம்

ஆமபாசம் = வீக்கம் அல்லது கட்டியைப்பழுக்கச் செய்யு மோர் முறை

ஆமபேதி = சீதபேதி, ஆமம்கழலுதல், குடலின் அழற்சியினால் வலியுடன் ஆமம் கலந் துண்டாகும் பேதி, சீத வழும்போடு கூடிய மலபேதி

ஆமமாமிசம் = சமைக்காத கறி

ஆமமூத்திரம் = சிலேட்டுமமூத்திரம்

ஆமமேகம் = சிறுநீரில் மேகம் கலந்து வரும் ஒரு மேகநோய்

ஆமம் = பழுக்காத நிலைமையிலுள்ளது, சமைக்கப் படாதது, செரியாமை, கடலை, துவரை, வசம்பு, உடம்பு, சீதம், சீதக்கட்டு அல்லது சீதக்கழும்பு, குங்குமம், தண்ணீர் விட்டான், காளான், மல வறட்சி

ஆமயம் = பசுஞ்சாணி, நோய், கோட்டம், ஒருவகைப் பூடு

ஆமயன் = நோயாளி

ஆமயாம் = இரதம்

ஆமயாவி = செரியாமையினால் பாதிக்கப்பட்டவன், குன்ம நோயாளி, நோயாளி

ஆமயாவித்துமம் = செரியாத் தன்மை

ஆமரகோளம், ஆமரகோளா = கடுக்காய்ப்பூ, காட்டுப்பசு

ஆமரசம் = பக்குவப்படாத அன்னரசம்

ஆமரட்சகி = சீதபேதி மருந்து

ஆமரத்தபேதி = சீதமும் இரத்தமுங் கலந்த பேதி

ஆமரபலம் = எட்டிப்பழம், நெல்லிக்கனி

ஆமரம் = எட்டி

ஆமரி = நெல்லி, சிறுநெல்லி

ஆமரிகபலம் = நெல்லிக்கனி

ஆமரிகம் = நெல்லிமரம், ஈருள்ளி

ஆமரிக்கம் = சிறுகுறிஞ்சா

ஆமரீகம் = நெல்லிக்கனி, பூவில்லாமரம்

ஆமருகா = வெண்கொம்புப் பாகல்

ஆமருப்பு = மாட்டுக் கொம்பு, பசுவின் கொம்பு

ஆமரோகம் = சீதக்கட்டைப் பற்றிய நோய்

ஆமலகண்டகம் = வேலிக் கள்ளி

ஆமலகபலம் = நெல்லிக்கனி

ஆமலகமலம் = நெல்லி கொட்டைப் பாசி

ஆமலகம் = நெல்லி, பளிங்கு

ஆமலகி = நெல்லிக்காய்

ஆமலகை = நெல்லிக் கனி, காய்ச்சலுங் குளிருங் கூடியவோர் விஷ நோய், குளிர்சுரம், நீரேற்ற மென்று சொல்லப்பட்ட வியாதிகள்

ஆமலக்கி = நெல்லிக்காய்

ஆமலபாடலம் = கருமாஞ்செடி

ஆமலபுரகீடிகை = புளி

ஆமலம் = மாதுளை, புளி, நாவல், சகஸ்ரவேதி, விஷ மூங்கில்

ஆமலவிருட்சம் = புளியமரம்

ஆமலவேதசம் = கொல்லைப்பல்லி

ஆமலாகாரம் = வெண்கொய்யா

ஆமலானம் = ஐவணம்

ஆமலி = புல்லில் பச்சலிகா, புளியரணை

ஆமல் = மூங்கில், மூங்கிலிலை, விஷமூங்கில்

ஆமவாதம், ஆமவாதரோகம் = செரியாமையால் வாயுகுடலில் தங்கி வயிற்றில் ஏற்படும் ஒருவகை வாத நோய்

ஆமனுப்பு = மாட்டுக்கொம்பு

ஆமா = காட்டுப்பசு, மாடு, கடுக்காய்ப்பூ, காட்டெருமை, நெல்லிக் காய், பால் தரும் தாய்

ஆமாகேளா = கற்கடகசிங்கி

ஆமாகோளா = கடுக்காய்ப்பூ, கற்கடகசிங்கி

ஆமாசயத் திராவகம் = இரைப்பையிலிருக்கும் உணவைக் கடைந்து குழம்பாகச் செய்யும் ஒருவித காரமுள்ள நீர்

ஆமாசயம் = இரைப்பை

ஆமாசவயிரி = செந்திராய்

ஆமா சிரயம் = செரிக்காத அன்னம், தங்குமிடம், வயிற்றின் மேற்பாகம் (தொப்புள் வரை)

ஆமாசீரணம் = செரியாமையால் ஏற்படும் குன்ம நோய்

ஆமாஞ்சிகை = இலவங்கக்கள்

ஆமாஞ்சியம் = நெய்

ஆமாதி = வெண்கொழுஞ்சி

ஆமாதிசாரம் = சீதபேதி அல்லது வயிற்றுளைவு

ஆமாத்தியர், ஆமாத்திரர் = வைத்தியர்

ஆமாயம் = பசுஞ்சாணி நோய், ஒருவகைப் பூடு

ஆமாரசம் = உணவு செரிக்குங்கால் அதினின்று வரும் நீர்ச்சத்து

ஆமாலை = புளியாரை

ஆமாலை சோமாலை = மிக்க அயர்ச்சி

ஆமான் = காட்டுப்பசு

ஆமிசம், ஆமிடம் = உணவு (மாமிசம்)

ஆமிடி = சடாமாஞ்சில்

ஆமிரகந்தகம் = ஒரு வகைப் பூடு

ஆமிரகலை = கடல்நுரை

ஆமிரகா = வெண்முள்ளி

ஆமிரசம் = நாரத்தை

ஆமிரதம் = மாமரம், புளியமரம், நாரத்தை

ஆமிரபதரசம் = மறுதுடரி

ஆமிரம் = மாமரம், புளிய மரம், கருமாமரம், ஒரு பலம்

ஆமிரவர்த்தம் = உறைந்த மாம்பழரசம்

ஆமிரவாடிகம் = காட்டுப்பசு

ஆமிரவிருட்சம் = காட்டுமரம்

ஆமிராதகம் = இலுப்பைவேர்

ஆமிலகா, ஆமிலகாற்று = இரும்பிலி

ஆமிலக் கபம் = உள்ளுறுப்புகளின் சுரப்பிகளின் தன்மைக் கேற்ப ஏற்படும் நோய்

ஆமிலத்தாதிகம் = வெண்துத்தி

ஆமில பித்தம் = புளித்த வாந்தி, உண்ணும் உணவு செரியாமையால் சூலை, அக்கினிமந்தம், இருமல்,

நடுக்கம், தாகம், பலவீனம், வியர்வை, தூக்கமின்மை முதலிய பலவகைக் குணங்களைக் காட்டும் பித்த நோய்

ஆமிலம் = புளிப்பு, புளியமரம்

ஆமிலவனிதம் = புளிப்பிண்டு

ஆமில விதத்தம் = புளிப்பான பண்டங்களை உண்பதால் உண்டாகும் கண்நோய்

ஆமிலாந்திரி = மாங்கொட்டை

ஆமிலிகா = புளியாரை

ஆமிலிகி = நெல்லிமரம்

ஆமிலிகை = புளிப்பு, புளியமரம்

ஆமிலை = புளியாரை

ஆமிலொம்பில் = கொடுக்காப் புளி

ஆமிவர்த்தம் = ஆமிரவர்த்தம்

ஆமீன் = புல்லுருவி, கோரோசனை

ஆமுசிகை = சுண்டெலி

ஆமுத்து = பசுவின் பல்லில் பிறப்பதாகச் சொல்லும் முத்து

ஆமூலாக்கிரம் = சமூலம் (வேர் முதல் கிளை வரை)

ஆமேல்புல்லூரி = கோரோசனை, கடுக்காய்ப்பூ

ஆமேற் புல்லூரி = கோமரம், வாசனை, ஒரு நோய்

ஆமைக்கட்டி = ஆமக்கட்டி, காய்ச்சல் கட்டி, காய்ச்சலுக்கு சிகிச்சை செய்யாது விட்டால் மண்ணீரல் சுரந்து கட்டையைப் போல் தோற்றுவிக்கும் ஒரு வகை வீக்கம்

ஆமைச்சுரம் = குழந்தைகட்கு ஆமைக் கட்டினால் வரும் ஒரு வகைச் சுரம்

ஆமைச் சூலை = செரியாமையால் ஏற்படும் வயிற்றுவலி

ஆமை நண்டு = ஆமையைப் போன்ற ஒருவகைக் கடல் நண்டு

ஆமை நெய் = ஆமைக் கொழுப் பினின்று காய்ச்சி எடுக்கும் நெய்

ஆமையடி = ஒருவகை இரணநோய்

ஆமையடிச் சிலந்திவாளை = ஒருவகைச் சிலந்தி

ஆமையம் = நோய்

ஆமையோட்டுக் கட்டி = குழிவிழுந்து ஆறாமல் ஆமையோட்டைக் கவிழ்த்தது போலிருக்கும் பெரும்புண்கட்டி, சிலேட்டும் வாயுவினால் உடலின் எப்பாகத்திலாவது ஐந்தாறு கட்டிகள் ஆமை யோட்டைப் போல் எழும்பிக் காணும் நீரிழிவினால் வரும் மினு மினுப்புள்ள ஆறாத கட்டி

ஆமை வயிறு = வயிறு ஆமையின் மேற்புறத்தைப் போன்றிருக்கும் வயிறு ஒரு நோய்

ஆமோ = புல்லுருவி, கோரோசனை

ஆமோதம் = மிகுந்தவாசனை

ஆமோபம் = சித்திரபாடாணம்

ஆமோற்பத்தி = அன்னரச முண்டாகும் வழி

ஆம் = ஈரம், நீர், கடுகு, வெந்நீர், சிறுகீரை, வெள்ளரி

ஆம்பதிகா = ஆயில்பட்டை

ஆம்பரமை = புளிக்கும் பொருள்

ஆம்பரல் = நெல்லிக்கள்

ஆம்பர் = அம்பர் மரத்தினின்று எடுக்கும் மஞ்சள் குங்கிலியம், ஆம்பல்

ஆம்பலகாசிகம் = கரடி

ஆம்பலரி = முதலை, கதிரவன், குமுதம், யானை

ஆம்பலர் = புளியாரை

ஆம்பலா = புளியாரை, தாமரை

ஆம்பலாம் = புளிய மரம்

ஆம்பலி = வெண்பச்சைக்கடலை

ஆம்பல் = அல்லி, சந்திரன், மூங்கில், யானை, விஷமூங்கில், நெல்லிச்செடி, நெல்லி, புளியாரைப் பூண்டு, கள், தாமரை, நெய்தற்கிழங்கு

ஆம்பல்காசிகம் = கரடி

ஆம்பல் சக்களத்தி = ஆம்பலைப் போன்ற ஒருவகைப் பூடு

ஆம்பவம் = வெள்ளிண்டு

ஆம்பற்கிழங்கு = அல்லிக் கிழங்கு

ஆம்பற்குழாய் = மூங்கில் குழாய்

ஆம்பாமண்டலம் = செருப்படை

ஆம்பாரிகம் = வெண் வாடாமல்லிகை

ஆம்பாரை = புளியாரை

ஆம்பாலா = அல்லிச்செடி, கள்

ஆம்பி = காளான், குடைக்காளான், ஒலி

ஆம்பியம் = இரசம்

ஆம்பிரகம் = வெள்ளைத் தூதுவளை, அப்பிரகம்

ஆம்பிரபல்லவம் = மாங்கொழுந்து

ஆம்பிரமூலகம் = வெட்டிவேர்

ஆம்பிரத்தி = மாங்கொட்டை

ஆம் பிரம் = புளிப்பு, தேமா, மாமரம், காளான், கள்,
அமிலம், இரசம், புளியமரம், புளியாரை

ஆம்பிரர் = இரசம்

ஆம்பிலங்கனி = புளியம்பழம்

ஆம்பிலசாகம் = புளியமரம்

ஆம்பிலசாரங்கேரி = புளியாரை

ஆம்பிலம் = கள், சூரைச்செடி, புளிமா

ஆம்பில லோணிகை = புளிப்பு, புளி, புளியாரை

ஆம்பிலாவாரை = புளியாரை

ஆம்பிலி = புளி

ஆம்பில் = மூங்கில், கள், அல்லி, ஆனைக்கொம்பு, புளியாரை

ஆம்பில் நாசிகம் = கரடி

ஆம்பீரம் = புளியமரம், புளியாரை

ஆம்பு = காஞ்சொறி

ஆம்புகு = சூரை

ஆம்புயம் = இரசம்

ஆம்புலம் = சூரை, குதிரை, புளிமா, கண்டங்கத்திரி

ஆம்புலி = காஞ்சொறி

ஆம்புலோசிதம் = வெள்ளை உகா

ஆம்புவம் = சூரை

ஆம்பூசி = ஆவில், புங்கு

ஆம்பூதி = கடலழிஞ்சல், கோட்டம்

ஆம்புறு, ஆம்பூறு, ஆம்புனம் = சூரை

ஆம்மிலம் = ஒரு பலம்

ஆம்மிரம் = புளிப்பு

ஆம்மிலை = புளியாரை

ஆம்ராதகப் பட்டை = ஆயுர் வேதத்தில் சொல்லியுள்ள ஒருவகை மூலிகை

ஆம்லபித்தம் = ஆமிலபித்தம்

ஆய = ஆச்சாமரம்

ஆய அஞ்சனம் = அஞ்சன பாடாணம்

ஆயக்கசுரம் = முறை சுரம்

ஆயக்கல் = காரக்கல்

ஆயசக்கு = இரும்பு

ஆயசமந்து = நெட்டி

ஆயசம் = இரும்பு

ஆயசூரி, ஆயசூர் = கடுகு

ஆயச்சக்கு = இரும்பு

ஆயத்துக்கரத்தன், ஆயத்துக்கருத்தன் = அஞ்சன பாடாணம்

ஆயப்பாலை = கொடிப்பாலை நால்வகைப் பாலையுளொன்று

ஆயமலர் = தாமரை

ஆயமானம் = உயிர்நிலை

ஆயமிலுகல் = தீமுறுகற்பாடாணம்

ஆயம் = 34 அங்குலமுள்ள குழி, மேகம்

ஆயனம் = ஒருவகை நெல், வருடம்

ஆயா = காஞ்சி

ஆயாச மூர்ச்சை = களைப்பினால் ஏற்படும் அறிவு மயக்கம்

ஆயாமம் = மூச்சு அடக்குதல்

ஆயாழனம் = பசுவீன்மடி

ஆயி = காஞ்சி

ஆயிநாதம் = சிகப்பு கெந்தி

ஆயிரக்காலி = மரவட்டை, செவ்வட்டை

ஆயிரக்குண்டலி = செவ்வட்டை

ஆயிரக்குன்றி = மரவட்டை

ஆயிரங்கச்சி = அட்டுக்கிளநீர்

ஆயிரங்கண்ணி = பலாப்பழம்

ஆயிரங்கதிரோன் = சூரியன்

ஆயிரங் காய்ச்சி = அதிகமாகக் காய்க்குந் தென்னை, பலா முதலிய மரங்கள்

ஆயிரங்காலி = ஆயிரக்காலி

ஆயிரசகாமன் = சிவனார் வேம்பு

ஆயிரஞ்சோதி யுள்ளோன் = ஆயிரங்கதிரோன்

ஆயிரநாமன் = சிவனார் வேம்பு

ஆயிரப்பணாமுடி = நாகமலை

ஆயிரவருட மண்டூரம் = ஆயிரம் வருடஞ் சென்ற இரும்புக் கிட்டம்

ஆயிர்கட்டி = சர்க்கரை

ஆயிர்க்குன்றி = மரவட்டை

ஆயிலக்கட்டி = சர்க்கரை

ஆயிலாகியம் = வெண்மிளகு

ஆயிலி = காஞ்சி, கடுகு

ஆயிலியங்கு = மூஞ்சுறு

ஆயிலியப்பட்டை = நாகமரத்துப் பட்டை

ஆயிலியம் = நாகமரம், ஆயில் மரம்

ஆயில் = மதகரி வேம்பு, செவ்வகில், காஞ்சி, முசுமுசுக்கை, செவ்வட்டை, கடுகு

ஆயினி = ஈரப்பலா, காட்டுப்பலா

ஆயினிடநாதம் = பொன்னிமிளை

ஆயினிமேல் புல்லுருவி = ஈரப்பலாவின் மேல் முளைத் திருக்கும் புல்லுருவி

ஆயினிமேனி, ஆயின்மேனி = பச்சைக்கல்

ஆயுசும் = வாழ்நாள்

ஆயுசு விருத்தி = உலோகமணல்

ஆயுஷியம் = வாழ்நாள்

ஆயுதமிழுக்குமலை = இரும்பு மலை

ஆயுதம் = வேலமரம்

ஆயுத விஷம் = ஆயுதப்பிரயோகத்தினால் உடம்பில் ஏற்பட்ட விஷம்

ஆயுர்வேதாக்கினி = மருந்து செய்யும் பொழுதுண்டாக்கும் தீ இது ஒவ்வொரு முறையிலும், போடும் நெருப்பிற்குத் தக்கபடி வேறுபடும்

ஆயுள்கிரமம் = வாத பித்த சிலேத்து மத்தைக் கருதி வாழ்நாளைப் பிரித்த முறைமை

ஆயுள்வேதியர் = வைத்தியர்

ஆயே = ஆதவன், பெற்றவள்

ஆயை = சூரை

ஆய் = ஆச்சா மரம், சயரோகம், மலம், கொய்தல், காம்புகளைதல்

ஆய்க்கல் = ஒருவிஷக்கல்

ஆய்சகு = செம்பு

ஆய்ச்சமந்து = நெய்

ஆய்ச்சாலிகம் = வெண்மிளகாய்

ஆய்ச்சூரி, ஆய்ச்சூரிகம் = வெண்கடுகு

ஆய்ச்சேவகம் = வெள்ளெருக்கு

ஆய்ந்துயர் காந்தி, ஆய்ந்துயர்காவி = கற்காவி

ஆய்மலர் = ஆயமலர்

ஆய்மா = சாரப்பருப்பு, ஆவிமா எனும் மஞ்சள் மாங்காய் மரம்

ஆய்மாலிகம் = வெண்கடுக்காய்

ஆர = ஆத்தி, அத்தி

ஆரகடமம் = பித்தளை

ஆரகத்தி = திப்பிலி

ஆரகம் = இரத்தம், சந்தனம், அகில், பித்தளை, காட்டாத்தி, இரதம்

ஆரகன் = கள்

ஆரகாடத்தி = அத்தி

ஆரகாட்டம் = பித்தளை

ஆரகூம்பி = தாழை

ஆரகுவதம் = கொன்றை

ஆரகூடம், ஆரகூலம் = பித்தளை, செம்பு

ஆரகே = திப்பிலி

ஆரகேயூரம் = வெள்ளை முள் முருங்கை

ஆரகோதம் = சரக்கொன்றை, கொன்றை

ஆரகோரம் = கொன்றை

ஆரக்கதி = திப்பிலி

ஆரக்கமாதிகம் = வெண்டாமரை

ஆரக்கம் = அகில், சந்தனக்கட்டை, செஞ்சந்தனம், பித்தளை, கெருடன் கோலம்

ஆரக்காமம் = பித்தளை

ஆரக்குவதம் = கொன்றை

ஆரக்கூடம், ஆரக்கூமம் = பித்தளை

ஆரக்கூவகம் = வெள்ளை நீர்முள்ளி

ஆரங்கம் பாக்கு = துண்டு துண்டாக வெட்டி வேகவைத்த பாக்கு

ஆரசகம் = அகில்

ஆரசுடம் = பித்தளை, செம்பு

ஆரஞ்சாகி = வெண்பசலை

ஆரஞ்சு = கிச்சிலி

ஆரணிகஞ்சா = வறட்கஞ்சா

ஆரணிகேது = தக்காளி

ஆரணியம் சதாமூலி = மூக்கத்தாரி

ஆரணியம் = காடு

ஆரண்ணியம் = காட்டுக்கொள்

ஆரதக்கறி = மரக்கறி

ஆரதிகம் = கல்நார்

ஆரதுபம் = அரத்தை

ஆரந்தகளம் = வரமுள்ளி, கருமைவண்டு

ஆரந்தம் = ஆத்தி, அத்தி, நாவல்மரம்

ஆரத்திரகம், ஆரத்திரசம், ஆரத்திராசகம், ஆரத்திராசாகம் = இஞ்சி

ஆரத்தோதிகம் = வெண்ணடுக்கலரி வெள்ளை இரட்டையலரி

ஆரநாலகம், ஆரநாலரம், ஆரநாளத்தைலம், ஆரநாளம் = கரடி

ஆரப்பியம் = வங்க மணல்

ஆரமில்லா தான்பால் = கள்ளிப்பால்

ஆரமதி = நண்டு

ஆரமம் = பித்தளை

ஆரமாசகம் = வெள்ளையலரி

ஆரமாமிகம் = ஆத்தி, அத்தி

ஆரமாயிகம் = வெண்புளிச்சை

ஆரம் = பித்தளை, முத்து, முத்து மாலை, அஞ்சனபாடாணம், ஆத்தி, அத்தி, கடம்பு, சந்தனம், சந்தனமரம், கோடகசாலை, காட்டாத்தி, குடசபல் பாலை, வெட்பாலை, காளிதம், அஞ்சனம்

ஆரம்பகுட்டம் = இளங்குட்டம்

ஆரம்பகொட்டு = பாலமுத்து

ஆரம்பக்கொசு, ஆரம்பக்கொடி = சமுத்திராப்பழம்

ஆரம்பலகை = பச்சைக் கற்பூரம்

ஆரலை = பீதகம், தான்றிக்காய்

ஆரலைக் கருடன் = கொல்லன் கோவை

ஆரல் = நெருப்பு, ஆரைக்கீரை, பித்தம், களிம்பு, காக்கணங்கொடி, நல்ல தண்ணீர், ஆரால் மீன், அக்கினி பித்தம், சவ்வீரம், வெட்பாலை, சிட்டி, கரும்பாலை

ஆரவரியம் = அரசு

ஆரவலம், ஆரவலர் = காட்டாத்திப்பூ

ஆரவாரியம் = அரசு

ஆரளம் = பெரியமரம்

ஆராகசம் = வெள்ளைப் பூண்டு

ஆராகம் = சுரை

ஆராகரியம், ஆராகவரியம், ஆராகாரியம், ஆராக்கியம் = அரசு

ஆராத கேசமானம் = புன்னை

ஆராத்திரகம் = இஞ்சி

ஆராவரியம் = அரசு

ஆராமசீதளம் = கோடாசாரி (குடச்சாலை)

ஆராமம் = பூந்தோட்டம்

ஆராவரிய, ஆராவரியும் = அரசு

ஆரிகோரம் = கொன்றை

ஆரிசடச்சி = புளியாரை

ஆரிட்டம் = காக்கை, கருஞ்சீரகம்

ஆரிதம் = வெள்ளலரி

ஆரித்திரம் = கடப்பமரம்

ஆரியகம் = சிறுகுறிஞ்சா

ஆரியகாசம் = வெள்ளலரி, வெள்ளல்லி

ஆரியசம் = சிறுகுறிஞ்சா

ஆரியமாது = நன்னாரி

ஆரியம் = கேழ்வரகு, பொன்

ஆரியவாக்கியம் = ஓமம்

ஆரியவாசியம் = ஓமம், ராயித்தாள்வேர்

ஆரியவிடயம் = அதிவிடையம்

ஆரிய வீகாசிகம் = வெள்ளையவரை

ஆரியன் = அதிவிடையம், வைத்தியன், வெள்ளரி, சூரியன், ராயித்தாள்வேர்

ஆரியன்பாடு = ஆடாதோடை

ஆரியாசம் = சிறுகுறிஞ்சா

ஆரியான் = சின்ன வாலுளுவை

ஆரீதம் = கரிக்குருவி, பச்சைப் புறா

ஆரு = நண்டு, பன்றி

ஆருகதம், ஆருக்கம் = நாவல் மரம்

ஆருங்வ் = கருப்பத்திலுண்டாகும் பனிக்குடத்துநீர்

ஆருடகந்தம் = காயம்

ஆருடக்குரோணி = சேங்கொட்டை

ஆருடநாதம் = சங்கிலை

ஆருதம் = இஞ்சி

ஆருத்தம் = நாவல் மரம்

ஆருந்தின்னா மூலி = உடம்பிலிருக்கும் பித்து

ஆருபதம் = பித்தளை

ஆருப்பியகெந்தா = குப்பைமேனி

ஆருப்பியம் = வங்க மணல்

ஆருமில்லாதான்பால், ஆருமீயாதான்பால் = கள்ளிப்பால்

ஆருயிர்மருந்து = உணவு, காயகற்பம்

ஆருவம் = தண்ணீர், சாறு

ஆரூபகம் = சிற்றாமணக்கு

ஆரூர்க்கால் = ஒருவகைக் கற்பூரம்

ஆரே = ஆத்திமரம், அத்தி, அதிமதுரம், அகத்தி

ஆரேகம் = ஆத்தி

ஆரேகோதம் = கொன்றை

ஆரேசகம் = வெள்ளையாமணக்கு

ஆரேவதம் = சரக்கொன்றை

ஆரை = நாலிதழ்க்கீரை, ஆச்சு மரம், புளியாரை, ஆத்தி, வல்லாரை, சூரை, ஆரை யெலும்பு, நாடியெலும்பு, ஆரைச்செடி, (நீருளாரை) நீராரை, அத்தி

ஆரைக்காலி = தாழைக்கோரை, கோரைப்புல்

ஆரைக்கீரை = நீராரை

ஆரைக்குலகம் = வெள்ளவரை

ஆரைச் சேவிதம் = வெள்ளை எள்

ஆரையிலை = நீராரை

ஆரை யெலும்பு = உள்ளங்கை எலும் பிரண்டினுள் பெருவிரல் பக்கமாயுள்ளது முன்கை சிற்றெலும்பு

ஆரொட்டி = கூகைக்கிழங்கு

ஆரோகணம் = பெண்ணின் இடை, உடம்பின் வீக்கம்

ஆரோகம் = பெண்களிடுப்பு, சிறுகீரை

ஆரோக்கியகாரி = சிறுகீரை

ஆரோக்கியசிம்பி = கொன்றை

ஆரோக்கிய பஞ்சகம் = சுரத்திற்கு கொடுக்கும் மருந்து

ஆரோக்கியமாதர் = அகத்தி

ஆரோக்கிய முழுக்கு = மூலிகைகளைத் தண்ணீர்விட்டுக் காய்ச்சி எடுத்துக் கொள்ளும் தலை முழுக்கு

ஆரோக்கியம் = சரக்கொன்றை

ஆரோணவுற் பத்தி = சாலாங்க பாடாணம்

ஆரோதயத்தி = கொட்டைப் பாசி

ஆர் = சந்தனம், முத்து, பச்சை, கொன்றை, ஆத்தி, சீனிப் பாகு, சந்தனக்குழம்பு, பூமி, சரக்கொன்றை, பெரிய கடல், காட்டாத்தி, கொன்றை, அத்திப்பூ, அழிஞ்சில்

ஆர்கதி = திப்பிலி

ஆர்கம் = சந்தனம்

ஆர்கலி = கடல், மழை

ஆர்குடம் = பித்தளை

ஆர்குவதம் = கொன்றை

ஆர்கூடம் = பித்தளை, செம்பு

ஆர்கூமம் = அரசு

ஆர்கூமை = பித்தளை, செம்பு

ஆர்கூலம் = செம்பு

ஆர்கம் = அகில் கட்டை, அகில்

ஆர்கே, ஆர்கேதி = திப்பிலி

ஆர்கொந்து = கோரை

ஆர்கோதம் = சரக்கொன்றை, பித்தளை, கொன்றை, கொண்ணை

ஆர்கோரம் = கொன்றை

ஆர்க்ககம் = இரத்தம்

ஆர்க்கங்கெருடன் = கொல்லன் கோவை

ஆர்க்கங்கோடன், ஆர்க்கங்கோடான் = கொல்லன் கோவை

ஆர்க்கண்ணியன் = ஆத்தி

ஆர்க்கழுலை = செம்பரத்தை

ஆர்க்கம் = இரத்தம், நீர்க்கடம்பு, அகில், சந்தனம், பித்தளை, கொல்லன் கோவை

ஆர்க்கரம் = கருப்பட்டி

ஆர்க்கலம் = பித்தளை

ஆர்க்கி = திப்பிலி

ஆர்க்கியம் = காட்டுத்தேன்

ஆர்க்கு = எருக்கு, இலைக்காம்பு, ஒருவகைக் கிளிஞ்சில், ஒருவகை மீன்

ஆர்க்குதம் = கொன்றைமரம், பொற்கொன்றை

ஆர்க்குலதம் = கொன்றை

ஆர்க்குவதம் = ஆர்க்குதம்

ஆர்க்கூடம் = பித்தளை

ஆர்க்கை = கட்டு

ஆர்சூமம் = பித்தளை

ஆர்ச்சி = ஆத்தி

ஆர்தல் = புசித்தல், நிறைதல்

ஆர்துபம், ஆர்தூபம் = அரத்தை

ஆர்த்தபம் = பூப்படைதல், மகளிர் தீட்டு

ஆர்த்தம் = அத்தி, ஆத்தி, செம்பரத்தம்

ஆர்த்தரகம் = இஞ்சி

ஆர்த்தல் = ஊட்டல்

ஆர்த்தவகாலம் = மாதவிடாய் நாள்

ஆர்த்தவ குன்மம் = இரத்தகுன்மம் ; பெண்களுக்குக் கருப்பைக் கோளாறு அடைவதால் உண்டாகும் செரியாமை நோய்

ஆர்த்த வதமனி = பெண்கள் உண்ணும் உணவினின்று சத்தியை எடுத்து கர்ப்பாசயத்திற் குக் கொண்டு போய்ச் செலுத்தும் இரு குழாய்கள்

ஆர்த்த வம் = மகளிர் சூதகம், கருப்பையினின்று வெளிப்படும் ஒருவிதத் தாது, பெருங்குறுந் தொட்டி, மாதவிடாயான பத்து நாள் கழித்துள்ள கருதரித்தற்குரிய காலம், விலங்குகளுக்கு ஒழுகும் மதநீர், காட்டுத்தேன், பூ

ஆர்த்தன் = நோயாளி

ஆர்த்தி = நட்டுவாக்காலி, வலி

ஆர்த்திகம் = திப்பிலி

ஆர்த்தி கோலகம் = வெள்ளை விஷ்ணுகரந்தை

ஆர்த்திரகம் = இஞ்சி, சுக்கு

ஆர்த்திரநயனம் = அழுகண் (ஈரஸ்கசியும்)

ஆர்த்திரபத்திரகம் = மூங்கில்

ஆர்த்திர பாதம் = எப்போதும் ஈரங்கசியும் பாதம்

ஆரத்திர மூலம் = எப்போதும் இரத்தமும் நீரும் கசிந்து கொண்டிருக்கும் ஒருவகை மூலநோய்

ஆர்த்திரம் = ஆர்த்தல், இஞ்சி, ஈரம், அதிவிடையம்

ஆர்த்துதல் = ஊட்டுதல்

ஆர்த்ரகம் = சுக்கு

ஆர்நானம் = கரடி

ஆர்பதம் = நண்டு, வண்டு, உணவு

ஆர்த்துபம் = அரத்தைச் செடி, பேரரத்தை

ஆர்பது, ஆர்ப்பதுமம் = அரத்தை

ஆர்பந்தன் = சீர்பந்தபாடாணம்

ஆர்ப்போஷிதம் = வெள்ளிலை அதாவது வெற்றிலைக் கொடி

ஆர்மகோசம் = வெட்டிப்பாலை, வெடிப்பாலை

ஆர்மதி = வண்டு, நண்டு

ஆர்முகி = கார்முகிற் பாடாணம்

ஆர்வு = ஊட்டுதல், உண்ணல்

ஆலகண்ட வறைமுகன் = கீரிப்பிள்ளை

ஆலகண்டனி, ஆலகண்டி = நீலஞ்சோதி

ஆலகமாதிகம் = வெற்றிலை, வள்ளிக்கிழங்கு

ஆலகம் = ஈயம், வில்வம், சோம்பு, நெல்லி, அல்லி,

ஆலகாலம் = கொடிய நஞ்சு, நிலவாகை (நிலாவாரை), வசநாபி, பாம்பின் விடம், ஆலம் பூவினுடைய தண்ணீர், விடம், கொண்ணை

ஆலகாலம் போக்கி = நிலவாகை

ஆலகால விடநிறம் = கருப்புச் சித்திரமூலம்

ஆலகாலவிடம் = சாகாஉப்பு

ஆலகாலவிஷம் = சவ்வீரம்

ஆலகிரீடை = அலரி

ஆலகை = பேய்க்கொமட்டிக்காய்

ஆலக்கச்சி = அரிதாரம் (தாளகம்)

ஆலக்கட்டி = துருசு (மயில்துத்தம்)

ஆலக்கரண்டி = வாயகன்ற கரண்டி

ஆலக்கொடி = அரிதாரம்

ஆலக்கொடிச்சி = தாளகம்

ஆலக்கொடிஞ்சி = அரிதாரம்

ஆலங்கட்டி = மழைக்கல், கல்மழை, துருசு

ஆலங்கண்டனி = ஆலகண்டனி

ஆலங்காத்தான் = பருத்தி

ஆலங்காய்க் கிரந்தி = மேகத் தொடர்பால் உடம்பு முழுவதும் கழற்சிக் காயைப் போற்புண்களுண்டாகி ஒவ்வொன்றாக வெடித்து விரணமாகித் துன்பத்தையுண்டாக் கும் ஒருவகைக் கிரந்தி நோய்

ஆலசம் = சோம்பு, நெல்லி, அல்லி

ஆலசயம் = நறுநெய்

ஆலசியம் = விடவாய் முதலை, சோம்பு

ஆலசிரீடை = ஆலகிரீடை

ஆலசூல காங்கையன் = பூசினிக்காய்

ஆலஞ்சி = ஏலம்

ஆலடி = ஆல், புங்கு, மாவிலிங்கு

ஆலத்தி, ஆலத்தி கற்பூரம் = சூடன்

ஆலந்தை = ஒரு சிறு மரம்

ஆலபூவா = பால்

ஆலப்பழுப்பு = ஆலம்பழுப்பு

ஆலப்பூ = மதனப்பூ

ஆலமம் = தாலம்பபாடாணம்

ஆலமரம் = தொன்மரம்

ஆலமாடிகம் = யாளி

ஆலமாதிதம் = வேர்க்கடலை

ஆலமாமணி = புங்கம்வித்து

ஆலமாரிகம் = புன்கு

ஆலமுடையோன் = துருசு, விடம்

ஆலமேதம் = மாவிலிங்கமரம்

ஆலம் = ஈயம், பாம்பின் விடம், குங்குமம், புங்கமரம், மூங்கில், ஆலமரம், மாட்டுப்பால், நீர், நஞ்சு, தாலம்ப பாடாணம், நெல்லி, மலர்ந்தபூ, நாவி, மாவிலிங்கு, விடம், துருசு, ஈச்சங்கள், ஆலம் விதை, குங்குமமரம், கடல், கருமை, விடப் பிராணிகளின் விடம், தாளகம், பூவினுடைய நீர்

ஆலம்பம் = தூங்கல், விடத்தன்மையுள்ள இலைகளை யுடைய ஒருவகைப்பூடு

ஆலம்பழுப்பு = பழுத்த ஆலம் இலை

ஆலம்பனம் = யோகாப்பியாசம்

ஆலம் பால் = ஆலமரத்தின் பால், மழைநீர், ஆலங்கட்டியின் நீர், பனிக்குடத்துநீர், தூய்மையானநீர்

ஆலம் போக்கி = நீலிப்பூடு

ஆலவருமுத்து = சாதிமுத்து

ஆலவன்னியம் = உப்பின்மை

ஆலவாட்டு = சிறிது உலர்த்தல்

ஆலவாய் = பாம்பு (வாயில் நஞ்சுள்ளது)

ஆலவால நண்டு = வயல் நண்டு

ஆலவிருக்கை, ஆலவிருட்சம் = ஆலமரம், ஆதொண்டை

ஆலா = ஒரு கடற்கரைப்பறவை

ஆவாகதம் = வெண்மாதுளை

ஆலாகலம் = கொடியநஞ்சு, ஒரு விடமரம்

ஆலாகாலம் = கொன்றை

ஆலாகை = நிலவாகை

ஆலாங்கட்டி = ஆலங்கட்டி

ஆலாட்டு = ஆலவாட்டு

ஆலாதம் = நெருப்பு, கொள்ளிக்கட்டை

ஆலாதாடை = அவுரி

ஆலாதி மொக்கு = மதனப்பூ

ஆலாத்தடை = அவுரி

ஆலாத்தி = கற்பூரம்

ஆலாத்தி கற்பூரம் = கிருமி, சத்துரு

ஆலாத்திப்பூரம் = ஆலத்தி

ஆலாத்து = ஒரு பறவை

ஆலாரீரடை = அலரி

ஆலாலம், ஆலாலும் = விடம், வௌவால், துரிஞ்சில்

ஆலாலவயிரம் = தலைச்சுருளி, நாபிக்கொடி

ஆலாவட்டம் = கொடிமாதுளை

ஆலாவரம் = துரிஞ்சில்

ஆலாவிருக்கம் = ஆதண்டை

ஆலாவிருச்சம் = (ஆதாளை) காட்டாமணக்கு

ஆலி = கள், காற்று, தேள், மழை, தேனீ, ஆலங்கட்டி, மழைத்துளி, அமுதம்

ஆலிகாசம் = பச்சைக்கடலை

ஆலிஞ்சரம் = நீர்ச்சாடி

ஆலிந்தகி = அணில்

ஆலிபதம் = புறாமுட்டை

ஆலியகம் = சிறுகுறிஞ்சா

ஆலிய கோசம் = இஸ்கோல்விரை

ஆலிலைத் துயின்றோன் = காய்ச்சற்பாடாணம்

ஆலிலை போலொட்டல் = அதிகமாகக் கழிச்சலான பின் வயிறு ஆலிலையைப் போல் தட்டையாக ஒட்டிக் காணுதல்

ஆலின் மேல்பள்ளி கொண்டோன் = காய்ச்சற் பாடாணம்

ஆலின்மேல் புல்லருவி = விடபாக நோயைத் தீர்க்கும் மூலிகை; இது 108 கற்ப மூலிகை களுள் ஒன்று

ஆலின்மை = இடம்புரிக்காய்

ஆலீனகம் = துத்தநாகம்

ஆலு = ஆந்தை, கருங்காலி, பல், கிழங்கு

ஆலுகம் = உண்ணத்தக்க ஒரு கிழங்கு; புளிப்பு தவிர மற்ற ஐந்து சுவைகளின் கலப்பு; வில்வம்

ஆலுக்கடிச்சி = தானகம்

ஆலுபுகரா, ஆலுபொகாரா = பொகாரா (காபூல்) தேசத்திலிருந்து ஏற்றுமதியாகும் தேனிலிட்ட ஒரு வகைப்பழம்; தாகவிடாய், சுரம், அரோசிகம், மலச் சிக்கல், தலைவலி முதலியவைகளுக்குக் கொடுப்பர், சர்க்கரையைக் கலந்து பேதிக்கக் கொடுப்பார்கள், காபூல் பழம் என்பர்

ஆலூகம் = வில்வமரம்

ஆலேசிதம் = இறங்கழிஞ்சில்

ஆலேபம் = பூசும் ஒருவகை வாசனைத் தையிலம்; மூலமுளை இற்று விழும்படிக்கு உபயோகப்படுத்தும் சீலை மருந்து அல்லது களிம்பு

ஆலேபனம் = சீலை மருந்து, தேய்த்தல், மருந்து நெய், தைலம்

ஆலை = கரும்பு, கள் உபத்திரவம், கருப்பஞ்சாறு, ஆலமரம், கொட்டைக் கரந்தை

ஆலைக்கரும்பு = வெண்கரும்பு

ஆலைச்சாறு = கரும்பின்சாறு

ஆலைநிம்பம் = சர்க்கரை, வேம்பு

ஆலையம் = பூரகம் (மூச்சு உள்வாங்கல்)

ஆலோசக பித்தம் = எல்லாப் பொருட்களையும் தெளியக் காட்ட வேண்டிக் கண்களில் நிற்கும் ஒரு வகைப் பித்தம்

ஆலோசன் = சந்திரன்

ஆலோதயம் = கொட்டைப்பாசி

ஆல் = ஆலமரம், குறுவால், மாவிலிங்கு, நஞ்சு, குளிர்ந்த நீர், பொன்னாங்கண்ணி, அழிஞ்சில், நடுக்கு வாதம், கரிசலாங்கண்ணி

ஆல்கண்டி = நீலஞ்சோதிக்கல்

ஆல்கொடிச்சி = அரிதாரம்

ஆல் பகோடா = பொகாரா தேசத்திலிருந்து ஏற்றுமதியாகும் தேனிலிட்ட ஒருவகைப் பழம்

ஆல்பம் = அல்லி

ஆல்வாட்டு = சிறிது உலர்த்தல்

ஆல்விருட்சம் = ஆதண்டை

ஆவகம் = எழுவகை வாயுக்களிலொன்று; குங்குமமரம்

ஆவகன் = ஏழு மருத்துவர்களுள் ஒருவன்

ஆவகாசிதம் = சிகப்பு கொய்யா

ஆவகெதுட்டி = விருத்தி எனும் ஒரு வகை வாயு நோய்

ஆவசியம் = சோம்பு

ஆவசோணிதம் = இரத்தம் போன்ற சிகப்புப்புளி

ஆவட்டை = ஒருவகைப் பூடு

ஆவட்டை, சோவட்டை = சோர்வு, தளர்ச்சி

ஆவணம் = சிறு நீலி

ஆவணி = முள்ளெருக்கு

ஆவதரநிபாலி = செருந்தி

ஆவம் = குங்கும மரம், கபிலப் பொடி, குங்குமம்

ஆவம்பதி = கொட்டைப்பாசி

ஆவரகசம் = சதையில் வருமோர் சிலந்தி

ஆவரண தோடம் = ஒரு தோடத்தினால் மறைக்கப்படும் மற்றொரு தோடம்

ஆவரகம் = உட்தோல்

ஆவரம் = செவ்வாமணக்கு, அன்னப்புள்

ஆவரை = நிலவாகை

ஆவரைத்திரவியம், ஆவரைப்பஞ்சம் = ஆவரைச் செடியின் ஐந்துறுப்புகள்

ஆவர்த்தகம் = விடப்பூச்சி, ஒருவகை பூடு, மயிர்ச் சுருட்டை

ஆவர்த்தம் = நிலத்தாமரை, குடல், மூத்திரநாளம், இதயம் முதலிய உறுப்புகளுக்கு இயற்கையாகவே அமைந்த இயக்கம்; நெற்றியில் புருவத்திற்கு மேலுள்ள இரண்டு பள்ளங்கள் ஈயத்தைப் போன்ற ஒரு தாது ; மயிர் முடிச்சு

ஆவர்த்தனம் = உருக்குதல் (உலோகங்களைச் சேர்த்து உருக்குதல்)

ஆவர்த்தினி = கப்புச்சடைச்சி

ஆவலகபோளம் = இரத்த போளம்

ஆவலி = வாய்திறத்தல், கொட்டாவி விடல், பட்டினி (பசியாய்) இருத்தல்

ஆவலித்தல் = கொட்டாவிவிடல், அழுதல்

ஆவல்லி = சீந்திற்கொடி

ஆவல்லிவாழை = இரசதாளி

ஆவாகை = ஆவிரைச்செடி, நிலவாகை, (நிலாவாரை)

ஆவாபம் = சேர்மானம்

ஆவாயம் = பிரசவ வேதனை, கடினப் பிரசவம்

ஆவாரங்கரி = ஆவாரைவிற கெரித்த கரி

ஆவாரமூலி = கோவை

ஆவாரம் = ஆவிரைச்செடி

ஆவாரை = பொன்னாவாரை, வெள்ளைப் பொன்னா வாரை, நிலாவாரை, பேயாவாரை, ஆவிரை

ஆவாரைப் பஞ்சாங்கம் = ஆவாரைச் செடியின் இலை, காய், பட்டை, வேர் முதலிய ஐந்துறுப்புகள்

ஆவாரை காஷ்(ட்)டம் = ஆவாரை விறகு (இது மருந்தெரிக்க உதவும்)

ஆவாலம் = வெளவால்

ஆவாலு = கடுகு

ஆவாவிருட்சம் = ஆதொண்டை

ஆவி = நீர்ப்புகை, உயிர் புகை, மூச்சு, கொட்டாவி, புகையிலை

ஆவிகம் = இராமக்கரும்பு

ஆவிகாட்டல் = வேது பிடித்தல்

ஆவி கிளம்பல் = சுரத்தினால் உடம்பில் அதிகச் சூடுண்டாகி ஆவி வெளிப்படுதல்

ஆவிக்கஞ்சி = பச்சைக் கற்பூரம்

ஆவிக்கனலி = நிலக்கொடி வேலி

ஆவிசீவாளம் = உடம்பு, உயிர்

ஆவித்தல் = பெருமூச்சு விடல், கொட்டாவி விடல்

ஆவித்தைலம் = மாட்டுப்பால், சாம்பிராணி முதலியவற்றை நெருப்பி லிட்டு உண்டாகும் புகையினின்று இறக்கு மோர் வகைத் தைலம்

ஆவிபதம் = பேராமுட்டி

ஆவிபத்த சூரணம் = கிருமி நோய்களுக்குக் கொடுக்கும் பேரா முட்டிச் சூரணம்

ஆவிபத்தம் = பேராமுட்டி

ஆவிபத்திரம் = புகையிலை

ஆவிப் பதங்கம் = வைப்புச் சரக்கு, பதங்க முறையாற் செய்யுமோர் வித மருந்து

ஆவிப்பதம் = பேராமுட்டி

ஆவிப்பு = கொட்டாவி

ஆவிமரம் = தப்பிச்சிமரம்

ஆவிமா = மஞ்சள் மாங்காய் மரம்

ஆவியத்தம் = பேராமுட்டி

ஆவியம் = உயிர், உடம்பு

ஆவியிறக்கம் = வடித்தல்

ஆவியுறை = ஆவியாகப் போனதை மறுபடியும் உறையும்படிச் செய்விக்கு முறை; பதங்கமுறை; தண்ணீர் வடிவமாகவுள்ள பொருட்களை நெருப்பிலிட்டுக் காய்ச்சி அவற்றின் ஆவிகளை மறுபடியும் குளிரும்படிச் செய்து தண்ணீராக மாற்றுதல்

ஆவிரங்காய் = ஆவாரைக்காய், நீர்ப்புகை, புகை, மூச்சு, கொட்டாவி, புகையிலை

ஆவிரம்பூ = ஆவாரம்பூ

ஆவிரி, ஆவிரை = ஆவாரை

ஆவிருத வாதம் = ஆடைகளை இறுகக் கட்டுவதால் உண்டாகும் ஒருவித வாத நோய்

ஆவி ரேகம் = இராமகும்மட்டி அல்லது பேய்க்கும் மட்டி

ஆவிரை = ஆவாரை

ஆவிரைச் சூரணம் = ஆவாரம் பூ, இலை அல்லது பட்டையை இடித்துத் தயாரிக்கும் பொடி; இது நீரிழிவுக்கு உபயோகப்படும்

ஆவிரைமேல் புல்லுருவி = ஆவிரைச் செடியின் மேல் வளரும் புல்லுருவி

ஆவிலம் = கலங்கல்நீர்

ஆவில் புங்கு = நொச்சுளி எனும் செடி

ஆவிற்கோவை = இராமக்கோவை

ஆவிற்புங்கு = ஆவில் புங்கு

ஆவினம், ஆவின் = புல்லுருவி, கோரோசனை

ஆவின் குளம்படி = விலங்கினங்களின் குளம்பைப் போல் உள்ள ஒரு பச்சிலை

ஆவின்தரங்கப்புல் = வாசனைப்புல்

ஆவின்பதம் = புறாமுட்டை

ஆவின்பதி = கொட்டில்

ஆவின்பால் = பசுவின்பால்

ஆவின்புல்லுநாணி, ஆவின் புல்லுருவி = கோரோசனை

ஆவின் பொகுட்டி = இருப்பவல் எனும் ஒரு கொடி

ஆவின்னீர் = பசுவின் சிறுநீர்

ஆவின்னுருவி = கோரோசனை

ஆவு = குன்றி, ஆச்சாமரம், பசுமாடு

ஆவுகாத்துளசி = இராமத்துளசி

ஆவுறு பித்தம் = உடல் வெதும்பிக் கொக்கரித்துக் கூவிக்கூத்தாடுங் குணமுள்ள நோய்

ஆவெண்ணெய் = பசுவெண்ணெய்

ஆவேகி = ஆடுதின்னாப் பாளை

ஆவேசநீர் = கள் முதலிய போதை தரும் சரக்குகள்

ஆவேசம் = தாமரை வளையம், சன்னி மயக்கம்

ஆவையணல் = கோவை

ஆழம்பார்க்கும்கயிறு = வெண்ணெய்

ஆழரம் = அத்திமரம்

ஆழல் = கறையான்

ஆழனாதி = தூதுவளை

ஆழாடக் கிழங்கு = தண்ணீர்விட்டான் கிழங்கு

ஆழி = குன்றி, கடல், கடற்கரை, ஆளி

ஆழிக்கொடி = பவளம்

ஆழிநுரை = கடல்நுரை

ஆழி மூலம் = நீண்ட வள்ளிக்கிழங்கைப் போல் நிமிர்ந்து சீழும் இரத்தமும் ஒழுகி ஒரே முளையாகக் காணுமோர் வித மூலநோய்

ஆழிவலியான்மணி = மிளகு

ஆழிவித்து = முத்து

ஆழிவிதை, ஆழிவிரை = ஆளி விதை, சணல்

ஆழ்ந்த புண் = ஆழமான புண், பிளவை, புரைப்புண்

ஆளகம் = சுரைக்காய், சுரைக்கொடி

ஆளசம் = கோளகபாடாணம்

ஆளட்டம் = நாய்வேளை

ஆளல் = கறையான்

ஆளவந்திரிகா = இரும்பகம் எனும் செடி

ஆளவளரி = அரசமரம்

ஆளவள்ளி = மரச்சக்கரைவள்ளி

ஆளி = கிளிஞ்சில் போன்ற சிப்பி, சீனதேசத்துச் செடி, சிங்கம், ஒருவகைக்கீரைச் செடி, ஒருவகைக் கழுகு, (உடல் கறுப்பாயும் தலை கபில நிறமாகவும் இருக்கும் இது பிற பறவைகளைக் கொன்றுதின்னும்)

ஆளிகரைத்தான் = புளியமரம்

ஆளியங்கள் = பெருச்சாளி

ஆளிவாசன் = கொட்டைப் பாக்கு

ஆளிவிதை = சிறு சணல்விதை

ஆளை = அறுகு

ஆளைக்கனி = பழம்

ஆளைப்பற்றி = உடும்பு

ஆளைப்பிச்சான் = புளிநறளை (புளிநடலை)

ஆளையடிச்சான் = புளிய மரம்

ஆள் = தொட்டால்வாடி, முழங்கால் மடிப்பு

ஆள் காட்டி = மனிதரைக் கண்டவுடன் கூச்சலிடும் குருவி இது ஆள்காட்டிக் குருவி என்றழைக்கப்படும்

ஆள்சுணங்கி = தொட்டால் வாடி

ஆள் சொக்கல் = தூங்கல், மூர்ச்சித்தல்

ஆள்தூண்டிவிரல் = சுட்டுவிரல்

ஆள்மயக்கி, ஆள்மயங்கி = அபினி

ஆள்மறந்தான் புல் = இராவணன் மீசைப்புல்

ஆள்மிரட்டி = சங்கு

ஆள் வணங்கி = அரசமரம், தொட்டால் வாடி, கொட்டைக் கரிக்கி, கல்லத்தி, மலைச்சர்க்கரை வள்ளி

ஆள்வல்லி = மலைச்சர்க்கரை வள்ளி

ஆள்வள்ளரி = அரசமரம்

ஆள்வள்ளி, ஆள்வள்ளிக்கிழங்கு = ஆள்வல்லி

ஆள்வாடைத் தட்டி = நோக்கு, நோக்கி (மரம்)

ஆள்வாரிதி = அரசமரம்

ஆற = ஆத்தி

ஆறகம் = காட்டாத்திப்பூ

ஆறகெதி = திப்பிலி

ஆறகோதம், ஆறகோரம் = கொன்றை

ஆறக்குமம் = பித்தளை

ஆறணி யத்திரை = குதிரைச் செவிமருந்து

ஆறதீகம் = கல்நார்

ஆறத்திகன் = சூதபாடாணம்

ஆறப்பரி = குடசப்பாலை, முத்து

ஆறம் = குடசப்பாலை, முத்து, அஞ்சனபாடாணம், அத்தி, சந்தனம்

ஆறரிசி = ஒருவகையரசி

ஆறவரியம் = அரசமரம்

ஆறாங்காய்ச் சலுப்பு = ஆறுதடவை காய்ச்சி யெடுத்த வெடியப்பு; ஐந்து மாதத்திய கருப் பிண்டத்தினின்று ஆறு தடவை காய்ச்சியெடுத்த பிண்டவுப்பு

ஆறாடமங்கம் = கருங்குளவி

ஆறாதாரச் சரக்கு = துருசு, வெடியுப்பு, காரம், சாரம், கரியுப்பு, சீனம் முதலிய ஆறு விதச் சரக்குகள்; மிக சிறந்த ஆதாரமான சரக்குகள்

ஆறாதாம் = முலாதாரம், சுவாதிட்டானம், மணிபூரகம், அனாகதம், விசுத்தி, ஆக்கினை ஆகிய உடம்பிற்கு ஆதாரமாகவுள்ள ஆறுவகைத் தத்துவங்கள்

ஆறாப் புண் = சூலை நோயினால் ஏற்படும் ஒருவித அழிபுண்

ஆறாமலெரித்தல் = மருந்து தயாரிக்கும் போது இடைவிடாமல் எரித்தல்

ஆறாவரசம் = கருந்திராட்சை

ஆறாவிரணம் = ஆறாப்புண்

ஆறானரம்பு = கடாட்ச நரம்பு, ஒருகேள்வி நரம்பு

ஆறிதழ் = வெள்ளைப் பூண்டு

ஆறிய விரணம் = ஓரத்தில் கெட்டியாகவும் வீக்கம் வலியின்றிப் பக்குக்கட்டியுமிருக்கும்

ஆறிழைவல்லி = பெருச்சாளி

ஆறு = அறுசுவை, நாரிசுக்கிலம்

ஆறுகாலி = சிலந்தி, ஆறுகால் வண்டு

ஆறு கிராணி = அதிசார பேதியால் எழுந்த அறுவகைக் கிராணிகள் அவையாவன பித்தகிராணி, உஷ்ணவாதக்கிராணி, சிலேட்டுமவாதக்கிராணி, மேகக்கிராணி, மூலக் கிராணி, வாதக்கிராணி

ஆறுசூலை = வாத சூலை, பித்த சூலை, சிலேட்டும சூலை, மேக சூலை, கருப்பசூலை, நேத்திர சூலை

ஆறுடனங்கோல் = அழிஞ்சில்

ஆறுதலம் = ஆறாதாரம்

ஆறு பருவம் = ஆவணி, புரட்டாசி கார்காலம், ஐப்பசி, கார்த்திகை கூதிர்காலம், மார்கழி,

தை முன்பனி, மாசி, பங்குனி பின்பனி, சித்திரை, வைகாசி இளவேனில், ஆனி, ஆடி முதுவேனில்

ஆறுபுள்ளி வண்டு = முதுகின் மேலாறு புள்ளிகளையுடைய வண்டு, இது கடித்தால் வட்டமான தடிப்புகளுண்டாகும்

ஆறுமணிப்பூ = மாலையில் மலரும் ஒருவகைப் பூ

ஆறு மலடு = வாத, பித்த சிலேட்டுமம், கிருமி, சூதகம், துன்மாமிசம் முதலிய இவ்வாறு வகைக் காரணங்களினால் பெண்களுக்கேற்படும் மலட்டு நோய்

ஆறுமாதத் தண்டு = ஆறு மாதங்கழித்துப் பிடுங்கும் கீரைத் தண்டு

ஆறுமுகக் குரு = கொங்கணர் வாத காவியத்தில் சொல்லியுள்ள ஒரு குரு மருந்து

ஆறுமுகம் = வேங்கை மரம்

ஆறுமுகர் வாகனம் = மயில், மயிலிறக

ஆறுமுகன் = வேங்கைமரம்

ஆறுமுறை மதி = கத்தூரி

ஆறுவகைச் செயநீர் = அறுவகை செயநீர்

ஆறுவகை = அறுவகை மூத்திரம்

ஆறுவரை = ஆறாதராம்

ஆறோசிகம் = சிறுகீரை

ஆறோதயத்தி = கொட்டைப் பாசி

ஆற்கம் = அம்பளங்காய்

ஆற்குவம் = கோதும்பை

ஆற்கோதம், ஆற்கோரம் = கொன்றை

ஆற்சாலகம் = தொட்டால்வாடி

ஆற்பதம் = சாரம்

ஆற்றடம்பு = ஆற்றடப்பங்கொடி

ஆற்றரசு = ஆற்றுப்பூவரசு

ஆற்றலங்கல் = காட்டுப் பூவரசு

ஆற்றலரி = ஆற்றுச் சவுக்கு அல்லது கோடைச் சரக்கு, சுடலைப் பூச் செடி, முதலைப்பூடு, சேங்கொட்டை மரம்

ஆற்றல் = மிகுதல், பித்தளை

ஆற்றறுகு = ஒருவகை அறுகம்புல்

ஆற்றாமை வாயு = வயிற்றில் வாயு மூலாக்கினியை மறைத்துச் சாப்பிட்ட உணவு செரியாமல் புளியோப்பமிட்டு மலத்தை மிகுதியாகத் தள்ளுமோர் வாயு

ஆற்றாலின் சத்து = சிலாசத்து (வேனிற் காலத்தில் பாறையின் கொதிப்பினால் கல்லினின் றொழுகு மதம்) (தமிழில் கல்மதம் என்பர்)

ஆற்றிலத்தை = ஒருவகை இலந்தை

ஆற்றிலுப்பை = ஒருவகை செடி

ஆற்றிறால் = நதியிலிருக்கும் இரால் மீன்

ஆற்றின் வித்து = கற்பூரசிலாசத்து

ஆற்றுக் கட்டிக்கோலா = கொக்குமீன்

ஆற்றுக்க லிங்கம் = ஊறுகாய்க்கு உபயோகப்படுமோர் விதக்காய்

ஆற்றுக்குள் அழகிய மணல் = கருமணல்

ஆற்றுக் கெண்டை = ஆற்றில் வாழுங் கெண்டை மீன்

ஆற்றுக்கொடி = பேய்த்தும்மட்டி

ஆற்றுக்கொம் பொதி மரம் = பெரும்பூம்பாதிரி

ஆற்றுச் சங்கிலை = மலை வட்டை எனும் மரம்

ஆற்றுச் சவுக்கு = ஆற்றலரி, ஒருவகைச்செடி

ஆற்றுச் சாம்பா = ஒருவகைச் செடி

ஆற்றுச்சிப்பி = ஆற்றுக் கிளிஞ்சில்

ஆற்றுச் செருப்படி = ஆற்றுச் செருப்படை

ஆற்றுத்தும் மட்டி = பேய்த்தும்மட்டி (பேய்க்கொம்மட்டி)

ஆற்றுத்துவரை = ஒருவகைச் செடி

ஆற்றுத்தும்பறுகு = உப்பறுகம்புல்

ஆற்றுநுணா = ஆற்றோரத்தில் விளையும் நுணாமரம்

ஆற்று நெட்டி = நீர்ச்சுண்டி, நீர்

ஆற்றுப்பசலி = ஒரு வகைப் பசலை

ஆற்றுப் பச்சை = நாகப்பச்சைக்கல், இது உபரசச் சரக்குகளுளொன்று

ஆற்றுப்பஞ்சு = கடற்கொஞ்சி

ஆற்றுப்பழத்தான், ஆற்றுபழுத்தான் = பூனைக்காலி

ஆற்றுப்பாசி = ஒருவகை நீர்ப்பூண்டு

ஆற்றுப் பாலை = ஒரு சிறிய மரம், பட்டையைச்சுரத்திற்குக் குடி நீரிட்டுக் கொடுப்பர்

ஆற்றுப்புத்தான், ஆற்றுப்பூக்காலி = பூனைக்காலி

ஆற்றுப் பூச்சேவசம் = நீருமரி

ஆற்றுப் பூத்தான் = பூனைக்காலி

ஆற்றுப் பூவரசு = செடிப்பூவரசு

ஆற்றுப்பேதி = செப்பு நெருஞ்சி

ஆற்றுப்பொடி = ஆற்றிலுள்ள சிறு மீன்கள்

ஆற்றுமம் = நத்தை, பிராணன்

ஆற்றுமரி = நீருமரி, பேய்க் கொம்மட்டி, உமரி

ஆற்றுமருது = நீர் மருது

ஆற்று மருந்து = ஆற்றலரி வைராந்தகள் (பலத்தைக் கொடுக்கும் மருந்து)

ஆற்றுமரோகம் நீக்கி = அவுரி

ஆற்று மல்லிகை = ஒருவகை நீர்ப் பூண்டு, ஒருவகை மல்லிகை

ஆற்றுமாரி = நீருமரி

ஆற்றுமாலிகம் = உப்பிலாங்கொடி

ஆற்றுமுரிகா = உரலாமணக்கு

ஆற்று முள்ளங்கி = சுவற்று முள்ளங்கி, மணல் முள்ளங்கி

ஆற்று முள்ளாகிகம் = ஊசிக் குறண்டை

ஆற்று முள்ளி = கழுதை முள்ளி, கண்டங்கத்திரி

ஆற்று முற்றான் = பூனைக்காலி

ஆற்று மேலழகி = ஒருவகைப் பூடு, சோம்பு

ஆற்றுல்லம் = உல்லமீன்

ஆற்றுவஞ்சி = ஒருவகை பூடு

ஆற்றுவாளை = ஏரி வாளை மீன், வாளைமீன்

ஆற்றூர் = ஆரை

ஆனக தாபம் = மூளையின் சவ்வு அல்லது முள்ளந்தண்டு கொடிக்கு வெப்பத்தினாற் காணும் அழற்சி

ஆனகம் = தேவதாரு, காதினுட் சவ்வு, காதிற்குள் பறையை ஒத்திருக்கும் வட்டமான ஓர் சிறிய சவ்வு, மலசலம் போக்கின்றி வயிறுப்புதல்; நடுக்காது, சுரை, சூரை

ஆனகரம் = மூளையின் சவ்வு அல்லது முள்ளந் தண்டு கொடிக்கு வெப்பத்தினாற் காணும் அழற்சி

ஆனகி = உளுந்து

ஆனக்கன் = அத்தித்துளிர்

ஆனதும்பி = ஒரு வகைச் சிவப்புக் கடல் மீன்

ஆனத்தேர் = விடத்தேர்செடி

ஆனந்த கரந்தம் = மருக்கொழுந்து

ஆனந்த கரப்பன் = உடம்பு முழுவதும் சொறி தினவு நீர்க்கசிவு வெடிப்பு முதலிய குணங் களையுண்டாக்கி உடம்பு மெலிந்து காட்டும் ஒரு விதக் கரப்பான் நோய்

ஆனந்த கற்பம், ஆனந்த கோபிதம் = கஞ்சா

ஆனந்த சற்குரு = முப்பு

ஆனந்த சாரம் = அரத்தை

ஆனந்த தத்தம் = ஆண்குறி

ஆனந்ததம் = பெண்ணுறுப்பு, அரத்தை

ஆனந்த நித்திரியம் = வெள்ளிலோத்திரம், விளாம்பட்டை

ஆனந்த பிரபவம் = இந்திரியம்

ஆனந்த பைரவம் = அகத்தியர் வைத்திய நூலிற் சொல்லியுள்ள ஒரு வகைச் சிந்தூரம்

ஆனந்தமச்சல் = புளிநடலை

ஆனந்த மூலி, ஆனந்த மூலிகை = கஞ்சா

ஆனந்தம் = அரத்தை, பேரத்தை, கஞ்சா, தேவதாரம், முரசு பாடாணம்

ஆனந்த ரசம் = கள், இராமரசம், அபினி, பால், கஞ்சா முதலியவைகளினால் செய்யப்படும் ஒருவகைப் போதைப் பானம்

ஆனந்தராசி = மூக்குறா

ஆனந்த வயிரவம் = கிராணி, மேகம் முதலிய நோய்களுக்கு அனுபான மறிந்து கொடுக்கும் ஒரு வகைக் குளிகை

ஆனந்த வல்லி = கோழித்தலைக் கெந்தி, கட்டுக்கொடி, கெந்தகம்

ஆனந்தவாதி = கௌரி பாடாணம், கோளகபாடாணம்

ஆனந்தவா தோதகம் = வெண்குப்பை மேனி

ஆனந்த வாயு = ஏறு வாயு, இறங்கு வாயு, வீங்கு வாயு, அண்ட வாயு, நரம்பு வாயு முதலிய தசையைப் பற்றிய வாத நோய்

ஆனந்தவாரிதி = பேராமுட்டி

ஆனந்தவுப்பு = கல்லுப்பு

ஆனந்த வைரவன் = ஆனந்தவாயு, மூலம், குட்டம், சுரம், சன்னி வாதம் முதலிய நோய்களின் எல்லாத் தோடங்களையும் போக்குவதற்காக போகர் முறைப்படித் தயாரித்த ஒருவித மாத்திரை

ஆனந்தா, ஆனந்தாய் மூலி = கஞ்சா

ஆனந்தி = அரத்தை

ஆனந்தை = கொட்டைக் கரந்தை, பேராமுட்டி

ஆனபிறந்தேன் = ஆவாரை, கழுக்காணி

ஆனமோரம் = இந்துப்பு

ஆனம் = கள், மிளகு, மாவிலிங்கம், குழம்பு

ஆனல் = கறையான்

ஆனனம் = முகம், மூக்கு

ஆனா = மஞ்சணாத்தி

ஆனாக சுரம் = குடல் கோளாறினால் வயிறுப்பிக்காணும் ஒருவகை சுரம்

ஆனாகம் = மலக்கட்டு, நீர்க்கட்டு, காட்டுக்கொள், குடலை இழுத்துப் பிடித்தல்

ஆனாக ரோகம் = குடல், வயிற்றில் காற்று சேர்தல் அல்லது குடலிலிருந்தே வாயு சேர்தல், குடல் வலிவு குறைந்து வயிறுப்பிப் பிகுவாய் விரிந்து போவது போலிருந்து வயிறிரைந்து காற்று பரியுமோர் வாத நோய்

ஆனாஞ்செடி = குங்கும மரம்

ஆனாத்தம் = தோல்

ஆனாந்தளை = காட்டுக் கறிவேப்பிலை

ஆனாய கலை = ஒரு தசை நார் அடிவயிற்றில் வாயு தங்கி அதனால் குடல்வலி, வயிற்றிரைச்சல், வயிறுப்பிசம் முதலிய குணங்களைக் காட்டுமோர் வகை வாதநோய்

ஆனாயம் = சுவாசப் பையிலுள்ள நுட்பமான வாயுக்கண்

ஆனாயரம் = கண்ணறைச் சதையழற்சி

ஆனாய வன்மை = மூக்கு அல்லது தொண்டையின் சதைப்பாகத்திலுள்ள கண்ணறை வலுவடைதல்

ஆனி = இந்துப்பு

ஆனிகா = சைலாங்கொடி

ஆனிகொடியம் = வாய்விடங்கம்

ஆனிச்செருக்கா = இலவணபாடாணம்

ஆனிமாத்தம், ஆனிமாறும் = இந்துப்பு

ஆனியம் = கருஞ்சீரகம், பொன்

ஆனிலை = பசுக்கொட்டில்

ஆனுச்செடி = குங்கும மரம்

ஆனுருக்கு = நறுநெய்

ஆனை = தேக்கு, அத்திமரம், ஆத்தி

ஆனைகண், ஆனைக்கண் = ஆனைக்காய், அத்தி

ஆனைக்கண்கு, ஆனைக்கண்ணன் = அத்திமரம்

ஆனைக்கன்னி = அத்தித்துளிர்

ஆனைக் கரப்பன் = ஒருவித அக்கி, ஒருவகைக் கரப்பன்

ஆனைக்கரை = அத்தித்துளிர்

ஆனைக்கல் = வழலை

ஆனைக்களை சுத்தம் = அண்டவுப்பு

ஆனைக்கள்ளி = அத்தித்தளிர்

ஆனைக்கள்ளி முளையான் = ஒரு இலையில்லாப் பூண்டு

ஆனைக்கற்றலை = ஒருவிதக் கடல் மீன்

ஆனைக் கற்றாழை = கருங்கற்றாழை

ஆனைக் கன்று = அத்தி மரம், அத்திப் பிஞ்சு, அத்தித் துளிர், யானைக்குட்டி

ஆனைக் கன்னி = ஆனைக் கண்ணி

ஆனைக்காதிலை = ஆனைச் செவியடி

ஆனைக் காயம் = ஆனைப் பெருங்காயம், யானைக்குக் கொடுக்கும் பெருங்காயம் சேர்ந்த மருந்து

ஆனைக்காய் = அத்திக்காய்

ஆனைக் காய்செறி = பெருங்காய்ஞ் சொறி

ஆனைக்காரை = ஓதியமரம், ஓதிமரம்

ஆனைக்கார் = ஆனைக்காய்

ஆனைக்கால் மூலி = ஆனையடிப் பச்சிலை, நிலக்கடம்பு

ஆனைக்கால் வணங்கி = பெருநெருஞ்சில்

ஆனைக்கால் வாதம் = ஆனைக்கால்

ஆனைக்கால் விரணம் = யானைக்காலிலேற்படும் கொப்புளங் களினாலுண்டான இரணங்கள்

ஆனைக்காளை = காட்டாமணக்கு

ஆனைக் குட்டம் = பெருவியாதி அல்லது பெருநோய்

ஆனைக் குண்டுமணி = மஞ்சாடி மரம்

ஆனைக்குரு = ஒருவகை மரம்

ஆனைக்குருந் தோட்டி = மயிர் மாணிக்கம்

ஆனைக்குன்றி மணி = மஞ்சாடிமரம்

ஆனைக் கெளுத்தி = யானையைப் போலுணவு உண்ணும் ஒருவகைக் கெளிற்று மீன்

ஆனைக் கொசு = விடசுரத்தையுண்டாக்கும் ஒருவகைப் பருத்த கால்களையுடைய கொசு

ஆனைக் கொம்பன் = நீளமான குலைகளையுடைய ஒரு பெருவகை வாழை, ஆறு மாதத்தில் அறுக்கக்கூடிய நெல்

ஆனைக்கோடன் புடலை = யானைக்கொம்பைப் போன்ற ஒருவகைக் கசப்புப் புடலை

ஆனைக்கோடு = யானைக்கொம்பு

ஆனைக்கோரை = ஒரு வகைக் கோரை

ஆனைக்கோலம் = அழிஞ்சில்

ஆனைச்சாத்தன் = கரிக்குருவி

ஆனைச்சிரங்கு = பெருஞ்சிரங்கு

ஆனைச்சிலந்தி = பெருஞ் சிலந்திப்புண்

ஆனைச்சிவந்தி = பெரியவகைச் சிவதைப்பூடு

ஆனைச்சீரகம் = பெருஞ்சீரகம்

ஆனைச் சுண்டை = பேய்ச்சுண்டை (சுரத்திற்கும் வாதப் பிடிப்புக்கும் உபயோகப்படும்)

ஆனைச்சுவடு = ஆனைக்காதிலை

ஆனைச்செப்பு = முலை, மலை

ஆனைச்செவியடி = யானைக்காதிலை

ஆனைச் சொறி = உடம்பில் மேற்றோல் தடித்து சிறு குருக்கள் ஏற்பட்டு அதிக நமைச் சலையுண்டாக்கு மோர்விதச் சொறி சிரங்கு ; பெருஞ் சொறி சிரங்கு; தோல் தடித்தலினால் ஏற்படும் சொரசொரப்பு

ஆனைத் தடிச்சல் = ஒருவகைப் படர்கொடி, புளி நறளை, புளியரணைப்பூடு, புளியம் புறணி, புளியாரை

ஆனைத் தடிப்பு = ஒருவகைப் பூடு, ஏதாவது ஒரு உறுப்பில் நிணநீர் மறுப்பினால் சதை கறுத்துத் தடித்து யானைத் தோலைப்போல் காணுமோர் தோல் நோய்

ஆனைத்தட்டி = புளியரணை

ஆனைத்தருக்கன் = இலைக்கள்ளி

ஆனைத்தளிச்சல் = புளியரணை

ஆனைத்தாவிதம் = ஊசிப்பாலை

ஆனைத் திப்பிலி = அத்தித்திப்பிலி என்ற ஒருவகைத் திப்பிலி

ஆனைத்தும்பை = பெருந்தும்பை

ஆனைத் தெல்லு = ஒருவகைப்படரும் கொடி

ஆனைத்தேரி = உரோமவேங்கை

ஆனைநார் = வக்குநார் மரம்

ஆனைநெருஞ்சி = செப்பு நெருஞ்சி

ஆனை நெருஞ்சில் = பெருநெருஞ்சில், புளி யரணை, செப்பு நெருஞ்சில்

ஆனைநேர்வாளம் = பேதிக்காக உபயோகப் படுத்தும் ஒரு வகை நேர்வாளச் செடி

ஆனைநொச்சி = கருநொச்சி

ஆனைபடி = புளியரணை

ஆனைப் படுவான் = விலங்கின் நோய், அக்கி

ஆனைப்பட்டை = அத்திப்பட்டை

ஆனைப்பலா = மலைக்கொஞ்சில்

ஆனைப்பனை = கூந்தற்பனை

ஆனைப்பால் = அத்திப்பால்

ஆனைப் பிச்சான் = பிள்ளாச்சாரவல்லி எனுமூரில் பயிராகும் ஒரு வகை கொடி; புளி நடலை

ஆனைப் பிடுக்கு = அண்டகோசத்திற் குள்ளிருக்கும் நிணநீர்த் தாரை தடைபட்டு அதனால் தாபிதங்கண்டு வீக்கமடைந்து அங்குள்ள தசை மேற்றோல் தடித்து பருத்துக் காணுமோர் அண்டநோய்

ஆனைப் பிரண்டை = ஒருவகைப் பெரும்பிரண்டை

ஆனைப்புல் = ஆனைக்கோரை, சம்பு

ஆனைப் புளியமரம் = பப்பரப்புளிய மரம், பூரிமரம், பெருக்க மரம், கோரக்கர் மரம்

ஆனைப் புளியாரை = பெரும் புளியாரை

ஆனைப்பெருங் காயம் = ஆனைகாயம்

ஆனைப் பேன் = கத்தரிச்செடியிலுண்டாகு மோர் பெரிய பேன்

ஆனைமஞ்சள் = ஒருவகைப் பெருமஞ்சள்

ஆனைமடை = கௌரி பாடாணம்

ஆனைமரம் = பப்பரப்புளிய மரம்

ஆனைமல்லி = பெருமல்லி

ஆனைமீக்குவம் = ஒருவகைக் கருப்பு மருது

ஆனைமீன் = ஒருவகைப் பெரிய கடல் மீன்

ஆனைமுள் = பெருமுள், குடைவேல்

ஆனையடிச்சாள் = புளிய மரம்

ஆனையடிச்சிலந்தி = பெருஞ் சிலந்தி

ஆனையது வழுங்கி = தேள்கொடுக்கிலை

ஆனையந்தம் = துருசு

ஆனையர்க்குளா = பெரிய கடல் மீன் வகை

ஆனையவரை = ஒருவகைப் பெரு அவரை

ஆனையறுகு = பேரறுகு, ஆனைப்புல் (ஓரறுகு)

ஆனையறுகுச் சூரணம் = ஆனையறுகுப்புல் வேரோடு மற்ற கடைச்சரக்குகளையுங் கொண்டு தயாரித்த மருந்துப் பொடி

ஆனையறை யும்புள், ஆனையிறாஞ்சிப்புள் = யானையை விழுங்குவதாகச் சொல்லப்படும் படும் ஒரு பெரும் பறவை

ஆனையுடவிந்து = தலைப்பிண்ட செயநீர்

ஆனையுண்குருகு = ஆனையறையும் புள்

ஆனைவசம்பு = அரத்தை

ஆனைவணக்கி = தேட்கொடுக்கி

ஆனை வணங்கி = தேட்கொடுக்கி, குப்பை மேனி, ஆனை நெருஞ்சில் (பெருநெருஞ்சில்)

ஆனவாயன் கற்றலை = ஒருவிதக் கடல் மீன், பெருவாய் கற்றலை

ஆனைவாலிகை = தாமரையிலை

ஆனைவால் மயிர் = இது மருத்துவத்திற்கு உபயோகப்படும்

ஆனை வாழை = நீளமான குலைகளையுடைய ஒரு பெருவகை வாழை; மொந்தன் வாழை, குளங்கோவை நெல்

ஆனைவிரணம் = பெருஞ்சிரங்கு

ஆனை விழுங்கு மீன் = அனையை விழுங்குவதாகச் சொல்லப்படுமோர் வகைப் பெரிய திமிங்கிலம்

ஆனைவீர மயக்கத்தான் = வீரம்

ஆனை வேணி = பொற்கொன்னை அல்லது சரக்கொன்னை

ஆன் = எருமை, மான் முதலிய விலங்குகளின் பெண்; எருது, பசுப்பொது, பசு, பெண்மரை, பூவாரை

ஆன்மதசேகம் = கற்றாழை

ஆன்மலம் = பசுஞ்சாணி

ஆன்மவிருத்தி மருந்து = காய கற்பம்

ஆன்மா = பசு

ஆன்மி = ஈசனுப்பு

ஆன்மெழுக்கு = பசுஞ்சாணம்

ஆன்வணங்கி = அரசு, தொட்டால் வாடி

ஆன்றர்க் கம்பால் = எருக்கம்பால்

ஆன்றடங்கார் = கோதுமையாற் செய்த ரொட்டி

ஆன்னெய் = பசுநெய்

இகசுக்கு = நீர்முள்ளி

இகசேபம் = எழுமுள்

இகச்சி = கொத்தான்

இகடி = கத்தூரி மஞ்சள்

இகடு = கரும்பு

இகதி = மருந்து

இகது = கரும்பு

இகமலர் = விரித்தமலர்

இகம் = சந்தனம், இண்டங்கொடி

இகருமம் = வெள்ளளைத் தும்பை

இகலன் = நரி

இகலி = பெருமருந்து, சாரை, சிலேட்டுமம், வெல்லம்

இகலிலடம் = மருந்து

இகலை = வெள்ளை

இகல் = வலி

இகழி = கொன்றை, கடுக்காய்

இகளி = வெற்றிலை

இகளை = வெண்ணெய்

இகனத்தார் = கொன்றை

இகனி = வெண்ணெய், வெற்றிலை

இகு அண்டா = நீர்முள்ளி

இகுசாகியம் = எள்

இகுசி = மூங்கில்

இகுசு = தாழை, மூங்கில்

இகுசோபிதம் = ஏறழிஞ்சில்

இகுடி = ஆதொண்டை, காத்தொட்டி

இகுத்தல் = குழைத்தல்

இகுந்தகம் = ஐங்கணுக்கள்ளி

இகுரமூலி = பெருமருந்து

இகுளி = கொன்றை, கருஞ்சீரகம்

இகுளோதயம் = ஒட்டுப்புல்

இகுள் = ஆரல் மீன்

இகை = பொன்

இகைசக்கு = நீர்முள்ளி

இக்கடகாய் = ஒருவகை சிவப்புப்பூடு

இக்கட்டு = வெல்லக்கட்டி

இக்கபலூதி = நிலப்பனை

இக்கரை = இந்துப்பு

இக்கவம் = கரும்பு

இக்கா = கொட்டாவி, விக்கல்

இக்காசி லேட்டுமம் = சிலேட்டுமம் அதிகரித்து உடம்பு முழுவதும் நோயுண்டாகப் பலவித தீக் குணங்களைப் பிறப்பிக்கும் ஒருவகைச் சிலேட்டும் நோய்

இக்கா பித்தம் = ஓயாக்கொட்டாவி, வியர்வை, சுரம், மார்பெரிச்சல், தலை பாரம், தூக்கமின்மை முதலிய குணங்களோடு கூடிய பித்த நோய்

இக்கா நோய் = மூன்று வகைத் தோடத்தினாலுண்டாகும் கொட்டாவி

இக்கி = கிராம்பு, நறுவிளி மரம், கரும்பு

இக்கியாயம் = அரசு

இக்கிரசம் = கருப்பஞ்சாறு

இக்கிரமம் = வெட்பாலை

இக்கிரி = நீர்முள்ளி, முள்ளிக்கீரை

இக்கு = கரும்பு, கள், கரடி, கூட்டில் வைத்த தேன், கருமருதோன்றி, பெருங்காடிமரம், மூங்கில்

இக்குகண்டான் = நீர்முள்ளி

இக்கு கந்தை = நீர்முள்ளி, நெருஞ்சில், நாணல், வெள்ளை விருளிச்செடி

இக்குசா = கத்தூரி மஞ்சள்

இக்குசாமதட்டை = கரும்பு

இக்குசுண்டான் = பெருங்கரும்பு

இக்குசு தருப்பை = ஒருவகை தருப்பை

இக்கு மேகம் = சிறுநீர் கரும்பு ரசத்தைப் போலும் தென்னங்கள்ளைப் போலும் மிகவும் இனிப்பாக நுரையுடன் இறங்கு மோர் மேகநோய்

இக்குரசம் = கருப்பஞ்சாறு

இக்குரபிசம் = நீர்முள்ளிவிரை

இக்குரம் = நீர்முள்ளி

இக்குவாகு, இக்குவாகை = பேய்ச்சுரை

இக்குவிகாரம் = சர்க்கரை

இக்குற மூலி = பெருமருந்து

இக்டி = கத்தூரிமஞ்சள், கரும்பு, அடிக்கரும்பு, கண்ணிமைமயிர்

இக்தி = கிராம்பு

இங்கஞ் செடி = முத்தாபலம் அல்லது சங்கஞ்செடி

இங்கம் = பெருங்காயம், சந்தனம்

இங்கரி = கத்தூரி

இங்கலிகம் = நஞ்சுண்டான், சாதிலிங்கம்

இங்களகம் = இலிங்கம்

இங்கா = காட்டுக்கொன்றை, கொடுக்காய்ப்புளி, இருள், வேல்

இங்காரியம் = புகையிலை

இங்காலம் = கரி, மரக்கரி

இங்கி = நெருஞ்சில், சுகாண்டன், நீர்முள்ளி

இங்கிக் கடம்பான் = எட்டு மெல்லிய கைகளையுடைய ஒருவகை கடல் மீன்

இங்கிதராகம் = கருங்குளவி

இங்கிரி = கத்தூரி

இங்கிலிகம், இங்கிலிக்கம் = சாதிலிங்கம்

இங்கீதரோமம் = தலைமயிர்

இங்கு = பெருங்காயம் (மரம்), பிதரோகிணி, நெருஞ்சி

இங்கு அண்டா = பெருங்கரும்பு

இங்கு அண்டான், இங்குகண்டான் = நெருஞ்சி

இங்குகாதி = பீதரோகிணி

இங்குக் காண்டான் = நீர்முள்ளி

இங்குசக்காண்டான், இங்குசுக்காண்டான் = நெருஞ்சில், பெருங்கரும்பு, நீர்முள்ளி

இங்குசி = நீர்முள்ளி

இங்குசுகண்டன் = பெருநெருஞ்சில்

இங்குசு காண்டன் = நீர்முள்ளி, பெருநெடுஞ்சில், பெருங்கரும்பு

இங்குசுக் காமணன் = நீர்முள்ளி, நெருஞ்சில்

இங்கு சேபம் = ஓடான்

இங்குடம் = நாட்டுவாதுமை மரம்

இங்குடாவகம் = நெருஞ்சில்

இங்குடுமம் = பெருங்காயம்

இங்குனம் = பூதி மரம், இது காரீயத்தைச் செந்தூரமாக மாற்ற உதவும்

இங்குதம் = ஒருவகை மரம்

இங்குதாதி = பீதரோகிணிக் கொடி (இமயமலைச் சாரலில் உண்டாகும்)

இங்குதாநிபம் = கருக்கு வாய்ச்சி

இங்குதாரி = பேரோசனை, ஒருவகை உலோகமண், கோரோசனை

இங்குதாழி, இங்குதாழ் = பீதரோகிணிக்கொடி

இங்குதி = ஒருவகை மரம்

இங்குதூரி, இங்குதூரிதம் = ஒருவகை உலோக மண், கோரோசனை

இங்குபத்திரி = பெருங்காய மரத்தினிலை; நஞ்சுண்டான்

இங்குபழம், இங்குபூம் = பெருங்காயம்

இங்குபோளம் = கரியபோளம்

இங்குமம் = பெருங்காயம்

இங்குமை = சாதிலிங்கம்

இங்குயில் = பெருங்காயம்

இங்குரசாலிகம் = ஓட்டுப்பலா

இங்குரா = பெருங்காயம்

இங்குராப்பல்லி = கிச்சிலிக்கிழங்கு

இங்குரமம் = பெருங்காயம், பெருங்கரப்பு

இங்குரோமம் = பெருங்காயம்

இங்குலாதிக் குளிகை = விடசுரம், சுகசன்னி, சன்னி, பாதசுரம் முதலிய நோய்களுக்கும் கொடுக்கும் மாத்திரை

இங்குலிகம் = நஞ்சுண்டான், சாதிலிங்கம், சிவப்பு

இங்குலிங்கபிசம் = ஐவிரலி

இங்குலிசம் = கருங்குங்கிலியம்

இங்கு லோசிதம் = ஓட்டுமா

இங்குவாதிச் சூரணம் = பெருங்காயம் முதலிய சரக்குகளைச் சேர்த்து வாத நோய் களுக்குக் கொடுக்கும் சூரணம்

இங்குவிருட்சம் = நேயமரம்

இங்குளம் = சாதிலிங்கம், பெருங்காயம், இரசம், காரச்செடி, சாதிலிங்கக்குப்பி

இங்குனி = வெண்சிறுவழுதலை, சாதிலிங்கம், பெருங்காயம், இரசம், மொக்கப்பூமரம், கத்திரி

இங்குறாமம் = பெருங்காயம்

இங்குனம் = சாதிலிங்கம்

இங்கை = இண்டங்கொடி (உப்பிலி)

இசங்கு = சங்கங்குப்பி, சங்கஞ்செடி, சங்கு

இசதாரு = கடப்பமரம்

இசபிமூலம் = உரளி

இசப்பகோல் விரை = இசுபகோல்விதை,

இசருகம் = வெண்தும்பை, சிறுதும்பை

இசலிகா = ஓட்டை மரம்

இசவில் = கொன்றை

இசவேல் = ஓடைவேல்

இசிகடுகு = செங்கடுகு

இசிகர் = கடுகு

இசிகா = கருங்குருந்து

இசிதாரு = கடப்பமரம்

இசிதாலிகம் = ஒருதலைப் பூண்டு

இசிபலம், இசிபவம் = பேய்ப்புடோல்

இசிப்பகோல்விரை, இசிப்புக்கோல்விதை = இசப்கோல் விதை

இசிவு சன்னி = உடம்பில் பலவிடங்கலிலுண்டாகும் வலிப்பு; வாய் கிட்டிப் போகுமோர் வகைவலி; வலி சன்னி நோயினால் மூளையும் அதைச் சேர்ந்த நரம்புகளும் பீடிக்கப்பட்டுத் தசைகள் பிகுவாகி அதனால் ஏற்படும் வலிப்பு

இசிவு நொப்பி = சன்னியைத் தடுக்கும் மருந்து

இசிவு மாந்தம் = குழந்தைகளுக்குச் செரியாமையால் ஏற்படும் வலி

இசீகா = கடுகு

இசுக்கோல்வித்து = இசுபகோல் விதை

இசுதாரு = கடம்பமரம்

இசுபகோல் விதை = வெளியூரிலிருந்து கொண்டு வந்து பயிராக்கப்படும் ஒருவகை விதை

இசுபுட்பம் = ஒருவகை பூண்டின் பெயர்

இசுபொங்கி விதை = இசுகோல்விசை

இசுரதரு = கடப்பமரம்

இசுரமூலி = பெருமருந்து

இசுவேதனி = நேர்வாளம்

இசெப்படிகை = இண்டங்கொடி

இசை = பொன், தென்னைமரம்

இசைப்புள் = குயில், அன்றில், தென்னைமரம்

இசைப்பொறி = காது

இசைமுடி = சிலந்தி நாயகம், கிரந்தி நாயகம், மைசாட்சி (சீரகம் பொன்னாங்காணி)

இசைமுட்டி = செருந்தி மரம்

இசைமூடி = சிலந்தி நாயகம், இலைக்கள்ளி

இசையறி பறவை = கேகயப்புள்

இசையிலொன்று = துத்தம்

இசைவிரும்பி = கேகயப்புள்

இசொரி = பெருமருந்து

இச்சகம் = நாரத்தை

இச்சத்தி = இலந்தை

இச்சபம் = சவரிலோத்திரம், விளா

இச்சலம் = நீர்க்கடம்பு, சதுப்பு நிலத்திலும் உப்பு மண்ணிலும் விளையும் ஒரு சிறிய மரம்

இச்சா நோய் = பெண்களைப்புணர வேண்டுமென்ற ஏக்கத்தினால் அல்லது அதிகமாகப் புணருவதால் ஏற்படும் நோய்கள்

இச்சா பேதி = தன் விருப்பத்திற்கேற்ப பேதி ஆக எடுத்துக் கொள்ளும் மருந்து (சக பேதி மருந்து)

இச்சாபேதிக் குளிகை = சுகபேதி மாத்திரை

இச்சாமாமிச பேதி = தன் விருப்பப்படி நடத்தவல்ல தசைப் பாகம்

இச்சாம் = வெந்தோன்றி

இச்சாலியம் = கொன்றை

இச்சி = இத்திமரம், மரம், ஆலம், சிற்றால், அரசு

இச்சியம் = கடுகுரோகிணி, சவரிலோத்திரம்

இச்சியல் = கடுகுரோகிணி, கடுகு, பசலை

இச்சியாமி = சீயக்காய்

இச்சியாலம் = அரசு

இச்சியால் = இத்தி, சிற்றால் (ஆல மரத்தின் விழுது சாய்ந்தது)

இச்சியோனி = கரும்பு

இச்சிரோகிணி = கடுகுரோகிணி

இச்சில் = இந்திரமரம்

இச்சு = ஈஞ்சு, கருப்பஞ்சாறு, சத்த சமுத்திரத்திலொன்று

இச்சுசாரம் = வெல்லம்

இச்சுமூலம் = கரும்புவேர், அடிக்கரும்பு

இச்சுமேகம் = மூத்திரம் இனிப்பாக வரும் ஒருவகை மேக நோய்

இச்சுரசம் = கரும்பு

இச்சுவாகு = பேய்ச்சுரை

இஸ்காத்தி விருக்கி = கண்டங்கத்திரி

இஸ்கோப்பிவிதை, இஸ்கோல் = இசுபகோல் விதை

இஸ்நானப் பரிகாரம் = நான்குவகைச் சிகிச்சைகளிலொன்று

இஸ்பகல்வித்து, இஸ்பகோல் = இசுபகோல் விதை

இஜருல்லயா = விஷக்கல்

இஜரூல் கமர் = சந்திர காந்தக்கல் (இதைச் சந்திரன் ஒளியிற் காட்ட ஈரங்கசியும்)

இஜரூல்திக் = கோழிக்கல்

இஞ்சம் = வெந்தோன்றி

இஞ்சாகம் = இறால்

இஞ்சாகிசம் = ஏலம்

இஞ்சி = கொற்றான் (கொத்தாள்), சரோவெல்லம்

இஞ்சிக்கிழங்கு = இஞ்சிவேர்

இஞ்சிச் சத்து = இஞ்சிக் கிழங்கின் சாரம் (இஞ்சியைச் சாராயத்தில் ஊறவைத்துப் பிறகு அதனின்று சாறு எடுப்பர்)

இஞ்சிச்சாறு = இஞ்சிரசம், வெல்லம்

இஞ்சிச் சுண்ணம் = இஞ்சிச் சாற்றினடியில் நிற்கும் சுண்ணாம்பு

இஞ்சி சுயரசம் = இஞ்சியிலிருந்து எடுக்கும் கலப்பில்லாத ரசம்

இஞ்சி சுரசம் = இஞ்சிச் சாற்றாகிய குடிநீர்; இதை இஞ்சி சுரசம் என்பர்

இஞ்சித் தயிலம் = இஞ்சி ரசத்துடன் நல்லெண்ணெயையும் மற்ற கடைச்சரக்குகளை யும் சேர்த்து காய்ச்சி வடிக்கும் தயிலம்

இஞ்சித்தேறு = இஞ்சித்துண்டு

இஞ்சிநீர் = இஞ்சி ரசம்

இஞ்சிப் புளிப்பு = காடியில் ஊற வைத்த கஞ்சி

இஞ்சியம் = கீழாநெல்லி

இஞ்சி ரசாயனம் = குன்மம் முதலிய வாயு நோய்களுக்குக் கொடுக்கும் மருந்து

இஞ்சிரை = சங்கு

இஞ்சி லேகியம் = இஞ்சியுடன் பிற கடைச்சரக்குகளையும் சேர்த்து நெய்யும் சர்க்கரையுமிட்டு கிளறிய இளகம்

இஞ்சி வேர்ப்புல் = சுக்கு நாறிப்புல்

இஞ்சிறியர் = கருஞ்சீரகம்

இஞ்சுச்சாறு = வெல்லம்

இஞ்சோபிதம் = ஏழிலைம் பாலை

இடகம் = சங்குமுடி

இடகலை = வலதுகால் பெருவிரலிலிருந்து இடது நாசி வரையிலும் முள்ளத் தண்டின் இடது பக்கமாய் ஓடி நிற்கும் நாடி

இடரும் = சங்குமுடி

இடக்கன் = இரண்டாவது பிறந்த குழந்தை

இடக்காறை யென்பு = இடது சவுடியெலும்பு

இடக்கைச்சி = ஒருவகைநாடி

இடங்கணம் = பொரிகாரம், வெண்காரம்

இடங்கணி = ஆந்தை, சங்கிலி

இடங்கணேயம் = மயிலி

இடங்கப் பட்டை = இலவங்கப்பட்டை

இடங்கம் = இலவங்கம், ஒருவகைத் தாது அதாவது வெண் காரத்தின் சத்து, அம்பாளம், இந்துப்பு, முன்னைப்பிசின்

இடங்கரம் = மகளிர் சூதகம்

இடங்கர் = முதலை, நீர்க்குடம்

இடங்கலி = வீழி

இடங்கனம் = வெண்காரம்

இடசிடல் = கடுகுரோகிணி

இடசு = பால்

இடச்சுக்குளம்பு = நீர்முள்ளி

இடதுகை = தம்பட்டஞ்செடி

இடதுசடரம் = இதயத்தின் இடது அறை

இடது சிரவம் = இதயத்தின் இடது பக்க மேல் அறை

இடது நாளக்குழல் = இடது பக்கம் ஓடும் காரிரத்தக்குழாய்

இடதுபுப்புசம் = இடதுபுப் நுரையீரல் இடது புசம் பக்கத்தின் பகுதி

இடநாகம் = அடையிருக்கும் நல்ல பாம்பு

இடபங்கம் = புளிமா

இடபம் = எருது

இடபவனாதி = கோஷ்டம்

இடபவாகன வேம்பு = சிவனார் வேம்பு

இடபவாகனன் = எருமை நாக்கி(கு)

இடபவித்து = வாளம்

இடபாகனம், இடப்பாங்கண்ணா = எருமை நாக்கி(கு)

இடம்பால் = மாட்டுப்பால்

இடப்பு = நான்கு வராகனெடை (ஓர் நாணயம்)

இடம் = ஆகாயம், இடது பக்கம்

இடம்பகம் = நாவல்

இடம்புரி = இடம்புரிச்சங்கு, சங்கு, சங்குங்குப்பி

இடம்புரிக் காய் = திருகுகாய்

இடயிகம், இடதகியிகரம் = மகளிர் சூதகம்

இடர்சிகம் = மைசாட்சி

இடர்பிம்மம் = தாது மாதுளை

இடர்ப் பில்லம் = இமையின் அடியில் இருக்கின்ற நரம்புகளை மஞ்சள் நிறமாகச் செய்து சவ்வுவளர்ந்து தடிக்கச் செய்யும் நோய்; இமையின் ஓரங்களிலுள்ள மயிர்க்கால்களுக்குக் காணும் தாபிதம்

இடலை = ஒரு வகைமரம்

இடவகம் = மாம்பிசின், பனம் பிசின், இலவங்கம், மரப்பிசின், வெள்ளைக்குக்கில்

இடவம் = பெருமருந்து, எலி

இடவயம் = மலைப்பாலை (ஒருவகை மரம், இது குடசப்பாலையை ஒத்திருக்கும்)

இடவி = சிப்பிமுத்து

இடறசம் = குக்கில்

இடறி = யானை

இடற்சம் = குக்கில் பிசின்

இடா = இடது பக்கத்திலுள்ள இரத்தக்குழாய்

இடாடிமம் இடாபிம்மம் = தாது மாதுளை

இடி = பொடி, தினைமா, நெல்மா, வெடியுப்பு

இடிகட்டு வாதி லேகியம் = கடைச்சரக்குகளைப் பனை வெல்லத்துடன் சேர்த்து தயாரிக்கும் இலேகியம் இதை அதிசாரம், கிராணி போன்ற நோய்களுக்குக் கொடுக்கலாம்

இடிகம் = பெருமருந்து

இடிகரப்பன் = ஒருவகைக் கரப்பான்

இடிக்கம் = காட்டு வெள்ளாடு

இடிக்கொள் = காட்டுக்கொள்

இடிசார்ந்த நாதம், இடிசார்ந்த பீஜம் = இந்திரகோபப் பூச்சி

இடிசிகா = கோங்கிலவு

இடிசிலைச் சாறு = இலையை இடித்துப் பிழிந்த சாறு

இடிசுப்பீசம் = நீர்த்முள்ளி

இடிசூலை = மண்டையிடி, மண்டைகுத்தல்

இடிதாங்கி = காந்தம், ஒருவகைப்பூடு; இதன் இலைச்சாற்றால் முத்து நீறாகும் வாயு போகும்

இடிபிசம் = இந்திரகோபப்பூச்சி

இடிப்புண் = குத்தலோடு கூடிய புண், இடித்ததனால் ஏற்பட்ட புண்

இடிப்புற்று = குத்தலோடு கூடிய புற்று நோய்

இடிமரம் = உலக்கை

இடிமருந்து = சூரணம்

இடியிற் சார்ந்திடு நாதம் = இந்திரகோபப் பூச்சி

இடிலேகியம் = இடிகட்டுவாதி லேகியம்

இடிவம் = பெருமருந்து

இடிவல்லாதி = சேராங்கொட்டை, நீரடி முத்து, எள், பனை வெல்லம் முதலிய சரக்கு களைச் சேர்த்து தயாரித்த இளகம் (மேகப்படை, தேகப் புண், சொறி, சிரங்கு நீங்கும்)

இடிவாயு = குத்தலோடு கூடிய வாயு

இடிவிலக்கி = காந்தம்

இடுகறல் = விறகு

இடுகாலம், இடுகாலி, இடுகால் = பீர்க்கு

இடுகாறி = பேய்ப்பீர்க்கு

இடுகசீலம் = மாட்டுக்குளம்படி

இடுகு = பெண்ணாமை

இடுகொள் = காட்டுக்கொள்

இடுகௌசிகம் = மான்குளம்படி

இடுக்கம் = வெண்கருங்காலி

இடுக்குப்பானை = கள்ளூறும் பனை

இடுக்கு மரம் = எண்ணெயூற்றுமரம்

இடுதங்கம் = மாற்றுயர்ந்த தங்கம்

இடுபலம் = பேய்ப்புடோல்

இடுபறம் = பீர்க்கு

இடுபுடல் = பேய்ப்புடோல்

இடுப்பரனை = இடுப்பிலுண்டாகும் ஒருவகைப்படை

இடுப்புக் கடுவன் = இடுப்பிலுண்டாகுமோர் வகைத் தோல் நோய்

இடுப்புச் சூலை = வாயுவினால் செரிப்புச் சக்தி கோளாறடைந்து உணவு செரியாமல் மேல் மூச்சு வாங்கல், படுக்கவும் உட்காரவும் முடியாது இசிவு வலி ஏற்படல் முதலிய குணங்களைக் காட்டும் ஒருவகை வாயு நோய்

இடுப்புப் பிடிப்பு = ஒருவகை வாதநோய்

இடுப்பு முள்ளெலும்பு = இடுப்பில் அமைந்துள்ள ஐந்து எலும்புகள்

இடுப்பு வாதம் = இடுப்பில் வாயு தங்கி தோடைக்குக்கீழும் மேலும் பரவி குடைச்சலுடன் குனியவும் நிமிரவும் முடியாது செய்யும் வாத நோய்

இடுப்புவிப் புருதி = இடுப்பிலுண்டாகும் கட்டி

இடுப்புளைவு = இடுப்பில், வாதத்தினா லுண்டாகும் ஒருவித வலி; அளவு கடந்த புணர்ச்சியால் நேர்ந்த இடுப்பு வலி

இடுமோலி = மலையாள நாட்டில் கடற்கரை யோரங்களில் வளருமோர் மரம்

இடும்பன் = காரெலி

இடும்பாகம் = கொத்தான்

இடும்பை = எலி, மாமரம்

இடும்போகம் = சிவப்பவரை

இடுலி = பெண்ணாமை

இடை = நாடி மூன்றிலொன்று இடுப்பு, இடகலை, தசநாடியிலொன்று பௌர்ணமி

இடைகலை = சந்திரகலை

இடைக்கலம் = மட்பாண்டம்

இடைக் காய்ச்சல் = முறைக்காய்ச்சல்; இதைத் தினக் காய்ச்சல், மூன்றாம் பிறைக் காய்ச்சல், நான்காம் முறைக்காய்ச்சல் என்று மூன்று விதமாகச் சொல்வர்

இடைசுருகந்தம் = கிராம்பு

இடைச் சூலை = வாயுவினால் செரிப்புச் சக்தி கோளாறடைந்து உணவு செரியாமல் மேல் மூச்சு வாங்கல், படுக்கவும் உட்காரவும் முடியாது இசிவுவலி ஏற்படல் முதலிய குணங்களைக் காட்டும் ஒருவகை வாயு நோய்

இடைத் தலைவலி = விட்டு விட்டு வரும், தலைநோய்

இடைநாடி = தசநாடியிலொன்று அதாவது இடது மூக்கில் நிற்கும் நாடி

இடைப்பரு = ஒருவகைக் கரப்பன்

இடைப்புலி = தும்பை

இடைமுள் = ஒருவகைக் கரப்பன்

இடைமூளை = நடுவிலுள்ள மூளை

இடையல் = சீலை

இடையவியல் = சதை உராய்வதால் ஏற்படும் படை

இடையுகரம் = மகளிர் சூதகம்

இடையுற்ற மலடி = பெண்களுக்கு இடுப்பு பருத்து அதனாலுண் டாகும் ஒருவகை மலட்டுத் தன்மை

இடைவழம் = இந்துப்பு

இடைவிழு நாடி = விட்டு விட்டு எழுவதும் அமிழ்வது மான நாடி நடை

இட்சாத்பகம் = வேழக்கரும்பு

இட்சாவாகம் = அம்பாளம், பேய்ச்சுரை

இட்சாவாகு = பேய்ப்பீர்க்கு

இட்சி = கத்தூரி மஞ்சள்

இட்சிகா = எருக்கு

இட்சியகம் = பிரபுண்டரீகம், அல்லித்தாமரை

இட்சு = வெண்கரும்பு, மூங்கில்

இட்சுகந்தம் = நெருஞ்சி, நிலப்பூசணி

இட்சு கந்தை = பால்கமுகு, சிறுகரும்பு, நிலப்பூசணி, நெருஞ்சில், கானல் தருப்பை

இட்சு மேகம் = சிறுநீர் கரும்புச் சாற்றைப் போலவும் தென்னங்கள்ளைப் போலவும் மிகவும் இனிப்பாக இறங்கு மோர் மேகநோய

இட்சுவம் = கரும்பு

இட்சுவல்லி = பூமிசர்க்கரைக் கிழங்கு

இட்சுவாகு = பேய்ச்சுரை

இட்டகாட்டகம் = வெட்டி வேர்

இட்டம், இஷ்டம் = ஆமணக்கு

இட்ட கந்தம் = வாசனை, வாசனைப் பொருள்

இட்டகாபதம் = வெண்ணிறமான வெட்டிவேர்

இட்டாயிதம் = ஆமணக்கு

இட்டிகை = கூட்டுமெழுகு, செங்கல்

இட்டிசம் = ஆமணக்கு

இட்டும் = பச்சைநாவி

இணகாலன் = நேர்வாளம்

இணங்கள், இணங்கனுப்பு, இணங்கன் = வெடியுப்பு

இணங்கியுரக்கூட்டி = வழலை

இணங்கு = சாதிலிங்கம்

இணங்குசம் = பைசாசமுள்ளி

இணம் = கிச்சிலி மரம், தளிர்

இணரம் = மாமரம்

இணர் = கிச்சிலி மரம், மலர்ந்த மலர், பூந்தாது, மாமரம், பூங்கொத்து, தளிர்

இணர்க்கிழங்கு = கிச்சிலிக் கிழங்கு

இணர்ச்சேசிதம் = ஒடுவை

இணர்மேலிதம் = ஏழிலை வள்ளி

இணறு = மலர்

இணா = மாமரம்

இணாட்டு = மீன்செதில், கண்ணிணை, கூந்தல்

இணைகோணத் தடை = மூக்கிரட்டையிலை

இணைக்கயல் = ஒருவகைக் கெண்டை மீன்

இணைக்கருப்பம் = இரட்டைப் பிள்ளை

இணைக்கோணம் = மூக்கிரட்டையிலை

இணைதாரை = விந்துவை வெளித்தள்ளும் தாரை

இணைப்பாம்பு = சாரைப் பாம்பு, பிணையும் பாம்பு

இணைப் பிரியன் = ஒருவகைப் பாம்பு

இணையுதி = உடம்பினில் தசையிழைகளைப் பொருத்தும் பொருள்

இணை உப்பு = இரண்டுவகை சேர்ந்த உப்பு;
திராவகத்திலுள்ள நீர் வாயுவின் பாமரணுக்களைப் போக்கி அதற்குப் பதிலாகச் சேரும் இரண்டு வகைவுப்பு

இண்டங்கொடி = இரண்டு

இண்டஞ்செடி = ஈகைச்செடி

இண்டம் = ஆமணக்கு

இண்டம் பொடி = சவ்வரிசி நொய்

இண்டாசிதம் = கசப்புப் புகையிலை

இண்டு = ஈகைச்கொடி, ஆதொண்டை, தொடரி,
புலித்தடுக்கி, புளியிண்டு வெள்ளிண்டன் கொடி,
ஈயச்செடி, கற்பூரமரம், ஈயக்குலைச் செடி, கிச்சலிச்செடி

இண்டுகிதம் = கசப்பு வெள்ளரி

இண்டை = தாமரை, முல்லைக் கொடி, இண்டஞ்செடி,
ஆதொண்டை, புலிதொடக்கி

இதயக பாடதாபிதம் = இதயத்தின் உட்பக்கத் திலுள்ள இரண்டு சதைக் கதவுகள்

இதயகமலம் = இதயம்

இதயகவசம் = இதயத்தைச் சுற்றியுள்ள சவ்வுப்பை

இதயகாளி = சிறுதக்காளி

இதயகிரகம் = நெஞ்சிலுண்டாகும் ஒருவிதப் பிடிப்புவலி

இதய கோசம் = இதயத்தைச் சுற்றியுள்ள சவ்வுப்பை

இதயக்கழலை = இதயக்கட்டி

இதயக்குவிப்பு = இதயச்சுருக்கம்

இதயச்கூச்சு = இதயமுனை

இதயசூலை = மார்புவலி, வாயு அதிகரித்து மூச்சு விட முடியாது மார்பில் வலியையுண்டாக்கும் ஒருவிதக் குத்தல் நோய்

இதயட்டிகம் = நறுஞ்சோந்தி (ஒரு வாசனை மலர்)

இதயதாபிதம் = இதயசுழற்சி

இதயத்திமிர்ப்பு, இதயத்திமிர்வாதம் = இதயத்தின் உணர்ச்சியின் மையாகிய வாத நோய்

இதயத்துடி துடிப்பு = இதயம் அதிவேக மாய்த் துடித்தல்

இதயத் துடிப்பு = நோய், பயம், மனக் கவலை, கோபம் முதலியவைகளால் இதயம் வேகமாய்த் துடித்தல்

இதய நார்க் கடிமை = இதயத்தின் தசை நாரமைப்புக்கேற்படும் வன்மை

இதயப் பிதுக்கம் = இதயமானது நுரையீரல் தாங்கியில் ஏற்படும் வெடிப்பு மூலமாய் வெளிப்பிதுங்கல்

இதயப்புற்று = இதய புண்

இதயப்போக்கு = இதயவசைவு

இதயயாரி நோய் = இதயத்தின் கபாடத்திற்கு ஏற்படும் நோய்

இதயவலி = நெஞ்செரிவு

இதயவழற்சி = இதயத்திற்கேற்படு மோர்வித வேக்காடு

இதயவாதம் = உடம்பின்வாதம் இதயத்திற்குப் பரவி வலியையுண்டாக்கும் நோய்

இதயவாயு = இதயத்தின் நரம்புகளில் ஏற்படும் ஒருவலி

இதயவுட் காசம் = இதயத்தைச் சுற்றியுள்ள சவ்வுப்பை

இதயவுப்பிசம் = இதய நோயினால் வீக்கங்கொள்ளல்

இதய வெடிப்பு = இதயக்கருவிகளிலுண்டாகிய ஒரு பிளவு

இதரக்கூடு மருந்து = இரசம் சேர்ந்த மருந்து (இரசம் முதன்மை)

இதரமருந்து = இரசத்தைக் கொண்டு தயாரித்த மருந்து

இதரம் = பாதரசம், வேறுமருந்தால் முறிந்த இரசம், காட்டுக் கருணைக்கிழங்கு

இதர யோகம் = வைத்திய நூலிற் சொல்லாத வேறு முறை மருந்து; வைத்திய ஞானமின்றிச் செய்யும் மருந்து கை முறையாகச் செய்யும் மருந்து; இரசஞ் சேர்ந்த மருந்து

இதராஞ்சியிலை = ஏறழிஞ்சில்

இதலதம் = காரீயம்

இதலை = கொப்பூழ்

இதல் = கவுதாரி, காடை, இரதம்

இதழாயா = உலோகம்

இதழி = கொன்றை, சரக்கொன்றை, கடுக்காய் (ம்)

இதழ் = இலை, பாளை, கவுதாரி, ஓரிதழ்த் தாமரை, சாதிபத்திரி, கண்ணிமை, ஆறிதழ்த் தாமரை, உதடு, பூவிதழ்

இதளி = கொன்றை

இதளை = மணிதளை, ஒரு பூண்டு, நந்தி விருட்சம், தொப்புள்

இதளைக் காற்பூடு = ஒருவகை பூண்டு

இதள் = இரசம், சிறு தூரு (வேர்)

இதால் = கொப்பூழ்

இதிகாரிய காசம் = ஆவில் புங்கு

இதிரக்கிழங்கு, இதிரைக்கிழங்கு, இதிர்க்கிழங்கு = காட்டு கருணைக்கிழங்கு

இதுப்பி = சிப்பிமுத்து

இதும்புலி = தும்பை

இதூகம் = வெள்ளை மிளகு

இதை, இதைக்கான் = காராமணி

இத்தகத் தாறணி = தம்மாறு வெற்றிலை

இத்தகம் = வால் மிளகு

இத்தம் = புளியமரம்

இத்தி = இச்சி, கல்லால், கல்லிச்சி, இறலி மரம், கல்லித்தி

இத்திநடயம், இத்திநடையம் = நத்தை

இத்திமாலகம் = கஞ்சாங்கோரை

இத்தியபீ = தண்ணீர்மிட்டான்

இத்தியால் = கல்லால்

இத்தியில் = கடுகு ரோகிணி

இத்தில் = மருது

இத்திவாத ரோணிகம் = ஒரு கொம்பு

இத்து = காவட்டம்புல்

இத்துமா = விக்கல்

இத்துமா பித்தம் = பித்தக் கோளாறினால் மாறாதவிக்கல், ஏப்பம், மூர்ச்சை, வியர்வை, இருமல், சுவாசம், தலைவலி, உள்ளங்கால், கை முதலிய இடங்களில் கொப்புளம் எழும்பல் முதலிய குணங்களையுண்டாக்கும் பித்த நோய்; செரியாமையால் மார்புக்குள் அடியிலிருக்கும் ஈரந்தாங்கி எனும் சதைக்கும் அன்னாசயத்திற்கும் காணுகின்ற ஒரு இசிவு

இத்து மானந்தம் = பெரு நரளைக்கிழங்கு

இத்துரா = காவட்டம்புல்

இத்துரு = ஈயமணல், காவட்டம் புல், வங்கமணல்

இத்துவரம் = எருது

இத்துறு = காவட்டம்புல்

இந்தக்கரை = இந்துப்பு

இந்தம் = புளியமரம்

இந்தம்பரம், இந்தம்வரம் = நீலோற்பலம்

இந்தளம், இந்தனம் = விறக, நறும்புகை

இந்தாளி = தாளிப்பனை

இந்தி = பூனை

இந்தி கோபம் = ஈயம் (ஈசல்)

இந்திந்திரம் = வண்டு

இந்தி புசியம் = வெந்தோன்றி

இந்தியம் = இந்திரியம், சுக்கிலம்

இந்தியவல்லி = முடக்கொற்றான்

இந்திரகண்டி = ஒருவகை மூத்திரநோய்

இந்திரகந்தம் = நன்னாரி, நாயுருவி

இந்திரகாளி = தேட்கொடுக்கி

இந்திரகாதரம் = நன்னாரி

இந்திரகாந்தம் = வாரி

இந்திரகென்டி = ஒருவகை மூத்திரநோய்

இந்திரகெந்தம் = நன்னாரி

இந்திர கெரியம் = இந்திரகோபப்பூச்சி

இந்திரகேந்திரம், இந்திரகோதம் = நன்னாரி

இந்திரகோபச் செம்பு = உரோமரிஷி 500 ல் சொல்லியுள்ள ஒரு விதச்செம்பு இது இந்திரகோபப் பூச்சியினின்று தயாரிக்கப்படும்

இந்திரகோபப்பூச்சி, இந்திரகோபம் = தம்பலப் பூச்சி, நாக்குப்பூச்சி

இந்திரகோலம் = தம்பலப்பூச்சி

இந்திரசத்தி = வைப்புப் பாடாணம் 32 ல் ஒன்று ; கெந்தி பாடாணம்; இந்திர பாடாணம்

இந்திரசாரம் = இந்துப்பு

இந்திரசாலி = அழிஞ்சில்

இந்திரசிக்குவை = கஞ்சா

இந்திரசுகந்தம் = நன்னாரி

இந்திரசுபம், இந்திரசுப்பி, இந்திரசும்பி = வெந்தோன்றி

இந்திரசுரசம் = நொச்சி

இந்திரசுரா = ஒருவகைக் கொம்மட்டி

இந்திரசூரியம் = நொச்சி

இந்திரதரு = மருதமரம்

இந்திரதாரு, இந்திரதிரு, இந்திரதுருமம் = தேவதாரு

இந்திர நாபம் = நாபியைப் போன்ற ஒரு விஷப்பூடு (இலை ஆவாரையிலையைப் போல இருக்கும்)

இந்திர நீலம் = ஒருவகை நீல இரத்தினம், கருங்கல்

இந்திரபசப்பி = வெந்தோன்றி

இந்திரபம் = வெட்பாலை, ஒருவகைக் கோழி

இந்திரபலம் = வெட்பாலை

இந்திரபாசிதம் = கடப்பமரம்

இந்திர பாடாணம் = வைப்புப்பாடாணம் 32 ல் ஒன்று

இந்திரபிசம் = இந்திரகோபப்பூச்சி

இந்திரபிரகரணம் = இடி

இந்திரபீசம் = இந்திரகோபப் பூச்சி

இந்திரபீடத் தங்கம் = ஆணித்தங்கம்

இந்திரபு = சிப்பி

இந்திரபுசிப்பி, இந்திரபுசுப்பி = வெந்தோன்றி

இந்திரபுஷ்பம், இந்திரபுட்பம், இந்திரபுட்பி = வெந்தோன்றி, ஒருவகைக் கொடி

இந்திரபெலம் = வெட்பாலை

இந்திர பூதம் = உரக்கப் பேசுவதும் இந்திரனைப்போல் போகங்களை அனுபவிப் பதற்குப் பிரியத்தை உண்டாக்கு மோர் பூதக்கிரகணி நோய்

இந்தி போளம் = இந்திரகோபப்பூச்சி

இந்திரப்பிரியம் = பெதிகை மலையில் விளையும் மஞ்சள், சந்தன மரம்

இந்திரமம் = வெட்பாலை, ஒருவகைக் கோழி

இந்திரமாநிலம் = கருங்கல்லு

இந்திர மூலிகம் = ஒரு உயர்ந்த மூலிகை வேர்; மருந்து தயாரிக்குங்கால் அதனுள் சேரும் இனம் அதனின்று பிரிக்க முடியாத வகையில் அமைந்துள்ள இனமாகிய மருந்து

இந்திரம் = இந்திரியம், மருது, கடப்ப மரம், சரகண்ட பாடாணம், வண்டு, வலது கண்மணி, நெட்டுய்தல், கொழந்து, வெட்பாலை, மருத்துவர்

இந்திரயவம் = வெட்பாலையரிசி, ஒருவகைக் கோழி

இந்திரயவை = சிறுபாப்பரக்காய்

இந்திரரேகம் = வெட்பாலை, நிலவேம்பு, வெட்பாவட்டை

இந்திரரேகை = வெட்பாலை, நிலவேம்பு

இந்திரரேபம் = வெட்பாலை, பாலை

இந்திரரேயம் = வெண்பாவட்டை

இந்திரலுத்தம் = பயிர் முதலிய பச்சிலைகளை முழுவதும் அரித்து ஒன்று மில்லாமற் செய்யு மோர் வகை எரிப்பூச்சி

இந்திரலுப்தம் = இந்திரலுத்தம் என்ற எரிப் பூச்சி பயிர்களை அழிப்பது போல் தலை மண்டையிலிருக்கும் முடியை ஒன்றுமில்லாமல் உதிரச் செய்யுமோர் வகை நோய்; பித்தம் மயிர்க்காலிற் பரவி வாதத்தோடு கூடுவதால் இந்நோய் ஏற்படும்

இந்திரல்காமம் = நாக்குப்பூச்சி

இந்திரவஸ்தம் = ஒருவகை மருந்து

இந்திர வஸ்து = பூமியில் வெகுகாலம் புதைந்து கிடக்கப்பட்ட பூண்டு அல்லது பிராணி களின் தாவரவஸ்து

இந்திரவம் = கருங்குவளை, நீலோற்பலம்

இந்திரவரம் = நெட்டிதழ், கருநெய்தல், கருங்குவளை

இந்திரவருணி = பேய்க்கொம்மட்டி

இந்திரவர்மம் = நெய்தல்

இந்திரவல்லாரி = பேய்க்கொம்மட்டி

இந்திரவல்லி = முடக்கறுத்தான், கொம்மட்டி, கொத்தான், பிரண்டை, பாரிசாதம்

இந்திரவல்லிமுகிழ் = முடக் கொற்றான் துளிர்

இந்திரவாகனம் = ஒருவகை பூடு

இந்திரவாசம் = நெய்தல்

இந்திரவாமம் = நெய்தல், கரிப்பான்

இந்திரவாரி = சதாவேரி

இந்திர வாருணி = பேய்த்தும்மட்டி, பாவட்டை, சுக்கான்

இந்திரா வாருணிகை = பேய்த்தும்மட்டி

இந்திரவாழை = கானல்வாழை

இந்திர விருட்சம் = தேவதாரி வெட்பாலை

இந்திர விருத்தை = உடம்பில் வட்டமாகச் சிறுசிறு கொப்புளங்களை எழுப்பு மோர்வகைத் தோல் நோய்; இது வாயு பித்தக் கோளாறினால் ஏற்படும்

இந்திரனூர் = பொன்னாங்காணி

இந்திரன் = மருது

இந்திரன் மாளிகை தம் = இறை எனும் மாமரம்

இந்திராசம் = பத்து வகையான இரசச் சத்துக்களிலொன்று

இந்திராசனம் = கஞ்சா

இந்திராணம் = நொச்சி

இந்திராணி = நொச்சி, இடது கண்மணி, புங்கமரம்

இந்திராணிகம் = புங்கமரம்

இந்திராணிகாணி = பொன்னாங்காணி

இந்திராணிகை = நொச்சி

இந்திராபவம் = பாப்பரக்காய்

இந்திராயுதம் = வானவில்லைப் போல் நிறமுள்ள அட்டைப் பூச்சி

இந்திராலயம் = நீலோற்பலம்

இந்திராவன் = தும்மட்டிக்காய் வற்றல்

இந்திரி = ஒரு முள் மரம், இச்சி மரம் (இத்தி) காந்தம், நன்னாரி, கிழங்கு

இந்திரிகம் = நன்னாரி

இந்திரிஜார், இந்திரிபேதி = பிரமேகநோயில் உடம்பினுள் தங்கி நிற்கும் விடத்தை வெளிப்படுத்த வேண்டி ஆயுர்வேத முறைப்படி உபயோகப்படுத்தும் நீர்ப்பேதி

இந்திரிய கமலக் குழல் = சுக்கிலம் தங்குமிடத்திற்குச் செல்லு மோர் குழல்

இந்திரிய கமலம் = சுக்கிலம் தங்கும்பை

இந்திரிய கிராமம் = பஞ்சேந்திரியம் (ஐம்புலன்)

இந்திரிய கோசம் = சுக்கிலம் தங்கும் பை

இந்திரியக் கட்டு = பெண்கள் போகத்தில் விந்து விழாதபடி மருந்தினால் தடுத்தல்

இந்திரியக் கலிதம் = சுக்கிலம் வெளிப்படல்

இந்திரியக் குழல் = இந்திரிய கமலக்குழல்

இந்திரியக் கொடி = சுண்டி, தொட்டால் வாடி

இந்திரியசிராவம் = சுக்கில வொழுக்கு

இந்திரிய தாருட்டியம் = சுக்கிலத்தின் வலிவு

இந்திரியநரம்பு = தாது நரம்பு

இந்திரியப் பாலை = வெட்பாலை

இந்திரிய மிறுகல் = தாதுகட்டுதல்

இந்திரிய முடைதல் = சுக்கிலம் தண்ணீரைப் போலாதல்

இந்திரியம் = சுக்கிலம் ஐம்பொறி அதாவது மெய், வாய், கண், மூக்கு, செவி

இந்திரியம் நீற்றல் = இந்திரிய முடைதல்

இந்திரிய வதனம் = நெய்தல்

இந்திரியவம் = வெட்பாலை

இந்திரியவிஷய நோய்கள் = ஐம்புலன்களுக் குண்டான நோய்கள்

இந்திரிய வீனம் = சுக்கிலக் குறைவு, ஆண்மைத்தன்மைக் குறைவு, சுக்கிலம் உடைதல்

இந்திரியாபதனம் = உடல்

இந்திரியானி = புலனுறுப்பு, உணர்ச்சியுறுப்பு

இந்திரேகம், இந்திரேபம் = வெட்பாலை

இந்திரேயம் = வெண்பாவட்டை

இந்திரை = அரிதாரம்

இந்திரைக் கொட்டை = மாங்கொட்டை

இந்திரைமேனி = குப்பைமேனி

இந்திலா = செங்குவளை, நீர்க்குளிரி

இந்தீஸ்வரம், இந்தீவரம் = கருங்குவளை, கருநெய்தல்

இந்தீவரீ = தண்ணீர்மிட்டான்

இந்து = இந்துப்பு, எட்டி, கரி, கரடி, சந்திரன், பச்சைக் கற்பூரம், பூநீறு, புளிய மரம், கௌரிபாடாணம், கமலம், வெண்டாமரை, காவட்டம்புல்

இந்துக் கடுக்காய் = நாட்டுக்கடுக்காய்

இந்து கமலம் = வெள்ளளைத் தாமரை, வெள்ளாம்பல்

இந்துக் கருங்காலி = நாட்டுக்கருங்காலி

இந்துகாந்தம் = சந்திரகாந்தக்கல்

இந்து சகலம் = காட்டுச்சீரகம்

இந்து சபரி = காட்டாத்தி

இந்து சனகம் = கடல்

இந்துணி = பெருங்காயம், பெருங்கரப்பு

இந்து பச்சை = கற்பூரம்

இந்து பரணி = கற்பூரவல்லி

இந்துபரி, இந்து பாடாணம் = கௌரி பாடாணம்

இந்துபுட்பிகம் = செங்காந்தள் பூ

இந்து போளம் = ஒருவகைக் கரிய போளம்

இந்துப்பு = ஒரு மருந்துச்சரக்கு, தமிழ் வைத்திய நூலின்படி ஒரு வைப்புச் சரக்குக்குப் பரிபாஷையாக, இப்பெயருண்டு சீனம், கல்லுப்பு, வெடியுப்பு, காரம், சுத்தநீருப்பு முதலி யவைகளைக் கழுதை மூத்திரத்திலும், பசுவின் கோமயத்திலும் அரைத்து எரித்து இறக்கும் பொழுது அரைப்பங்கு பூ நீர் போட்டு மூட அனலில் வெம்பி இந்துப்பாகும் பிண்டவுப்பு (ஐந்து மாதத்திய கருப்பிண்டத்தினின்று எடுக்கும் ஒருவகை உப்பு) சிந்துப்பு, நேசவுப்பு, நாட்டுப்பு, பாறையுப்பு, சந்திரனுப்பு, சோமனுப்பு என்று தமிழிலும் வடமொழியில் சயிந்த லவணமென்றும் பெயர்

இந்துமாரம், இந்துமாரி = கடம்பு

இந்துரத்தினம் = முத்து

இந்துரம் = எலி, கப்பற்கடுக்காய்

இந்துரா = காவட்டம்புல், பெருச்சாளி

இந்துரு = பெருச்சாளி, காவட்டம்புல், இலந்தை

இந்துருகம் = இலந்தை

இந்து ரோகணி = கடுகுரோகணி

இந்துலேகம் = ஒருவகைபூடு, சோமம்

இந்து லோகம் = வெள்ளி

இந்து வல்லி = கொடிக்கள்ளி

இந்துவளம் = கடம்பு

இந்துவாகிகம் = கடுகு

இந்துவாசி, இந்துவாரி = தண்ணீர் விட்டான் சதாவரி

இந்து வோடி ரவிகடல் = அமாவாக

இந்துழி, இந்துளபம் = நெல்லி, பெருங்காயம், கடப்பமரம்

இந்துளம் = கடப்பமரம், நெல்லி

இந்துளாசிகம் = கடற்றாழை

இந்துளி = நெல்லி, பெருங்காயம்

இந்துள் = நெல்லி

இந்துறு = இலந்தை

இந்தூளி = இந்துளி

இபகந்தம் = ஒருவிடக்காய்

இபகானம் = ஆனைத்திப்பிலி

இப்கேசரம், இபக்கியம் = நாகப்பூ, நாகன், சண்பகம்

இபங்கம் = புளிமா

இபதந்தம் = ஒருவகை பூடு

இப்நோய் = யானைக்கால்

இபம் = யானை, யானைத் தந்தம், யானைக் கொம்பு, மரக்கொம்பு

இபரந்து = கல்லுப்பு

இபர்ப்பூ = குளம்

இபல்பூதி = வில்லை

இபாங்கிசம் = கடற்பாசி

இபிகா, இபிகாக்கு = குறிஞ்சாவைப் போன்ற பூடு

இபியம் = சாம்பிராணி

இபேகநாத மூலி = ஊர்க்கள்ளி

இபோடணம் = ஒருவகை வாசனைப் பூடு

இபரசங்கம் = செங்குளவி

இப்பி = சங்கு, கிளிஞ்சில், முத்துச்சிப்பி, சிப்பி

இப்பி வெள்ளி = வெள்ளியைப் போன்ற வெண்ணிறக் கிளிஞ்சில்

இப்பு = சிப்பிமுத்து

இப்பை = எலி, சீலை, இலுப்பை மரம்

இமகஷாயம் = சீதகஷாயம்

இமகதம் = கடுங்குளிரினால் ஏற்படும் உடம்புவலி

இமகன்னி = பொன்னாங்காணி

இமகிரணன் = சந்திரன்

இமகெசியங் குட்டக்கினி = தான்றிக்காய்

இமசலம் = பனிநீர்

இமதம் = பெருங்காயம், நெல்லி

இமதாரி = தண்ணீர் சுண்டுவதால் ஏற்படும் சீதளத்தைக் காட்டு மோர் கருவி

இமந்தள் = கீழுதடு

இமபடி = சூரியன்

இமபம் = ஆனைக்கொம்பு

இமம் = பனி, சீதளம், சந்தனம், பொன், கருந்தினை, பனித் தண்ணீர்

இமயகிரி = யோனி (பெண்ணுறுப்பு)

இமயல் = கருடன்

இமலமா = மஞ்சள்

இமலம், இமலா = மரமஞ்சள்

இமலாதி = மஞ்சணாத்தி

இமல் = மரமஞ்சள்

இமவாலுகம் = கற்பூரம்

இமவாலுகை = பச்சைக் கற்பூரம்

இமளபத்திரகம் = மலையாறு

இமாம் பட்சி = ஆலா, இது ஒருவகை கடற்கரைப்பறவை (கடல் பாம்புகளைத் தின்னும்)

இமாரம் = குளிரினால்கால் அல்லது கையிலுண்டாகும் புண்

இமாவடு = அதிமதுரம்

இமானி = பனிக்கட்டி

இமிரி = வெட்டிவேர்

இமில் = எருத்துத்திமில்

இமிழ் = அதிமதுரம்

இமிழ்தல் = தித்திப்பாயிருத்தல்

இமிழ்த்தல் = கொப்புளித்தல், இனித்தல், வாந்தி, கக்குதல்

இமை = கண்ணிதழ், கண்ணிமைத்தல் (கண்ணிமைப் பொழுது), கரடி, மயில், கொண்ணை

இமைக்கண் கழலை = இமையிலுண்டாகும் கழலை

இமைக் குரு = கடைக்கண்ணில் சிறிய கட்டிகளை எழுப்பும் ஒருவகைக் கண்ணோய், கண் கட்டி

இமைக் குலைவு = கண்ணிமைக்கேற்படும் நிலையழிவு

இமைக் குழிவு = கண்ணிலுண்டாகு மோர் வகைக் குத்தல் நோய்

இமைக்கொட்டு, இமைக்கொட்டுதல் = கண்ணிமைத்தல்

இமைச்சந்தி, இமைச்சந்தி மார்க்கம் = கண்ணிமையின் உட்பக்கம் உள்ள இடைவெளி; இது வெள்விழிக்கும் இமைக்கும் நடுவே உள்ளது

இமைச்சவ்வு = கண்ணிரப்பைகளை அடுத்த சவ்வு

இமைச் சோர்வு = பாரிச வாயுவினால் கண்ணின் இரப்பை உணர்ச்சியற்றுத் தொங்குதல்

இமை தடித்தல் = இமைகனத்துக் கண் பொங்கிப்பீளை சேர்ந்து ஓயாமல் வெண்ணிறமான சீழ்வடிந்து முகம் உடம்பு முதலியவைகளில் எரிச்சல் ஏற்பட்டு வாய் அரோசித்து கண் புகைந்து காட்டும் நோய்

இமை தடிப்பு = நோயினால் கண்ணிமை விறுவிறுத்துக் கனத்தல்; நீர் சேருவதாலுண்டாகும் இமைவீக்கம், கண்களிற் குத்தல் ஏற்பட்டு இமை வீங்கிச் சிவந்து, நீர் வடிந்து, பீளைகட்டிப் பார்வை புகைந்து காட்டு மோர் கண்ணோய்

இமைத் தளர்ச்சி = கண்ணிமைகள் தளர்ச்சி யடையல்; கண்ணிமை சுருங்கித் தொங்கல்

இமைத் திறத்தல் = மயிருதிர்ந்து இமைவெளி தேன்றல்

இமைத் தோஷம் = இமையைப் பற்றிய 16 வித நோய்கள்

இமைநீர் = கண்ணீர்

இமைநீர்ப் பாய்ச்சல் = தலையிலுள்ள நீர் இமைநரம்பின் வழியாயிறங்குவதனால் இமைகனத்து மரத்துத் திமிர் வீக்கம் முதலியவைகளை உண்டாக்கு மோர் கண்ணோய்

இமைப்பரு = கண்ணிமையின் முனையிற்காணும் பரு

இமைமயிருதிர்தல் = இமை மயிர் உதிர்ந்து விடுமோர் கண்ணிரப்பை நோய்

இமை முழுங்கி = இமையை நசியக் செய்யு மோர் விரணநோய்

இமையகிரி = யோனி (பெண்ணுறுப்பு)

இமையவெற்பு = சாத்திரவேதி

இமையிலி, இமையில் = கருடன்

இமையிறச்சி = கண்ணிமையை மேல் தோலற்றதாய்ச் செய்து நீர் பெருக்கையுண்டாக்கு மோர் விதக் கண்ணோய், இது வாததோடம், அம்மை நோய், உஷ்ணநோய் முதலிய நோய்களினால் ஏற்படும்

இமையுயர்ச்சி = அம்மை, மனவேதனை இவற்றால் இமை உயரும்; இது அசாத்தியம்

இமையொட்டி = இயற்கையாகவே இமைகள் ஒன்றொடொன்று ஒட்டிக் கொண்டு வளருதல்

இமையோடு உறுத்தல் = புருவத்தின் கீழுள்ள இமையானது கனத்துக் கொண்டு எப்பொழுதும் துடிக்கும் ஆகாயத்தைப் பார்க்க மிகக் கூசும், கண்கள் தெறிக்கும், உடம்பு குன்றிப் பயந்தோன்றும், கீழிமை கடுக்கும், நீர்வடியும், தலையில் அரிப்புண்டாகும்

இமை வரி = கருவிழியைச் சேர்ந்த ஒருவகை நோய் இது பிறையைப் போல் வளர்ந்திருக்கும்

இமை வாதம் = இமைகளைக் கொட்ட முடியாத நரம்பைப் பற்றிய ஒருவகைக் கண்ணோய்

இமை வாயு = வாயுவினால் இமைகளுக்கேற்படும் உணர்ச்சியழிவு

இமை விழுங்கி = இமையை நசியச் செய்யுமோர் விரணநோய்

இமைவெட்டு = கண்ணிமைப்பு

இம்பி = கருந்தினை

இம்பிகம், இம்பிலம் = மிளகு

இம்புசி = கடல்

இம்புரி = சிறுகடலை

இம்புறா(வேர்), இம்பூரல், இம்பூரா, இம்பூறல் = சிறுவேர், சாயவேர்

இம்பூறற் சக்களத்தி = இம்புறா வேரைப் போன்றும் ஆனால் குணத்தில் தாழ்ந்த தாயு முள்ள செடியின் வேர்

இம்மடி = யானை

இம்மம், இம்மல் = கருந்தினை

இம்மி = மத்தங்காய்ப் புல்லரிசி, அணு, கருந்தினை, ஒரு சிறு நிறை, பொன்னிறம்

இயகம் = வேம்பாடம்பட்டை

இயக்கண் = நாய்

இயக்கத்திற்கு = கழற்கொடி

இயக்கத் துவமம் = வாசனைத்திரவியம்

இயக்கத்தூபம் = குங்கிலியப் புகை

இயக்கம் = மலசங்கள்

இயக்கன் = நாய்

இயக்காக்கி = கழற்காய்

இயக்கினி = கண்டங்கத்திரி

இயக்குகா = கடாரநாரத்தை

இயக்குணி = இயக்கினி

இயக்குமை = சயரோகம்

இயக்கு ரோதம் = ஆல், அசுண்ப்பறவை, ஆல்லிக்கொடி

இயக்குறிதம் = கண்டங்கத்திரி

இயங்குவஞ்சி = கருந் தும்பைச்செடி

இயங்கு = சங்குங்குப்பி

இயசாயியம் = கொன்றை

இயஷ்டிமதுரம் = அதிமதுரம்

இயந்திரத் தைலம் = எள், ஆமணக்கு முதலிய விதைகளிலிருந்து செக்கு முதலிய இயந்திரங்களைக் கொண்டு ஆட்டியெடுக்கும் நெய்ச்சத்து

இயந்திரி = இத்திமரம்

இயமதூதி = பாம்பின் கீழ் வாய் நச்சுப்பல்

இயமலம் = கரடி

இயமவல்லி = நன்னாரி

இயமானார்வள்ளி = இலவு

இயமன் = பாம்புகளின் நச்சுப்பற்களிலொன்று

இயமானன் = உயிர்

இயமே = வாழை

இயம் = மிருதாரசிங்கி, ஈ, யானைக் கொம், ஒலி

இயம்பு = சூணம்

இயலச்சுகம் = சவட்டு மண்

இயலப்பு = தீயிலைபத்திரி, பொன்

இயலம் = இந்திரகோபர் பூச்சி

இயலாமை = நோய்

இயலை = பொன்

இயல் = தாம்ப்பூச்சி (இந்திர கோபம்), பொன்

இயல்சுகம் = வண்டு மணி

இயல்சுக்கு = சுவட்டு மணி

இயல்பால் = கண்டங்கத்திரி

இயர்பூ = வில்லம் நாய்வேளை, வெல்லம்

இயல்பூகம் = முப்பு

இயல்பூதி = நாய்வேளை, வில்வம், இண்டிலை, வில்லை பத்திரி

இயல் பூதிகம் = குட்டிவிளா, நாய் விளா, கச்சோலம்

இயல்பூபகம் = கடல் நீர்

இயல்பூபதி = வில்வம்

இயல்பொன் = இயற்கைப் பொன்

இயவகம் = காராமணி

இயவசம் = புல்

இயவசுகம் = காட்டுமரை

இயவட்சாரம் = யவட்(ச்)சாரம்

இயவபலம் = மூங்கில்

இயவம் = நெல், யவாதானியம் (Barley) கண்ணுக்குள்ளே வட்டமாயும் இருபுறமும் குவிந்துள்ள பளிங்கு போன்ற கல், வாற் கோதுமை

இயவரி = பெருமருந்து

இயவாகு = கஞ்சி

இயவாக்கிரசம் = யவச்சாரம்

இயவாசம் = சிறுகாஞ்சொறி

இயவானி = ஓமம்

இயவு = துவரை

இயவுஞ்சம் = கருந் துவரை

இயவை = ஒருமலைநெல் (தோரை நெல்), மூங்கிலரசி, மலைத்துவரை, ஒருயளவு (எட்டிலொன்று), துவரை

இயவோரகம் = கடற்றாமரை

இயற்காந்தம் = இயற்கையாகவே பூமியில் அகப்படும் கந்தகம்

இயற்கைச்சோகை = சோகை நோய்

இயற்கைத்தங்கம் = இயல்பொன்

இயற்கை நோய் = காரணம் ஏதுமின்றி உண்டாகும் நோய்

இயற்கைப் பொருள் = உபரசச் சரக்கு

இயற்றம் = எலிச்செவிப்பூடு

இயாகதம் = சிற்றகத்தி, துத்தி

இயாகதிதம் = கஞ்சா

இயாகதூதம் = துத்தி

இயாக தோதிகம் = கடாலாமணக்கு

இயாகம் = கொன்றை, கொண்ணை

இயாக குறிஞ்சி = கசப்பெலுமிச்சை, மலையெலுமிச்சை

இயாசதம் = சிற்றகத்தி

இயாசம் = கொன்றை

இயாசவியம் = புளியமரம்

இயாதகம் = துத்தி

இயாதம் = கொன்றை

இயாத்து = நோயாளியைப் பார்த்தல்

இயாப்பூதி = இண்டிலை

இயாமக் காமாலை = மாலைப் பொழுதின் பின் 10 நாழிகை வரைக்கும் பார்வையை மறைக்கும் காமாலை

இயாம் கிழங்கு = வெப்ப தேசத்தில் சில பாகங்களில் உணவாகக் கொள்ளும் பொருட்டு பயிரிடுமோர் வகைக் கிழங்குக் கொடி இதன் இலைச்சாறு தேள் கடிக்குதவும் இதன் வேரைப் புண், சிலந்தி முதலியவைகளின் மேல் தூவலாம்

இயாவகம் = காராமணி

இயாவசம் = பசுதின்னும் புல்

இயாலம் = சுக்கு

இயீந்து = கல்லுப்பு

இயுகாவியம், இயுசா, இயுசாவியம் = புளியமரம், கொன்றை

இயூகம் = கருங்குரங்கு

இயை காதகம் = கருக்குவாட்சி

இயைமே, இயைமேணை = வாழை, கொன்றை

இயையுமே = வாழை

இய்யர் = செங்கொன்றை

இய்வை = துவரை

இரகசியாமம் = செங்கழுநீர்

இரகதபோளம் = கரியபோளம்

இரகதம் = துத்தி

இரகபுட்பம் = இலவு

இரகம் = சூரியகாந்தக்கல், பளிங்கு, துத்தி

இரகிதம் = வெள்ளி

இரகில் = வெள்ளீயம்

இரங்க நாயகம் = கருங்குட்டம்

இரங்கிடிகை, இரங்கு, இரங்குக = முசுமுசுக்கை,

இரங்குக் கெளிறு = ஒருவகைக் கெளிற்று மீன்

இரங்கு மாதிரை = முசுமுசுக்கை

இரங்கூன்மல்லி = இரங்கூன் நாட்டு மல்லி

இரசகந்த பாடாணம் = சாதிலிங்கம், இரசம், கந்தகம், பாடாணம்

இரசகந்தம் = தென்னை மரம், குங்கிலியம்

இரசகபுவம் = ஒருவகை கடைச்சரக்கு

இரசகம் = ஓர்பேதி மருந்து, ஓர்கடினமான சிறிய வெண்தாது, பீர்க்கு, குடசப்பாலை, வெள்ளி

இரசகர்ப்பூரம் = இதுவோர் பாடாண மருந்துச் சரக்கு

இரச கற்பூரம் = இரசத்தினின்று தயாரிக்கும் ஒருவைப்புச் சரக்கு, கிண்ணிகற்பூரம், இரசம்

இரசகன் = வண்ணான்

இரசகா = சாதிலிங்கம்

இரசகாந்த விருட்சம் = மிக்க ஒளியுள்ள ஒருவகை மரம்

இரசகிரீதம் = சுண்ணாம்பு கலந்த இரசம்

இரசகுரு = நீர்க்கடம்பு, இரச மருந்துகளில் முதன்மையானமருந்து, இரசச்சுண்ணம்

இரசகுருவா = பிரமதண்டு

இரசகுளிகை, இரசகுளுகை = ஒருவகை மருந்து, இரும்பைப் பொன்னாக்கும் மருந்து

இரசகூட்டு = இரசம் சேர்ந்த மருந்து

இரசகெந்தி = எல்லா மருந்துகளுடன் சேருமோர் இரசக்குரு

இரசகெந்த பாடாணம் = இரசகந்த பாடாணம்

இரசகேசபீடம் = துத்தம்

இரசகேசரம், இரசகேசுரம் = கற்பூரம்

இரசகேந்திர லோகன் = சூதம்

இரசக் கட்டு = நெருப்பிற்கு ஓடாதபடி இறுகச் செய்த இரசம்

இரசக் கலவை = இரசம் மற்ற உலோகங் களோடு சேர்ந்த கலப்பு

இரசக் களங்கு = இரசவெட்டை அதாவது இரசத்தைக் கட்டி பிறகு மூலிகைகளினால் அது நொறுங்கும்படிச் செய்தல் வாதத்திற்குதவும்

இரசக் களிம்பு = ஆங்கிலேய முறைப்படி இரசம் கொழுப்பு முதலியவை கொண்டு செய்த மேல்பூச்சு மருந்து மேகக்கட்டி, கண்டமாலை முதலியவற்றிற்கு உபயோகமாகும்

இரசக்கார சிந்தூரம் = காரமேற்றிய இரசச் செந்தூரம்

இரசக்கிணறு = இரசம் எடுக்கும் சுரங்கம்

இரசக் கிண்ணம் = இரசத்தை இறுகச் செய்து வெள்ளியைப் போலுருக்கித் தகடு தட்டிச் செய்த கிண்ணம்

இரசக் கிண்ணி = கட்டிய இரசத்தினால் செய்த உண்கலம்

இரசக் கிரியை = மூலிகைச் சாற்றிலிருந்து குடிநீர் இறக்கி அதைக் குழம்பாகக் காய்ச்சும் முறை கிரந்தி அல்லது புண்களை ஆற்றுவதற்காகத் தேனோடு கூட்டி உபயோகிக்கும் ஆயுர்வேத மருந்து

இரசக் குடுக்கை = இரசத்தைப் பத்திரப்படுத்து வதற்காக உபயோகிக்கும் தேங்காய்க் குடுக்கை முதலியன

இரசக்குழி = இரசக்கிணறு

இரசக் குளிகை = இரசத்தை மூலிகைச் சத்துகளினாலும், காரசாரச் சரக்குகளினாலும், நெருப்பிற்கு ஓடாதபடி இறுகச் செய்து மணியாகத்திரட்டி, சாரணை தீர்த்துக்குளிகை யாகச் செய்வர்

இரசசாறு = இதயம்

இரசசிங்கி = கெந்தி, அரிதாரம், துருசு, இலிங்கம், வீரம், காரம், இரசம் முதலிய ஏழுசரக்குகளைக் குருச் செயநீரராலரைத்து மச்சா முனிசரக்கு வைப்பு 800 இல் சொல்லிய முறைப்படி செய்யும் மெழுகு

இரசசிந்தூரம் = புடமிட்ட இரசத்தினால் கிடைத்த சிகப்பு மருந்துப் பொடி

இரசசீனிச் சூரணம் = அண்டவாதம், அரையாப்பு, கிரந்தி புண், சூலை இவற்றிற்குக் கொடுக்கும் ஒருவகைச் சூரணம்

இரஜசு = மகளிர் பூப்பு நீர், மாத விடாய் காலத்தில் வெளிப்படும் இரத்தம், பூந்தாது அதாவது மலரின் மகரந்தப் பொடி

இரஜசுவலை = சூதகம், மாதவிடாய்

இரசசுண்ணம் = வைத்தியத்திற்கும் வாதத் திற்கும் உபயோகிக்க வேண்டி புடமிட்ட சுண்ணாம்புத் தன்மை வாய்ந்த ஒருவகைப் பொடி ஒருவகைப் பூசு மருந்து; பூச்சி மருந்து

இரசசுத்தி = ஈயம்

இரசசுவலம் = எருமை

இரசசூதம் = தலை மண்டையோட்டினின்று செய்யும் ஒரு வகை அண்டச்சுண்ணம்

இரசசூலை = இரசமருந்தின் குற்றத் தினால் ஏற்பட்ட சூலை நோய்; இரசவேகத்தினால் பற்களில் ஏற்பட்ட குத்தலோடு கூடிய புண்

இரசசூலை முறித்தல் = இரசமருந்தின் குற்றத்தினால் ஏற்பட்ட உடம்பின் குத்தலை மருந்தினால் முறித்தல்,

சுரைக்குடுக்கை கரியைப் பழைய மோரில் கரைத்து உட்கொள்ள இரசசூலை முறியும்

இரச செந்தூரம் = இரசசிந்தூரம் (மஞ்சள் நிறமான இரசசிந்தூரம்)

இரசசெம்பு = இரசமேற்றிய செம்பு

இரச செய்கை = அறுவகைச் சுவைகளுக்கு ஏற்ற தொழில், தித்திப்பு, புளிப்பு, உப்பு வாயுவைப் போக்கும் துவர்ப்பு, இனிப்பு, கசப்பு பித்தத்தைப் போக்கும் துவர்ப்பு, கார்ப்பு, கசப்பு கபத்தைப் போக்கும்

இரசசெவ்வக்கிரம் = புடமிட்ட இரசத்தினால், (கிடைத்த சிகப்பு இரசசெவ்வி மருந்துப் பொடி யோதிரம்) (இரசசிந்தூரம்)

இரசசோதனம் = வெண்காரம்

இரசச் சத்து = கொங்கணவர் வாத காவியத்தில் கூறிய 10 விதங்கள், காங்குரசம், சித்தரசம், நவநீதரசம், சித்தமணி (குளிகை), தொடுப்பு ரசம், சிராவண ரசம், சுத்தரசம், நின்மல ரசம், அட்சய ரசம், விந்தி ரசம், (இந்திரரசம்)

இரசணி = அவுரி

இரசட்சய தாக நோய் = நாக்கு உலரல், அறிவுமயக்கம், உடம்பிளைத்தல், இளைப்பு எந்த ஒரு வாசனையிலும் அருவருப்பு முதலிய குணங்களைக் காட்டும் ஒரு வகை நோய்

இரசத பற்பம் = வெள்ளி பற்பம்

இரசத மணல் = வெள்ளி கலப்பான மணல்

இரசதமணி = நுரையீரலிலோடும் இரத்தக்குழாய்

இரசதம் = இரத்தம், வெள்ளி, யானைத்தந்தம், பாதரசம், இரசம்

இரசதாகி = கடுக்காய்

இரசதாது = இரசம்

இரசதாப மானி = உடலிலுள்ள எழு வகைச் சத்துக்கள்; தட்ப வெப்பத்தைக் காட்டுவதற்காக இரசத்தைக் கொண்டு செய்த ஒரு கருவி

இரசதாப்பிரகம் = வெண்மையான; நான்கு வகை அப்பிரகங்களுள் ஒன்று

இரசதாரை = உடம்பிலுள்ள இரத்தத்தோடு அன்னரசம் கலக்கும்படிச் செய்வதற்காக நெஞ்சறையில் அமைக்கப்பட்ட ஒருவகைக் குழல்

இரசதாளி = ஒருவகை இனிப்பு வாழை

இரசதாளிக் கரும்பு = ஒரு உருசியான பெருவகைக் கரும்பு; செங்கரும்பு

இரசதாளிப்பழம், இரசதாளிவாழை = இரசதாளி

இரசதீபன் = பூநாகம்

இரசதுவிகெந்தி = சாதிலிங்கம்

இரச தோஷம் = இரசத்திற்கு இயற்கையாகவே உள்ள எட்டு வகைக் குற்றங்கள், சர்பம், வங்கம், கந்தி, வன்னி, மந்தம், மலம், காஞ்சலம், நாளம், இவற்றை நீக்காமல் செய்த மருந்தினால் நோய்களுண்டாகும்

இரசத்தயல் = தேன்

இரசத்தைக் கட்டல் = இரசத்தை நெருப்புக்கு ஓடாதவாறு இறுகச் செய்தல்

இரசத்தைக் கருவாக்கும் வேந்தன் = கார்முகில் பாடாணம்

இரசத்தொகுப்பு = அறுசுவை

இரசநா = அரத்தைப்பூடு

இரசநாதம், இரசநாதன் = பாதரசம்

இரசநீ = அவுரி, மஞ்சள்

இரசநீகான் = சந்திரன்

இரசநீசலம் = பனி

இரச பதங்கம் = இரசத்தை மற்ற சரக்குகளுடன் சேர்த்து பாத்திரத்திலிட்டு மூடி எரிப்பதனால் ஆவியாக மேற்சென்று மூடியிருக்கும் பாத்திரத்தின் அடியில் படிந்திருக்கும் இரசம்

இரசபத்திரம் = சதுரக்கள்ளி

இரச பந்தனி = இரசத்தைக் கட்டுவதற்காக உபயோகிக்கும் மூலிகைகள்; சர்க்கரை வேம்பு, சாயாவிருட்சம், செம்பல்லிப்புடு, தித்திப்புக் கோவை, கற்றாமரை, கண்பூ, தாம்பூரச்சிகை, உரோமவிருட்சம், கிளி முருக்கு, தேவதாளி, பொன்னூமத்தை முதலியன

இரசபலம் = தென்னைமரம், நெல்லிக்காய்

இரசபற்பம் = இரசத்தைப் புடமிட்டெடுத்த வெள்ளைப் பொடி

இரசபாகம் = இரசத்தைக் கையாளும் முறையைப் பற்றிய பாகம்

இரசபா(ஷ) டாணம் = இரசமும் பாடாணமும் கலந்த மருந்து; சூதபாடாணம் இது 64 பாடாணங்களிலொன்று, கடுகிய காந்தி இரசம் சேர்ந்த விஷத்தன்மை உள்ள மருந்து

இரசபா(ஷ)டாணாதி வேகம் = இரசபாடாணத்தினால் உண்டான அழற்சி; இரசத்தைத் தவறுதலாகப் பயன்படுத்தலால் ஏற்படும் குற்றங்கள்

இரசபீதவச்சிரம் = ஒருவகை மஞ்சள் நிறமுள்ள இரசமருந்து

இரசபுட்பம் = இரசபற்பம், இரசகற்பூரம்

இரச பூபதி = சன்னிகளுக்குக் கொடுக்கும் இரசம் சேர்ந்த ஒருவகைக் குளிகை

இரசபூரம் = இரசமும் பூரமும் சேர்ந்த மருந்து

இரசப் பிடிப்பு = இரசமருந்தைச் சாப்பிடும் போது அவபத்தியம் நேர்ந்து அதனால் கை, கால் முடங்குதல்; முடக்கு வாதம்; இரசமருந்து சாப்பிடுவதால் வாய் வெந்துண்டாகும் வாய் நீரொழுக்கு

இரசப் பிரீதி = அப்பிரகத்தகடு, ஒருவகைப் பாடாணம்

இரசப் புகை = நோய் தீருவதற்காக நோயாளிகளுக்கு உடம் பிற்காட்டும் பாதரசத்தின் ஆவி; இரசம், கெந்தி, தாளகம், துத்தம் முதலிய சரக்குகளைச் சேர்த்துப் புகையிலைச் சாற்றினால் அரைத்துத் திரியாக்கிப் புளியந்தணல் நெருப்பில் இட்டுக் கழுத்து வரை மூடிக் காட்டும் புகை

இரசப் புண் = இரச மருந்தை அதிகமாக உட்கொள்வதால் ஏற்பட்ட வாய்விரணம் முதலிய புண்கள்

இரசமணி = இரசத்தை நெருப்பிற்கு ஓடாதபடிக்கட்டித் திரட்டிய மணி

இரச மருந்து = இரசத்தினின்று தயாரித்த மருந்து; இரசஞ்சேர்ந்த மருந்து; மூலிகைச் சத்து அல்லது சாறுகளைக் கொண்டு தயாரித்த மருந்து

இரசமாதா = அப்பிரக பாடாணம், அப்பிரகம்

இரசமாதி யேழு = உடம்பில் இருக்கும் எழுவகைத் தாதுக்கள்

இரச மாத்திரை = இரச மருந்துகளைக் கொண்டு செய்யு மாத்திரை, மூலிகைச் சாற்றினால் செய்த மாத்திரை

இரச மாரணம் = இரசத்தைக் கொல்லல் (அதன் தன்மையை)

இரசமிசிரம் = இரசக்கலப்பு

இரச முறித்தல் = இரசத்தை வெளிப்படுத்தல்; இரசத்தின் குணத்தை அழித்தல்

இரச மூட்டல் = சுவைப்படுத்தல்; இரசத்தை உட்கொள்ளும்படிச் செய்தல் ; இரசம் சேரும்படிச் செய்தல்; இரச மருந்தினால் சிகிச்சை செய்தல்

இரசமெழுகு = இரசத்தை மற்ற சரக்கு மெழுகுகளுடன் அரைத்துத் தயாரித்த மருந்து; இது மேக விரணம், மேகநோய் முதலியவைகளுக்கு உபயோகப்படும் இரசத்தை நெருப்புக்கு ஓடாத படிகட்டிப்பிறகு மற்ற சரக்குகளுடன் சேர்த்துத் தயாரித்த மெழுகைப் போன்ற

ஒரு மருந்து; அண்ட முடியைக் கொண்டு செய்யப்படுமோர் இரசம் சேர்ந்த மெழுகு

இரசமேற்றன் = இரசமேறும் படிச் செய்தல்

இரசம் = உண்ட உணவு குடலுக்குள் மாறுதல் அடைந்து இரத்த ஓட்டத்தினால் இரத்தத்தில் போய்க் கலக்கும் வெண்மையான அன்னத்தின் சாரம், சாறு, சுவை, சத்து, மிளகு சேர்ந்த நீர், பாதரசம், வெள்ளி, சூதம், காந்தம், வெண்காரம் முதலிய உபரசச் சரக்குகள், உமிழ்நீர், இரசவாழை, மாமரம், சுக்கிலம், நஞ்சுக்கொடி, பூப்பு, உண்ட உணவு செரித்த பின் அதனின்று இறங்கும் வெண்மையான சத்துப்பொருள்

இரசராசன் = சூதம்

இரசலிங்கம் = சாதிலிங்கம்

இரச வகை = கொங்கணர் வாத காவியத்திற் சொல்லியுள்ள எண் வகை ரசம்; சித்த ரசம், நவநீத ரசம், சிராவன ரசம், தொடுப்பு ரசம், சுத்த ரசம், நின்மல ரசம், அட்சய ரசம், விந்தி ரசம்

இரசவாகி = நிணநீர் செல்லும் குழல்

இரச வாகினி = உண்டஉணவின் சத்து (அன்னரசத்தை)ச் சிறு குடல்களினின்று எடுத்துப் போகும் சிறு குழாய்கள்

இரசவாடை = இரசப்புகை, இரச வாசனை

இரசவாடைப் பிடிப்பு = இரசப்புகை அல்லது இரச மருந்துகளின் வாசனையினால் ஏற்படும் ஒருவகை வாத நோய்

இரசவாத கற்பம் = மலசலம்பட்ட இடமெல்லாம் வேதை காணும் உள்ளுக்குச் சாப்பிடும் காயகற்பம்

இரசவாரிதம் = சவ்வீரம்

இரசவாழை = பேயன்வாழை

இரச விருட்சம் = மிக்க ஒளியுள்ள ஒரு மரம்

இரசவீரி = கௌரிபாடாணம்

இரசவீறு = இரசத்தினாலேற்பட்ட வாய்வேக்காளம்

இரசவுப்பு = இரசத்தைக் கொண்டு தயாரித்த ஒரு வகை உப்பு இது பேதி மருந்தாகவும் பித்த வாந்திக்கும் உடம்பைத் தேற்றுவதற்கும் உபயோகப்படும்

இரசவுரு மாற்றம் = செரித்த உணவினின்று வெளிவரும் அன்ன ரசமானது அல்லது அடையப்பெற்ற பல மாறுபாடுகள்

இரசவெண்ணெய் = இரசத்தை மூலிகைச் சரக்குகளால் அரைத்து வெண்ணெயைப் போல் ஆக்குவது

இரசவேகம் = இரசத்திற்குரிய வீரம், இரச மருந்திற்குண்டான கொடுமை

இரசவேக்காடு = இரசத்தின் வீரியத்தால் வாய், வயிறு வெந்து, வாய்நீர் சுருங்கிப் பல்லீறு இரணமாகி நாற்றம் வீசுதல்

இரச வேற்றுமை = அன்னரசமானது உடம்பில் பல்வேறு பாடுகளையடைந்து இரத்தம், தசை, கொழுப்பு, எலும்பு, மச்சை, மூளை, விந்து முதலியவைகளாக நிலை நிற்றல்; இரசவெண்ணெய், இரசசெந்தூரம், இரச குளிகை முதலிய இரசத்தின் வேறுபாடுகள்

இரச வைப்பு = வாத, வைத்திய முறைப்படி மருந்து தயாரிக்கும் முறை

இரசனம் = ஓர் பொறி, பல், ஒலி, சுவை

இரசனா, இரசனாசிகம் = அரத்தை, சிற்றரத்தை, கந்தநாகுலி

இரசனாதம் = இரதம்

இரசனாதிதம் = கசகசா

இரசனி = இரவு, மஞ்சள், அவுரி, பிசின், மரமஞ்சள்

இரசனிசேவிதம் = கண்டங்கத்தரி

இரசனீசலம் = பனி, இராப்பனி

இரசனீமுகம் = சாயுங்காலம்

இரசனை = சுவை, சாறு, நாக்கு

இரசாஞ்சனம் = மரமஞ்சளின் குடிநீரால் செய்யப்படு மோர் வித மை, அஞ்சனக்கல்

இரசாயந்தம் = பால், சாரம்

இரசாயம் = ஒரு மருந்து

இரசாயனத்தரு = தென்னை மரம்

இரசாயனத் திரவயோகம் = இரசாயன முறையால் ஏற்படும் கரைவு

இரசாயத் திரவியம் = இரசாயன மருந்து

இரசாயன முறிவு = பொருட்களிலுள்ள விடத்தன்மையைப் பௌதிக இயல்பால் முறிக்கும் மருந்து

இராசயனம் = ஒருவகை மருந்து

இரசாயன வைரவம் = மூர்ச்சைகளுக்குக் கொடுக்குமோர் மருந்து

இரசாயனன் = இரசவாதி, கருடன்

இரசாயனி = கிளிமுருக்கு, அன்னரசம் செல்லுங்குழல்

இரசாயன்னி = கருடன், பொடுதலை

இரசாயினி = இரசாயனி

இரசாலகம் = தொட்டாற் சுருங்கி

இரசாலம் = கரும்பு, பாலமரம், மாமரம், கோதுமை

இரசால வெலி = ஒருவகை எலி, இது கடிப்பதனால் மழைக் காலத்தில் விடமதிகரித்துப் பிரமை முதலிய கெட்ட குணங்களையுண்டாக்கும்

இரசானந்தன் = சூதம்

இரசிகம் = குதிரை, யானை, வெள்ளி

இரசிகாவாடை = கிச்சிலி

இரசிதசத்துரு = கற்பரி பாடாணம்

இரசித சிங்ங் = சிங்கிபாடாணம், தாரம், வீரம், மனோசிலை, சிங்கி, வெள்ளை முதலி யவைகளைப் பொடித்து வெங்கலச் செம்பில் மூடித் தீயிலிட்டு எரித்திட உற்பத்தியாகும் பாடாணம்

இரசித சிலை = வெள்ளிக்கல் உபரசச் சரக்குகளில் ஒன்று

இரசித சுண்ணம் = வெள்ளிச் சுண்ணம்

இரசித நிமிளை = வெள்ளி நிமிளை

இரசிதபற்பம் = வெள்ளிபற்பம்

இரசித பாடாணம் = வெள்ளிபாடாணம் ஒருவகை வவைப்புப் பாடாணம்

இரசித மரணம் = வெள்ளியைக் கொன்று தயாரிக்கும் வெள்ளி பற்பம்

இரசித மார்க்கம் = வெள்ளி செய்யும் வாதமுறை

இரசிதம் = வெள்ளி, ஒருவகை வைப்புப்பாடாணம், துத்த பாடாணம், நாகமணல், வெள்ளி மணல்

இரசித யேமம் = வெள்ளியைப் பொன்னாக்கும் மருந்து

இரசிதவர்ணம் = சிங்கிபாடாணம், வெள்ளி நிறம்

இரசியம் = தாமரைப்பூ

இரசுவ நோய் = பித்தத்தினால் கண்களின் பார்வையை மறைத்து கண்ணொளியைக் குறைக்கும் கண்ணோய்

இரசுனம் = உள்ளி

இரசேசுவரம் = பாதரசம்

இரசேந்திரம் = இரசம், பரிசன பேதி, அப்பிரகம்

இரசேந்திரன் = இரசம், பரிசன பேதி

இரசேந்திரியம் = நாக்கு

இரசோபலம் = முத்து

இரசோனகம், இரசோனம், இரசோனோபி = உள்ளி

இரச்சிதபலம் = வெண்கடுகு

இரச்சை = கயிறு

இரச்சை மரம் = ஒருவகை மரம்

இரஸ்து = வாழைப்பழம், இரசதாளி, ஒருவகை இனிப்பு வாழை

இரஞ்சக பித்தம் = உணவைச் செரிக்கச் செய்து உடம்பை வளர்க்க உதவுவது

இரஞ்சகம் = இரைக்குடலுக்குள் வந்து சேரும் பித்தம், ஈரல், மண்ணீரல், முதலிய வற்றில் தங்கியிருந்து பிறகு அன்னரசத்தில் கலந்து இரத்தவுற்பத்திக்குக் காரணமாக இருக்கும் பித்தம்

இரஞ்சம் = அரிஷ்டமென்னும் ஒரு வகைப் புளிக்க வைத்த குடிநீர், இதில் மூலிகைச் சத்துக்கள் தங்கி நிற்கும்

இரஞ்சனம் = செஞ்சந்தனம்

இரஞ்சனி = அவுரி

இரஞ்சி = மகிழம்

இரடம் = வெங்காயம்

இரடி = கருந்தினை, சத்திச் சாரணை

இரட்சாணி = சாதிலிங்கம், சாதிக்காய்

இரட்சாளி = கரும்பு

இரட்சை = சுடுதல்

இரட்டகத் துத்தி = கத்தூரி, வெண்டை, காட்டு கத்தூரி

இரட்டிமதுரம் = அதிமதுரம்

இரட்டைத்தலைவலி = இரண்டு பக்கமும் வலியையுண்டாக்கும் தலைவலி

இரட்டை நாக்கோளி = இரட்டை நாக்குடைய உடும்பு

இரணகுட்டவரி, இரணகுட்டஹரி = முதியார் கூந்தல், பெருநோயைப் போக்கும் மருந்து

இரணக்கரு = ஐங்காயக்கரு

இரணக்கள்ளி = ஒருவகைக் கள்ளி

இரணக்கிரந்தி = மேகத்தினால் எழுந்த கிரந்திப்புண்

இரணக்குட்டம் = புண்களோடு கூடிய ஒரு வகைப் பெருநோய்

இரணக் கொடி = குய்யத்திற்கும் குதத்திற்கும் நடுவே இரணங்களையுடைய பாகம்

இரணக்கோலகம் = தும்பை

இரணங்கொல்லி = ஆடுதின்னாப் பாளை, தும்பை

இரணசன்னி = புண்புரைகளினால் உண்டாகும் ஒரு வகைச்சன்னி

இரணசிகப்பி = சவுரிக்காய்

இரண சுக்கிரன் = அழற்சியினால் கருவிழியைப் பற்றிய கண்ணோய்; கருமணியின் மீது கொப்புளங்கள் ஏற்பட்டு இரணத்தை யுண்டாக்கும் கண்ணோய்; அடி, காயம் இவற்றாலும் மேகநோய் சம்பந்தத்தினாலும் மற்றும் பல காரணங்களாலும் கருவிழி யில் நிறம் மாறியுண்டாகும் இரணம்

இரண தூபம் = இரணத்தில் சீழ் கொள்ளாதவாறும் புழுக்கள் சேராதவாறும் கொடுக்கும் தூபம்

இரண நாயகம் = இரணங்கள், காயம், கட்டி, கொப்புளம் ஆகிய புண்களை ஆற்றக் கூடிய முதன்மையான மருந்துப் பூடு

இரணமத்தம் = யானை

இரணமலகு மூலம் = இலாமிச்சம்வேர்

இரண மேகம் = மேகத்தாலுண்டாகும் புண், கிரந்தி, கொருக்கு முதலிய நோய்கள்

இரணம் = உப்பளம், புண், பொன், உணவு, மாணிக்கம், பெருங்காயம், இரத்தம் முதலிய தாதுக்களில் தோஷம் தங்கி அதனால் உடம்பில் உண்டாகும் புண்

இரணரோகிசம் = காவட்டம்புல்

இரணி = பன்றி மொத்தை, கொன்றை, குறுநாவல்

இரணிப்பு = பொன்

இரணிமா = பன்றி மொத்தை

இரணியபுஷ்பி = நிலப்பனை

இரணியம் = பொன், பணம், அரத்தை

இரணிய வயிரவன் = மிளகு, மரப்பை, நீர்வள்ளி

இரணியவேளை = அந்தி நேரம்

இரணு = இலாமிச்சு

இரண்டாங் குட்டம் = உடம்பு கறுத்துச் சொறியுடன் எரிவுண்டாகி பன்னீர் ஒழுகி சலங்கட்டும் ஒருவகை குட்டம்

இரண்டாஞ் சாதிப்பிண்டம் = எட்டு மாதத்தியக்கரு

இரண்டாமாறல், இரண்டாமுறைக் காய்ச்சல் = ஒருநாள் விட்டு வருமோர் வகைக்காய்ச்சல்

இரண்டிகை, இரண்டிலி = இன்டைக் கொடி

இரண்டு = ஈயத்தண்டு, மலசலம்

இரண்டுடை = இரண்டு வகை வேலமரம், கருவேல், வெள்வேல்

இரண்டுநிசி = மரமஞ்சள், மஞ்சள்

இரண்டுப்பு = இருவகையுப்பு, இயற்கை, செயற்கை

இரண்டுயுத்தம் = இருமல்

இரண்டு ரசம் = சேர்க்கை ரசம், கல்லுப்பு, களிம்பு கலந்த உலோகம், கடல்நுரை, இயற்கைச் சரக்கு, மலையினின்று பெற்ற உலோகங்கள், உபதாதுக்கள், இழிந்த சுவையுள்ளது

இரண்டு வாசவேர் = வெட்டிவேர், விலாமிச்சம்வேர்

இரண்யகருப்பநீர் = குடநீர்

இரண்யம் = பொன்

இரதகம் = இத்திமரம்

இரதகிருஷ்டா = கொடி முந்திரிகை

இரதகீலம் = நாய்

இரதகுளிகை = இரசகுளிகை

இரதசந்தியாகம் = செந்தாமரை

இரதசாங்கிகம் = உரோம விருட்சம்

இரதத்திலொன்று = கருணைக்கிழங்கு

இரதநாரீசம் = நாய்

இரதபதம் = புறா

இரதபந்தம், இரதபந்தனம் = இரசக்கட்டு

இரத மகாலிங்கம் = சாதிலிங்கம்

இரத மண்டலி = இரத்த வேர்வை

இரத மாத்திரை = இரச மாத்திரை

இரதம் = இரசம்

இரத லிங்கம் = (பாதரசம்), பல், இரசலிங்கம், வண்டு, அன்னரசம், மாமரம், வேற்று மருந்தால் முறித்த இரசம், உமிழ்நீர்

இரதவாழை = இரசவாழை, இரசதாளி

இரதவிரணம் = நாய்

இரதள்ளி = வாழை

இரதனம் = பல்

இரதன் = கண்

இரதி = இலந்தை மரம், காந்தள், இத்திமரம், பித்தளை, பெண்யானை, கார்த்திகைப்பூ

இரதிகாந்தள் = தாமரை

இரதிகேதனம் = உருண்டைக் காப்பிக் கொட்டைச் செடி

இரதிக்குகரம் = பெண்ணுறுப்பு

இரதிசம் = கொருக்கு நோய்

இரதிசுத்தகம் = வேங்கைமரம்

இரதி புட்பம் = கார்த்திகைப்பூ

இரதி மந்திரம் = பெண்ணுறுப்பு

இரதிமா = இலந்தை

இரதி மாது = வட்டக் கிலுகிலுப்பை

இரத்த அழுகல் = இரத்தம் கெட்டு உடம்பில் சில பாகங்களை அழுகும் படிச்செய்யும் நோய்

இரத்த ஆமைக்கட்டி = மண்ணீரலிற் காணும் இரத்தத் திரட்சி

இரத்த ஏரண்டம் = செவ்வாமணக்கு

இரத்தகத சுரம் = இரத்தத்தை முறித்து உடம்பைப் பலவீனப் படுத்தும் ஒருவகைக் காய்ச்சல்; இரத்த மூத்திரத்தை உண்டாக்கும் ஒரு விட சுரம்

இரத்தகத்திரி = ஒருவகைப்பாம்பு

இரத்த கந்தகம் = நால்வகைக் கந்தகங்களுள் ஒன்றாகிய சிவப்பு கந்தகம்

இரத்த கபம் = இரத்தத்தோடு கலந்த கோழை; இது சயம் முதலிய நோய்களுக் குண்டான குணம்

இரத்தகமலம் = செந்தாமரை

இரத்தகம் = குசும்பாப்பூ

இரத்தகயிரவம் = செவ்வாம்பல்

இரத்த கர்ணசூலை = வாதபித்த சிலேட்டு மத்தினாலும் கல் முதலியவைகளால் அடியுண்ட காலத்திலும் காதினுள் சீழ், இரத்தம் முதலியன சேர்ந்து குத்தலையும் இரத்த வொழுக்கையு முண்டாக்கும் ஒருவகை காது நோய்

இரத்த காசம் = செங்கீரை கண்களைச் சிகப்பு அல்லது கருப்பு நிறமாகச் செய்து பார்வை யிலும் அவ்வாறே தோற்று விக்கும் கண்ணோய்

இரத்த காஞ்சனம் = செம்மந்தாரை

இரத்த காஞ்சினை = ஆற்றலரி

இரத்தகாம்பிலூசரமாக்கி = உகா

இரத்தகாலி = சிவப்பு நெல்

இரத்த கிராணி = அதிசார நோயைப் போல் உண்ட உணவு செரித்தும் செரியாத காலத்தும் இரத்தமாக ஆகும் கழிச்சல்

இரத்த குடல் விருத்தி = இரத்தம் குடலில் நிறைந்து அதனைப் பருக்கச் செய்தும் சிறுசிறு கொப்புளங்களை யுண்டாக்கியும் குடலில் வலியையுண்டாக்கும் குடல் நோய்

இரத்த குதம் = மலவாயிலிருந் துண்டாகும் இரத்த ஒழுக்கு

இரத்த குந்தம் = கண்விழியின் சதை சிவந்து பிதுங்கி ஈட்டியாற் குத்து வதை போல் குத்தலை யுண்டாக்குமோர் வகைக் கண்ணோய்

இரத்த குமிளம் = வெள்விழியில் சிகப்புக் குண்டுமணியைப் போல் சிவந்த கொப்புளத்தை யுண்டாக்கும் கண்ணோய்

இரத்த குமுதம் = கருவிழியில் இரத்தம் போல் சிவப்பையும் அதில் தீப்புண்போல் எரிச்சலையும் உண்டாக்கிப் பிதுங்கிக் காணும் ஒரு கண்ணோய் 'செங் குமுதம்' என்று இதற்குப் பெயர் செவ்வாம்பல், செந்தாமரை

இரத்த குரா = வேங்கை மரம்

இரத்த குன்ம சூலை = மலட்டுப் பெண்களுக்குச் சூதகம் தடைப்பட்டுக் கருப்பை பெருத்து அடிவயிற்றில் கல்லைப் போல் திரண்டு வலியையும் குத்தலை முண்டாக்கும் வயிற்றுவலி

இரத்த குன்மம் = பெண்களுக்குத் தலைப் பிரசவத்தின் போதும், கருகரைந்த போதும், மாதாந்திரப் போக்கின் போதும், வாத போக்கு பத்தியக் கேட்டினாலும், வாதம் தடித்து அதனால் சூதகம் தடைப்பட்டு இரத்தங்கட்டிக் கொள்ளும் மாதவிடாய் நின்று கர்ப்பிணிகளுக்குள்ள குறிகளைக் காண்பித்து வயிறு மேன் மேலும் பருக்காமல் உள்ள சூதக நோய்

இரத்த குன்ம விஷசன்னி = சூதகத்தடையினால் இரத்தம் விஷமடைந்து முறிந்து அதனால் ஏற்பட்ட ஒருவகைச் சன்னி தோடம்

இரத்த கைரவம் = செவ்வாம்பல், செந்தாமரை

இரத்த கொய்யா = சிவந்த கொய்யாப்பழம்

இரத்த கோகனகம் = செந்தாமரை

இரத்த கோமாரி = சிவப்புச் செந்தொட்டி, பசுக்களுக்குண்டாகும் ஒருவகைக் கோமாரி அல்லது பெருவாரி நோய்

இரத்த கோவம் = செவ்வாம்பல்

இரத்தக் கசடு = இரத்தக்கேடு

இரத்தக் கடுப்பு = ஆசனங்கடுத்துக் காணும் வயிற்றுளைவு, இரத்தக் கொதிப்பு, இரத்த பேதியினால் ஆசனத்திற் காணும் கடுப்பு

இரத்தக் கட்டி = வேனிற்காலத்தில் இரத்தக் கொதிப்பினால் உடம்பில் வலியுடன் எழுப்புங்கட்டி; இரத்தம் தங்கி நிற்கும்

கட்டி; இரத்தம் உறைந்து திரண்ட கட்டி

இரத்தக் கட்டு = இரத்தக் குழாய்களில் ஏற்படும் இரத்தாதிக்கம்; இரத்தம் உறைதல்

இரத்தக் கணமூலம் = கணநோயினால் குழந்தைகட்கு ஆசனத்தில் இரத்த ஒழுக்கை உண்டாக்கும் ஒருவகை மூலநோய்

இரத்தக் கணம் = குழந்தைகட்கு நாக்கு பூத்து வயிறு கடுத்து நாடி அயர்ந்து உடல் வாடி இருமலுடன் இரத்தங்

கழியுமோர் விதக் கணநோய்

இரத்தக் கண்ணன் = கண்ணோயுள்ளவன் அதாவது புளிச்சக் கண்ணன்

இரத்தக் கதிப்பு = உடம்பில் ஏதாவதொரு பகுதியில் ஏற்படும் இரத்த மிகுதி

இரத்தக்கலச வெரிச்சல் = மாடுகளுக்குண்டாகும் மார்பெரிச்சல்

இரத்தக் கலிதம் = ஆண்குறியின் வழியாய் இரத்தம் வெளிப்படல்; இரத்தம் கலந்த விந்து வெளிப்படல்

இரத்தக்கல் = ஈரல்கல்

இரத்தக் கழலை = இரத்தச் சொரிவினால் ஏற்பட்ட கழலைக்கட்டி; கண்ணிமைக்கு மேல் சிகப்பாக எழும்பும் ஒரு விதக் கழலை; மூவகைக் கழலைகளிலொன்று: இரத்த நரம்புகளால் ஆக்கப்பட்ட ஒருவகைக் கழலை; இரத்தக் குழாய்கள் அமைந்த கழலை

இரத்தக் கழிச்சல் = அதிசாரத்தாற்காணும் இரத்தபேதி; மலம் கலந்த இரத்தப்போக்கு : இரத்தமாகவோ மலம் சீதம் முதலியவற்றோடு சேர்ந்தோ உண்டாகும் பேதி

இரத்தக்கள்ளி = சிவப்பு சதுரக்கள்ளி

இரத்தக்கற்றாழை = செங்கற்றாழை

இரத்தக்கனப்பு = இரத்த மீறுகை

இரத்தக்கனி = கோவைப்பழம்

இரத்தக் கிரகணி = கிரகணி எனும் உறுப்பு பலவீனப்படுவதால் எளிதில் தீராத இரத்தக் கழிச்சல், அடிவயிற்று வலி, நெஞ்செரிவு, ஏப்பம், உடல் இளைப்பு, தாகம், அபானக்கடுப்பு முதலிய குணங்களைக் காட்டும்

இரத்தக் கிரந்தி = இரத்தத்தாது கெடுதியடைந்து இரத்தக் கொதிப்புண்டாகி கிருமிகள் உண்டாகி நரம்பு முடிச்சினின்று இரத்தத்தை வடியச் செய்யும் கிரந்தி நோய்

இரத்தக் கிருமி = இரத்த தாதுக்கள் கெடுதியடைவதனால் இரத்தமோடும் நரம்புகளில் பிறந்து கூட்டமாக சேர்ந்து தாதுக்களில் பரவி மயிர்க்கால்களிலுள்ள மயிர்களை உதிரச்செய்து உடம்பின் நிறத்தை மாற்றியும் வேறு சில துன்பங்களைச் செய்யும் கிருமிகள்

இரத்தக்கிலிட்டம் = காரணமேதுமில்லாமல் கண்களுக்கு இரத்த நிறத்தையும் மலரின் வாட்டத்தையும் உண்டாக்கும் கண்நோய், இரத்தத் தொடர்பான நோய்

இரத்தக்குடோரி = கருடன் கிழங்கு

இரத்தக் குட்டம் = புண்களினின்று இரத்தம் வழியும் ஒருவகைக் குட்டம் நோய்

இரத்தகு மிளம் = வெள்விழியில் (சிகப்பு குண்டுமணி போன்ற) சிவந்த கொப்புளத்தை யுண்டாக்கும் கண்ணோய்

இரத்தக் குமுதம் = செந்தாமரை

இரத்தக் குருகடம் = இரத்தவணு (இரத்தத் திற்குச் செந்நிறத்தைக் கொடுக்கும் பொருள்)

இரத்தக் குலிகம் = இரத்தத் துளி

இரத்தக் குலை = இரத்தம் வெளிப்படும் ஒருவகைச் குலை நோய்

இரத்தக் குவை = கடைக்கன்ணில் இரத்த நிறமான நுண்ணிய சதை வளர்த்தியையுண்டாக்கும் கண்ணோய்

இரத்தக் குறுகடம் = இரத்தத்தில் காணப்பட்ட சிறிய சாலங்கள் சிவப்புக் குறுகடம்

இரத்தக் கோமாரி = மாட்டுக்குண்டாகும் இரத்தக் கழிச்சல் ஒரு வகைப்புல்

இரத்தக் கோவை = ஈரல், தாபனரோகம்

இரத்தங்கிகம் = இந்திரகோபப்பூச்சி

இரத்தங்குத்தி வாங்கல் = இரத்த நாளத்தைத் திறந்து இரத்தம் வெளிவாங்கல்; இச் சிகிச்சை எல்லோருக்கும் செய்யப்படாது

இரத்தங்கொப்புளித்தல் = இரத்தம் விட்டு விட்டுச் சொரிதல்

இரத்த சஞ்சம் = மலைமா, செங்கிளுவை, செவ்வரக்கு

இரத்த சதுரக் கள்ளி = ஒருவகைச்சிகப்புச் சதுரக்கள்ளி

இரத்தசத்தி = இரத்தங்கக்கல்

இரத்தசந்தனம் = சிகப்புச் சந்தனம்

இரத்தசந்தியகம் = செங்கழுநீர், செந்தாமரை

இரத்தசந்தியம் = குளிரி

இரத்தசந்தியாகம் = செந்தாமரை

இரத்தசபம் = நுரையீலிலிருந்து இரத்தத்தைக் கக்கும் சயநோய்

இரத்தசரோருகம் = செந்தாமரை

இரத்தசாகம், இரத்த சாதகம் = செங்கீரை

இரத்த சாதனபலம் = செம்பருத்தி

இரத்த சாந்தினி = இரத்த மண்டலிப்பூடு

இரத்த சாரச்சம் = செங்கருங்காலி

இரத்த சாரம் = செங்கருங்காலி, இரத்தத்தின் சத்து

இரத்த சாலம் = இரத்தக் கண்ணறை

இரத்த சாலி = சிகப்புச் சம்பா

இரத்த சிகம் = பாறை வெடிப்பில் வளர்ந்திருக்கும் சிகப்புச் சித்திர மூலம் (இது அரிதாய் கிடைக்கும்)

இரத்த சிகிச்சை = இரத்தத்தை வெளிப்படுத்தியோ உட்புகுத்தியோ நோய்களைக் குணப்படுத்தும் சிகிச்சை

இரத்தசிகுவம் = சிங்கம்

இரத்த சிங்கி = ஒருவகை வைப்புப் பாடாணம் துருசு, கெந்தி, தாரம், லிங்கம், காரம் முதலியவைகளைச் சமமாக எடுத்துப் பொடித்துச் செம்பினில் தாக்கி எரித்திட உருகி இறுகி இரத்த சிங்கியாகும் காயசித்தி, சித்திக்கு உபயோகப்படும் ஒருவகை இரணநோய்

இரத்த சித்திரகம் = பாறை வெடிப்பில் வளர்ந்திருக்கும் சிகப்புச் சித்திரமூலம்

இரத்த சிரஸ்தாபம் = ஒருவகை வாதத் தலைநோய்

இரத்த சிராவகம் = கண்களினின்று இரத்தங்கலந்த சூடான தண்ணீரை ஒழுகச் செய்யும் நோய்

இரத்த சிராவம் = மாதவிடாய் ஏற்படல் (பெரும்பாடு)

இரத்த சிலேட்டுமம் = இரத்தவாந்தியோடு கூடிய கோழை, பலமின்மை, சுரம், எரிச்சல், மேல்மூச்சு, உள்ளங்கை, கால் எரிவு, மார்பு குத்தல், வயிறுப்பிசம், மூட்டுகளில் வீக்கம்,

குடைச்சல் முதலிய குணங்களை யுண்டாக்கும் ஒருவகைச் சிலேட்டும் நோய்

இரத்த சுக்கிலம் = இரத்தமாகவும் அல்லது இரத்தங்கலந்ததாயும் உள்ள சுக்கிலம்

இரத்த சுக்கில வொழுக்கு = இரத்தம் விந்தில் கலந்து வெளிப்படல்

இரத்த சுத்தி = இரத்தத்தைச் சுத்தப்படுத்தும் மருந்து

இரத்த சுயரசம் = இரத்தத்தின் சத்துள்ள திரவபாகம்

இரத்த சுரம் = குழந்தைகட்கு விட்டு விட்டுச் சுரங்காய்வதனால் இரத்தக்கொதிப்பு ஏற்பட்டு மூர்ச்சையை உண்டாக்கும் காய்ச்சல்

இரத்த சூலை = ஏதாவதொரு பாகத்தில் அல்லது உறுப்பில் இரத்தம் அதிகமாகச் சேர்வதால் ஏற்படும் குத்தல் நோய்

இரத்தம் சூலைவாயு = இதுவே சூதகவாயு, பெண்களுக்கு அடிவயிற்றில் இரத்தந் திரண்டு மாதவிடாய் காலத்தில் உடல், முதுகு முதலிய விடங்களில் உளைச்சலும், வயிற்றில் தாங்கமுடியாத வலியும் கண்டு, உணவில் வெறுப்பு, வாந்தி, நீர்ச்சுருக்கு முதலிய குணங்களையும் உண்டாகி துன்புறுத்தும்; கருவையும் அழிக்கும்

இரத்த சூறை = சாம்பல் நிறமான ஒருவகை மீன்

இரத்த செந்துகம் = நாங்கூழ், பெருங்குடலின் துவக்கத்தில் தொங்கும் நாக்குப் புழுப் போன்ற சவ்வு

இரத்த செம்மை = மாணிக்கம்

இரத்த சொறி = இரத்தம் வரும் வரை உண்டாக்கும் சொறி; இரத்தக் கேட்டினால் ஏற்படும் சொறி

இரத்த சோகை = ஓரிடத்தில் இரத்தங்கட்டி காணும் வீக்கம் ; இரத்தக் குறைவினாலேற்படும் சோகை நோய்

இரத்த சோஷணி = ஒதியமரம்

இரத்தச்சவாகை = பெருவேம்பு

இரத்தச்சாலம் = இரத்த நுண்ணறை

இரத்தச் சிலந்தி = ஒருவகை சிலந்திப்பூச்சி இது உடம்பிற்பட்ட விடங்களில் கொப்புளங் களையெழுப்பி இரத்தத்தை சீழை ஓயாமல் வடியச் செய்யும்; இரத்தம் வடியும் ஒருவகைக் கிரந்திப்புண்

இரத்தச் சிவதை = சிவப்புச் சிவதை

இரத்தச் சிவப்பு = இரத்தத்திலிருக்கும் சிவப்பு நிறப்பொருள்

இரத்தச் சுருட்டை = ஒருவகைச் சுருட்டைப்பாம்பு

இரத்தச்சுழற்சி, இரத்தச்சுற்றோட்டம் = இதயத்தினின்று இரத்தம் வெளிவந்து மீண்டும் இதயத்தை அடைதல்

இரத்தச் சூரிகை = இரத்த வொழுக்கேற்படும் ஒருவகைக் கொடியசுரம்

இரத்தச்சேமி = நெருஞ்சில்

இரத்தஞ்சபித்தன் = குங்குமப்பூ

இரத்தஞ் சாதல் = இரத்தம் வெளுப்பாகக்காணல்

இரத்தட்சயம் = இரத்தங் கக்குமோர் வகைச் சயநோய்

இரத்தட்சிண சூதகபாண்டு = இரத்தக் கேட்டினால் பெண்கள் ருதுவாகமாலும் தூரமாகா மலும் சோகை கண்டு பலவீனப்படுத்து மோர் வகைப் பாண்டு நோய்

இரத்தட்சிணத் திராவம் = தண்ணீரின் மிகுதியால் இரத்தத்தின் சத்து குறைவாகி ஏற்படும் நோய்

இரத்தட்டீவி = உடம்பில் எந்தவுறுப் பிலாவது இரத்தம் சேர்வதாலேற்படும் ஒரு வகைச் சன்னி

இரத்ததசர மண்டலம் = இரத்தக் குழாய்க் கோட்பாடு

இரத்ததசரம் = இரத்த ஓட்ட சம்பந்தமான கருவிகள்

இரத்ததண்டா = நாகமலை

இரத்ததாது = ஏழு தாதுவிலொன்று, இரத்த நரம்பு, செம்பு, செவ்வரிதாரம்

இரத்ததாது கதசுரம் = உடல் சிவந்து தடிப்பு உண்டாகி நெஞ்சில் கபங்கட்டி உமிழ்நீரில் இரத்தம் விழுமோர் வகைக் காய்ச்சல்

இரத்த திமிரம் = கண்களைச் சிவப்பாக்கிப் பார்வையையும் அவ்வாறே தோற்றுவிக்கு மோர்விதக் கண்ணோய்

இரத்ததிரி தோஷ விரணம் = இரத்தவாதம், இரத்த பித்தம், இரத்தகபம் முதலிய மூன்றுவித இரணங்களின் குணங்களையுடைய ஒருவகை விரணநோய்

இரத்ததுட்ட விரணம் = செந்நிறத்தையும் பசுவின் மூத்திரத்தைப் போன்ற நீரை ஒழுகப் பெற்று எரிச்சலையும் வலியையுமுண்டாக்கும் ஒருவித ஆறாத விரணம்

இரத்ததுண்டம் = கிளி

இரத்தத்தடிப்பு = இரத்தநீர்க் குறைவு

இரத்தத் திரட்சி = இரத்தமுறைதல், யோனியில் இரத்தம் திரண்டு தங்கல்

இரத்தத்துரு = வேங்கைமரம்

இரத்த நதி = செங்கழுநீர்

இரத்தநாகி = மண்திருஷ்டி (சாயவேர்)

இரத்தநார்ச்சத்து, இரத்த நார்வஸ்து = இரத்தம் புளிபதனால் உண்டாகும் நாரைப் போன்றவோர் வகை வெண் கருச்சத்து

இரத்தநாளம் = கெட்ட இரத்தம் ஒடும் குழாய், செங்கழுநீர்

இரத்த நிறப்பழம் = முசு முசுக்கை

இரத்தநீர் = இரத்தம் உறையுங்காலத்து மேற்பாகத்தில் நிற்கும் தண்ணீரைப் போன்ற பொருள்; ஊனீர் இரத்தங்கலந்த நீர் அதாவது இரத்த மூத்திரம்

இரத்த நோய் = இரத்தத்தினால் உடம்பில் ஏற்படும் நோய்கள்; இரத்தம் பரவியவோர் வகைக் கண்ணோய்

இரத்த படலம் = ஒருவகைக் கண்ணோய் கண்மணியிற்கரித்தல், காந்தல், கன்றுதல், பீளைசாரல், எரிதல், இரத்தங்கட்டல், புருவம், நெற்றி, பிடரி முதலிய விடங்களில் குத்தல் முதலிய குணங்களைக் காட்டும்

இரத்த பதுமம் = கண்ணிமையில் சிவந்த நிறத்தையும் இரத்த நீரையுமுண்டாக்கு மோர்வகைக் கண்ணோய்

இரத்த பந்தனம் = இரத்தம் கட்டியாதல்; இரத்தம் உறைதல்

இரத்த பந்தனி = இரத்தத்தை உறையும்படிச் செய்யும் பொருள்

இரத்தபலம் = ஆலம்பழம்

இரத்தபலை = கோவைப்பழம்

இரத்தபழம் = ஆலம் பழம், சிவப்புப்பழம்

இரத்தபற்பம் = செந்தூரம்

இரத்த பனையன் = எள்ளுச் செடியிலும்பத்தியாகு மோர் கொடிய பாம்பு

இரத்த பாகம் = தேக்கு, இரத்தம் கட்டியைப் போல் பருத்து வீக்கத்தை உண்டாக்கல்

இரத்த பாடாணம் = வைப்புப் பாடாணம் 32 வகையிலொன்று

இரத்த பாண்டு = ஒருவகைப் பாண்டு நோய்;
அடிவயிற்றின் உட்புறம் மூடிய சவ்விற் குள் இரத்தம் நிறைவதால் பாண்டுவைப் போல் வயிறு வீங்கிக் காணும்

இரத்த பாண்டுச் சிலந்தி = உடம்பில்பட்ட இடங்களில் வெளுத்துத் தடித்து இரத்த பாண்டு நோயையுண்டாக்கி இரத்தத்தை வடியச் செய்யும் ஒரு வகைச் சிலந்தி பூச்சி

இரத்தபாதம் = கிளி, முருக்கமரம்

இரத்தபாதி = முடக்கற்றான்

இரத்தபாதிரி = சிறுபுள்ளடி

இரத்தபாரதம் = சாதிலிங்கம்

இரத்தபாலா = தித்திப்புக்கோவை

இரத்தபாலி = செந்தாடு பாலை

இரத்தபாளம் = உறைந்த இரத்தம், மூசாம்பரம்

இரத்தபானம் = இரத்தம் சூடாதல்

இரத்தபி = அப்பிரகம், மூக்குரட்டை

இரத்தபிண்டகம் = ஒருவகை பூடு

இரத்தபிண்டம் = சீன மல்லிகை, காட்டு மல்லிகை

இரத்த பித்த குன்மம் = பெண்களுக்கு மாத விடாயின் போது வலி, உணவில் வெறுப்பு எரிச்சல், கழிச்சல், தாகம், சுரம், கருப்பையில் குத்தல் முதலிய குணங்களைக் காட்டும் ஒரு நோய் இதைச் சூதகவாயு, மாதாந்திர குன்மம், தூரச்சூலை என்பர்

இரத்த பித்தக்கினி = புளிமுந்திரிகை, புளிப்பு திராட்சை, ஆடாதோடை

இரத்த பித்தசமனி = சடாமாஞ்சில்

இரத்த பித்த சூலை = இரத்த வாந்தி கண்டு வயிற்றில் குத்தல், வலியையுண்டாக்கும் ஒருவகைச் சூலை நோய்

இரத்த பித்த துட்ட விரணம் = மஞ்சள் அல்லது சிகப்பு நிறமாயும் கோமியம் போலும் இரத்தம் போலும் நீரொழுகுவதுடன் எரிச்சலை முண்டாக்கும் ஒரு இரணநோய்; ஆறாத இரத்தங் கசியும் இரணம்

இரத்த பித்த பீசகம் = மாதுளை

இரத்த பித்தபூண்டு = ஆடாதோடை

இரத்த பித்தம் = இரத்த ஆதிக்கத்தினாலும், இரத்தக்கெடுதியினாலும் உடம்பினின்று துவாரங்களின் வழியாய் மிகுதியாக வெளிப்படும் இரத்த வொழுக்கு

இரத்தபித்த வக்கினி = ஆடாதோடை (இரத்த பித்தத்தைப் போக்கும்)

இரத்த பித்தனாசனி = வாழை

இரத்த பித்தானி = பீனைக்காலி

இரத்த பித்து = குருவிந்தக்கல் ஒருவகை, ஒருவகை மாணிக்கம்

இரத்த பீனசம் = மூக்கில் நமைச்சல், திமிர், சிவந்தசளி, இரத்த வொழுக்கு கண்ணிலும், காதிலும் தினவு, கண் சிவப்பு, அருகி முதலியவைகளை யுண்டாக்கும்; இரத்தக் கேட்டாலுண்டாகும் பீனச நோய்

இரத்த புட்பம் = பலாசு, நிலவுகாய், முள்ளிலவு, அரத்தை

இரத்தபுட்பா = சடைச்சி

இரத்த புட்பி = நரிமுருக்கு, செம்பருத்தி, சிவப்பு பூப்பூர்க்கும் செடி

இரத்த புட்பிகம், இரத்த புட்பிகா, இரத்த புட்பிகை = மூக்குரட்டை

இரத்த புட்பீசம் = கப்புச் சடைச்சி

இரத்த புண்டம் = சீனமல்லிகை

இரத்த பூசம் = தர்ப்பூசினி

இரத்த பூசிதம் = உருளைக் கிழங்கு

இரத்த பூடம் = முள்ளிலவு

இரத்த பேதி = நோயினாலும் அல்லது குடலுக்குள் இருக்கும் இரத்தக் குழாய்களுக்கு ஏற்படும் கெடுதியினாலும் இரத்தம் குடலில் நிறைந்து மலத்தோடு சேர்ந்து பேதியாக வெளிப்படும்

இரத்தபை = அட்டை

இரத்த போளாம் = சிவப்புக் குங்கிலியம், ஒருவகை வாசனைப் பண்டம், கரியபோளம்

இரத்தப்பசமம் = ஒருவகை கண்ணோய்

இரத்தப் படாத்தி = வெள்விழியில் இரத்தங் குழம்பும்படிச் செந்நிறச் சதையை வளர்க்கும் நோய் கடைக்கண்ணில் வெப்பத்துடன் இரத்தத்தை வடியப் பண்ணும் நோய்

இரத்தப் படுவன் = ஒருவகைக் கண்ணோய், ஒருவகைச் சிலந்தி

இரத்தப்பலம் = ஆலம்பழம்

இரத்தப் பாடு = பெரும்பாடு, பெரும் பாட்டைப்போல் காணும் இரத்த வொழுக்கு

இரத்தப்பாண்டு சிலந்தி விஷம் = இச்சிலந்தியின் கடியால் ஏற்பட்ட விஷம்

இரத்தப் பாய்ச்சல் = இரத்தப்போக்கு; எலிகடி விஷத்தினால் பற்களில் உண்டாகும் இரத்தப் போக்கு; உடம்பிற்குள் ஓரிடத்திற்கு அல்லது பல விடங்களுக்கு இரத்தம் பாய்வது

இரத்தப்பாளம் = இரத்தபாளம்

இரத்தப்பிணி நீர்ப்பை = இரத்தம் தங்கியிருக்கும் கழலையைப் போன்ற சதைப்பை

இரத்தப் பிரதரம் = பெரும்பாடு (கர்ப்ப அழிவு, அதிகப் புணர்ச்சி), மிக்க பாரத்தைத் தூக்கல் போன்ற காரணங்களால் உண்டாவது

இரத்தப்பிரமி = சிவப்புப் பிரமிப்பூடு

இரத்தப் பிரமியம் = நோய் கொண்ட பெண்களைப் புணருவதால் ஆண்குறியிலிருந்து சிறுநீரோடு இரத்தமுங் கலந்து விழும் மேக நோய்

இரத்தப் பிரமேகம் = நீர்த்தாரை முதலிய பாகங்களில் சிறுநரம்பு அறுந்து இரத்தங்கலந்த நீர் அல்லது இரத்தம் காணும் ஒரு வகைப் பிரமேக நோய்

இரத்தப் பிரவாகம் = இரத்தப் பெருக்கு ஏதேனுமொரு காரணம் பற்றி வெளிப்படல்

இரத்தப் பீளை = வெள்விழியில் படலத்தை உண்டாக்கும் போது சரியும் பீளை

இரத்தப்பினசம் = இரத்த பீனசம்

இரத்தப் புடையன் = ஒருவகைப்பாம்பு, இது கடித்தால் கண், மூக்கு, வாய் இவற்றில் இரத்தம் ஒழுகும்

இரத்தப் புட்பிகா = மூக்கிரட்டை

இரத்தப்புளி = சிவப்புப்புளி

இரத்தப் புளிப்பு = இரத்தங்கெட்டுப் புளிப்படைத்தல்

இரத்தப்பூஞ்செடி = சூரைச்செடி

இரத்தப் பெருக்கு = இரத்தக் குழாய்களினின்று இரத்தம் வெளிப்படுத்தல்

இரத்தப் பெரும்பாடு = பெரும்பாடு

இரத்தப் பொருமல் = இருதயத்தைச் சார்ந்த பெரிய இரத்தக் குழாய்களில் உண்டாகும் அமைதியான ஒலி

இரத்த மசூரிகை = உடலெங்கும் சிகப்பு நிறமான கொப்புளங்களையும் எரிச்சலையு முண்டாக்கும் ஒரு வகை அம்மை நோய்

இரத்த மடக்கி = இரத்தவொழுக்கை நிறுத்தும் மருந்து; இரத்த வொழுக்கை மடக்கும் துருசு படிகாரம், நீர் கலந்த திராவங்கள் முதலிய துவர்ப்பு மருந்துவகைகள்

இரத்த மண்டலம் = உடம்பிற்காணும் செந்நிறமான ஒருவிதப் படைநோய்; செந்தாமரை, இரத்த வட்டம்

இரத்த மண்டலி = உடம்பில் செம்புள்ளிகளையுடைய ஒருவகை விடப் பாம்பு, இது கடித்தவுடன் மயிர்க்கால்களின் வழியே இரத்தம் ஒழுகும், குளத்தில் நிற்கும் துளசிப் பூடு, கழுதைத் தும்பை

இரத்த மதப்பால் = சிவப்புக்கொய்யா

இரத்த மதம் = இரத்தப் பெருக்கினால் உடம்பும் கண்ணும் மதமெடுத்து உணர்ச்சியற்று மூக்கில் இரத்தம் வழிதல் முதலிய பலதீய குணங்களைக் காட்டும் நோய்

இரத்த மயக்கம் = இரத்த ஒழுக்கினால், இரத்த ஆதிக்கத்தினால் ஏற்படும் மயக்கம்

இரத்த மலடு = கருப்பத்தில் இரத்தம் சேர்ந்து மத்தைப் போலுருண்டு வாயு போலாடும் ஒருவகைச் சூதக நோய்

இரத்த மலம் = இரத்தங் கலந்து வெளி வரும் மலம்; சீத பேதி; இரத்த வழுக்கு

இரத்த மறிப்பு = இரத்த ஒழுக்கைத் தடுத்தல்

இரத்த மாரணம், இரத்த மாரம் = காவிக்கல்

இரத்த முக பாகம் = பித்தத்தினால் வாய் சிவந்து வெந்து புகையைப் போல ஆவியை எழுப்பும் நோய்

இரத்த முறிக்கும் பாலி = ஒருவகை சிகப்பு சதுரக்கள்ளி

இரத்த முறிப்பான் = விஷ்ணு கிரந்தி

இரத்த மூத்திரம் = இரத்தங்கலந்து வரும் சிறுநீர்; வெட்டைச் சூட்டினாலும் வேறு நோயாலும் இரத்தம் கலந்து ஏற்படும் சிறு நீரொழுக்கு

இரத்தமூலப் பாண்டு = மூலக்கொதிப்பினால் ஆசனம் வழியாய், இரத்தம் அதிகமாய்ப் போவதால், இரத்தமற்று வெளுத்து வீக்கங் காணும் பாண்டு நோய்

இரத்த மூலாதாரம் = பெரிய நாடி அல்லது பெரிய இரத்தக்குழல்

இரத்த மேகம் = மூத்திரத்தில் கலந்தாவது கலக்காமலாவது இரத்தம் நாற்றம், எரிச்சல் இவைகளுடன் கடுத்து இறங்கும் மேகநோய்

இரத்தம் = பவளம், ஈரல், குங்குமப்பூ, சாதிலிங்கம், செம்பு, சிவப்பு, மாதவிடாய், கொம்பரக்கு, குங்குமம், இத்தி, மஞ்சிட்டி, சப்த தாதுவில் ஒன்று

இரத்த பிரகோவித்தல் = இரத்தமானது தோடத்தினால் விகாரப்படல்

இரத்தம் பெய்தல் = மூத்திரத்தில் இரத்தங் கலந்தபடி பெய்தல்

இரத்தம்மை = இரத்தவம்மை

இரத்தம் வாங்கி = இரத்தத்தை உடலினின்று வெளிப்படுத்தப் பயன் படுத்தும் கருவி

இரத்தம் விடல் = இரத்தக் குறைவு ஏற்படும் போது எருதின் இரத்தத்தை உடம்பில் செலுத்துதல்

இரத்த யோனி = பெண்களுக்குப் பிறப் புறுப்பில் பொறுக்க முடியாத வலியையும் இரத்த வொழுக்கையும் உண்டாக்கும் ஒருவகை நோய்

இரத்தராசி = கடுகு, கேழ்வரகு

இரத்தருகம் = இரத்தக்கழலை

இரத்தரேணு = அரத்தைப்பூடு

இரத்த ரோகம் = இரத்தத்தினால் ஏற்படும் நோய்கள்; இரத்தம் பாய்ந்த ஒருவிதக் கண்ணோய்

இரத்த லிங்கநாதம் = கண்பார்வை இரத்த நிறமாகிப் பார்வையையும் கண்ணொளி யையும் குறைக்கும் கண்ணோய்

இரத்த வடி = அம்மைக்குரு

இரத்த வண்டம் = நீரண்டத்தைப்போலவே நீருக்குப் பதிலாக இரத்தம் சேர்ந்து பீசம் பருத்து வலியையுண்டாக்கும் அண்ட நோய்

இரத்த வமனம் = இரத்த வாந்தியெடுத்தல்

இரத்த வம்மை = கொப்புளங்களினின்று இரத்தம் வடியும் அம்மை நோய்

இரத்த வரி = கண்ணில் இரத்த ஊறலினால் நமைச்சலை உண்டாக்கும் கண்ணோய்; இரத்த நிறத்துடன் கயிறு போன்ற வரிகள் கடைக் கண்ணில் படர்ந்திருக்கும் கண்ணோய் இது கரு விழியைப்பற்றிய நோய்

இரத்த வர்ணகம் = பெருங்கம்பிப்பூடு

இரத்தவர்ணம் = செந்நிறம், ஒருவகை அரிசி

இரத்த வலிப்பு = இரத்தப் பெருக்கினா லுண்டாகும் இழுப்பு, இரத்தக் குற்றத்தினால் உண்டாகும் இழுப்பு

இரத்தவல்லி = ஒரு சிகப்புக் கொடி

இரத்த வழலை = கடிப்பதானல் இரத்த வாந்தியை உண்டாக்கும் ஒருவகை வழலைப் பாம்பு

இரத்த வள்ளி = செவ்வள்ளிக் கிழங்கு

இரத்த வற்கனம் = செம்பு

இரத்த வாகினி = தமனி

இரத்தவாத குன்மம் = இரு வகை இரத்தக் குன்மங்களில் ஒன்று: பெண்களுக்கு மாத விடாய் காலத்திலும் முதல் பிரசவகாலத்திலும் அல்குலில் மேகம் முதலிய நோய்கள் காணும் காலத்திலும் உண்டாகும்; மார்பு அதிரல், மசக்கை, முலையில் சிறிது பால் சுரத்தல், களைப்பு முதலிய குணம் உண்டாகும்; வயிற்றில் கர்ப்பத்தைப் போல் கெட்ட இரத்தம் கட்டிக் கொள்ளும் நோய்

இரத்தவாத சிலேட்டு விரணம் = இரத்தவாதம், இரத்தகபம் முதலியவைகளுக்குள்ள குறிகளைக் காட்டும் இரணநோய்

இரத்தவாத துட்ட விரணம் = ஒருவகை இரண நோய், கருப்பு அல்லது சிவப்பு நிறமானதாகவும் இரத்தம் அல்லது மோரைப் போல தண்ணீரொழுகி குத்தலையும் வாந்தியையும் முண்டாக்கும் இரத்தவாத

இரத்தவாத பித்த குன்மம் = இரத்த குன்மத்தின் பேதம்; குன்மத்தினால் கருக்குழியில் தங்கிய இரத்த மானது பித்தம் சேர்வதால் அதனின்று வெளிப்பட்டு கருக்குழியில் மிக்கவலி, எரிச்சல், குத்தல், நாற்றம் ஆகிய குணங்களையுண்டாக்கும்

இரத்தவாத பித்ததுட்ட விரணம் = இரத்தவதாம், இரத்த பித்தம் முதலிய குணங்களைக்கட்டும் ஒரு இரணநோய்

இரத்தவாத பித்தம் = நுரையுடன் கூடிய சுத்தமான இரத்தம் உடம்பினின்று வெளிப் படும் நோய்

இரத்த வாதம் = பக்கத்தையும் மார்பையும் சேர்த்து இழுத்துக் கொண்டு மார்பிளைத்துச் சயித்தியம் உயர்ந்து உடம்பையும் காலையும் பற்றி நிற்கும் ஒரு வாத நோய்

இரத்தவாரி = சூதகப்பெருக்கு, இரத்தப்பெருக்கு, பெரும்பாடு

இரத்தவிஷ சன்னி = இரத்தம் விடத்தன்மை யடைதலால் மயக்கங்கண்டு சன்னிக்குரிய குணங்களைக் காட்டும் சன்னிநோய்

இரத்தவிஷ மயக்கம் = இரத்தம் விடத்தன்மை யடைதலால் ஏற்படும் மயக்கம்

இரத்த விஷம் = இரத்தத்தினால் ஏற்பட்ட விடம்

இரத்த வித்திரக் கட்டி = மாதருக்கு வரும் கட்டி; கெட்ட இரத்தம் தங்கி நிற்குமிடங்களில் உற்பத்தியாகி வீக்கத்தை

ஏற்படுத்தும்; கறுத்தும் வெளுத்தும் சிறுசிறு கொப்புளங்கள் உண்டாகும்

இரத்த விந்து = இரத்தங்கலந்த விந்து; இரத்தினத்திலுள்ள பொரிவு; மாணிக்கத்தின் மூன்றாஞ் சாதியாகிய குருவிந்தம்

இரத்தவிந்து சன்னி = தாளி

இரத்த வியர்வை = இரத்தமே வியர்வையாய்க் காணுதல்

இரத்த விரணம் = இரத்தக் கேட்டினால் உண்டாகும் ஒருவகைச் சிலந்தி; பவளத்தை போல் சிவப்பாயும் சுற்றிலும் கருப்புக் கொப்பளங்களையு மெழுப்பி வலியையும் இரத்த வொழுக்கையுண்டாக்கும்

இரத்த விரியன் = கடித்தவுடன் இரத்த வாந்தியையுண்டாக்கும் ஒருவகை விரியன் பாம்பு

இரத்த விருமல் = போர்க்களத்தில் இரத்தங் கண்டு பயந்தோ சாதாரணமாகவோ பயத்தால் இரத்தங்கக்கல், காசநோயுள்ளவர்க்கு இருமலின் போது உண்டாகும் இரத்தவாந்தி

இரத்த விரேசனம் = சிறுகுடலிருந்து இரத்தம் கலந்துண்டாகும் மலப்போக்கு

இரத்த விரைச்சல் = இரத்தக் குறைவினா லேற்படும் ஒலி

இரத்தவீசம் = மாதுளை

இரத்த வெட்டை = வெட்டைச் சூட்டினால் சுக்கிலம் இரத்தத்தோடு கலந்து ஆண் குறியின் வழியாய் ஒழுகல்

இரத்த வெள்ளுடைப்பு = விழுகிற இரத்தத்தை விழவொட்டாமற் செய்யும் மருந்து நெய்

இரத்த வெள்ளை = நோய் கொண்ட மாதரைப் புணருமிடத்து முத்திரத் துவாரத்தில் புண்ணாகி அதனின்று இரத்தமும் சீழும் வெள்ளையும் வடியப் பெற்ற ஒருவகை மேகநோய்; மாதர்களுக்கு பிரசவம் ஆனபின்னர் காணும் இரத்தங்கலந்த வெள்ளையொழுக்கு

இரத்த வேங்கை = ஒருவகை வேங்கை மரம், உதிர வேங்கை

இரத்த வேரண்டம் = சிவப்பாமணக்கு

இரத்தனபுருஷ் = ஓரிதழ்த் தாமரை

இரத்த வொழுக்கு = பெரும்பாடு, மாதவிடாய்

இரத்தாகத் தமிர்தம் = சிற்றாமணக்கென்ணெய்

இரத்தாகம் = சிற்றாமணக்கு

இரத்தாகாற்பாசம் = செம்பருத்தி

இரத்தாக்கம் = எருமை, புறா

இரத்தாங்கம் = மஞ்சள், மூட்டுப்பூச்சி

இரத்தாங்கி = மண்திருஷ்டி

இரத்தாசயக பாடம் = இருதயத்திலுள்ள கபாடம்

இரத்தாசய கோசம் = இதயத்தைச் சுற்றியுள்ள ஒரு சவ்வுப்பை

இரத்தாசய சடரம் = இதயத்தின் கீழ்ப் பகுதியிலுள்ள அறைகள்

இரத்தாசய சவ்வு = இதயத்தைச் சுற்றியுள்ள ஒரு சவ்வுப்பை

இரத்தாசய சிரவம் = இதயத்தின் மேற் பகுதியிலுள்ள அறைகள்

இரத்தாசய வெளி = மார்பினுள் இதயத்திற்கு வெளியில் சவ்வினால் தடுத்த முன்னறை

இரத்தாசியம் = வாயிலிருந்து இரத்தம் வடிதல்

இரத்தாசுர அமிர்தம் = சிற்றாமணக் கெண்ணெய்

இரத்தாட்சி = எருமை

இரத்தாதி மந்தம் = ஒருவகைக் கண்ணோய்: இதனால் கண்கள் சிவந்து திறக்கும் போதும் தொடும் போதும் வலித்துக் கரு விழியில் இரத்தம் பரவி நெற்றி, பல், தாடை, மண்டை முதலிய விடங்களில் வலியுண்டாகும்

இரத்தாந் தியம் = ஒரு வகைக் கண்ணோய்

இரத்தாபி சந்தம் = கண்கள் சிவந்து பீளையையும் இரத்த நீரையும் தள்ளுவதுடன் கருவிழி வெளுத்துக் காணும் கண்ணோய்

இரத்தாப் பிரகம் = சிவப்பு அப்பிரகம்

இரத்தாரிசம் = இரத்த மூலம் இரத்தக் கேட்டினாலுண்டாகும் இரத்தக் கழிச்சல்

இரத்தா வுருதம் = இரத்தக்கழலை, மூவகைத் தோடத்தால் இரத்தத்தையும் இரத்தக் குழல்களையும் சுருக்கிக் கழலையை உண்டாக்கி, சீழையும் இரத்தத்தையும் அதனின்று வடியச் செய்யும் கழலை நோய், இது அசாத்தியம்

இரத்தாளி = ஒரு வகை இனிப்பு வாழை

இரத்தாளிக்கரும்பு, இரஸ்தாளிக்கரும்பு = செங்கரும்பு

இரத்தாளி வாகை = கருப்பட்டி வாகை

இரத்தாற் புதக்கிரந்தி = கறுத்த ரத்தம் கிரந்தியில் தங்கி நின்றுலர்ந்து இரணத்தையுண்டாக்கும் நோய் (ஒருவகை அற்புதக் கிரந்தி); ஆண் குறியில் காணும் ஒரு வகைக் கிரந்தி

இரத்தாற் புதக்கீரை = கோழிக்கீரை

இரத்தாற் புதம் = ஆண்குறி இரத்தம் போற் சிவந்து அதன் முழுவதிலும் கொப்புளங்களெழும்பிக் குத்தலையும் எரிச்சலை முண்டாக்கும் ஒருவகைப் புண்

இரத்தானி = செம்முள்ளி

இரத்தி = இத்தி, இலந்தை, மருது

இரத்திமாகிதம் = ஊழலத்தி

இரத்திமாணிக்கம் = சிறு செண்பகம்

இரத்திரி = இத்திமரம், இறலி மரம்

இரத்தினகந்தி = மயிர்கொன்றைப் பூடு

இரத்தினகருப்பம் = சமுத்திரம்

இரத்தினக்காப்பு = தக்காளி

இரத்தினத்திரு = சௌந்தரியப் பூடு

இரத்தினபீசம் = மாதுளை

இரத்தின மாத்திரை = ஒரு மருந்துக் குளிகை

இரத்தினம் = நவமணிப்பொது ஒருவகை மணி

இரத்தினாகரம் = கடல்

இரத்தினாங்கம் = கருடன்

இரத்தினி = முன்கைப் பேரெலும்பு, நாடி

இரத்தை = திப்பிலி, மஞ்சிட்டி, உப்பிலி, சிற்றரத்தை

இரத் தோட்டம் = உதடு இரத்தத்தைப் போல் சிவந்தும் பிதுங்கியும் தோன்றும் உதட்டு நோய்

இரத்தோத்திரம் = புனல் முருங்கை

இரத்தோற்பயம் = செந்தாமரை

இரத்தோற் பலம் = செங்குவளை, செந்தாமரை, செவ்வல்லி

இரநாகம் = விலாமிச்சு

இரந்தி = இலந்தை

இரந்திடரி = இரலி, ஈரல், இச்சிசெடி, பதுக்கை

இரந்திரி = இத்தி, இலந்தை, மருது

இரந்தீரி = இச்சி செடி

இரந்தை = இலந்தை

இரப்பர் = ஆசினி

இரப்பை = கண்ணிதழ்

இரப்பை துடித்தல் = வாயுவினால் கண் இரப்பையை அடித்துக் கொள்ளல்

இரப்பை யொட்டல் = சூட்டினால் கண்ணிரப் பைகள் பொங்கி ஒன்றோடொன்று ஒட்டிக்கொள்ளல்

இரப்பை வறட்சி = கண்ணிரப்பையின் உட்சவ்வு பசையற்று உலர்தல், பசையற்று காய்ந்து கண்மணியின் ஒளி குறையல்

இரமடம் = பெருங்காயம்

இரமணம் = புணர்ச்சி, கழுதை

இரமதி = காகம்

இரமபனை = கூந்தற்பனை

இரமபிலம் = மிளகு

இரமாப்பிரியம் = தாமரை

இரமித்தல் = புணர்தல்

இரம் = இலந்தை மரம், எலுமிச்சம்பழம்

இரம்பக்கல் = குருந்தக்கல்

இரம்பப் பல்லிலை = இரம்பத்தின் முனையிலிருக்கும் கூரிய பற்கள் போன்ற இலை

இரம்ப மீன் = மரஅரிவாளைப் போன்ற பற்களை உடைய சிறகுள்ள மீன்

இரம்பம் = குருந்தக்கல், கத்தூரி மிருகம் (பூனை, மான்)

இரம்பா = வாழை, பெருநாரத்தை அல்லது பம்பிளிமாசு

இரம்பாகிதம் = ஊக்குணா

இரம்பியம், இரம்பிலம் = மிளகு, பொன்னாகம்

இரம்பிலா, இரம்பிவம் = மிளகு

இரம்பை = பாகல்

இரம்பை சுரோணிதம் = இந்திரகோபப்பூச்சி

இரம்மியம் = சண்பகமரம், சுக்கிலம்

இரலாட்டம் = மிளகு

இரலி = இத்திச்செடி (இச்சிச் செடி) கொன்றை, மருது

இரலை, இரல் = ஆண்மான், கலை மான், புல்வாய்

இரவடி = ஏலம்

இரவணம் = ஒட்டகம், குயில், வெண்கலம், வெப்பம்

இரவணன் = ஒட்டகம்

இரவதம் = குயில்

இரவம் = இருள்மரம், நாகசம்பங்கி

இரவரிவன் = சேவல்

இரவலின்பம் = சிவனார் வேம்பு (இடபவாகன வேம்பு)

இரவறிந்தான், இரவறிவான் = சேவல்

இரவனின்பம் = சிவனார் வேம்பு

இரவி = சூரியன், சித்திரமூலம், இச்சிச்செடி, எருக்கு, மலை, செம்பு, மூக்கின் வலது துவாரம், மது, வெள்ளி, விடமருது

இரவி கண்டபனி = அழுகண்ணி

இரவி கண்ணாடி = சூரிய காந்திக் கண்ணாடி

இரவிகாந்தம் = சூரியகாந்தக்கல், தாமரை

இரவி கிண்ணி = செம்புக் கிண்ணி; பதங்கமிறக்குவதற்காக வெய்யிலில் வைக்கும் ஒருவகைக் கின்ணி

இரவிகுலக் குன்றம் = செம்பு எடுக்கும் சிறிய மலை

இரவி குலமேரு = செம்பைச் சேர்ந்த தாதுக்கள் அடங்கிய ஒருமலை

இரவிகெந்தம் = பட்டாணி

இரவிக்கல் = வெள்ளைச் சுக்கான் கல்

இரவிக்குள் கூர்ந்த ஏமம் = பஞ்சபட்சி பாடாணம்

இரவிக்கை = சூரியனின் கதிர்

இரவிசஞ்சம் = பூநீர்

இரவிசாதிப்பால் = எருக்கம் பால்

இரவிசுடர் = ஈசனுப்பு, பளிங்கு

இரவி செயநீர் = சிகப்புச் செயநீர்

இரவிச்சிலை = கற்காவி

இரவிச்சுண்ணம் = முப்பு

இரவிநங்கை = சிறியாணங்கை

இரவி நிறம் = மாந்துளிர்கல், கற்காவி, செம்பு நிறம், சிகப்பு நிறம்

இரவி நீர் = சிகப்பு செயநீர்

இரவி பீஜம் = சூடன்

இரவி புடத்தி = சூரியபுடத்தில் வைத்த மருந்து

இரவி புடம் = சூரிய புடத்தில் வைத்தல்

இரவிபேதி = குய்ய பேதி

இரவிப்பிரியமண் = செம்புமணல்

இரவிப்பிரியம் = வேம்பு

இரவி மணல் = செம்பு, மணல்

இரவிமதி = பிங்கலை, இடகலை

இரவிமது = வெள்ளி

இரவிமுகத் துலர்த்தல் = வெயிலில் காயவைத்தல்

இரவி முகம் = சூரிய வெப்பம், வெயில்

இரவியரிசி = வெட்பாலரிசி

இரவியல் = பசளை

இரவியாக்கி = பவளப்புற்று பாடாணம்

இரவியிலு லர்த்தல் = வெயிலில் காய வைத்தல்

இரவியுப்பு = இந்துப்பு, வழலையுப்பு

இரவில் சூழோன் = கொசு

இரவி வச்சிரம் = சொலிக்கும் வச்சிரக்கல்

இரவிவிந்து = வச்சிரம்

இரவிழியான்பூ = வெள்ளளை நாயுருவி

இரவு = மஞ்சள், இருள்மரம்

இரவெரி மரம் = இரவில் தீப்பற்றி எரிவது போல் காட்சி தரும் மரம் (சோதி விருட்சம்)

இரவேலி = பிரண்டை

இரவை = கோதுமை நொய், வயிரம், கோதுமையின் நடுவிலிருக்கும் கடினப்பகுதி

இரளம் = துக்கை

இரளி = கொன்றை, பதுக்கை, மொத்தை, இத்தி

இரளியம் = பொன்

இரள் = பதுக்கை

இரனாகம் = இலாமிச்சு (இரநாகம், இறுநாகம்)

இரணியவயிரவன் = மிளகு

இரா = கள், இச்சங்கள், உணவு, இரவு, பூமி, நீர்

இராக சேவிகம் = உள்ளொட்டி (மந்திரத்தில் உபயோகப் படுத்தும் மூலிகை)

இராகத்துக் கொன்றை = ஒருவகைக் கொன்றை

இராகப்புள் = கின்னரப்பறவை

இராகம் = சிவப்பு, நிறம்

இராகவி = பெருநெருஞ்சில்

இராகவிச் சோளம் = இருங்கு சோளம்

இராக விண்ணாடகம் = கொன்றை, சரக்கொன்றை

இராகனி = எலுமிச்சை, வெற்றிலை

இராகாசி மடல் = ரயில் கற்றாழை இதன் இலை இரணங்களுக்கும் சாறு மேக நோய்க்கும் உதவும்

இராகி, இராகிகம் = கேழ்வரகு

இராகு = கோமேதகமணி, கரும்பாம்பு

இராகுச்சி = வெங்காயப்பூடு

இராகுரங்கின்கை = முசு முசுக்கை

இராகூச் சிட்டம் = ஒரு ஒருவகை வெங்காயம்

இராகேசுரம், இராகேசுவரம் = சூடன்

இராகேயம் = உருளைக் கிழங்கு

இராகை = குட்டம், சொறி

இராக்கசி = கருப்புக்கச்சோளம், கருஞ்சோளம்

இராக்கண் = இரவில் கண் தெரியாத ஒரு நோய்

இராக்கதம் = இரண வைத்தியம்

இராக்கதிர் = சந்திரன்

இராக்கனி = வெற்றிலை

இராக் கனியாள் = இரவில் குடிப்பதற்குப் பாலைத் தருவது அதாவது பசு

இராக் காசம் = இரவில் காணும் காசநோய், வெள்ளாம் பல்

இராகாசி மட்டை = இராகாசி மடல்

இராக்காச்சல் = இரவிற் காயுஞ்சுரம்

இராக்காச்சியம் = வெங்காயப்பூடு

இராக்குருடு = இராக்கண்

இராசகட்டி = பக்கப்பிளவை

இராசகருமம் = அகில்

இராசகருவி = இதயம்

இராசகனி, இராசகனிவித்து = எலுமிச்சம்பழம்

இராசகிரி = வெள்ளைக் கீரிப்பிள்ளை ஒருவகைக் கீரிப்பூடு

இராசகுல வாழை = செவ்வாழை

இராச கோழை = நுரையீரலைப் பற்றிய கபத்தோடு கூடிய ஒரு வகைச் சயநோய்; கவத் தோடு இரத்தமுங் கலந்துவரும் சய நோய்

இராசசகுனம் = ஒருவகை இராசானி

இராசசத்துரு = கொன்றை

இராசசம்பு = சம்பு நாவல் அல்லது பெருநாவல், வெண்ணாவல்

இராசசயம் = அதிவிரைவாகப் பற்றும் சயநோய்

இராசசாகரம், இராசசாரம், இராசசாரசம் = மயில்

இராசசின்னத் தொன்று = ஆமை

இராசசூயம் = தாமரை, மலை

இராசதந்தம் = முன்வாய்ப் பல், முன்வாய் மேற்பல்

இராசதரு = குறா

இராசதாலம், இராசதாலி = பாக்குமரம் (கமுகு)

இராசதானிப்பாலை = கணுப்பாலை

இராசதுண்டு = இலந்தை

இராசத் தேள் = நால்வகைத் தேள்களி லொன்றாகிய சிவப்புத் தேள் இது கடித்தால் அசாத்தியம்; நால்வகைச் சாதிகளில் ஒன்றாகிய சத்திரிய சாதிப்பாம்பு

இராசநீர் = வெடியுப்பு திராவகம் சேர்ந்த ஒரு வகை கலவைத் தீ நீர்; உலோகங்களுக்கு அரசனைப் போன்ற பொன்னைப் பேதிப் பால் இப்பெயர் பெற்றது நீர் (திராவகம்)

இராசநோக்காடு = பிரசவ வேதனை, இடுப்புவலி

இராசபரிணி = பாலை

இராசபர்ணி = ஒருவகை பூடு

இராசபலம், இராசபலா, இரசாபலை = முதியார் கூந்தல், பேய்ப்புடல்

இராசபறவை = கருடன்

இராச பிளவை = நடு முதுகில் முள்ளந் தண்டில் மாங்காய் அல்லது தாமரைக் காயைப் போல் வீங்கி முக்கண் உண்டாகிப் புரையோடி வலி அதிகரித்து இடைவிடாத குத்தல், குளிர்சுரம், நாவறட்சி, சோபதாபம் முதலிய குணங்களை உண்டாக்குமோர் வகை இரணநோய்

இராச புடல் = ஒருவகைப்புடல், இதன் விதை உருண்டையா இருக்கும்

இராபுட்பி = கக்கரி (வெள்ளரி)

இராசபுண் = இராசபிளவை

இராசபுத்திரி = சிறுசண்பகம், பேய்ச்சுரை

இராசபுள் = எட்டுக்கால் பூச்சி, இராசபறவை, 2 கருடன்

இராசபூகம் = பால்

இராசப்பிரதீட்டை யுள்ளோன் = ஆமை

இராசப்புறா = உயர்தரமான புறா

இராசமண்டூரம் = பிரதானதவளை

இராசமந்த மந்தசர்ப்பம் = நடையும் மினு மினுப்புமுள்ள ஒரு வகைப் பாம்பு (மலைப்பாம்பு, தாசரிப் பாம்பு, கட்டு விரியன்)

இராசமடம் = பெரும்பயறு

இராசமரம் = நாகம்

இராசயுகம் = பாலை

இராசமா நாகம் = கருவழலைப் பாம்பு, கருநாகம்

இராசமாலா = பலலைக்கொடி

இராசமான் = பல்லி

இராசம் = வெள்ளைத்தும்பை

இராசயட்ச மாரோகம் = இராச சயரோகம்

இராசயுகமை = பாலை, பால்

இராசயுகம், இராசயுமை = பால், பாலை

இராசராசபலம் = வலம்புரிக் கொடி

இராசரோகம் = சயரோகம்

இராசர்கவச ரோப்பியம் = வெள்ளெருக்கு

இராசலம் = தாமரைப்பூ

இராசவசியம் = கத்தூரி

இராச வர்க்கம் = வெண்மையுங் கருப்புங்கலந்த நிறம்

இராசவர்ணம் = பேய்ப்புடோல்

இராசவர்த்தம், இராசவர்த்திக்கல் = நடுவில் பொன்னிறமான புள்ளிகளையுடைய வைரத்தைப் போன்ற கல்

இராசவல்லபை = இலந்தை

இராசவல்லி = ஒருவகைக் கசப்புக் கொடிப்பாகல்

இராசவள்ளி, இராசவள்ளிக் கிழங்கு = ஒரு பருத்த சிவப்பு வள்ளிக்கிழங்கு

இராசவாகனம் = கோவேறு கழுதை

இராசவாதங்கி = கற்றாழை

இராசவாழை = செவ்வாழை

இராசவிகுரதம், இராசவிரசம் = கொன்றை

இராச விரணம் = இராசபிளவைகாரி இரத்த நிறமாகவும் கழலைப் போல் சதையிலமைந் தாகவுமிருக்கும்; கட்டி முழுவதும் அழுகி நாற்றத்துடன் சீழும் இரத்தமும் வடியும் ஒரு வகைக் கட்டி

இராசவிருட்சம் = கொன்றை

இராசவுறுப்பு = இதயம் முதலியன

இராச வைத்தியம் = பத்தியமில்லாத வைத்தியம்

இராசனம், இராசனை = வெள்ளைப்பூண்டு

இராசா = கையாந்தகரை

இராசாகி = இருதலைப்பாம்பு

இராசாததம் = முரளஞ்செடி, பழ முண்ணிப்பாலை

இராசாபிடி = வெல்லம்

இராசாவர்த்தம் = இராசவர்த்தம்

இராசாவேறுங் கழுதை = கோவேறு கழுதை

இராசாளி = வெண்புள்ளிகளை உடைய ஒரு சிகப்புப் பருந்தினம்

இரா சான்னம் = மூக்குங்காலும் சிவந்து உடம்பு வெண்மையாயு முள்ள ஒரு உத்தமசாதி அன்னப்பட்சி ஒருவகை உயர்ந்த செந்நெல்

இராசிகம் = நரம்பு வரி, கரும்பு, கேழ்வரகு

இராசி காரோகம் = வேனிற்காலத்தில் வெயிலின் புழுக்கத்தினால் வியர்வை மிகுதி யாகக் காணுவதால் உண்டாகும் வியர்வைக்குரு

இராசிதகம் = மருந்தரைக்குங்கல் (கலுவலம்)

இராசிதம் = செஞ்சந்தனம்

இராசிபலா = பேய்ப்புடோல்

இராசியத் தானம் = தாமரை, பெண்ணுறுப்பு

இராசியம் = தாமரைப்பூ, தாமரை

இராசிலம் = சாரைப்பாம்பு, நீர்பாம்பு

இராசில் = மகிழம்பூ

இராசிவங்கம் = வெள்ளீயம்

இராசிவம் = தாமரை

இராசினம், இராசினா = அரத்தைப்பூடு

இராசீவம் = தாமரை

இராசுனை = சிற்றரத்தை

இராசோதம்பரி = ஈச்சங்கள்ளு

இராச்சமம் = முள்ளிப்பாலை

இராச்சர் = பொன்

இராச்சியம் = தாமரைமலர்

இராச் சொல்லான் = பேர்சொல்லான், வசம்பு

இராஞ்சில், இராஞ்சு = மகிழன்

இராடசுத்தாளி = வேங்கைப் புலி

இராடம் = பெருங்காயம், வெங்காயம், கழுதை

இராட்சச சிகிச்சை = காரச்சீலை, காரம், அக்கினி, கத்தி முதலியவைகளைக் கொண்டு செய்யும் ஒருவிதக் கொடிய வைத்தியம்

இராட்சசி = துளசி, சதுரக்கள்ளி, கற்றாழை

இராட்சதகண சிகிச்சை = இராட்சசசிகிச்சை

இராட்ச விருட்சம் = கொன்றை

இராட்டம் = வெங்காயம்

இராட்ட லோட்டம் = புத்தோடு

இராட்டின வாழை கிளைகள் = நெருங்கவிருக்கு மோர்வகை வாழை மரம்

இராட்டு = தேன்கூடு

இராணம் = இலை, மயிற்றோகை

இராதம் = கடைக்கொள்ளி

இராதை = மின்னல்

இராத்தம் = துத்தி

இராத்தல் = 40 ரூபாய் எடை, பதின்மூன்று பலமிடை

இராத்தி = வெண்காரவுள்ளி, மஞ்சள்

இராத்திரம் = இரவு

இராத்திரி = மஞ்சள்

இராத்திரி காசம் = வெள்ளாம்பல், வெண்டாமரை

இராத்திரியுகளி = மஞ்சள், மரமஞ்சள்

இராத்திரியுக்மம் = இருமஞ்சள்

இராத்திரிவேதன் = சேவல்

இராத்தினம் = அரத்தைப்பூடு

இராந்து = இடுப்பு, தொடைச் சந்து

இராந்து கடுக்கல் = பிரசவவலி, இடுப்புவலி

இராந்துண்டு, இராந்துண்டுகம், இராந்துனர் = இலந்தை

இராந்தூளிதம் = துளசி

இராபண்ணியர் = சேங்கொட்டை

இராப்சருக்கரை = இளகிய சருக்கரை

இராப்பசும் பால் = பகலிற்சுரந்து இரவிற் கறக்கும் பால்

இராப்பத்தியம் = புணர்வை நீக்கல்

இராப்பனி = இரவில் பெய்யும் பனி

இராப்பாடி = இரவிற்பாடுங் குருவி

இராப்பாடிக் குருவி = வால் கொண்டலாத்தி
(இரவிற்பாடும்)

இராப்பாலை = ஒருவகைப் பாலை

இராப்பால் = இராப்பசும்பால்

இராப்பூ = இரவில் மலரும் ஆம்பல்

இராமகன், இராமக்கம் = ஒரு அம்மை நோய் உடம்பில் கொப்புளங்கள் உண்டாகிப் பாலை உள்ளுக்கு வாங்கிக் கொள்ளும் ஒருவகைச் சிச்சிலுப்பை அல்லது சிச்சிலுப்பான் குழந்தைகளுக்குக் காணும் ஒரு வகை அம்மை ; சுரம், இருமல், தலைவலி கண்டு முகம், கழுத்து, உடம்பு முதலியவிடங்களில் குருக்கள் எழும்பி 7அல்லது 10 நாட்களுக்குள் இறங்கும்

இராமக்கருணி = அல்லி

இராமக் = வெள்ளையும் சிகப்புக் கரும்பு கோடுங்கலந்த கரும்பு; பேய்க்கரும்பு

இராமக்கன் = இராமகன்

இராமக் குமிட்டி = பேய்க்கொம்மட்டி

இராமக்குறண்டி = முட்குறண்டி

இராமக் கோவை = கார்க்கோவை (கறுப்பாயும் காய்கள் புறா முட்டைப் போலும் பூக்கள் சிறியவை யாயும் மஞ்சளாயுமிருக்கும்)

இராம சீத்தா = அணிநுணா, மலையாளத்தில் இதற்குப் 'பறங்கிச் சக்கை' என்று பெயர்

இராம சுரத் தீநீர் = கொந்தின மாமிசத்தில் வெல்லமும் தண்ணீருமிட்டு மற்ற கடைச் சரக்குகளுடன் சேர்த்து வானலயிலிட்டுத் திராவமாக வடித்த ஒரு வகைத் தீநீர்

இராமடம், இராமடை = பெருங்காயம்

இராமதாசன் = சமுத்திரக் காக்கை

இராமதுளசி = துளசி, பெருந்துளசி

இராமபத்திரி = ஒரு மருந்து

இராமபத்தினி = சீதா செங்கழுநீர்

இராமபலை = அணிநுனா

இராமவ் = புத்தகம் அல்லது ஏடுகளை ஊடுருவி துளைக்கும் புழு; ஒருவகை மருந்துக் குளிகை, ஒருவகைப் பாச்சை; ஒருவகை மல்லிகைப்பூ: கெவுரி வெள்ளைப் பாடாணம் முதலியவைகளாற் செய்து சுரம், சன்னி, மயக்கம் இவைகளுக்குக் கொடுக்கும் மாத்திரை

இராமப் பாரை = நாமப்பாரைமீன் இதன் மேற்புறம் வெள்ளியைப் போல் பளபளப்பாயும் வரிகளமைந்தும் இருக்கும் பிறபாகம் மஞ்சளாயும் கறுப்பு புள்ளிகளமைந்து மிருக்கும்

இராமப்பிரியம் = தாமரை

இராமமரம் = இராமசீத்தாமரம் (மணிலா ஆத்தா) மராமரம்

இராம முழியன் = ஒருவகைக் கடல் மீன்

இராமம் = அழகு

இராமம் பிரியம் = தாமரை

இராமரசம் = வெல்லத்தையும் கஞ்சா முதலிய சில சரக்குகளையும் சேர்த்து காய்ச்சிய போதைப் பொருள்

இராமனாதிகம் = குரங்கு

இராமன் = கோபுரப்பூண்டு

இராமன் சம்பா = ஒருவகைச் சம்பாநெல்

இராமன்தேவி = அரிதாரம்

இராமப்பிரியம் = தாமரை

இராமேசுவரச் சுண்டை = இராமேசுவரத்தில் விளையு மோர்வகைக் சுண்டைக்காய்

இராமே சுவரவேர் = இம்புறாவேர், சிறுவேர், சாயவேர், இராமேசுவரத்தில் விளைவதாலிப்பெயர்

இராமமரம் = அணிநுணா

இராமல் = இறால் மீன், வெள்ளிறால், தேன்கூடு, எருது

இராமாப் பிரியம் = தாமரை

இராம் = வெங்காயம்

இராம்பு = தாமரை

இராம்மடம் = இராமடம்

இரார்பண்ணியா = சேங்கொட்டை

இரால் = தேன்

இராவங்கம் = கொன்றை

இராவடம் = அசோகு, ஏலம்

இராவடி = பேரேலம், ஏலம்

இராவடிகம் = பேரேலம்

இராவடிதம் = உருத்திராட்சம்

இராவடிதரம் = ஊசிக்கோரை

இராவடியேலம் = பேரேலம்

இராவணமோதம் = குரங்கு

இராவணம் = விளக்கு

இராவணன்புல், இராவணன்மீசை = கடற்கரையில் ரவிளையும் ஒரு வகைப்புல்

இராவணன்வனம் = அசோகமரம்

இராவதி = ஒரு படர்கொடி, பன்றிப்புடல்

இராவம் = நோயினால் குறட்டை விடல்; சாதாரணமாய் குறட்டைவிடல்; தொண்டையில் ஏற்படும் சத்தம்

இராவரியன், இராவரிவன், இராவறியான், இராவறிவன், இராவறிவான் = கோழிச்சாவல்

இராவிரேக்கு = வெள்ளி, தங்கரேக்கு

இராவில் = வெள்ளீயம்

இராவில் சூழ்ந்தோன் = கொசு

இராவெரிமரம் = சோதிவிருட்சம்

இராவேலி = வெட்டி

இராவோன் = திங்கள்

இரிகக் கத்தை = இதய சடரக்குழியில் நீட்டிக் கொண்டிருக்கும் தசை நார்

இரிகநாடி = இதயத்தின் நாடி

இரிகம் = இதயம், வடமொழியில் ஒருமரம் அல்லது பூண்டின் பெயர்

இரிகரம் = இதயத்திற்குண்டான அழற்சி

இரிக்கி = ஒருவகைப் பெருங் கொடி அல்லது தெல்லு

இரிங்கணம் = ஒருவகை பறவை

இரிசிப்பா, இரிசியம், இரிசியா = பூனைக்காலி, பூனைக்காந்தி

இரிஞ்சகம் = ஊசிமல்லிகை

இரிஞ்சி, இரிஞ்சிகம் = மகிழன்

இரிஷபகம் = சிவகம் அல்லது இலந்தை

இரிஷபதாரவிருதம் = பசுநெய்

இரிஷபதாரம் = பசு

இரிணம் = உவர்நிலம்

இரிதி = பித்தளை

இரித்தை = நாழிகை

இரிபேரம் = வெட்டிவேர், குருவேர்

இரிமான் = ஒருவகை எலி

இரியல், இரியிலை, இரியில் = இலவங்கப்பட்டை

இரிவிகஞ்சம் = மரவுரி

இரீதி = பித்தளை, இரும்புக் கிட்டம், கிட்டம், தூள்

இரு = இரண்டு, இரட்டை, காட்டு மல்லிகை, பெரிய, கரிய

இரு கரந்தை = சிவகரந்தை, விஷ்ணுகரந்தை ஆகிய இரண்டு வித கரந்தை

இருகழஞ்சு = இரண்டரை வராகனெடை

இரு காலாட்டல் = மருந்தை இருமுறை கல்வத்திட்டு அரைத்தல்

இருகாழி = பனங்காயைப் போல் இரண்டு கொட்டையுள்ள காய்

இருகுகாற்பிரண்டை = களிப்பிரண்டை

இரு குமிழி = பெருங்குமிழ், சிறுகுமிழ், குமிழம், நீர்க்குமிழ், நிலக்குமிழ்

இருகுரங்கின்கை, இருகுரங்கு = முசுமுசுக்கை

இருகெம்பு = கொல்லி, சிவனார் வேம்பு

இருகோபி = நன்னாரி

இரு கோவை = பெரிய கோவை, சிறிய கோவை, அப்பன் கோவை, கொல்லன் கோவை

இருக்கு = சாதிலிங்கம்

இருக்குப் பாளை = கரும்பு, நீர்ப்பனை

இருங்கரம் = பதக்கு

இருங்கு = சிகப்புச்சோளம்

இருசகம் = மாதுளை, வெள்ளைத் தும்பை

இருசங்கன் = நற்சங்கு, பீச்சங்கு ஆக இரண்டு சங்கன் செடி

இருசடை = வெட்டிவேர்

இரு சண்பகம் = சிறுசண்பகம், பெருஞ் சண்பகம் ஆக இரண்டு

இரு சந்தனம் = வெண்சந்தனம், செஞ்சந்தனம் ஆக இரண்டு

இருசம்பீரம் = எலுமிச்சை, நாரத்தை

இருசரம் = வெங்காயம்

இரு சாரணை = வெள்ளைச் சாரணை, சிகப்புச் சாரணை (சத்திச் சாரணை)

இருசி = கருஞ்சீரகம்

இருசிகா = கடுகு

இருசிதாரி = கருஞ்சீரகம்

இருசிய கெந்தா = சிற்றாமுட்டி

இருசியசிம்மக குட்டம் = ஒருவகைக்குட்ட நோய்

இருசியம் = ஒரு மிருகம், கடுகுரோகிணி

இருசியல் = பசளை

இருசிரியம், இருசிரியர் = நற்சீரகம்

இருசிறியார் = கருஞ்சீரகம், நற்சீரகம் ஆகிய இரண்டு

இருசீக்கிரம் = கருஞ்செந்தொட்டி

இருசீரகம், இருசீரம் = கருஞ்சீரகம், நற்சீரகம் ஆகிய இரண்டுவகைச் சீரகம்

இருசு = மூங்கில், திருநாமப் பாலை

இருசுகம் = மாதுளை, வெள்ளைத் தும்பை

இருசுடர் = சூரிய சந்திரர்

இருசுபகந்தர விரணம் = ஒருவகை விரண நோய்; வாதபித்தத்தினால் பிறந்து குதவளையத்தை யொட்டி ஒழுங்கான துவாரங்களை உண்டாக்கிச் சீழை ஒழுகச் செய்யும் ஒருவகை பவுத்திரம்

இருசுப்பாலை = திருநாமப் பாலை

இருசுரம் = மாதுளை, வெள்ளைத் தும்பை

இருசுவசற் பாட்சி = கிருமி தோடத்தைப் போக்கும் மூலிகை; ஒருவகை நாணற்புல்

இருசுவம் = மலையிலுப்பை

இருஞ்சாடு வாமைப்பாடு = பொன்னாங்காணி

இருஞ்சி, இருஞ்சில் = மகிழம்பூ

இருடரும் = சங்குமுடி

இருடன் = அத்திமரம்

இருடி = ஆதொண்டை, ஆந்தை

இருடிநங்கை = கற்பூரயிலை

இருடிபட்சி = பழந்திண்ணி வௌவால்

இருடிமூத்திரம் = கல்லுப்பு, இந்துப்பு

இருடிமூலம் = வசம்பு

இருட்கண் = இருண்டபார்வை அல்லது இருள் சூழ்ந்த கண்; ஒருவகைக் கண் நோய் மணிவளர்த்தி என்று பெயர்

இருட்கம்மல் = மச்சதாது குறை வதனால் கண்ணிற்புகை சூழந்தது போற்காணு மோர் வகைக் கண்ணோய்

இருட்சகந்தம் = ஒரு பூடு

இருட்சி = மயக்கம்

இருட்டிசிங்கம் = புகையிலை

இருட்டு = மயக்கம்

இருட்பகைவன் = சூரியன்

இருட்பூ = மலையாளத்தில் விளையும் ஒரு வகை மரம்

இருணம் = உவர்த் தரை, உப்பளம்

இருண்டவிழி = இருட்கண்

இருண்டி = சிறுசண்பகம்

இருண்மதி = தேயுஞ்சந்திரன்

இருண்முகா = நாவி

இருதம் = நீர்

இருதய கந்தம் = கொத்துமல்லி

இருதய கபாட தாபிதம் = உடம்பினுள் தாமரைக் காயினுட் பக்கத்தில் அமைந்துள்ள இரண்டு சவ்வு மூடிகளுக்கேற்படும் அழற்சி

இருதயகமலம் = இதயம்

இருதய கவசம் = இதயத்தின் மேல் உள்ள சவ்வுப்பை

இருதய கிரகம் = நெஞ்சிலுண்டாகும் ஒருவித பிடிப்புவலி

இருதய கோசம் = இருதயகவசம்

இருதயக் கண்டரை = இதயத்தின் இடப் பக்கத்துள்ள பெரிய சுத்த இரத்தக் குழாய்

இருதயக்கூச்சு = இருதய முனை

இருதய சூலை = வாயு அதிகரித்து மூச்சுவிட முடியாதபடி மார்பில் வலியையுண்டாக்கும் ஒருவிதக் குத்தல் நோய், மார்பு சூலை

இருதயத் தவறு = மார்புத் துடிப்பு நிற்றல்

இருதயத் திமிர்ப்பு = இதயத்தின் உணர்ச்சியின்மை

இருதயத் திமிர்வாதம் = இதய நரம்பிற்கேற்படும் உணர்ச்சியின்மையாகிய ஒருவகை வாத நோய்

இருதயத் துடிதுடிப்பு = இதயப்பதைபதைப்பு அதாவது அதிவேகமாகத் துடித்தல்

இருதயத் துடிப்பு = நோய், பயம், மனக்கவலை, கோபம் இவற்றால் இதயம் அளவு கடந்து துடித்தல் இதயம் அடித்தல் ; இதயத்தில் விட்டு விட்டு அடிப்பதனா லுண்டாகும் அசைவு

இருதய நார்க்கடிமை = இதயத்தின் தசை நாரமைப்புக் கேற்படும் வன்மை

இருதயப் படபடப்பு = இருதயத் துடிப்பு

இருதயப் பிதுக்கம் = இதயமானது, நுரையீரல் தாங்கியில் ஏற்படும் வெடிப்பு மூலமாய் வெளிப்பிதுங்கல்

இருதய நோய் = பல காரணங்களினால் நிணநீர் கெடுதியடைந்து இதயத்தில் தங்குவதால் உண்டாகும் ஒருவலி

இருதய லயம் = இரத்தாசயம் மாறிமாறிச் சுருங்குவது விரிவதுமாயுள்ள காலக்கிரமம்

இருதய வலி = குலைநோய், நெஞ்செரிவு

இருதய வழற்சி = இதயத்திற்கேற்படும் ஒருவித வேக்காடு

இருதய வாதம் = உடம்பின், வாதம் இதயத்தில் பரவி வலியை உண்டாக்கு மோர் நோய்

இருதய வாயு = இதயத்தின் நரம்புகளில் ஏற்படும் ஒருவலி இதனால் மாரடைப் புண்டாகும்

இருதயவுப் பிசும் = இதயம் நோயால் வீக்கம் அடையல்

இருதரு = இரண்டு வகை தேவதாரு மரங்கள்

இருதலை = இருபக்கம் தலையும் நடுவில் உடல் ஒன்றுமாயிருக்கும்

இருதலைக்கப்படம் = விலாங்கு மீன்

இருதலைக்குழவி = அம்மிக் குழவி

இருதலைக்கூபம் = காட்டுச் சீரகம்

இருதலை நோய் = வெயில் ஏற ஏற அதிகமாகும் தலைவலி (எழு ஞாயிறு), தலையில் இரண்டு பக்கமும் ஏற்படும் நோய்

இருதலைப் பறவை = இரண்டு தலைகளை உடையதாகச் சொல்லுமோர் வகைப் பறவை; கண்ட பேரண்ட பட்சி

இருதலைப்பாம்பு, இருதலைப்புடையன் = மண்ணுணிப் பாம்பு

இருதலைப் பூச்சி = இரண்டு தலைகளை உடைய பூச்சி

இருதலை மணியன் = மலைப்பாம்பைப் போலிருக்கும் இது சதுப்பு நிலங்களில் வாழும்; இருட்டில் கண் தெரியும்

இருதலை விரியன் = ஒருவகை விரியன் பாம்பு

இருதவாயு = இருதயவாயு

இருதாரு = தேவதாரு

இருதாளகம் = தாளகம்

இருதி = வெண்பித்தளை

இருதிராசம் = வேனில்

இருது = இரண்டு மாதப் பருவம், மகளிர் சூதகம், மகளிர் முதற்பூப்பு, இலந்தை

இருது உடையாதவள் = எப்பொழுதும் பூப்படையாதவள்

இருது காலம் = மாதவிடாய்க்காலம், கருப்பந்தரிப்பதற்குரிய காலம்; பூப்படைந்து 5 நாள் முதல் 16 நாள் மட்டும்

இருதுக் கொடியோன் = பவளம், கொடிப்பவளம்

இருது சூலை = மாதவிடாய் கோளாறினால் கருப்பையிலேற் படும் ஒருவகைக் குத்தல் நோய்

இருதுத்தம் = வெண்துத்தம், மயில்துத்தம்

இருதுபாலா = பேராமுட்டி

இருதுப் பெருக்கி = சூதகத்தை வெளியாக்கும் மருந்து

இருதுமதி = கருதரித்தற்குரிய நிலையிலிருப்பவள்

இருதுமாசம் = வேனில்

இருத்த சூதம் = மலவாயிலுண்டாகும் ஒருவகை நோய்

இருத்திய குட்டம் = சுண்டைக்காய்

இருத்தியாசம் = மலையிலுப்பை

இருத்திர வாதம் = இதயத்தின் பலவீனம், கொழுப்பு படியல், அசீரணம் ஆகியவற்றால் குத்தல், மூச்சு முட்டல் முதலிய குணங்களைக் காட்டும் வாத நோய் (தமர்வாதம் என்றும் பெயர்)

இருத்தை = 24 நிமிடங்கொண்ட ஒரு நாழிகை அளவைக்காட்டு மோர் சூத்திரம், சேங்கொட்டை மரம்

இருநன்னாரி = சிறு நன்னாரி, பெரு நன்னாரி

இருநா = பிளவினால் ஏற்பட்ட நாக்குகள் இரண்டு நாக்குடைய உடும்பு அல்லது பாம்பு

இருநாவி = நாவி (பச்சை நாவி) கருநாபி

இருநாவியமிர்தம் = சாராயம்

இருநாழிக் குளிகை = இரண்டு நாழிகைக்குள் சுரத்தைத் தீர்க்கும் மருந்து

இருநிசி = கப்பு மஞ்சள், கத்தூரி மஞ்சள்

இருநிட்கம் = இரண்டு வராகனிடை

இருநிம்பு = வேம்பு, மலை வேம்பு

இரநெறித் தெரிப்பு = இரண்டுதுடைச் சந்திலும் நெறிகட்டிக் கொண்டு தெறிக்கும் வலியையுண்டாக்கும் ஒருநோய்

இருநொச்சில் = வெண்ணொச்சி, கருநொச்சி

இருந்தாமிலம் = கரியமில வாயு

இருந்து = கரி

இருந்துணர், இருந்துறு = இலந்தை

இருந்தை = கரி

இருந்தைக்கரி = மரத்தை எரித்தெடுத்த கரி

இருபகம் = வெள்ளைக்காக் காக்கட்டான், காக்கட்டான், கருப்புக் காக்கட்டான் கொடிக்காக்கட்டான்

இருபகல் = காலை, மாலை

இருபடி முடி = இருபண்ணியா எனும் சேங்கொட்டை

இருபதாண்டு மூலி = சித்தர் பசியெடுக் ஏகாதிருக்க இருபது வருடத்திற்கொரு முறை சாப்பிடும் மூலிகை

இருபத்திரிகை = அசோகு

இருபத்தோர் மித்திரம் = உபரசங்களை சத்தாக மாற்றும் அடியிற்கண்ட 21 மித்திரச் சரக்குகள்; மொச்சை- வறட்தவளை கோதுமை- குதிரைக் குளம்பு

உளுந்து- முயலெலும்பு எள்ளு- பன்றிக் கொம்பு எவட்சாரம்- வாழைக்கிழங்கு வெடியுப்பு- குன்றி சத்திசாரம்- ஆதளை விதை சிறுமீன்- புறாவினெச்சம் யானைக்கொம்பு-

குக்குலங்கூட்டு கலைக்கொம்பு- வெல்லம், எருமைக் கொம்பு, சர்க்கரை

இருபண்ணியம், இருபண்ணியா = சேங்கொட்டை

இருபப்புலி = துவரை

இருபலை = சிற்றாமுட்டி, பேராமுட்டி

இருபனி = முன்பனி, பின்பனி

இருபன்னி, இருபன்னியம் = சேங்கொட்டை

இருபாகல் = கொம்புப்பாகல், மிதி பாகல்

இருபிண்ணாக் குக்கீரை = பெரும்பிண்ணாக்குக் கீரை, சிறுபிண்ணாக்குக் கீரை

இருபிரண்டை = பிரண்டை, புளிப்பிரண்டை

இரு பிறப்பு = சந்திரன், சிறகு, முட்டையிற் பிறப்பன, விழுந்து முளைத்த பற்கள்

இருபுலன் = இருவிதக்கழிவு, மலசலம்

இருபூகம் = கருஞ்சீரகம்

இருபூமி = மாதுளை

இருபூலா = வெள்ளைப்பூலாஞ்சி, வறட்பூவா

இருபோக நீர் = நாதநீர்

இருப்பகல் = இரும்பிலிருந்து அகன்ற பொடி

இருப்பவல் = ஒரு கொடி; பாம்பு போல் தரையோடு படர்ந்து கிழங்கு பெரிதாவும் பூக்கள் சிறிய தாகவும் மஞ்சளாகவுமிருக்கும் பல்லிற்கசையாது

காயகற்பமூலிகை 'புத்தர்கைச் சம்மட்டி', 'காயசித்தி', 'உப்பு நீக்கி, 'காரீய செந்தூரி', 'கானல் கள்ளி' போன்ற பல பெயர்களுண்டு

இருப்பவளோதரம் = பசளை

இருப்பாரை = ஒருவகைக் கடல்வாழ் பாரை, கருமூஞ்சிப்பாறை

இருப்பாவல் = ஒரு பூண்டு

இருப்பி = சிப்பிமுத்து

இருப்பிலி = தும்பை

இருப்பிலீயம் = இரும்பினின்று எடுக்கும் ஈயம்

இருப்பு = சூதம், தாமரைப்பூ, சிறுதுரு, காந்தல், இரும்பு

இருப்பு கொல்லி = சிவனார் வேம்பு

இருப்புக்காய் வேளை = ஒருவிதக்காய் வேளை

இருப்புக்கிட்டம் = இரும்புத்துகள்

இருப்புக்கொல்லி = சிவனார்வேம்பு

இருப்புக்கோலம் = தேற்றான்

இருப்புச்சல்லி = அயத்தூள்

இருப்புத்துப்பு = துரு

இருப்பு மணல் = இரும்பு கலந்த மணல், அயச்சிலை

இருப்பு முறி = அரமுறிச் செடி, இதன் இலைகள் அயத்தூள் போல் பளபளப்பாய் இருப்பதால் இப்பெயர்; அவுரிச்செடி

இருப்புலி, இருப்புலிகம் = துவரை, தும்பை

இருப்புலிகாசிதம் = ஊசிமிளகாய்

இருப்புவி = தும்பை

இருப்பை = இலுப்பை

இருப்பைத் திப்பி = இலுப்பைப் பிண்ணாக்கு

இருப்பைப் பூச்சம்பா = இலுப்பைப்பூ வாசனையைப் போன்ற வாசையுடன் கூடிய ஒருவகை நெல்

இருமஞ்சள் = கப்பு மஞ்சள், கத்தூரி மஞ்சள்

இருமடி = இரண்டு மடங்கு, இரண்டு மடிப்பு

இருமண் = மணல் சேர்ந்த களிமண்

இரு மருந்து = உயிருக்காதாரமாகிய சோறும் தண்ணீரும் உள்ளுக்குப் புகட்டும் மருந்து; வெளிக்குப் பூசும் மருந்து

இருமல் = சாதாரணமாய்ப் புகை அல்லது தூசுவாயின் வழியும் மூக்கின் வழியும் உட்புகுதலால் ஏற்படும் சத்தம், சுவாசக் கருவிகளுக்கு ஏற்படும் இழிவு; முத்தோடக் குற்றத்தினால் ஏற்படுவது; பிராணவாயு தாக்கப்பட்டு மேல் நோக்கும் போது குரல் வளையிலுள்ள உதானவாயு; நுரையீரலினின்று காற்றை வெளிப்படுத்தும் போதுண் டாகும் சுத்தம்; ஆட்டிற்கு வருமோர் தொற்று நோய்; கக்கவான்

இருமல் புகை = இருமலையுண்டாக்கும் புகைச்சல் இது தொண்டை யிற்காணும்; தணியாத இருமலையுண்டாக்கும் அழற்சி

இருமல்லி = சிற்றாமல்லி, பேராமல்லி

இருமற் புகை = இருமலைத் தணிக்க உள்ளுக்கிழுக்குபடி காட்டும் மருந்துப்புகை

இருமாதுளம் = இருவகை மாதுளம், புளி மாதுளை, மாதுளை

இருமான் = ஒருவகை எலி

இருமிஸ்தகி = ஒருமருந்து

இருமித்திரம் = காரம், சாரம்

இருமிமத்தகி = பூனைக்கண் குங்கிலியம்

இருமுடக நில்லான் = கரிசலாங்கண்ணி

இருமுட்டி = சிற்றாமுட்டி, பேராமுட்டி

இருமூடி = கும்பிடு கிளிஞ்சல்

இரும்பகம் = கருப்பு எலிச் செவிக் கீரை; இருள் மரம்

இரும்பலி = இரும்பிலித் துவரை

இரும்பவல் = இருப்பவல்

இரும்பன் = எலி, காரெலி, அகழெலி

இரும்பாச்செடி = கொத்தான்

இரும்பாடிமூலி = அழுகண்ணி

இரும்பிலி = ஒரு சிறிய செடி ; ஒருவகைப்பாம்பு; காட்டுத்துவரை, பூக்கள் சிறியதாகவும் மஞ்சள்,

வெள்ளையாயுமிருக்கும், காய்கள் சதைப் பற்றுள்ளாதகவுமிருக்கும் திரிதோடத்தைச் சமப்படுத்தும்

இரும்பிலீயம் = இரும்பிலிருந்து எடுக்கும் ஈயம்

இரும்பு = பஞ்ச உலோகங்களி லொன்று; கார்த்திகைப்பூ, தாமரைமலர் (ஈசுரச்சத்து), அயம், கரும்பொன், பூமி நாதம், உலோகம், பிண்டம், கருமணல் எனப்பல பெயர்களும் நண்டு, பிலால் என்ற பரிபாஷைச் சொற்களும் உண்டு

இரும்புக் கொல்லி = சிவனார் வேம்பு, கொங்கலப்பள்ளி

இரும்புக்காய் வேளை = கருப்புக்காய் வேளை

இரும்புக் கிட்டம் = இரும்புருக்கையில் மேற்திரண்ட கட்டி

இரும்புக் கெண்டி = வெந்நீர்

இரும்புச் சிந்தூரம் = அயச்சிந்தூரம் பலவீனம், மாதவிடாய் நோய்கள், புழுக்களைக் கொல்லல் போன்றவற்றிற்குப் பயன்படும்

இரும்புத்தார் = இலச்சைகெட்ட மரம்

இரும்புத்துப்பு = இரும்புத்துரு

இரும்பு நீற்றி = எருக்கிலை

இரும்புருக்கி = இரும்பை உருக்கும் திறன்மிக்கது, நத்தைச் சூரி, இரத்த மண்டலி

இரும்புருக்கி = எஃகு

இரும்புலி = துவரை, காட்டுத்துவரை, கருந்துவரை, ஒரு செடி தும்பை, ஒருவகைப் பாம்பு

இரும்புலி காகிதம் = ஊசிமிளகாய்

இரும்புவி = சிவனார்வேம்பு, தும்பை

இரும்புளி = ஒருவகைப் புளிச்சக் காய்மரம்

இரும்பூறல் = சிறுவேர், சாயவேர், இரும்புத்துரு

இரும்பை = இலுப்பை, பாம்பு, குடம்

இரு லவங்கம் = கிராம்பு, நீர்க் கிராம்பு

இருலிங்கக்கட்டி, இருலிங்கம், இருலிங்கவட்டி = சாதிலிங்கம்

இருவகைத் தொட்டி = காத்தொட்டி, செந்தொட்டி

இருவகை நிம்பம் = மலைவேம்பு, வேம்பு

இருவங்கம் = வெள்வங்கம் (வெள்ளீயம்), கருவங்கம் (காரீயம்)

இருவரி = வான்சாவல்

இருவரிசி = கார்போகவரிசி, வெட்பாலரிசி

இருவல்நொருவல், இருவல் நொறுவல் = நன்றாய் மெல்லாத உணவு

இருவல்லி = இலாமிச்சு

இருவாக நிம்பம் = சிவனார்வேம்பு

இருவாச்சி = ஒருவகைப் பெரு மல்லிகை, கானக வாட்சி

இருவாச்சிதா = ஊடுசில் அதாவது ஒருவகை உசிலமரம்

இருவாடி = இருவாச்சி

இருவாட்சி = ஒரு மரம், முல்லை, மவ்வல்

இருவாட்டித் தரை = மணலும் களிமண்ணுஞ் சேர்ந்த நிலம்

இருவாதம் = பித்தவாதம், சிலேட்டுமவாதம்

இருவாய்க்கட்டு = மலசலக்கட்டு

இருவாய்க் குருவி = ஒருவகை மலைக்குருவி

இருவாய்ச்சி = இருவாச்சி

இருவாரு = ஒருவகை வெள்ளரி, கொம்மட்டி

இருவாளி = குதிரை

இருவி = தினைத்தாள், முகர்ந்தாரைக் கொல்லும் நாவி வச்சநாவி

இருவிகம் = குடசப்பாலை

இருவிக் காந்தம் = ஒருமருந்து, ஒரு நச்சு மூலிகை

இருவிஷம் = பிராணிவிடம், தாவரவிடம்

இருவில் = வெள்ளீயம்

இருவேம்பு = வேம்பு, சிவனார்வேம்பு

இருவேர், இருவேலி = குருவேர், வெட்டிவேர் இது பித்தத்தைச் சாந்தி செய்யும் சிலேட்டுமத்தை அறுக்கும் சுரதாகத்தைப் போக்கும் இலைவேர்

இருவேலித் தைலம் = வெப்பத்தைத் தணிப் பதற்காக வெட்டி வேனிரின்று தயாரிக்கும் ஒரு வகை மேற் பூச்சுத்தைலம்

இருவேல் = வெள்வேல், கருவேல்

இருவேளை = நாய்வேளை, நல்ல வேளை (தைவேளை), மிடாவேர்

இருவேள் = பிடாரிவேர்

இருழை = மூங்கில்,

இருளகம் = பன்றி, கருஞ்சீரகம்

இருளகற்றி = எருக்கிலை

இருளகாந்தம் = ஊசிக்காந்தம்

இருளபோளம் = கரிய போளம்

இருளம் = சாதிலிங்கம்

இருளரிவான் = நெஞ்செலும்பு

இருளருக் கொளியான் = பச்சைக்கல்

இருளவேணி = ஊதா அல்லி

இருளறுகு = கருப்பறுகு

இருளறுக்கு மொளி = இருளருக்கொளியான்

இருளன் = உருவத்தை மாற்று மோர்வித மூலிகை

இருளாகிதம் = கரூமத்தை

இருளி = பன்றி, கருஞ்சீரகம், கொன்றை

இருளிங்க வட்டி = சாதிலிங்கம்

இருளிச்சீரகம் = கருஞ்சீரகம்

இருளிச்செவி = அமுக்கிரா

இருளியம் = பொன்

இருளுவா = அமாவாசை

இருளை = மூங்கில்

இருள் = கறுப்பு, யானை, இருள் மரம், சிறுநாகம், சிறு நாகப்பூ, நெல்லி, இருவேல், யானைப்புல், பீநாறி மரம், இரவு நாய்ப்பிடுக்கன் : இதன் பூ வெண்மை, இதன் இலையைப் பாலில் போட்டு காய்ச்சி இறுத்து தேனில் கலந்து கொடுக்க தோல் நோய் போம் விதையை அவ்வாறு செய்து கொடுக்க இரணங்கள் நீங்கும்

இருள் கிழங்கு = மருள் கிழங்கு, இலேகியம் செய்து கொடுக்க நாட்பட்ட இருமல், சயரோகம் நீங்கும்

இருள் தங்கிய நாள் = அமாவாசை

இருள்மரம் = நாகசம்பங்கி

இருள்மருகி = கருங்குவளை

இருள்மருது = கருமருது

இருள்முகா = நாவி வச்சநாபி, நஞ்சு

இருள்மூலி = இருள் செடி, கருங்காலி

இருள்வலி = சூரியன்

இருள்விடு செடி = காமாலையைப் போக்குமோர்வித மூலி

இருள்வீடு = நூக்கமரம், சோதி விருட்சம், ஆடு தீண்டாப்பாளை

இருள்வேல் = இருவேல், ஒருபெரிய மரம்

இரூமிமலைத்தகி, இரூமிமஸ்தகி = பூனைக் கண் குங்கிலியம்

இரூரசெந்திரம் = இரச(த)ம்

இரெப்பை = கண்ணிதழ்

இரேகம் = உடம்பு, வயிறு

இரேகுலிசம் = கறுப்பு மணத்தக்காளி

இரேகையுடையோன் = முட்டைச்சிலந்தி

இரேக்கு = தங்கத்தாள், பொன் தகடு, பூவிதழ்

இரேசககுணா = கடுகு

இரேசகம் = பேதி மருந்து, கருங்குட்டம்

இரேசகி = கடுக்காய், சீந்தில்

இரேசகிக்குடிரம் = மலையெருக்கு

இரேசகுணம் = குளிர்தாமரை

இரேசக்கடுகு = செங்கடுகு

இரேசக்குணா = இரேசக்குணா

இரேசக்கொடி = ஊணாங்கொடி

இரேசசுகுனா = இரேசகக்குணா

இரேசந்திரம் = இரதம் (இரசம்)

இரேசப்பூடு = வெள்ளைப்பூண்டு

இரேசம் = இரசம், நஞ்சுநீர், மிளகுநீர், வெள் வெங்காயம்

இரேசலம் = நெல்லி நிறம்

இரேசணம் = பேதி மருந்து, பேதி, வெள்ளைப்பூண்டு

இரோசனாக்கிணி = வெண்கடுகு

இரேசனி = வெள்ளைப்பூண்டு

இரேசன் = வெள்வெங்காயம், வெள்ளைப்பூண்டு

இரேசுதல் = மந்தித்தல், செரியாமை

இரேசேந்திரம் = இரதம் (இரசம்)

இரேசோபனம் = நறும் பிசின்

இரேச்சி = இரேசகி

இரேட்சுவல்லி = பாலிருள்செடி

இரேணு = பூந்தாது, துகள்

இரேணுகம் = ஒருவாசனை மருந்துச் சரக்கு, காட்டு மிளகு

இரேணுகாமூலி = செவ்வாமணக்கு

இரேணுகை = காட்டுமிளகு

இரேதகம், இரேதசு, இரேதஸ் = விந்து

இரேதசுகலிதம் = விந்துதானாய் ஒழுகிவிடல்

இரேதம் = திமிசு

இரேயம் = கள்; காய்ச்சி வடித்த சாராயம்

இரேவதி = கடைநாள்

இரேவதிக் கிரகம் = 10 ஆம் நளில் 10 ஆம் மாதத்தில் அல்லது 10 ஆம் வருடத்தில் குழந்தையை அல்லது தாயைப் பிடிக்குமோர் வகைக் கிரகதோடம்; உடம்பிளைத்தல், சுரம், உடம்புலி, கண் நிலைக் குத்தலிடல் முதலிய குணங்கள் ஏற்படும்

இரேவல் சின்னி = மஞ்சள் சீனக்கிழங்கு

இரேவல் சின்னிப்பால் = மக்கிப்பால்

இரேவல்சீனி = இரேவல் சின்னி

இரேவல் சீனிப்பால் = இரேவல் சின்னிப்பால்

இரை = நீர், மாமரம், நாக்குப் பூச்சி, பூமி, உணவு

இரைக்குடர் = இரைப்பை; சாப்பிடு முணவைக் கொண்டு போகுங்குடல்

இரைக்குழல் = உணவு செல்லுங்குழல்

இரைச்சல் = வயிற்றிரைச்சல், காதிரைச்சல், வீக்கம்

இரைஞ்சி = பட்டைமரம்

இரைதல் = ஒலித்தல், வீங்குதல்

இரைதவம் = கொடிநவ்வல்

இரைதேறுதல் = செரியாமல் தங்கல்

இரைத்தல் = மூச்சு வாங்கல், ஈழை இழுத்தல், வீங்குதல்

இரைத்து = உப்பு, இண்டஞ்செடி, உப்பிலி, புலிதொடக்கி, வெண்கலம்

இரைத்துமம் = புலிதொடக்கி

இரைந்து = உப்பில்

இரைபாகம் = பிரம்பு

இரைப்பற்று = செரியாத உணவு

இரைப்பிருமல் = இரைப்போடு கூடிய இருமல், சுவாசக் குழாய்களின் சுருக்கத் தினாலேற்படும் காசம்

இரைப்பு = மூச்சுவிட முடியாமல் மிக்க விரைவுடன் ஒலியிடல்; வீக்கம்; இரைதல், ஒரு நோய்

இரைப்பு காசம் = நுரையீரலின் சிறிய சுவாசக் குழல்கள் சுருங்குவதால் காற்று போக இடம் வசதியாய் இல்லாமல் மூச்சு விட முடியாமை, நெஞ்சிலிரைச்சல், இருமல் முதலிய குணங்களைக் காட்டும் ஒருவித நோய்

இரைப்புகாப்பாசி = கொடிப்பாசி

இரைப்பு மாந்தம் = குழந்தைகளுக்குச் செரியாமையினால் வயிறு வீங்கிக் காணுமோர் மூச்சுமுட்டல், இதில் வலிப்புண்டாகும்

இரைப்பூச்சி = நாக்குப்பூச்சி

இரைப் பெட்டி = உணவு தங்கும்பை, பறவைகள் இரை ஒதுக்கும் பை

இரைப் பொலி = ஒருவகை எலி, இது கடித்தாலிரைப்பு; இருமல், இளைப்பு முதலிய குணங்களைக் உண்டாக்கும்

இரைப்பையசைவு = உணவு செரிப்பதற்காக குடலுக்கு இயற்கையாய் அமைந்த ஒரு அசைவு

இரைப்பை வீக்கம் = மாடுகளுக்கு வயிறுப்பிக் கொள்ளும் ஒரு நோய்

இரொட்டிகை = இண்டு

இல = இலவு

இலகச்சோலம் = கச்சோலளம்

இலகணம் = வெள்வெங்காயம்

இலகம் = ஊமத்தை

இலகரி = கத்தூரி

இலகருணி = கண்டங்கத்திரி

இலகிரி = அபினி, கஞ்சா, சாதிக்காய், சாதிப்பத்திரி, மயக்கத்தை உண்டாக்கும் பொருள்

இலகு = அகில், ஒரு மருந்து சீதேவி

இலகு குணம் = குடல், வயிறு முதலிய உறுப்புகளுக்கு எவ்வித துன்பமு முண்டாக் காமல் எளிதில் செரிக்கக்கூடிய குணம்

இலகுசம் = ஈரப்பலா, ஈரப்பசை, (இ) விலாமிசு, எலுமிச்சம் பழம்

இலகுஞ்சம் = பூனைக்காலி

இலகுபஞ்சமூலம், இலகபஞ்சாங்க மூலம் = இலகுகுணம் பொருந்திய ஐந்துவித வேர்; சிறு மல்லிகை, பெரு மல்லிகை, சிறு வழுதனம், கண்டங் கத்திரி, ஆனை நெருஞ்சில்

இலகு பாகம் = சிறு தீயிலிட்டுப் பக்குவஞ் செய்த ஒரு மருந்து; எளிதாய் செய்த மருந்து

இலகு புடம் = ஒரு சாண் உயரத்திற்குட் பட்ட புடம்

இலகு பேதி = துன்பப்படாமல் சாந்த மாயுண்டாகும் பேதி; எளிதல் பேதியாகும் மருந்து

இலகு போசனம் = எளிதில் செரிக்கப்படும் உணவு

இலகுலங்கணம் = அரைப்பட்டினி

இலகு வூஷ்ணம் = மான் செவிக்கள்ளி, சிறிதான வெப்பம்

இலக்கப்பத்திரம் = காட்டாத்தி

இலக்கர் = ஆடை, கந்தைத் துணி

இலக்கனி = காந்தாரிநாடி

இலக்காரம் = சீலை

இலக்கிரா = ஏறழிஞ்சல்

இலக்குமி = முத்து, மஞ்சள், ஓரிதழ்த்தாமரை

இலக்கை = ஆடை

இலங்கணதாரை = குடல்

இலங்கம் = எறும்பு

இலங்கணம் = பட்டினி

இலங்கலி = வெந்தோன்றி செங்கரந்தை, செங்காந்தன் (தேங்கு)

இலங்காசிகை = நாகப்பூ

இலங்கி, இலங்கில், இலங்காலி = வெந்தோன்றி, , செங்காந்தள், அகில் செங்கரந்தை

இலங்குபொழுது = படுஞாயிறு

இலங்குமீன் = குளத்துமீன்

இலங்கைக்வ் = ஒருவகைக் கடற்பாசி

இலங்கைக் கறுலாப்பபட்டை = சிலோன் தேசத்தினின்று இறக்குமதியாகும் கறுவாப் பட்டை

இலங்கை தீச்சுடர் = மாவிலிங்க மரம்

இலங்கையேலம் = இலங்கைத் தீவில் விளையும் ஏலம்

இலங்கோசிகை = இலங்காசிகை

இலசகம் = ஊமத்தை

இலசதி = இலந்தை

இலசியம் = கீழாநெல்லி

இலசு = இந்துப்பு

இலசுணம் = வெள்வெங்காயம்

இலசுன தபம் = உள்நாக்கழற்சி, தொண்டைக்கம்மல்

இலசுனம் = வெள்ளைப்பூண்டு, வெள்வெண்காரம்

இலசுனரம் = மூச்சுவிட முடியாத தொண்டைப்புண்

இலசூக நாரி = எருமூட்டைப் பீநாறி

இலசூசியம், இலசூயம் = கீழாநெல்லி

இவசைம் = இலாமிச்சு

இலச்சகி = தொட்டாற் சிணுங்கி

இலச்சரம் = அட்டுப்பு

இலச்சை = கொட்டைமரம், கல் தேக்கு, தேக்கு

இலச்சைகெட்டமரம் = சுண்டி

இலச்சைகெட்டவிலை = கல்தேக்கு

இலஞ்சலி = கொப்பூழ் மகிழமரம்

இலஞ்சி = ஏரி, கொப்பூழ், சாரைப் பாம்பு, புன்கு, மகிழ மரம், மாமரம், குளம் புனுகு

இலஞ்சியம் = கீழாநெல்லி

இலஞ்சிலாங் கொடி = கருங்கோவை

இலஞ்சிலி = ஏலம்

இலஞ்சீவி = கலவைக்கீரை

இலஞ்சு = புன்கு, மகிழமரம்

இலடகம் = புளியமரம்

இலடதாவிகம் = எருமைமுன்னை

இலடம் = புளிய மரம்

இலடவி = அகில்

இலட்சணமாயி = வெண்காரவுள்ளி

இலட்சுணம் = வெள்ளைப்பூண்டு

இலட்சுணா = பெருவழுதலை

இலட்சுமணபுத்திரர், இலட்சுணமூலம் = நறுந்தாளி

இலட்சுமணம், இலட்சுமணா, இலட்சுமனும் = தாளி

இலட்சுமி = அரிதாரம், வன்னி, பொடுதலை, பன்னீர், தாளி

இலட்சுமிவ் = வெளித்தாமரை (ஆகாசத் தாமரை)

இலட்சுமி சுவர்ணம் = பொன் வண்ணச்சாலி

இலட்சுமி சேர்க்கை = வன்னி

இலட்சுமிசை பத்திரசன்னி = தாளி

இலட்சுமி நாகனி = தான்றிக்காய், தாளி

இலட்சுமி ரேஷ்டம் = ஓரிதழ்த் தாமரை

இலட்சுமி விலாசம் = பாக்கு, வெள்ளரிசி (பச்சரிசி)

இலட்சும் = நாகதாளி

இலணை = அரசு

இலண்டம் = யானை, குதிரை முதலியவைகளின் (இ)லத்தி

இலண்டனாமணக்கு = சீமையாமணக்கு

இலண்டன் பருத்தி = அமெரிக்க தேசத்துப்பருத்தி

இலதிகை = சிறுபடர்கொடி

இலது மூகி = கல்லுப் பயிற்றங்கொடி

இலதை = இலந்தை, கொடி, படர் கொடி, வள்ளிக் கொடி, தக்கோலம், கொடிக்காரா மணி, கம்மாறு வெற்றிலை, கோல் கொடி

இலதைவன்னி = கொடிவேலி

இலத்தி, இலத்தை = குதிரை, யானை இவற்றின் மலம், சிப்பிலி மீன்

இலந்தை = படர்கொடி

இலநட்டம் = மிளகு

இலந்தியீர்ந்தை = புங்கு நத்த ஆலம்

இலந்தை = ஒருமுள் மரம், 15 வகைகள் உள
(கொடியிலந்தை, நிலவிலந்தை) கல்லுப்பு

இலந்தைக் கட்டைத் தைலம் = உலர்ந்ததும் உலராததுமான இலந்தைக் கட்டையை ஒரு பக்க அடுப்பில் வைத்தெரிக்க மற்றொரு பக்கத்தினின்று இறங்கும் தைலம் (வெண்குட்டம் போம்)

இலந்தைக் கரி = இலந்தைக் கட்டையை எரித்தெடுத்த கரி

இலந்தை வடை = இலந்தைப் பழத்தின் சதைப்பற்றைக் காயவைத்துத் தட்டின அடை

இலபனம் = முகம், வாய்

இலபனரம் = வாய்ப்புண்

இலபித்தல் = வாய்வேக்காடு

இலபேதகி = கழுநீர்ப்பூ

இலமலர் = இலவமலர்

இலம்பகம் = மாலை, வலம், புரிக்கொடி

இலம் பத்தகடு = மூக்கின் உட்புறத்திற் கீழ்ப்ப குதியில் அகம், புறமென இரு பக்கங் களுள்ள நீண்ட மெல்லிய எலும்பு

இலம்பிகை = அண்ணாக்கு

இலம்பிலி = ஒருவகை மரம்

இலம்பை = நற்சுரை

இலம்பைனா = சுரைச்செடி

இலலாடம் = நெற்றி

இலலாட விளம்பு = இலலாட தலைமூட்டு நெற்றி விளம்பு எலும்பையும் பித்திகை எலும்பையும் ஒரு காதினின்று மற்றொரு காது வரையில் சென்று இணைக்கும் ரேகை

இலலாலம் = குதிரை, இரேகை, பிடரிமயிர்

இலலிதை = மான், மதம், கத்தூரி

இலவகம் = தசையரும்பு

இலவங்கச் சுருட்பாக்கு, இலவங்கச் சூர்ப்பாக்கு = ஒருவகை வெட்டுப்பாக்கு

இலவங்கத்தோல், இலவங்கப்பட்டை = கருவாப் பட்டை

இலவங்கப் பட்டைமரம் = கருவாமரம், பெரியலவங்கப் பட்டை மரம், காட்டுக் கருவா மரம்

இலவங்கப் பண்ணிசம் = ஊறுகாய்

இலவங்கப் பத்திரி = இலவங்கமரத்தின் இலை, கருவாலை

இலவங்கப் பாசிதம் = எரிசாலை (நீர்மேல் நெருப்பு)

இலவங்கப்பூ = இலவங்கத்தின் மேற்பூ, இலவங்க மரத்தின் பூ, கிராம்பு, கருவாப்பூ, வாசனை

இலவங்கம் = கிராம்பு

இலவஞ்சி = காட்டு சம்பங்கி

இலவணக் கூர்மை = இலவணபாடாணம்

இலவண சமுத்திரம் = உப்புக்கடல்

இலவண சாரம் = உப்புச்சத்து, சோடாவுப்பு

இலவணச் சுண்ணம் = உப்பைக்கட்டி அதனின்று தயாரித்த ஒரு உப்புச்சசுண்ணம்

இலவணதம் = உப்புச்சத்து

இலவணத்திராவகம், இலவணத்தீநீர் = உப்புத் திராவகம்

இலவண பற்பம் = உப்பைப் புடமிட்ட பற்பம்

இலவண மானி = உப்புச்சத்தை நிர்ணயிக்கும் ஒருவிதக் கருவி

இலவண மேகம் = மூத்திரம் தெளிவடைந்து உவர்ப்பாயிருக்கும் ஒருவகை மேக நோய்

இலவணம் = உப்பு, உவர்ப்பு, இந்துப்பு

இலவணவாயு = உப்புவாயு

இலவணசாரம் = இலவணவாயு

இலவண வாழை = ஒரு வாழை

இலவண வாழைக் குழிநீர் = வாழை மரத்தின் அடியில் நிற்கும் தண்ணீர்

இலவதீதம் = ஒருவகைக் கறுப்பு நாக்கு மீன் (எருமை நாக்கி) தட்டையாய் எருமை நாக்கொத்த தாய் இருக்கும்; மேக நாதமூலி

இலவன் = அரசு

இலவமரம் = இலவம்பஞ்சுமரம்

இலவம் = தேற்றாமரம், கிராம்பு, இலவமரம், சாதிக்காய், தசையரும்பு

இலவலி = வள்ளிக்கொடி

இலவ விகலை = தசையரும்பு அழுகல்

இலவி = மிளகு

இலவு = இலவ மரம், இலவம்பஞ்சு, தேற்றான், செம்பஞ்சு பொங்காவு

இலவே = பொங்காவு

இலளிதை = கத்தூரி

இலனை = அரமரம்

இலாகன் = ஒருவகை மீன்

இலாகிரி = சாதிபத்திரி, கரூமத்தை

இலாகிரி பொருள் = மயக்கத்தையுண்டாக்கும் பொருள்

இலாக்கம் = அரக்கு

இலாக்கிரி = செம்மெழுகு

இலாக்கை = இந்திரகோபத்தைப் போன்ற பூச்சி, ஈர்

இலாக்கொட்டை = இஞ்சி

இலாங்கரலி = தென்னைமரம்

இலாங்கலம் = ஆண் உறுப்பு

இலாங்கலி = செங்காந்தள், தென்னை, பனை, சேவகனார் கிழங்கு, கார்த்திகைப்பூ, வெந்தோன்றி, செங்கரந்தை

இலாங்கலிகம் = அலப்பைக் கிழங்கு

இலாங்கலித் தைலம் = தேங்காய்ப்பாலில் மருந்துச் சரக்குகளைக் காய்ச்சி இறக்குந் தைலம்

இலாங்கனி = தென்னை

இலாங்காலி = தென்னைமரம், செங்கரந்தை

இலாங்காவி = செங்கரந்தை

இலாங்கூலி = குரங்கு

இலாசமத்தகம் = ஓமம்

இலாசம், இலாசை = பொரி

இலாஞ்சன நோய் = உடம்பில் பலவிடங்களில் பரு அல்லது மச்சத்தைப் போல் குறிகள் காணுமோர் நோய்

இலாஞ்சி, இலாஞ்சிலி = ஏலம்

இலாட சிந்தூரம் = தேய்ந்த குதிரைக்காலிரும்பை எடுத்துச்சுத்தி செய்து முறைப்படிப் புடம் போட்டு நீற்றியெடுத்த அயச்சிந்தூரம்

இலாடத்தானம் = புருவமையம்

இலாடபுரணிமன் = கழுதை

இலாடமூலி = அயத்தைப் பற்பமாக்கும் மூலிகை

இலாடம் = நெற்றி, புளிய மரம், குதிரையின் காற்பறளை

இலாடவி = அகில்

இலாடன் பருத்தி = கூர்ச்சரத்தில் விளையும் ஒருவிதப் பருத்தி; இலண்டன் பருத்தி; மயிலான் பருத்தி

இலாட்சை = அரக்கு, செவ்வரக்கு, செம்பஞ்சு

இலாட்டு = குதிரைவாய்துரை

இலாதகம் = புனம்புளி

இலாதனம், இலாதன் = மேனாட்டு வாசனைப் பிசின்; மருத்துவத்திற்கு உபயோகமாகும்

இலாதிக்கரும்பு = பேய்க்கரும்பு

இலாது = கல்லுப்பு

இலாமச்சம், இலாமச்சை, இலாமிச்ச, இலாமிச்சை = விலாமிச்சைவேர், வெட்டிவேர், எலுமிச்சை

இலாம் = புளிய மரம்

இலாம்புகம் = நீர்க்கடம்பு

இலாயம் = ஏலம்

இலாலாவின் இரதம் = வாய்நீர்

இலாவடம் = புளி

இலாவணம் = உப்பு

இலாவம் = ஒருவகைச் சிட்டுக் குருவி

இலாளம் = புளியமரம்

இலி = சூதம், தருப்பை, எலி

இலிகம் = எலி

இலிகுசக்கனி, இலகுசம், இலிகுமிசம் = எலுமிச்சம் பழம்

இலிகேசம் = சவுரிக்கொடி

இலிக்குசம் = இலிகுசம்

இலிங்ககவச சித்திரநோய் = ஆண்குறியின் தோல் விரிந்து புண்ணாகும் ஓர்வித நோய்; பெண்குறியிலும் இவ்விதமே நோய் காணும்

இலிங்க கவசம் = ஆணுறுப்பின் மேற்றோல்

இலிங்க காசம் = கண்ணில் வரும் நோய்; நேத்திர வெண்படலம்

இலிங்ககீட நோய் = புழுக்களையுண்டாக்கும், ஆணுறுப்பைப் பற்றிய நோய்

இலிங்ககோளம் = அண்டவாதம்

இலிங்கக் கட்டி = இலிங்கத்திரட்சி, ஆண் உப்பிலுண்டாகும் கட்டி

இலிங்கக் கட்டு = நெருப்பிற் கோடாத படிகட்டுண்டலிங்கம் வாதத்திற்குதவும்; லிங்கத் தைப் பல கடைச் சரக்குகளுடன் சேர்த்து கட்டாகச் செய்தது; இது சுரம், சன்னி பாதசுரம், அதிக குட்டம், சிரங்கு, வாத நோய் இவற்றைப் போக்கும்

இலிங்கக் கழலை = இலிங்கத்திரட்சி, ஆணுறுப்பில் உண்டாக்கும் கட்டி

இலிங்கக் கிரந்தி = ஆணுறுப்பில் உண்டாகும் கிரந்திப் புண்

இலிங்கக் குழம்பு = ஒருவகை மருந்துக்கூட்டு: மருந்திற்குப் பயன்படும்

இலிங்கக் கோவை = ஐவிரலி

இலிங்கசத்துரசம் = பல கல்லுரசம்

இலிங்கசுத்தி = மருத்துவத்தில் பஞ்ச சுத்திப்படி இலிங்கத்தைச் சுத்தி செய்தல்

இலிங்கச் சிலந்தி = மேகத்தினால் ஆணுறுப்பின் மேல்காணும் சிலந்தி

இலிங்கச் சூலை = ஆணுறுப்பில் மேகத்தினாலுண்டாகும் குத்தல் நோய்

இலிங்கத்தானம் = ஆணுறுப்பு

இலிங்கத் துருத்திரம் = அண்டச்சுண்ணம்

இலிங்க நாசினி = கண்ணிலுண்டாகுங் காசநோய்க்குச் சிகிச்சை செய்யாவிடில் கண்களில் நான்காம்புரையை அது தாக்கி லிங்கத்தை நாசப் படுத்தும்; பார்வையைக் கெடுத்து குருடாக்கிவிடும்

இலிங்க நாடி = நாபிக் கூர்மத்திலிருந்து பிறந்து பெண் அல்லது ஆண் குறியில் பரவி இரு பிரிவாகி ஒன்று சிறு நீரையும் மற்றது சுக்கிலத்தையும் வெளிப்படுத்தும் நாடி

இலிங்க பந்தனி = ஆத்திமல்லிகை (இலிங் கத்தைக் கட்டக்கூடிய சரக்கு)

இலிங்கபந்தி = பேய்த்தும்மட்டி

இலிங்க பாடாணம் = இலிங்கத்தைப் புடம் போட்டெடுத்த பற்பம் (விளைவு பாடானம் 32 ல் ஒன்று)

இலிங்க புடோல் = ஐவிரலிக் கொவ்வை, புலிதடுக்கி

இலிங்க பெந்தகத்தி = செவ்வாமணக்கு

இலிங்கப் பகுப்பு = புங்கன் கொட்டைப் பருப்பு

இலிங்கப் புகை = இலிங்கத்தின்று தயாரிப்பது எருக்கன் வேர்ப்பட்டை 8 வ, எருக்கன் கரி 4 வ, சாதிலிங்கம் 4 வ, மிளகு 1 வ, இவற்றை ஒன்றுபடக் கல்வத்திலிட்டு பரட்டை இலையின் சாறு விட்டரைத்து வெயிலில் உலர்த்த வேண்டும் அதனை நெருப்பிலிட்டுப் புகைக்க கன்னப் புற்று, தொண்டை, மூக்கு இவ்விடங்களில் காணும் கிரந்திப்புண், மண்டைக் குத்தல் குணமாகும்

இலிங்கப்புல டோல் = இலிங்கபுடோல்

இலிங்கப் புண் = நோய் கண்ட மாதரைப் புணருவதால் ஆணுறுப்பில் இரணமெழும்பும் மேக சம்பந்தமான நோய்

இலிங்கப் புற்று = பருக்கள் போல் ஆண் குறியிலுண்டாகும் ஓர் வகை மேகநோய்

இலிங்கமணி, இலிங்கமலர் = ஆணுறுப்பு

இலிங்கமா = ஆண்குறியினுட்புறம் உண்டாகும் மாவைப் போன்ற நாற்றமுள்ள கசிவு; பெண்குறியினுள் உள்ள மாப்போன்ற நாற்ற பொருள்

இலிங்கமூலி = கறிப்புடலை

இலிங்க மெழுகு = இலிங்கத்தினால் செய்த மெழுகு, வாத வைத்திய மெழுகு என இருவகைப்படும்

இலிங்கம் = சாதிலிங்கம் ; ஒரு வைப்புச்சரக்கு, ஆணுறுப்பு, மாதவிங்கம், குங்கிலியம், நோய்க்குறி, கண்விழியில் நடுவிலிருக்கும் பாவை

இலிங்கம் பெற்ற கன்னி = செவ்வலரி

இலிங்க வலரி = மஞ்சள் பூப்பூக்கும் அலரி

இலங்க வைப்பு = இலிங்கத்தை வைத்திய முறைப்படி செய்தது

இலிங்காரிசம் = பருக்கள் போல் ஆண் குறியில் உண்டாகும் மேக நோய்

இலிங்கு = மாவிலிங்கு

இலிச்சம் = எலுமிச்சை

இலிதி = பித்தி

இலிந்தகம் = கருங்குவளை

இலுங் காலிகம் = எலுமிச்சம்பழம்

இலுதை = அணில்

இலுப்பெண்ணெய் = இலுப்பை நெய்

இலுப்பை = இருப்பை

இலுப்பைக் கற்கண்டு = இலுப்பைப் பூவினின்று தயாரிக்கும் கற்கண்டு

இலுப்பைக் கொட்டை = இலுப்பை விதை

இலுப்பைச் சாராயம் = இலுப்பைப் பூவினின்று காய்ச்சி வடிக்கும் சாராயம்

இலுப்பைச் சர்க்கரை = இலுப்பைப் பூவினின்று தயாரிக்கும் சர்க்கரை

இலுப்பைப் பால் = இலுப்பை மரத்தினின்று வடியும் பால்

இலுப்பைப் பூச்சம்பா = ஒருவித வாசனையுள்ள சம்பா நெல்

இலுப்பை ரசம் = இலுப்பைக் காயினின்று எடுக்குஞ்சாறு

இலுப்பொறுக்கி, இலுப்பொறுசி = பீர்க்கு

இலெட்சுமி = தாளி

இலெத்து = கல்லுப்பு

இலேகம் = ஒரு வித மருந்து

இலேகிணி = மஞ்சள்

இலேகிதம் = செருந்தி

இலேகியம் = ஒருவித மருந்து

இலேசுணம் = அரிதாரம்

இலேதீதம் = எரிபூடு

இலேநறு = கல்லுப்பு

இலேந்து = கந்தகவுப்பு, கல்லுப்பு

இலேப பேதி = கல்லுப்பைக் கொண்டு தயாரித்த ஒரு குரு மருந்து

இலேபம் = தக்கோலம், வால்மிளகு, பூசுமருந்து, கல்லுப்பு, கந்தகவுப்பு, பூச்சு

இலேபி = பூச, பூச்சு

இலேபை = சீலைமருந்து

இலேமாயம் = நிலக்கடம்பு

இலேம்புகம் = நிலக்கடம்பு, கைப்பு

இலேம் போருகம் = பாம்புக்கொல்லி

இலேலிகம் = பாம்பு, வயிற்றுக் கீரிப்பூச்சி

இலேலிகானம் = பாம்பு

இலேவுந்து = கல்லுப்பு, கந்தகவுப்பு

இலை = பச்சிலை, வெற்றிலை, பூவிதழ், அப்பவர்க்கம், தழை, ஏடு, இலைக்கறி

இலைக் கடுக்காய் = ஒருவகைக், கடுக்காய், இலைக்கட்டு

இலைக் கட்டு = இரணம், கட்டி முதலியவைகளுக்கு பச்சிலை மூலிகைகளை வைத்துக் கட்டுதல்

இலேவ்வயம் = சிற்றாமணக்கு

இலைக் கஷாயம் = பச்சிலைக் குடிநீர்

இலைக்கலம் = தொன்னை

இலைக்கள்ளி = ஒருவகைக் கள்ளி

இலைக்கறி = கீரை

இலைக் கற்றாழை = முள்ளுக் கற்றாழை

இலைக் கிளி = இலை போன்ற சிறகுள்ள, இலையைத் தின்னும் பச்சை வெட்டுக்கிளி

இலைக்கொடி = வெற்றிலைக்கொடி

இலைச்சாற்றி வீயங்கட்டி = விருத்தி அதாவது மருது

இலைச்சாற்றில் சத்தாகி = காட்டுக்கொள், கருப்புக் கொள்

இலைச் சுருளி = வெற்றிலைச் சுருள், ஒரு பூண்டு

இலைச்சை = நிறம்

இலைஞமல் = இலைச்சருகு

இலைதன்னி லீயங்கட்டி = இரும்பிலி (செடி) விரும்பல் (செடி)

இலைத் தடை = வாழையிலையேடு, வாழை மட்டையிற் தைத்தயிலை

இலைத்தல் = சோர்வடைதல், வாய் அரோசித்தல்

இலை நொச்சி = கரு நொச்சி

இலைப்பசலை = பெரும்பசலை

இலைப் பருப்பு = மட்டமான துவரம் பருப்பு

இலைப்பாசி = குழைப்பாசி

இலைப் பாசிக்கள்ளி = ஒரு வகைக் கள்ளி

இலைப் பிரப்பாகல் = மிதிபாகல்

இலைப்பு = வாய் அரோசித்தல், சுவைக்குறைவு

இலைப்புரசை = சீனப்புரசமரம்

இலைப்புல் = ஒருவகைப் புல்

இலைப் பூச்சி = இலையைத் தின்னும் பூச்சி

இலைப் போங்கு = கோங்கு

இலைப் பொல்லம் = வாழையிலைத் தண்டு

இலைமுலைமாது = தூதுவளை

இலைமேற் காய் = வெள்ளைக்கடம்பு, நாய்க்கடம்பு, மலைத்தணக்கு

இலையத்தி = ஒருவகை அத்தி

இலையமுது = வெற்றிலை

இலையான் = ஈ

இலை யிலைத்தல் = சுவைகெடுதல், பச்சைநிறமாதல்

இலையின்கள்ளி = இலைக்கள்ளி

இலையொளி மாதர் = சாரைப் பாம்பு

இலைவாகை = பெருவாகை

இலை வாணியன் = வெற்றிலை, காய்கறி

இலோபம் = வால்மிளகு

இலோபுகம் = நிலக்கடம்பு

இல் = தேற்றாங்கொட்டை, இடம்

இல்லகம் = தேற்றான்

இல்லடை, இல்லடைக்கலம் = ஒட்டடை

இல்லடைப்புல் = முயற்புல்

இல்லம் = தோற்றான், மரம், தேன், கொன்னை, தெற்கு

இல்லறத்தின் அண்டம் = வழலை

இல்லறத்தின்புவி = மரகதம்

இல்லன் = தேக்கு

இல்லா = இல்லாவாட்டிவேர்

இல்லாடவிளிம்பு = தலை மூட்டு

இல்லா டோதயம் = பிரசவத்தில் குழந்தையின் நெற்றி வெளிவருதல்

இல்லி = துளை, தேற்றானிலை, தேற்றான், வால் மிளகு, கடற்கரையோரங்களில், காணும் புழு, வெற்றிலை, மிளகு

இல்லிகம் = சிறுகீரை

இல்லிக்காது = சிறுதுளைக்காது, இதழற்றகாது

இல்லிசம் = ஒருவகைமீன்

இல்லெலி = வீட்டெலி

இல்லெனல் = மரணம்

இல்லுறைகல் = அம்மிக்கல்

இல்லேகம் = முப்பிரண்டை

இவகரி = கத்தூரி

இவடகம் = பனைப்பிசின்

இவடம் = பெருமருந்து

இவடன் = இந்துப்பு

இவநட்டம் = மிளகு

இவந்து = கல்லுப்பு

இவராவடி = ஏலம்

இவனட்டம் = மிளகு

இவனம் = விளக்கு

இவராவடி, இவாரவட்டி = ஏலம்

இவி = சந்தனப்பொடி

இவியாடம் = இரசகற்பூரம்

இவுளி = குதிரை, மாமரம்

இவேட்டிகை = இண்டங்கொடி

இவைநாகிதம் = மிளகு

இவ்வடம் = பெருங்காயம், குங்குமம்

இவ்விடம் = பெருங்காயம்

இழங்காலி = தென்னைமரம்

இழசு = கரும்புச்சாறு

இழப்பு வெற்றிலை = நல்லதுங் கெட்டதுங் கலந்த வெற்றிலை; எப்போதும் பீளையும் நீரும் ஒழுகிக் கொண்டிருக்கும் கண்; இமை திறந்த கண்; இமைகள் இடைவெளி மிகுதி யாகவுள்ள கண்

இழிகண்பூ = பூ விழுந்த கண்

இழிசுதல் = பூசுதல்

இழிச்ச வாய் = திறந்த வாய்

இழிது = பசுநெய்

இழியற்கண் = இழிகண்

இழிவாண லோகம் = இரும்ப, செம்பு, பித்தளை

இழிவு = தீட்டு

இழுகுதல் = இழிசுதல்

இழுக்கு = மறதி

இழுது = இனிப்பு, நெய், தேன், கொழுப்பு, நிணம், குழம்பு, மருந்தெண்ணெய், வெண்ணெய், கள்

இழுதுதல் = கொழுப்பு அதிகமாதல்

இழுத்தல் = மூச்சுவாங்கல், வலிப்பு உண்டாதல், உறிஞ்சுதல், ஈர்த்தல், உள்வாங்கல்

இழுத்துப் பிடித்தல் = கை, கால், வயறு முதலிய பாகங்கள் சுருங்குவதால் திடீரெனக் காணும் ஒரு வித நிலைமை

இழுப்பு = இரைப்பு, நீரிழிப்பு, இசிவு, உடம்பில் வாயு அதிகமாகி மேலெழும்பி தலை, இதயம் முதலிய இடங்களில் தங்குவதால் நரம்பு அழுந்தி கை கால்களில் வலிப்பு ஏற்படும்

இழுப்பு மாந்தம் = குழந்தைகட்குச் செரியாமையால் மந்தம் ஏற்பட்டு அதனால் வலிப்பு ஏற்படும் ஒரு வகை மாந்த நோய்

இழுமு, இழும் = இனிப்பு

இழுவை = பூனைமுள்செடி

இழைக்கட்டி = இழையைப் போன்ற ஒருவகைக்கழலை

இழைக்குதல் = கலத்தல் (மருந்து), இழைத்தல்

இழைத்தல் = மருந்துரைத்தல், மூச்சிரைத்தல்

இழைநாதம் = கெந்தம்

இழைபிடித்தல் = காயந்தைத்தல்

இழை போடல் = பிரசவத்தினால் கிழிபட்ட வாயிலைப் பொருத்துதல், பெண்ணுறுப்பின் வாயிலையும் ஆசனவளையத்தையும் வேறுபடத் தைத்தல்

இழை முருந்து = நார்த்தசைகளினால் ஆன முருந்து

இழையிரகுவார் = கோடகச் சாலை

இளஅத்தி = அத்திப்பிஞ்சு

இளகம் = இலேகியம்

இளகின கொறுக்கு = மிருதுவான கொறுக்குப்புண்

இளகினபொன் = சுத்தமான பொன்

இளகு = பசுநெய்

இளகுசம் = சுத்தரி

இளக்கரித்தல் = தளர்தல்

இளக்கு = கொழுப்பு, குழம்பு

இளக்குதல் = நெகிழச் செய்தல், இளகச்செய்தல், மிருதுவாகச் செய்தல், ஊறவைத்தல்

இளக்கு மருந்து = தசையை மிருதுவாக்கும் மருந்து; விரேசனமருந்து; குடலை இளகச் செய்து பேதியையுண்டாக்கும் மருந்து

இளங் கஷாயம் = சிறுகக் காயச்சிய கஷாயம், ஊறற்கஷாயம்

இளங்கதிர் = உதய சூரியன், முதிராத பயிர்

இளங்கம்பு = ஒருவகைக்கம்பு

இளங் காரத்திரி = இரணத்திற்கு உபயோகிக்கும் சிறிது காரமான மருந்துச்சீலை

இளங்காரமல்லி = இரங்கூன் மல்லி

இளங்காலி = தென்னை, செங்கரந்தை

இளங் கால் = இளங்காற்று, வெற்றிலை, இளங்கொடி இளங்கொழுந்து

இளங்கால் வெற்றிலை = இளங்கொடியிற் கிள்ளிய முதிர்ந்த வெற்றிலை

இளங்குடல் = கடைக்குடல், சிறு குழந்தையின் குடல்

இளங்குட்டம் = ஆரம்பக் குட்டம்

இளங்குழவி = பிறந்த குழந்தை

இளங்குளவி = நீல பாடாணம்

இளங்கொடி = சிறுகொடி, நஞ்சுக் கொடி, பெண்

இளங் கொட்டைப் பாக்கு = கொழும்பு தேசத்தில் வளரும் முதிராத பாக்கு

இளசாட்சகம், இளசாட்சசம் = கொன்றை, நிணம்

இளஞ்சார்வு = குருத்தோலை

இளஞ்சாலவம் = சிவப்புச் சிற்றகத்தி

இளஞ்சி = ஈனாக்கத்திரி, கொப்பூழ், ஆவிரை

இளஞ்சிதம் = ஊசிமல்லிகை

இளஞ்சியம் = கீழாநெல்லி

இளஞ்சினி = அவுரி

இளஞ்சீலை = வலைத்துணி

இளஞ் சீலைவேடு = மிருதுவான துணியினாற் பாத்திரத்தின் வாயைச் கட்டல் சுற்றிக் கட்டுதல்

இளஞ்சீவிதம் = ஊறுகாய்

இளஞ்சு = ஈணாக்கதிர், மிளகு

இளஞ்சுனா = கத்திரி

இளஞ்சூல் = முதிராத கருப்பிண்டம், பயிரிளங்கதிர்

இளஞ் செந்தூரமரம் = ஒருவகை இளமரம்

இளநட்டம் = மிளகு

இளநாக்கு = பேச்சு திருந்தாத நாக்கு

இளநாள் = இளவேனில்

இளநீர் = பனிக்குடத்து நீர், நவரத்தினங்களில் காணப்படும் வெள்ளொலி, இளந்தேங்காயின் நீர்

இளநீர்க் கட்டு = குழந்தைகட்குத் தாடையின் இருபக்கங்களிலும் சிறு வாதுமைக் கொட்டையைப் போல் உருளை கட்டிக் கொண்டு ஓயாமல் எச்சில் வடிந்த வண்ணமாயும் சுரம், வீக்கம் முதலிய குணங்களையும் காட்டும் நோய்

இளநீர்க் கலங்கல் = பெண்கள் கருப்பையிற் தங்கி நிற்கும் ஒரு மாதத்தியக் கரு

இளநீர்க் குழம்பு = இளநீரினால் செய்யப்படும் ஒருவகைக் கண் மருந்து

இளநீர் நெய் = உடம்புக் கொதிப்பு, மூத்திரநோய்கள் முதலியவை தீருவதற்காக கொடுக்கும் ஒரு மருந்து

இளநீர் வழுக்கை = பெண்கள் கருப்பையிலிருக்கும் மூன்று மாதத்தியக் கருப்பிண்டம்

இளந்தண்டு = முளைக்கீரை

இளந்தயிர் = உறையாத தயிர்

இளந்தாரிக் கல் = உடம்பின் வலிவைச் சோதிக்க வேண்டி வைக்கப்பட்ட கல்

இளந்தேகம் = குழந்தை பெற்ற பெண்ணினுடம்பு

இளந்தை = இளவயது, குழந்தை

இளந் தோகை = சிவப்புப் பொன்னாங்காணி

இளந்தோயல் = தயிரின் இளகிய தோயல்

இள மண்டை = மென்மையான தலை; குழந்தையின் மண்டை, தலை

இளமரல் = அறுகு

இளமாது பனிநீர் = இளம்பெண்ணின் பனிக்குடத்து நீர்

இளமார்பு = ஒருவகைக் கற்பூரம்

இளம் = இளநீர், எலிப்பாடாணம்

இளம்பதம் = முதிராத நிலை; தைலம், இலேகியம் முதலியவைகளைச் சிறு தீயிட்டுக் காய்ச்சும் முதிராத பதம்; சிறிது வெந்த பதம்; உலோகங்களின் உருகு பதம், மெல்லிய பதம்

இளம்பிசின் = நல்ல பிசின்

இளம்பிள்ளைக் கிராணி = குழந்தைகட்குக் காணும் கழிச்சல் நோய்

இளம் பிள்ளை வாதம் = குழந்தைகட்கு இரத்த வோட்டம் ஒரு பக்கம் குறைவதால் அப்பக்கத்து கை, கால், முகம் முதலியன சோம்பிக்காணும் ஒருவித வாத நோய் கிருமிகளால் தாக்கப்படும் இந்நோய் தொற்றக் கூடியது

இளம்புடம் = சிறுபுடம்

இளம்புல் = அறுகு

இளம்பெண் = கற்றாழை

இளம்பேதி = சுகபேதி, சுகபேதி மருந்து

இளம்வயிறு = குழந்தை வயிறு, பிரசவப்புண், ஆறாத வயிறு

இளவடி = இளம்பதத்தில் வடித்தல்

இளவட்டக் கல் = உடம்பின் வலிவைச் சோதிக்க வேண்டி வைக்கப்பட்ட கல்

இளவத்தி = அத்திப்பிஞ்சு

இளவந்திகை = சிறு கட்டுக்கொடி

இளவரகு = முதிராத வரகு

இளவரி = வரன்சாவல்

இளவல் = குழந்தை

இள வழுக்கை = இளங்காய், கருப்பையிலிருக்கும் முதிராத மூன்று மாதத்திய பிண்டக்கரு

இளவழுக்கைச் சாரம் = மூன்று மாதத்துப் பிண்டத்தை இடித்து அதனின்று இறக்குஞ் சத்து

இளவன் = சோரபாடாணம்

இளவாளிப்பு = ஈரம்; இளகுதல்

இளவிஷம் = கொன்றை, நிணம்

இளவிரிசு = ஒருமரம்

இளவுச்சம், இளவுச்சி = முற்பொழுது

இளவுறை = உறையாத தயிர்

இளவெலும்பு = முதிராத வெலும்பு, குழந்தையினெலும்பு

இளவேனில் = வெயில் முதிராத, வெப்பம், பருவம், கொழுப்பு

இளாக்கு = இடகலை நாடி, கொழுப்பு

இளாஞ்சு = ஈணாக்கதிர்

இளாது, இளிகண் இளிச்சற்கண் = பசுநெய்

இளிகண் இளிச்சற்கண் = புளிச்சகண், இமை விளிம்பிற் தடித்த விரணம், நீர்கோர்த்தல் கண் கூசல் முதலிய குணங்களைக் காட்டும் கண்ணோய்; பீளைக்கண்

இளித்த வாயன் = குரங்கு போல் பல்லைக்காட்டும் குறி; சன்னி ஏற்படும்

இளிந்தகாய் = பாக்கு

இளுக்கு = இளாக்கு

இளுஞ்சு = இளாஞ்சு

இளுது = பசுநெய்

இளை = கோழை, பசு, மேகம், இளமை, வேலி

இளைப் பிருமல் = இளைப்பையுண்டாக்கும் ஒருவகை காசநோய்

இளையிடு வாராது = கோடகசாலை

இள் = கொண்ணை

இற = இறால்

இறகடிமுள் = இறகின் அடிக்குருத்து : முருந்து

இறகர், இறகு = சிறகு, இறகு

இறகுமஞ்சள் = சாப்பிரவிரை

இறகெறும்பு = சிறகுமுளைத்த எறும்பு

இறக்கம் = நோய், வலி, சுரம், அம்மை முதலியவை கடுமையாயிருந்து பிறகு சாந்தப்படுகிற நிலைமை; உணவிறக்கம் ; சோற்று இறக்கம்; மதுவிறக்கம்; வாட்டம்

(முகத்தில்), குடல் முதலியன தத்தமிடத்தை விட்டு நழுவி இறங்குதல்; வீக்கம் முதலியன குறைதல் (இறங்குல்)

இறக்கல் = சாதல், குழந்தை பெறல், விழுங்கல்

இறக்குதல் = விடத்தைக் தணித்தல், தைலம், திராவகம் இவற்றை வடித்தல்

இறக்கை = சிறகு

இறங் கண்டம் = குடல் அல்லது அதன் மேலுள்ள சவ்வுவாயு வால் பலவீனமடைந்து இருக்குமிடத்தை விட்டு நழுவி கீழுக்கிறங்கி அண்டத்தில் தங்கி நிற்கும் நோய்

இறங்க மாட்டான் = ஒருவகைக் கார் நெல்

இறங்கர் = குடம்

இறங்கல் = இறங்குகை, குடலிறங்கல், உணவு உட்புகல்

இறங் கழிஞ்சில் = காய்கள் சிதறவிழும் ஒருவகை அழிஞ்சில்

இறங்கி = அகில்

இறங்கு கெண்டை = பலவீனத்தால் கொறுக்கு வாங்கல் அதாவது நரம்பு இழுத்தல்

இறங்குதல் = நோய், அம்மை, விஷகடி இவை தணிதல்; உணவு கீழ்ச் செல்லல் (தொண்டை வழி)

இறங்கு நெற்றி = முன்பக்கமாகப் புடைத்துக் காணும் நெற்றி

இறங்குபனை = ஒருவகை அம்மை

இறங்குமுகம் = தணியும் நிலைமை (குறையும்)

இறங்கு முட்டான் = இறங்கமாட்டான்

இறங்கு வாயில் = இறங்குமுகம்

இறங்கு வாயு = விதையிலிறங்கும் அண்டவாயு ஆறினுள்ளொன்று

இறசிகா = கடுகு

இறச்சி = கத்தூரி மஞ்சள்

இறஞ்சி = அவுரி

இறஞ்சித சேம்பு = கருஞ்சேம்பு

இறஞ்சீல் = மகிழம்பூ

இறடி, இறட்டி = கருந்தினை

இறணியம் = பொன்

இறத்து ரோகநாசி = சீகாகோளி

இறந்திரி = இச்சி, கல்லால் (இத்தி) கல்லிச்சி, இறலிமரம்

இறந்துண்டு = இலந்தை

இறந்துபாடு = மரணம்

இறந்துன்று = இலந்தை

இறந்தோர் சேர்வனம் = மயானம்

இறபண்ணியம் = ஈச்சங்கொட்டை

இறபுலி = பூனை

இறம் = ஒருவகைச் சாராயம்

இறம்பு = தாமரை, சிவனார் வேம்பு, நெல்லி

இறம்பு கொல்லி = சிவனார் வேம்பு

இறலம் = பதுக்கை

இறலாகிகம் = எரிமூலிகை

இறலி = இத்தி, கொன்றை, மருது, இச்சிச்செடி

இறலிப்பை = பட்டுப்பூச்சிப்பை

இறல் = தேன், கிளிஞ்சில், நரம்பு, சிறுவேர், சாவு

இறவடம் = சோகி

இறவி = சாவு, இத்தி

இறவி முகன் = கொல்லுநாபி

இறவி முகாகே = நல்லுநாவி (நாபி)

இறவு = இறால் மீன், தேன்கூடு, மிகை

இறவேலி = வெட்டிவேர்

இறளி = இச்சிச்செடி

இறள் = பதுக்கை

இறா = இறால் மீன்

இறாகம் = வெண்தும்பை

இறாகின் = வெற்றிலை

இறாக்கி = கத்தூரி மஞ்சள்

இறாக்கு = அகில்

இறாசில் = மகிழம்பூ

இறாட்டு = தேன்கூடு

இறாது = நெய்

இறாந்தமதி = தேங்காய்

இறா பண்ணியர் = சேங்கொட்டை (இருபண்ணியா)

இறாம்பு = தாமரைப்பூ

இறாய் = கோதுமையைப் போன்ற தானியம்

இறால் = இறால் மீன், வெள்ளிறால், தேன்கூடு, எருது, தேன்

இறாவி முகன் = இறவி முகன்

இறாவில் = வெள்ளீயம்

இறாற்று = பெருவகை இறால்மீன், தேன்கூடு

இறுகங்கியன், இறுகங்கியான் = கையாந்தகரை

இறுகண்ணியம் = கருடக்கொடி

இறுகம் = வெந்தோன்றி

இறுகாவகம் = கையாந்தகைர

இறுகானகி = கௌரியச்சம் (செடி)

இறுகிப்போதல் = உறைந்து போதல்

இறுக்கி = கத்தூரி மஞ்சள்

இறுக்கு = சோளம்

இறுக்கு வாதம் = மூட்டுகள் இறுகிப் பொருந்துகள் எலும்பாக கெட்டிப்பட்டு வலித்து முடமாக்கும் வாதம்

இறுங்கலி யானிலை = கரிசலாங்கண்ணியிலை

இறுங்கியான் = கரிசாலாங்கண்ணி

இறுங்கு, இறுங்கு சோளம் = கச்சோலம், சோளம், காக்காய்ச்சோளம், தித்திப் புச்சோளம்

இறுசம் = வெந்தோன்றி

இறுசிகம் = எட்டிமரம்

இறுசுவசற் பாட்சி = கிருமி தோஷத்தைப் போக்குவிக்கு மோர் மூலிகை ; ஒருவகை நாணற்புல்

இறுசுவாகம் = சீவகம்

இறுஞ்சூவி = குறுஞ்சூவி

இறுதாதிகம் = கேந்திரவல்லிக் கொடி

இறுதி = இறப்பு

இறுத்திய கெந்தசதாபாலி = வில்வம்

இறுத்து ரோகம் = பேய்ப்புடல்

இறுநாகம் = இலாமிச்சை, இலுமிச்சை (இரணு)

இறுநாளகம் = இலாமிச்சை

இறுமாப்பு = கும்பச்சுரை

இறும்பி = எறும்பு

இறும்பு = கார்த்திகைப்பூ, சிறுவேர், தாமரை, காந்தள், மலை வண்டு, குறுங்காடு, சிறுமலை

இறும்புகம் = தாமரைப்பூ

இறும்புகாப்பூ = காத்திகைப்பூ

இறும்பூது = சிறுவேர், தாமரைப்பூ, மலை, தளிர், வண்டு

இறுவாய் = இறப்பு

இறுவேல் = இருள்வேல், ஒரு பெரிய மரம்

இறுனாகம் = இலுமிச்சை

இறை = தலை, இறகு, சிறகு மாமரம், விரற்கணு, உடலுறுப்பின் மூட்டு வாய், நோய், முன்கை, மணிக்கட்டு, விரலிறை

இறை குத்துதல் = விரலைத் திரவத்திற்குள் இட்டு ஆழத்தினை அளவிடல் (விரலிறை யால் அளவிடுதல்)

இறைக்கூத்தன் = குராமரம்

இறைக் கள்ளன் = விரலிடுக்கில் வரும் ஒருவகைப்புண்

இறைக் குத்தல் = இறக்குந்தருணத்தில் கண்ணசைவற்றுச் சிமிட்டாது நிற்றல் (விழித்த கண்)

இறக்குத்து = இறக்குந் தருணத்தில் கண் குழிவிழுதல்

இறைச்சிக் கழுநீர் = மாமிசங் கழுவிய நீரைப்போல் சிறிது சிகப்பாக இருக்கும் நீர்

இறைஞ் சாடிப்பூ = கஞ்சாங் கோரை

இறைஞ்சி = மரவுரி (நார்ச் சீலை)

இறைநாகம் = இலாமிச்சு

இறைப் பிளவை = கைவரைச்சிவந்தி, கையிலே வரும் ஒரு பெரும்புண்

இறைமா = மாமரம்

இறையாமணக்கு = செவ்வாமணக்கு

இறைவத்திம்பம் = சிவனார்வேம்பு

இறைவர்மலர் = கொன்றை

இறைவனின்பம், இறைவன் = சிவனார்வேம்பு

இற்சியம் = தாமரை இற்புலி,

இற்றல் = பூனை

இற்றி = இத்திமரம், இறைச்சி, ஒத்திமரம்

இனக்கட்டு = மித்துருச் சரக்கால் கட்டுதல்

இனக்கொடுக்கல் = பொன்

இனங்கண்டு சேர்த்தல் = உறவான சரக்கைக் கலத்தல்

இனசாரிச் சரக்கு = ஓரினத்தைச் சேர்ந்த சரக்கு ; இனம் பிரித்த சரக்கு

இனத்தைச் சேர்த்தல் = இனங்கண்டு சேர்த்தல்

இனம் = வருக்கம், வகுப்பு, மித்துரு நீற்றினம் புடமிட்டு பற்பமாக்கும் பொருட்கள் உருக்கினம்: மூசையில் வைத்தூதி இருக்கும் உலோகங்கள் ஏற்றினம் : உருக்கி அல்லது புடமிட்டு மருந்துச் சரக்கு ஏறச் செய்யும் சரக்குள்

இறக்கினம் : உருக்குதல் அல்லது எரித்தலால் இறங்கும்படியான சரக்குகள்

இனம் பிரித்தல் = வகுப்பின் படி பிரித்தல்; ஒரு சரக்கிலுள்ள பொருட்களைப் பிரித்தெடுத்தல்

இனாத்து = நெய்

இனாந்திரி = இச்சிச்செடி

இனிப்பிலந்தை = தித்திப்பிலந்தை

இனிப்பில பதிதம் = இராமக்கரும்பு

இனிப்பு நாவல் = தித்திப்பு நாவற்பழம்

இனிப்பு நாரத்தை = சர்க்கரை நாரத்தை, கொடி நாரத்தை

இனிப்புப் பிசி = தித்திப்பான ஒரு வகைப்பழம்; இது தீனிப்பை, இதயம், மூளை இவைகளுக்கு வலிவைக் கொடுக்கும்

இனிப்பு மாங்காய் = ஒட்டு மாமரம்

இனிப்பு மாதுளை = தித்திப்பு மாதுளை

இனிப்புமீலி = கிச்சிலிப்பழம்

இனிப்புமுங்கிசம் = கொடி நெல்லி

இனிப்பூரி = ஆல்பொகாராப்பழம்

இனி மணல் = நுண்மணல்

இனியசந்தம் = சுகந்தம், நறுமணம்

இனியான் = எலுமிச்சம்பழம்

இன்சூரை = கருஞ்சூரை

இன்பக்கொடி = காமவல்லி

இன்பப்பத்திரி = சாதிபத்திரி

இன்புளிப்பு = தித்திப்பும் புளிப்பும் கலந்த சுவை; காடியுந் தேனுங் கலந்த குழம்பு இன்புறா, சாயவேர் இன்பூரல்

இன்பூறல் = நீர்வள்ளிக் கிழங்கு, சாயவேர்

இன்பை = சாயவேர், துளசி

இன்ன இன்னாலை = சூரியன்

இன்னாலி = இலைக்கள்ளிமரம்

இன்னிக்கிலை = கம்மாறு வெற்றிலை

இன்னூகம் = கப்பற்கடுக்காய்

## ஈ

ஈ = கொசு, வண்டு, தேனி, பாம்பு, ஈ, சிறகு, தாமரையிதழ், குருட்டீ, நாயீ

ஈகம் = சந்தனமரம், சந்தனம்

ஈகாமிருகம் = செந்நாய்

ஈகாரிகம் = கீழாநெல்லி

ஈகை = இண்டங்கொடி, புலி தொடக்கி, பொன், கற்பகவிருட்சம், காடை, மேகம், வாகை மரம்

ஈகைக்குடுக்கல் = பொன்

ஈக்கணாதிகம் = ஓரிலைத் தாமரை

ஈக்கணம் = கண்

ஈக்க மாந்தம் = குழந்தைகளுக்குக் காதுங்கண்ணும் வீங்கிப் புண்ணாகும் ஒருவகை மாந்த நோய்

ஈக்கல் = துரிஞ்சிலைக்கல், சித்தக்கல்

ஈக்குமல்லிகை = மல்லிகை

ஈக்கை = புலிதடுக்கி, உப்பிலி

ஈங்கம் = சந்தனமரம், பொன்

ஈங்கரம் = குப்பைமேனி

சங்காபிதம் = குந்திரிக்கம்

ஈங்காவிதம் = குண்டோசனைக்கிழங்கு

ஈங்கு = இண்டங்கொடி,

சந்தனம், = புலிதடுக்கி, சிகைக்காய்

ஈங்குளம் = சாதிலிங்கம்

ஈங்கூகம் = குக்கில்

ஈங்கை = இண்டங்கொடி, உப்பிலி, திப்பிலி

ஈங்கைத்துவக்கு = ஈங்கைப் பட்டை

ஈசங் கள்ளு = ஈச்சங்கள்ளு, ஈச்ச மரத் மரத்தினின்று இறக்கப்படும் கள்ளு

ஈசதேசத்தி, ஈசதேசாத்தி = பெருமருந்து, தலைச் சுருளி, தலைச்சூடு வல்லி, முல்லை, பெருங்கிழங்கு, தராசுக்

கொடி, பீ நாறிச்சங்கு, பெருங்கிழங்கு, தராசுக் கொடி, என்ற பல பெயர்களுண்டு

ஈசத்து பீசம் = கொட்டையில்லா திராட்சை

ஈசத்துவறுகு = சிற்றறுகு

ஈசபுகோல் விதை = செபகோல் விதை

ஈசப்பரிவிந்து = கெந்தகம்

ஈசலிறகு = மெல்லிய பொருள்

ஈசல் = இறகு முளைத்த எறும்பு

ஈசற்கு சாத்து பத்திரம் = வில்வம்

ஈசனாரணி = கொன்றை

ஈசனார்வேம்பு = சிவனார்வேம்பு

ஈசனுப்பு = வெடியுப்பு

ஈசனுப்புச் சுண்ணம் = வழலைச்சுண்ணம்

ஈசன் = சவுக்காரம், மூன்று வகைப் பச்சைக் கற்பூரங்களிலொன்று, சிவனார் வேம்பு

ஈசன்கொடி = கொன்றை

ஈசன்சாத்தியசத்தி = வில்வம்

ஈசன்சுண்ணம் = வழலைச்சுண்ணம்

ஈசன்தார் = கொன்றை

ஈசன்திருமூலி = கஞ்சா

ஈசன்தேவி = கௌரி பாடாணம்

ஈசன்பொற் கொன்றை = சரக்கொன்றை

ஈசன்மதுவுண்ட கிண்ணி = அப்பிரகக் கிண்ணி

ஈசன் வாகனம் = எருது

ஈசன்விந்து = உப்புமணி; இது உப்பைக்கட்டி மணியாகத் திரட்டியது

ஈசன்றார் = கொன்றை

ஈசாமூலி, ஈசாரி = பெருமருந்து

ஈசானம் = இலவமரம், வன்னிச்செடி

ஈசானிகம் = உடைமரம்

ஈசான்மேரு = இரசிதமலை

ஈசிகம் = மூசையிலிட்டு உலோகத்தை உருக்கும் போது அதைச் சோதிக்க வேண்டி உபயோகப் படுத்தும் ஓர் இரும்புக் காம்பு

ஈசுகணு வெலும்பு = முழங்காலினெலும்பு

ஈசுபகோல் = இசுபகோல் விதை; வெளியூரிலிருந்து கொண்டுவந்து பயிராக்கப்படும் ஒருவிதை

ஈசரகெந்தம் = அரிதாரம்

ஈசுரக்கோவை = பெருமருந்து, ஒரு வகை மட்டையரிசி

ஈசுரசத்து = இரும்பு

ஈசுரசுருளி = பெருமருந்து

ஈசுரசெயம் = இரும்பு

ஈசுரதானு = கடம்பு

ஈசுரதேவி = கௌரிபாடாணம்

ஈசுரப்பிரமி = நெற்றி

ஈசுரப்புல் = ஒருவகைப்புல்

ஈசுர மல்லிகை = புரசு

ஈசுரமூலி = பெருமருந்து, கெருடக் கொடி, கஞ்சா, வள்ளி, இரசத்தைக் கட்டுமோர் மூலிகை, வலம்புரி, எறும்பு, தலைச்சுருளி, தலைச்சூடு வல்லி, வீழிவேர், பீநாறிச் சங்கு, சிறுகுறிஞ்சா, முல்லை, பெருங்கிழங்கு, விட்டுணு கிராந்தி, தராசுக்கொடி, பெருமரம் போன்ற பல பெயர்களுண்டு

ஈசுரமூலிகை = புரசு

ஈசுரர்வேர் = பெருமருந்து

ஈசுரவல்லி = ஒருவகைக் கொடி

ஈசுரவிந்து = இரசம், பாதரசம்

ஈசுரவேர் = ஈசுரமூலி

ஈசுரன்தரு = கடம்பு

ஈசுரன்விந்து = மரம், இரசம்

ஈசுரிவிந்து = கெந்தகம்

ஈசுர்தரு = கடம்பு

ஈசுரமூலி = தலைச்சுருளி

ஈசுவர = மருந்துக் குணமுள்ள

ஈசுவரதரு = வெண்கடம்பு

ஈசுவரநாசி = மணத்தக்காளி

ஈசுவரன் விந்து = இரசம்

ஈசுவரி = பெருமருந்து

ஈசுவரிநாதம், ஈசுவரிவிந்து = கெந்தகம்

ஈசெல் = இறகு முளைத்த கறையான்

ஈசொரி, ஈசோரி = பெருமருந்து

ஈச்சங்கசங்கு = ஈஞ்சு மரத்திலையின் ஈர்க்கு

ஈச்சங்கள்ளு = ஈசங்கள்ளு

ஈச்சங் கற்கண்டு = ஈச்சமரத்தின் சாற்றிலிருந்து வடிக்கும் கற்கண்டு

ஈச்சங்காடி = ஈச்சங்கள்ளைப் புளிக்க வைத்து அதனின்று இறக்கும்காடி

ஈச்சஞ்சாராயம் = காட்டீச்சின் சாற்றினின்று சாற்றினின்று வடிக்கும் சாராயம்

ஈச்சம்பழம் = பேரீந்து

ஈச்சம்பனை = காட்டீஞ்சு

ஈச்ச வெல்லம் = தித்திப்புள்ள; ஈச்சமர இரசத்தினின்று காய்ச்சி எடுத்த வெல்லம்

ஈச்சு = சிற்றீஞ்சு, ஈஞ்சு, சங்கு, ஈச்சமரம்

ஈச்சுரமூலி = பெருமருந்து

ஈச்சுரவேர் = பாதாள மூலி

ஈளுள் = ஈரல்

ஈஞ்சில் = இண்டங்கொடி, உப்பிலி

ஈஞ்சு = பேரீஞ்சு, ஈச்சு, சிற்றீஞ்சு, காட்டீஞ்சு, ஈச்சமரம்

ஈஞ்சுடாகி = குடைவேல்

ஈடப்பரி = விந்து

ஈடனாசிகம் = ஐந்திலைநொச்சி

ஈடு = வலி

ஈட்டி = தோதகத்தி மரம், ஒரு மீன்

ஈணம் = சிங்கம், கொன்றை

ஈண்டல் = பரவல்

ஈண்டு = புலித்தொடக்கி

ஈண்டுநீர் = கடல்

ஈதா = ஆகாயம்

ஈதி = தொற்றுநோய் சி

ஈதிலிங்கம் = சாதிலிங்கம்

ஈதைதார் = கொண்ணை

ஈத்திக்கண்ணி = ஒருவகை வௌவால்

ஈந்தி = ஈச்சமரம்

ஈந்து = ஈச்சமரம், நஞ்சு

ஈந்துபோளம் = கரியபோளம்

ஈபரணாடி = கிராம்பு

ஈபம் = பாதிரி

ஈப்பர் = பலா

ஈப்புலி = ஈயைக் கொல்லுமோர் வகை சிலந்திப் பூச்சி

ஈமக்கொடி = இண்டங்கொடி

ஈமந்தன் = மேலுதடு

ஈமப் பறவை = இடுகாட்டிலிருக்கும் காகம், கழுகு, பருந்து, பாதிரி மரம், செப்பு லோகம், வெண்ணெய், விறகு, சுடுகாடு

ஈமவாரி = வசம்பு

ஈமா = சந்தனம், பச்சைக் கற்பூரம்

ஈமோதல் = சிலந்தி, புண் முதலியவைகளில் மொய்த்து முட்டை வைத்தல்; இதனால் புழுவுண்டாகும்

ஈம் = பாதிரி, சுடுகாடு

ஈயக்குழவி = நீலபாடாணம்

ஈயக்கந்தகம் = ஈயக்கலப்புள்ள கந்தகம்

ஈயக்கல் = சிலாவங்கம், கல்லீயம்

ஈயக்களங்கு = வங்கவெட்டை

ஈயக்களிம்பு = ஈயத்தினால் செய்யும் பசை

ஈயக்கற்கண்டு = வங்கவுப்பு

ஈயக்காடி = ஈயஞ்சேர்ந்த காடி

ஈயக் காடியுப்பு = ஈயத்தைப் புளித்த மோர் அல்லது தயிரில் ஊறப்போட்டு வைத்து அதனின்று இறக்கும் வெண்சத்து

ஈயக்காரிகை = சுறுக்கு நாயகம்

ஈயக்கிட்டம் = ஈயமுருக்கியெடுத்த கிட்டம்

ஈயக்குளவி = நீலபாடாணம்

ஈயக்கேணி = ஈயமெடுக்கும் சுரங்கம்

ஈயக்கொடி = புலித்தொடக்கி

ஈயங்கட்டி = இரும்பிலியிலை

ஈயங்காலி = குத்துப்பிடாரி

ஈயங்கொல்லி = கோரோசனம், கரியபோளம்

ஈயங்கொழுந்து = இண்டு

ஈயசோலி = வேலிப்பருத்தி

ஈயச்சிந்தூரம் = வங்கசிந்தூரம்

ஈயச்சிவப்பு = சிவப்பு ஈயம், ஈயச் செவ்வச்சிரம், ஈயச் செந்தூரம்

ஈயச்சுரதம் = இண்டஞ்சாறு

ஈயச்செந்தூரம் = ஈயச்சிந்தூரம், ஈயச்சிவப்பு

ஈயத்தண்டு = இண்டங்கொடி

ஈயத்தின் தோஷம் போக்கி = பாற்சோற்றி

ஈயத்தின் பிள்ளை = நீலபாடாணம்

ஈயத்தை நாசமாக்கி = கொடிக்கள்ளி

ஈயத்தை பற்பமாக்கி = ஆரைக்கீரை

ஈய நஞ்சு = ஈயத்தினால் உடம்பில் ஏற்பட்ட விடம்

ஈயப்பற்றி = ஈயத்தைப் பற்பமாக்கும் மூலிகை (வறட்சுண்டி)

ஈயப்பாளம் = ஈயக்கட்டி

ஈயமஞ்சள் = ஈயம் கலந்த ஒருவகை மஞ்சள் தூள்

ஈயமரம் = பாதிரி மரம்

ஈயமலை = ஈயம் அகப்படும் மலை

ஈயமாக்கி = காட்டாமணக்கு

ஈயமானோன் = காந்தம்

ஈய மூலிகை = ஈயச்சத்தடங்கி பொன்னாங் கண்ணி மூலிகைகள் சீந்தில், செருப்படி, சிறு பீளை, விழுதி, (காட்டு) முசுட்டை, முத்தெருக்கன் செவி, வெள்ளைச் சாரணம், வெள்ளறுகு, உத்தாமணி, சூரை முதலிய மூலிகைகள்

ஈயம் = குங்குமப்பூ, பாதிரிமரம், மிருதாரசிங்கி, வங்கம், ஈயப்படர் மலை, வெள்ளீயம், காரீயம், சுக்கு (பரிபாஷை), பஞ்ச லோகம், பாதிரிமரம்

ஈயம்ப = பாதிரிமரம்

ஈயல் = சிறகு முளைத்த கறையான், இந்திரகோபப் பூச்சி (தம்பலப்பூச்சி)

ஈயவச்சிரம் = ஈயத்தூள், ஒலிவை எண்ணெய் முதலியவைகளை ஆவியில் வைத்துச் சூடாக்கிப் பிசின் பதமாகும் வரையில் துழாவித் தயாரிக்கும் ஈயப்பசை

ஈயவரி = பெருமருந்து

ஈயவாரிகம் = வெள்ளறுகு

ஈயவுப்பு = ஈயக்காடியுப்பு

ஈயவெண் பற்பம் = ஈய வெள்ளை, வங்கபற்பம்

ஈயவெள்ளை = ஈயபற்பம், ஈயச்சுண்ணம்

ஈயவெள்ளைக் களிம்பு = ஈயவெள்ளையினின்று தயாரித்த மேல்பூச்சு மருந்து

ஈயவேரி = பெருமருந்து

ஈயன்முதாய் = இந்திரகோபப் பூச்சி

ஈயாம்கிழங்கு = யாமிச்சங் கிழங்கு

ஈயிலை = ஈகையிலை

ஈயிவிலை = இண்டன்இலை

ஈயீரம் = குங்குமப்பூ

ஈயெச்சகீரை, ஈயெச்சிற்கிரை = புதினாக்கீரை

ஈயை = இஞ்சி, குன்றிச்செடி, புலிதொடக்கி, சஞ்சீவி, இரண்டு, ஈயத்தண்டு, மலசலம்

ஈரக = இண்டங்கொடி

ஈரகாயம் = வெண்காயம்

ஈரக்கல் = குருந்தக்கல், மாங்கிஷச் சிலை, மந்தாரக்கல், வித்தாரக்கல், கோழிக்கல், குறிஞ்சிலைக்கல், இரத்தக்கல், கொழுப்புக்கல், சிவப்புக்கல், சித்தர்கல்

ஈரக்கற்பூரம் = பச்சைக்கற்பூரம்

ஈரக்குழி = கருப்பை

ஈரங்காயம் = வெண்காயம்

ஈரங்கொல்லி = வண்ணான்

ஈரணமூலகம் = வெட்டிவேர்

ஈரணம் = கள்ளி, வயிறு வலித்து மலங்கழிதல்

ஈரண்ட வாதம் = இரண்டு விரைப் பக்கமும் நீர் கோர்த்துக் கொண்டு உண்டாகும் ஓதம்; இரண்டு பக்கமும் குடலிறக்கம்

ஈரத்தட்டை = ஈரக்குழற்தட்டை

ஈரத்திரையம் = குங்கிலியம்

ஈரப்பலா = ஆசினிப்பால, குரங்குப்பலா

ஈரப்பலாதிதம் = குதிரைவாலி

ஈரப்பா = ஆசனி, பலா

ஈரமாப்பூ = குங்குமப்பூ

ஈரம் = கரும்பு, குங்குமம், குங்குமப்பூ, கள்ளி, இரும்பு, வெள்ளரி, பசுமை

ஈரம்பனை = கூந்தல்பனை

ஈரம்போக்கி = உலர்த்தும் மருந்து, மின்சார சக்தி

ஈரரத்தை = இரண்டு வகை அரத்தை, சிற்றரத்தை, போரத்தை

ஈரலித்த சோறு = தண்ணீர் அல்லது ஈரங்கசியும் சோறு

ஈரலி ரத்தம் = நுரையீரலிலிருந்து வரும் இரத்தவொழக்கு; ஈரலில் நீற்குமிரத்தம்; கல்லீரலின்றுண்டாகும் இரத்தப் போக்கு

ஈரலுறுத் தானம் = ஈரலுள்ள இடம் ; நெஞ்சுக்குழி

ஈரலெரிச்சல் = ஈரலுக்கேற்படும் எரிச்சல், மாட்டு நோய்

ஈரல்கட்டி = கல்லீரலிற் காணும் கட்டி, மண்ணீரலின் வீக்கம்

ஈரல்கழலை = மண்ணீரலின் வீக்கம்

ஈரல் குடைச்சல் = கல்லீரலுக்குச் சீதளத் தினால் காணும் ஒருவித வாத வலி

ஈரல்குழி = ஈரலுக்கு நேராக வயிற்றுக்கு மேலிருக்கும் குழி

ஈரல் தாங்கி = மார்புக்குள் வயிற்றிற்கும் நெஞ்சிற்கும் நடுவாக உள்ள ஒருசதைப் பற்றுள்ள ; சவ்வு நுரையீரல் தாங்கி

ஈரல்தாபன ரோகம் = இரத்தக் கோவை

ஈரல் நிறம் = கருஞ்சிவப்பு, ஊதாநிறம்

ஈரல் நோய் = ஈரலின் தொழில் கெட்டு பித்த நீர் சீரண உறுப்புகளுக்குச் செல்லாது இரத்தத்திற் கலந்து உடலில் பரவுவதால் ஏற்படும் நோய்கள்

ஈரல்படைச்சால் = ஈரலின் நாளம்

ஈரல் பிளவை = ஈரலையும் அதன் நாடி நரம்புகளையும் பற்றி இரணநோய்

ஈரல் பித்து = கல்வீரலில் உற்பத்தி யாகும் பித்தம், பித்தப்பை

ஈரல்வளர்த்தி = ஈரல் சதை வளர்த்தி

ஈரல்வாதம் = வாதத்தினால் ஏற்படும் ஈரல் வலி

ஈரவன் = ஈரம்

ஈரவாலி = குதிரைவாலியரிசி

ஈரவள்ளி = வெண்காயம்

ஈரவெங்காயம் = ஒருபூண்டு

ஈரவூனிகம் = குத்து வல்லாரை

ஈரவெங்காயம், ஈரவெண்காயம் = வெண்காயம்

ஈரளம் = இலாமிச்சைவேர், கள்ளி

ஈரளவேணி = சீர்காகோளி

ஈரளி = கள்ளி

ஈரறிவுயிர் = தொடுவுணர்வும் சுவையுணர்வும் உள்ள சங்கு நத்தை

ஈரற்கட்டி = ஈரல்கட்டி

ஈரற்கதிப்பு = நோயினால் கல்லீரல் பருத்தல்

ஈரற்கல் = ஈரக்கல்; பித்தப்பையி லுண்டாகுங் கல், பித்தப்பையில் கல்லுண்டாகும் நோய்

ஈரற்கழலை = கல்லீரலில் காணும் கட்டி

ஈரற்குலை நோய் = கல்லீரல், நுரையீரல், மண்ணீரல் முதலியவற்றிற் குண்டாகும் நோய்

ஈரற்குழி = ஈரல்குழி

ஈரற்சில் = அதிகம் பயப்படுவதால் ஈரல் குளிரல்

ஈரற் சுளுக்கு = ஈரல் தன்னிருப்பிடத்தை விட்டு நழுகல்

ஈரந் சுன்னம் = ஈரற்கல்லின்று தயாரிக்கும் ஒருவகைச் சுண்ணம்

ஈரற்றாங்கி = ஈரல்தாங்கி

ஈரற்படைச்சால் = ஈரல்படைச்சால்

ஈரற்பிச்சு = கல்லீரலில் உற்பத்தியாகும் பித்தம், பித்த நீர் தங்கும் பை

ஈரற் = கல்லீரல் பிதுங்குவதால் பிதுக்கம் தொப்புள் அருகில் இருக்கும் அடிவயிற்றின் சதை புடைத்துக் காணல், ஈரல் நழுகுவதால் ஒரு பாகம் புடைத்துக் காணல்

ஈரற்பித்து = ஈரற்பிச்சு

ஈரற்புற்று = ஈரலையும் அதன் நாடி நரம்புகளையும் பற்றிய இரணநோய்

ஈரற் பூச்சி = ஈரல் நோய்களை உண்டாக்கும் ஒரு வகைப்பூச்சி

ஈரற் பெருக்கம் = நோயினால் கல்லீரல் பருத்தல்

ஈரற்றீய்தல் = சயரோகத்தினால் நுரையீரல் வெந்து போதல்; கல்லீரல், மண்ணீரல் இவைகளுக் குண்டான அழற்சி

ஈராடி = ஈரம்

ஈராட்டைப்படு = இரண்டு வருடம் நிலைத்திருக்கும் பூடு அல்லது இரண்டு வருடத்திற் கொரு முறை பூத்துக் காய்க்கும் பூடு

ஈராண்டு மூலி = சித்தர்கள் பசியெடுக் காதிருக்க வேண்டி இரண்டு வருடத்திற்கொரு முறை உட்கொள்ளும் ஒருவித அபூர்வ மூலிகை

ஈரி = பலாக்காய்த்தும்பு

ஈரிச்சல் = சில்லிட்டு ஈரமாதல்; குளிரால் விறைத்தல்

ஈரிணம் = உழமண்பூமி

ஈரித்த சோறு = சில்லிட்டு ஈரந்தங்கிய சோறு

ஈரித்தல் = ஈரிச்சல்

ஈரித்துப் போதல் = குளிர் அல்லது குளிர்மை; நோயினால் சுவர்ணையற்றுப் போதல்; குளிர்ந்து போதல்

ஈரிப்பு = ஈரம்

ஈரியம் = உடம்பின் நான்குவித நிலைகள், நடத்தல், நிற்றல், இருத்தல், கிடத்தல்

ஈரிலைத் தாமரை = ஒருவகைப் படு

ஈரீற்றா = இரண்டாம்முறை ஈன்ற பசு

ஈருயிராயிருத்தல் = கருப்பிணியாயிருத்தல்

ஈருயிர் = சூல்

ஈருயிர்க்காரி = கருப்பிணி

ஈருவல்லி = ஒரு செடி

ஈருவாதி = குப்பைக்கீரை

ஈருவேர் = பிடாரிவேர்

ஈருள் = கல்லீரல், மண்ணீரல், நுரையீரல் இவற்றைக் குறிக்கும் பொதுப் பெயர்

ஈருள் விரணம் = கல்லீரல், மண்ணீரல், நுரையீரல்களுக்கு ஏற்படும் புண்

ஈருள்ளி = ஈரவெண்காயம், கரும்பு

ஈருள்ளிக் கோரை = ஒருவகைக் கோரை

ஈரென்புப் பொருத்து = நடுவில் சதைப் பற்றின்றி இரண்டெலும்பும் கூடிய அசையா மூட்டு

ஈர் = கரும்பு, ஈர்க்கு, பிளத்தல், சிறகு, ஈரம், பசுமை, சிறுபேன், நெய்ப்பு

ஈர்கொல்லி, ஈரகொல்லிக் கொடி = உப்பிலிக்கொடி

ஈர்க்கில் = இலையினீர்க்கு

ஈர்க்கிறால் = ஒருவகை இறால் மீன்

ஈர்க்கு = இலையினீர்க்கு

ஈர்க்குக் கஷாயம் = வேப்பீர்க்கு முதலிய ஈர்க்குகளைப் போட்டு இறங்குங்கஷாயம்

ஈர்க்குச்சம்பா = ஒருவகைச் சம்பாநெல்

ஈர்க்கு மல்லிகை = ஒருவகைச் சன்ன முல்லை (மெலிய)

ஈர்க்கொல்லி, ஈர்க்கொல்லிக்கோபி = உப்பிலிக் கொடி

ஈர்தல் = நாணற்தட்டை, யானைப்புல்

ஈர்த்தர் கள்ளி = ஒருவகைக் கொறுக்காய்த் தட்டை (சன்னக் கொறுக் காய்த்தட்டை)

ஈர்ந்திரி = நெய்யிற் தோய்ந்ததிரி

ஈர்பலா = ஆசினி

ஈர்ப்பாதம் = ஒருபாம்பு

ஈர்ப்ப்பி = சிறுபேன், பொடுகு

ஈர்மை = குளிர்ச்சி

சர்வளி = ஒருமரம்

ஈலம்மி, ஈவயம் = பொன்

ஈவரி = பெருமருந்து

ஈவழிகி = பொன்

ஈழங்கிழங்கு = பெருவள்ளிக் கிழங்கு

ஈழத்தலரி = பொன்னலரி, பெருங்கள்ளி, கள்ளி, கள்ளி மந்தாரை, நாவில்லா வலரி, குப்பியலரி

ஈழத்தி = கல்லத்தி

ஈழத்தி மரவாழை = ஈழநாட்டின் மரவாழை நாட்டு மரவாழை

ஈழத்துக்கள்ளி = ஆட்டாங்கள்ளி

ஈழப்புளி = கொறுக்காய்ப்புளி

ஈழம் = பொன், கொழும்பு சாராயம், கள், கள்ளி, உலோகக்கட்டி

ஈழை = ஈளை, காசநோய்

ஈழைக்கொல்லி = தாளகம்

ஈழைத்தலம் = பெருங்கள்ளி

ஈளந்தார் = கொன்றை

ஈளமிளகு = கொச்சி மிளகு

ஈளம் = பாதிரி, கள்ளி

ஈளை = ஈளைநோய், கோழை, சய நோய், சுவாசக்குழல்கள் சுருக்கமடைந்து அதனால் மூச்சு தாராளமாய்ப் போக இடமில்லாமல் மூச்சுவிட முடியாமல் நெஞ்சில் கபம் அடைத்து துன்புறுத்தும் சுவாசநோய்; எப்போதும் இருமலுடன் கோழையும் கபமும் உற்பத்தியாகி பூனைக்குட்டி சப்தத்தோடு மூச்சுவிட துன்பப்படுத்தும் ஒரு விதக் காசநோய்

ஈளைகொண்டா, ஈளைக்காரன் = ஈளைநோயால், வருந்துபவன்

ஈளைக்கொல்லி = ஈழைக்கொல்லி

ஈளைபிடித்தான் = ஈளைக்காரன்

ஈறயில் = முரசுவெட்டி (ஈறை வெட்டும் கருவி)

ஈறிபரிவிந்து = கெந்தகம்

ஈறு = பல்லீறு, உப்பளம்

ஈறுகஞ்சகி = செங்கொன்னை

ஈறுகட்டல் = ஈறுவீக்கம், ஈறு புண்ணாதல்

ஈறுகட்டி = இரசகற்பூரம், பல்லீறினிற் காணும் கட்டி

ஈறுகரைதல் = பல்லீறுகெடுதல்

ஈறுகழலை = பல்லீறிலுண்டாகும் கழலை

ஈறுகொப்புளம் = ஈறுகட்டி

ஈறுகொல்லி = உப்பிலிக்கொடி

ஈறுசுரப்பு = பல்லீற்றின் வீக்கம்

ஈறுப்புண் = பற்களின் சந்து ஈறுகள் வெந்து நோயையுண்டாக்கும் பல்வலி

ஈறு வரணை = பல்லீற்றின் மேற்புறத்தில் சுரப்புண்டாகி வாயில் நீர் வடிந்து குத்தல், வலி இவைகளையுண்டாக்கும் ஒரு பல் நோய் இது இரத்தக் கேட்டினாலும் கபங்கோளாறடை வதாலுமுண்டாகும்

ஈறுவளர்ச்சி = பல்லினிடை இருக்கும் சதையின் பெருக்கம்

ஈறுவாதம் = வாயுவினால் ஏற்பட்ட பல்லீற்றின் வலி

ஈறு விரணம் = ஈறுக்கழற்சி கண்டுண்டாகும் புண், ஈறு வீங்கி அதனின்று இரத்தம், சிழ் வடியும் நோய்

ஈறு வெடிப்பு = குழந்தைகளுக்கு ஈறு சுரந்து வெடிப்புண்டாகி இரத்தமொழுகும் நோய்

ஈற்றம் = ஈணுகை

ஈற்றா = கன்று ஈன்ற பசு

ஈற்றியுடையா = நத்தை

ஈற்று = ஈன்றல், மரக்கன்று

ஈற்றுளைதல் = பிரசவ வேதனைப் படல்

ஈற்றுளைவு = ஈறுவலி

ஈற்றெலும்பு = கடையெலும்பு அனாமிகை எலும்பு

ஈற்றேறுதல் = பயிர்க்கரு முதிருதல்

ஈனசந்தி = வேளைதப்பிய வேளை; அகாலம்

ஈனசுரம் = சொற்பமாகக் காயும் சுரம் ; நாடிதளர்ந்து நரம்பு மெலிந்த போது காணும் ஒரு வகைச் சொற்ப சுரம்

ஈனதோஷ பரிதத்துவம் = உடம்பைவிட்டு முற்றிலும் நீங்காத தோடம்

ஈனத்தாமரை = குளிர்தாமரை

ஈனத்தார் = கொன்றை

ஈனத்திக்கள்ளி = பாட்சான் கள்ளி

ஈனத்தொனி சுரம் = உடம்பு சோர்வடைந்து அற்ப சுரத்துடன் காதடைத்து நாடி தளர்ந்த கண்ணிருண்டு தாழ்ந்த குரலோடு பேசும் ஒரு வகைக் காய்ச்சல், இதற்குச் சன்னிபாத குணமுண்டு

ஈனந்தார் = கொன்றை

ஈனம் = கள்ளி, குறைவு

ஈனவக்கிரம் = கொடிக்கள்ளி

ஈனனம் = வெள்ளி

ஈனாக் கடாரிக் கொம்பு = கன்று பேடாத பசுவின் (மருந்துக்குதவும்)

ஈனாக்கிடேரி = கன்று போடாத பசு

ஈனாத்தோர் = கொன்றை

ஈனாமேகப்பூ = செம்பரத்தம்பூ

ஈனாவாழை = பூவிடாத வாழை

ஈனாவெருமைச் சாணி = கன்றுபோடாத எருமையின் சாணம் ; சாயத்திற்கு உபயோகப்படும்

ஈனுகத்தரி = நித்த கத்தரி

ஈனுதல் = காய்த்தல், குழந்தை பெறுதல்

ஈனுமணிமை = பிள்ளை பெற்ற தீட்டு

ஈனை = இலைநரம்பு, ஒரு நோய்

ஈன் = கருவுயிர்த்தல், ஆச்சாமரம், இஞ்சி

ஈன்புறால் = சாயவேர்

ஈன்றணிமை = சூதகம்

ஈன்றணிமைப் பால் = கன்று போட்டவுடன் சுரக்கும் பால் ; சீழ்ப் பால் என்று சொல்வர்

ஈன்றணுமை = ஈன்றணிமை

ஈன்றற் பிளவை = குழந்தை பெற்ற தாய்க்குக் காணு மோர் சிலந்தி

ஈன்றாள் = தாய்

ஈன்றான் = தகப்பன்

ஈன்றிக்காய் = தான்றிக்காய்

ஈன்னம் = வெள்ளி

## உ

உகடன் = முருங்கை

உகட்டல் = குமட்டல்

உகட்டுதல் = புரட்டல் (வயிறு) தெவிட்டுதல், அருவருத்தல் (உணவில், நீரில்) தேக்கெடுத்தல்

உகண்டம் = கடலை

உகமல்லி, உகமல்லிகை = நாகமல்லி

உகம் = பாம்பு, பூமி, நாள்

உகரகோமதம் = பாலாடை

உகவல்லி = உகமல்லி

உகளம் = இரட்டை

உகா = உவாமரம், (உகாமரம்), (சிறுகளர்வா, கார்கோள் என்ற பெயர்களுண்டு)

உகாடிகாமரம் = அக்கு

உகாத்தேக்கு = உகா

உகாந்தவரகு = கேழ்வரகு

உகாப்பட்டை = உகா என்னும் மரத்தின் பட்டை

உகாயவாகை = ஒருவகை வாகை மரம்

உகாய் = உகா

உகாரம் = கல்லுப்பு, பெண்ணின் நாதம், (சூதக இரத்தம்), (உடலுறவின் போது பெண்ணிற்கு வெளிப்படும் திரவம்)

உகாரவுப்பு = கல்லுப்பு, கடலுப்பு

உகிமை = புளியமரம்

உகிரகோதம் = வசம்பு

உகிரம் = இலாமிச்சை, உதிரவேங்கை

உகிர் = விலாமிச்சு, ஆதண்டை நகம், மிருகங்களின் கால் நகம், செவ்வியம்

உகிர்சுவர் = ஆதண்டை

உகிர்ச்சாரிகை = மலைநாரத்தை

உகிர்ச் சுற்று = நகச்சுற்று, நகத்தைச் சுற்றிவலியோடு வீக்கத்தையுண்டாக்கிக் கட்டியையெழுப்பும்

உகிலந்துளிர் = அரப்பு

உகிலம் = துளிர், அரப்பு

உகிலாதி = புளி

உகிளந்துளிர் = அரப்பு

உகிளிம்பு = புளியமரம்

உகிற்கெந்தம் = வசம்பு

உகினமா, உகினம், உகின் = புளியமரம்

உகுணம் = முகட்டுப்பூச்சி

உகுதல் = சுரத்தல், கரைந்து தேய்தல்

உகுபுட்பம் = செம்பரத்தை, புனுகுப் பூனை

உகுருலி, உகுருவி = சூரைச்செடி

உகுளத்துளிர் = உகிளந்துளிர்

உகை = உகா

உக்கடசூட்சத் திராசம் = நறுங்குறிஞ்சா

உக்கடா சூட்சம்பத்திரா = நறுஞ்செருந்தி

உக்கம் = நெருப்பு, பொன், பசு, கோழி, தலை, தாளி, வேலிப் பருத்தி, எருது, இடை (இடுப்பு)

உக்கம் பருத்தி = வனப்பருத்தி

உக்கரம் = குங்குமப்பூ

உக்கரித்தல் = வாந்தியெடுத்தல்

உக்கரை = பாலை

உக்கலரிசி = நொறுக்கரிசி

உக்கலை = இடுப்பின்பக்கம்

உக்கா = கள், கடுக்காய், வேலிப்பருத்தி

உக்கார சூலை = விலா, முதுகு, நெஞ்சு முதலியவைகளின் குத்தலுண்டாகிக் குதத்தில் உக்கிரகாத்தொட்டி சதை வளர்ந்து நீர்த் தாரையை நெருங்கி அதனால் மூத்திர அடைப்புண்டாகிச் கூச்சலிடு மோர் வகைச் சூலைநோய்

உக்காரம் = வாந்தி பண்ணல்

உக்காரி = பிட்டு

உக்காவேர் = கடுக்காய் வேர்

உக்கிச்செடி = புல்லுருவி

உக்கிட, உக்கிடர், உக்கிடா = சிலந்தி

உக்கிதம் = பெருங்காயம்

உக்கிரகந்தத் திரவியம் = மிக்க நெடியுள்ள மருந்துச் சரக்குகள்; வேகமான மருந்துச் சரக்குகள் உக்கிர பெருங்காயம், வசம்பு, கந்தம் வெள்ளுள்ளி, மலைவேம்பு, வேம்பு, கருவேம்பு, கரும்பு, ஓமம், அதிகமான வாசனை

உக்கிரகந்தி = கரும்பு, கருவேம்பு, வேம்பு, வசம்பு

உக்கிரகந்திகம் = ஒருவகைச் சோம்பு

உக்கிரகந்தை = ஓமம், வசம்பு

உக்கரகண்டம் = பாகல், காயம், புங்கு, செங்கடுகு

உக்கிரகாத் தொட்டி = ஆதொண்டை

உக்கிர காய்ச்சல் = கடுங்காய்ச்சல், விஷக் காய்ச்சல், உயிருக்கு = அபாயமான காய்ச்சல்

உக்கிரகுலா = ஆதண்டை, வசம்பு

உக்கிரகெந்தம் = உக்கிர கந்தம்

உக்கிரகெந்தி = கருவேம்பு

உக்கிரகெந்தை = உக்கிர கந்தம்

உக்கிரசடம் = காத்தொட்டி

உக்கிரசம் = பெருங்காயம்

உக்கிரசவா, உக்கிரசவாகி = காத்தொட்டி

உக்கிரசுகிரந்தம், உக்கிரசுரக்கொடி, உக்கிரசுரவார் = ஆதொண்டை

உக்கிரச்சா = காத்தொட்டி

உக்கிரச்சுவர் = ஆதொண்டை

உக்கிர தொண்டை = உண்ணாக்கின் கீழுள்ள தொண்டையின் பகுதி

உக்கிரத் தொண்டைத் தாபம் = உண்ணாக்குக்குக் கீழும் குரல்வளைக்கு மேலுள்ள தொண்டைக்கு ஏற்படும் அழற்சி (சீதளம், குளிர்ந்த காற்று படுதல், கயம், கிரந்தி, துத்திரோகம் போன்ற காரணங்களால் வலி, புண், கொப்பளம் போன்றவை ஏற்படும்)

உக்கிரநாசிகம் = பெரிய மூக்கு

உக்கிரநாமம் = வெங்காயம்

உக்கிரமசத்தி = கருநொச்சி

உக்கிரமம் = நோய்

உக்கிர மருந்து = காரமருந்து, இரசகந்த பாடாணங்களைக் கொண்டு செய்யுமருந்து; கொப்பளத்தை எழுப்பும் மருந்து, வெடிமருந்து

உக்கிரமாசத்தி = பிரண்டை

உக்கிரமூலகம் = பெருமுள்ளங்கி

உக்கிரம் = முருங்கை, இலாமிச்சை, கருநொச்சில், பல பூண்டுகளைக் குறிக்கும் பெயர், பெருங்காயம், வசம்பு, காரமுள்ளது (மிளகு) வெப்பம், உறைப்பு

உக்கிர ரோகம் = கண்ணிற்சக்கரம் போல் தடித்து மூடுவதற்கு மூடியாமல் வலியுண்டாகி அரிப்பும் எரிச்சலும் ஏற்பட்டுத் தண்ணீர் வடிந்து கண்புகைச்சல் கம்மியது போல் தோன்றும் ஒருவகைக் கண்ணோய்

உக்கிரவல்லி = கொடிவேலி

உக்கிர வாந்தி = இரத்தங்கக்கும் வாந்தி, அதிகமாக எடுக்கும் வாந்தி

உக்கிரவாலி = காத்தொட்டி

உக்கிரவேர் = ஆதளை

உக்கிர வைப்பு = புதிதாக வளர்ந்து தானாகவே மறையும் சதை

உக்கிராகாந்தம் = வசம்பு

உக்கிராக் கிரக வாதம் = சரியில்லாத உணவு நேரந்தவறி உண்ணல், பகல் நித்திரை, மிகு புணர்ச்சி, சீதளமான இடத்தில் படுக்கை முதலிய குற்றங்களால் ஏற்பட்டு மார்பு, தலை, கண்டம், கீழ்வயிறு, பிறப்புறுப்பு முதலிய இடங்களில் பரவும் உடம்பு வலி, குத்தல், குடைச்சல், இளைப்பு, திமிர், கனம், எரிச்சல் முதலியவைகளை உண்டாக்கும் ஒரு வகை வாத நோய்

உக்கிராசம் = ஆதொண்டை

உக்கிராதகம் = கருநெல்லி

உக்கிராதிதம் = கருவேல்

உக்கிராந்தி = இறப்பு

உக்கிராபன்னி = சணல்

உக்கிரி = வசம்பு, கருவசம்பு

உக்கிரீகம் = ஓமவல்லி

உக்கிரை = கருவசம்பு

உக்கிர் = கெந்தம், வசம்பு

உக்கிறகெந்தம் = வசம்பு

உக்கிறம் = மணித்தக்காளி, செவ்வியம்

உக்கினிடநாகரம் = சுக்கு

உக்கு = இலவங்கம், எஃகு, எரு, புங்கு

உக்குளான் = சருகு தின்னும் முயல்

உக்குள் கெந்தம் = வசம்பு

உக்கெலும்பு = மாரெலும்பு

உக்கை = எருது

உங்காரணை = அவுரி

உங்காரம் = ஆதொண்டை

உங்குணி = பெருங்கிளிஞ்சில்

உசகம் = ஆமணக்குச் செடி ஆமை

உசந்தகுரு = சவுக்காரம்

உசந்த தோர்குடிச்சி = செந்திராய்

உசந்த நாசனி = செம்பல்லி

உசந்திசித்தி = அழுகண்ணி

உசரி = முள்ளி உசரிதம்,

உசரிபம் = நெருஞ்சில்

உசலம் = உசிலமரம்

உசலை = கருவேப்பிலை

உசல் = உசிலமரம்

உசவோற்கம் = முயல்

உசற்காலம் = சூரியோதயம்

உசிச்செடி = புல்லூரி

உசிணம் = புளியமரம்

உசிதம் = பெருங்காயம், கத்தூரி மஞ்சள்

உசியம் = செவ்வியம்

உசிரம் = இலாமிச்சைவேர், மிளகு, செவ்வியம், அட்டமூலம், அட்டம்

உசிலந்துளிர் = அரைப்பு, சீக்கிரிமரம்

உசிலமரம் = உசிலை

உசிலம் = உசிலை

உசிலம் பாசி = உசிலம் புல்லுருவி (கற்பமூலிகைகளுள் ஒன்று)

உசிலம் போசிதம் = உசில மரத்தினிலை

உசிலரைப்பு = உசில இலைப்பொடி, எண்ணெய்ப்பசையைப் போக்குவதால் இப்பெயர்

உசிலின் புல்லுருவி = சிலம்பாசி

உசிலை = உசிலமரம், இதற்கு ஊஞ்சமரம், உரிஞ்சு மரம், அரைப்பு மரம், துரிஞ்சில், சுரஞ்சி, சீக்கிரான், உசு முதலிய பல பெயர்களுண்டு

உசிலோசிதம் = கருப்புக்கடுக்காய்

உசில் = உசிலை

உசினி = சூரை

உசீரகம் = வெட்டிவேர்

உசீரம் = இலாமிச்சைவேர்

உசு = உளு

உசுபம், உசும், வ் = பெருங்காயம்

உசுவாச நிசுவாசம் = உள்ளே போகும், வெளியே வரும் மூச்சுகள்

உசுவாசம் = உள்ளிழுக்கும் மூச்சு

உச்சங்க வர்த்தமம், உச்சங்கினி = குழந்தைகளுக்குக், கண்ணிமைக்குள் சிவப்பு கறுப்பு நிறக் கொப்புளங்களை உண்டாக்கி மறுபடி அவைகளைச் சுற்றி பல கொப்புளங்களைக் கிளைக்கச் செய்யும் ஒருவகைக் கண்ணோய்

உச்சடம் = ஒரு புல், ஒருவகை வெள்ளைப்பூண்டு, குன்றி மணி, சரளங்காய்

உச்சட்டியை = ஆற்றூமத்தை

உச்சட்டை = ஒல்லி, குன்றி

உச்சதரு = எல்லா மரங்களையும் விட உயரமாக வளர்ந்திருக்கும் தென்னை அல்லது பனை மரம்

உச்சம் = உச்சந்தலை, நண்பகல் (உச்சிப்பொழுது)

உச்சரிடம் = மலம்

உச்சர் = மலங்கழித்தல்

உச்சவ மண்டனம் = கருங்காலி

உச்சற்கம் = அபானம்

உச்சாடம் = வெண்குன்றி

உச்சாடனம் = தைலத்தாலும் வாசனைச்சரக்கினாலும் உடம்பைத் தேய்த்துச் சுத்தி செய்தல்; புகை யிட்டுச் சுத்தி செய்தல்

உச்சாணி = தலையினுச்சியிற் காணு மோர்வகைக் கட்டி அல்லது விரணநோய்

உச்சா தனம் = சிலந்தி, பிளவை முதலியவைகளில் சதை வளர்ச்சிக்காக உபயோகிக்கும் மருந்து (அல்) மூலிகை

உச்சாதனி = சுவர் முள்ளங்கி

உச்சாரம் = மலம்

உச்சாரிடன் = மலங்கழித்தோன்

உச்சி = தலையில் உச்சி, புல்லுருவி, நாய், மல்லிகை, ஊசி மல்லிகை, நடுப்பகல்

உச்சிகந்தி = பதங்கித்த கந்தகம்

உச்சிகம் = நெருஞ்சில், மேலாகப் போய்ப்படிந்தது அதாவது பதங்கம்

உச்சிக் கரண்டி = குழந்தையின் தலையில் எண்ணெய் விடுவதற்காக உபயோகிக்கும் ஒருசிறிய கரண்டி

உச்சிக்கரண்டி யளவு = தேயிலைத் கரண்டியளவு

உச்சிக் கலயம் = சன்னி கொள்ளுங்கால் உச்சியில் மிதமான சூட்டுடன் உள்ள மூலிகைத் திரவத்தை விடுதல்

உச்சிக் குழி = குழந்தைகளுக்கு நடுத் தலையிலிருக்கும் மெதுவான் சதையினால் மூடப்பட்ட பள்ளம்

உச்சிக்கொடி = புல்லுருவி, காக்கை

உச்சிக் கொம்பன் = காண்டாமிருகம், நிமிர்ந்த கொம்புள்ள மாடு, தலையின் உச்சியில் ஒரே கொம் புள்ள மிருகம்

உச்சிச்செடி, உச்சிடாதி = மரங்களின் உச்சியில் முளைக்கும் புல்லுருவி

உச்சிட்டம் = எச்சில்

உச்சிட்டாஞ்சி = செம்மரம்

உச்சிதசங்கம் = நற்சங்கிலை

உச்சிதமல்லி = ஊசிமல்லி

உச்சிதம் = நெருஞ்சில்

உச்சிதுழன்றான் = சிலந்திக்கொடி

உச்சி தோடம் = குழந்தையின் உச்சி தாயின் மார்பில் பட தாய்க்குண்டாகும் நோய்

உச்சித்திலகம் = சிகப்புப் பூவுள்ள வோர் பூஞ்செடி

உச்சிந்திகம் = செவ்விண்டு

உச்சித்து வாரம் = உச்சிக்குழி

உச்சிப்படுகை, உச்சிப்படுதல் = உச்சி தோடம்

உச்சிப் பிளவை = ஒருபுண், உச்சந்தலையில் உண்டாகுமோர் வகை சிலந்தி

உச்சிமல்லிகை = ஊசிமல்லிகை, கீரை

உச்சிமேடு = தலையின் நடுவிடம்

உச்சியன் = தவளை

உச்சியிடிக்கை = உச்சி தோடம்

உச்சியெண்ணெய் = குழந்தைகளின் உச்சந்தலையில் காலையிடும் சிற்றாமணக் கெண்ணெய்

உச்சிரதந்தி, உச்சிரதம், உச்சிரமாதந்தி = பிரண்டை

உச்சிரவல்லி = கொடிவேலி

உச்சிலிங்கத் தேள் = புவனகிரியின் உச்சியில் இருக்கும்; இந்த செந்தேள் கொட்டினால் வீக்கம், நரம்பு வலி, மயிர்சிலிர்த்தல், சீதளம் முதலிய குணங்களைக் உண்டாக்கி மரணத்திற்குக் காரணமாகும்

உச்சிலிந்தி = கருநெல்லி

உச்சிவட்டம் = உச்சிக்குழி

உச்சி விருக்கம், உச்சி விரும் = புல்லுருவி

உச்சி விழுகை = குழந்தைகளைத் தாக்கி மரணத்துக்கு ஏதுவாக்கும்; அபாயமான குறி; இந் நிலையில் குழந்தையின் தலையில் பள்ளம் விழும்

உச்சிவேர் = ஆணிவேர் அல்லது மூலவேர்

உச்சினி = இரண்டாம்மாதம்

உச்சீகரணம் = பதங்கம்

உச்சுவலம் = பொன்

உச்சுவாசம், உச்சுவாசனம் = உசுவாசம்

உச்சுவாசிடம் = மூச்சு

உச்சூனம் = கொழுப்பு

உச்சேதம் = வெட்டியெடுத்தல்

உச்சை = குதிரை

உஞ்சக்கால் = முடவாட்டின் கால்

உஞ்சல் = உசிலமரம், மூவாட்டின் கால்

உடகாலம் = விடியற்காலம்

உடக்கு = உடம்பு

உடக்கை = உள்ளங்கை

உடசத்தோல் = வெட்பாலைப்பட்டை, குடசப்பாலைப் பட்டை

உடசம் = வெட்பாலை

உடசிப்பி = சிப்பிமுத்து

உடணம் = இஞ்சி, மிளகு, சுக்கு, திப்பிலிமூலம்

உடநடை யலங்கம் = திகைப்பூச்சி

உடப்பு = துறட்டு முள்மரம் (தொரட்டு முள்ளிச்செடி)

உடமுள் = வேலமரத்தின் முள்

உடம் = வேலமரம்

உடம் படுத்து நோய் = திரிதோடக்குற்றங்களினாலும் மனசஞ்சலத்தினாலும் இயல்பாகவே உடம்பில் ஏற்படும் நோய்

உடம்பறியாமற் போதல் = மூர்ச்சித்துப் போதல், உணர்ச்சியற்றுப் போதல்

உடம்பிடி = வேலமரம்

உடம்பிலை = நெடுநாரை

உடம்பு = பொன், நெஞ்சு

உடம்பு கறுத்தல் = உதடுமுதலியவை கறுத்தல்; சுரத்தினால் ஏற்பட்ட ஒருவகைத் தோடம்

உடம்புகா = சுடு தொரட்டி

உடம்பு நடுக்கம் = பாடாணத்தினால் ஏற்பட்ட நடுக்கம்; உதறுவாதம் அல்லது நடுக்கு வாதத்தால் உண்டாவது; தசைச் சுருக்கத்தால் ஏற்பட்ட நடுக்கம்; சூதக வாய்வு சம்பந்தமான நடுக்கம்; இரசவேத சம்பந்தத்தினால், முறிவினால் ஏற்படும் நடுக்குவாதம்; உலோகவிஷ சம்பந்தத்தினால் ஏற்பட்ட நடுக்கம்; கை, கால் முடக்க மாயிருக்கும் போது அசைக்க முயன்றால் அப்போதுண்டாகும் நடுக்கம் ; அபினியால் ஏற்படும் நடுக்கம்

உடம்பு புரட்டுதல் = உடம்பினின்று அழுக்கைத்திரட்டி எடுத்தல்

உடம்பு வறட்சி = உடம்பின் மேற்றோல் உலர்ந்து காணல்; உடம்பின் மேற்றோல் சொசொரத்து உதிருமோர் நோய்

உடம்பை = கலங்கல் நீர்

உடலந்தம் = உடம்பழிவு

உடலம் = உடல்

உடலற்பனை = திப்பிலிப்பனை

உடலிம்பனை = கூந்தற்பனை

உடலிரண்டு யிரொன்று = களிஞ்சில்

உடலிலாள் = திப்பிலி

உடலில்கியானி = ஆமை

உடல்வாள் = உடலிலாள்

உடலுக்குடசெயநீர் = அமுரி

உடலுருக்கி = உடம்பை உலரச் செய்யும் நோய், குடலைச் சுற்றியுள்ள சவ்வுக்குத் தாபிதங்கண்டு அதனால் குழந்தைகட்கு நோயேற்பட்டு உடம்பையிளைக்கச் செய்யும் நோய் (கணச்சூடு உள்ளுருக்கி) நீரிழிவினால் நரம்பு தளர்ந்து உடம்பு மெலிதல், கர்ப்பச்சூட்டினால் நோயுற்று உடம்பு மெலிதல்; முள்ளந்தண்டுக் கழிவு கண்டு அதனால் உடம்பை இளைக்கச் செய்தல்

உடலூதல் = கர்ப்ப தொந்தத்தினா லுண்டாகும் உடம்பு வீக்கம் ; வாயு தோடத்தினால் உடம்பு மெலிந்து காணும் வீக்கம்; பிறந்த குழந்தைக்கு உடல் சில்லிட்டு நிறங்குலைந்து காணும் வீக்கம்; இரத்தம் நீர்த்தலினால் காணும் வீக்கம்; உப்பிலாப் பத்தியம் காக்கும் போது உப்பைச் சேர்த்தலினால் உடம்பூதல், உடம்பில் எப்பாகத்திலாவது வாதநீர் தங்குவதால் ஏற்படும் வீக்கம் உடல்

உடல் = உப்பு, பொன்

உடல் நீர் முறித்தான் = தேற்றாங்கொட்டை

உடல் பொன் = உடல்

உடல் வேதிச்சி = கொடிவேலி

உடற் கொழுப்பு = உடம்பில் பல உறுப்புகளிற்காணும் கொழுப்பு; உடற் கொழுப்பு: அரோசிகத்தை உண்டாக்கும் நோய்

உடற் பொருள் = விலங்குகளில் உடலுக்குள் உண்டாகும் கத்தூரி, கோரோசனை, புனுகு, அம்பர் முதலிய பொருட்கள்

உடற்றல் = உடம்பினுள்ளே செலுத்துதல்

உடன்கட்டை யேறினவர் = வயித்தியமுப்பு

உடன்கூட்டு சுண்ணம் = அப்போது தாளித்த சுண்ணாம்பு; காரச் சுன்னம் ஆடு, வெள்ளாடு, சீக்கிரிமரம் (உசிலை)

உடுகாட்டி = பொன்னாங்காணி

உடுக்கினத்துக் காதி = குக்கில்

உடுக்குச் சுருக்கம் = கருப்பையின் சுருக்கம்

உடுக்குதல் = காயத்தின்மேல் சீலைசுற்றுதல்

உடுக்கை = ஏலம்

உடுக்கைக்கொடி = வள்ளிக்கொடி

உடுக்கைச் சுருக்கம் = கருப்பையின் சுருக்கம்

உடுக்கைமரம் = கருங்காலி மரம்

உடுசி = உசிலை

உடுண்டகம், உடுண்டுகம் = வாகைமரம், கருவாகை

உடுத்தியங்கை = பேய்ப்புடலை

உடுநீர் = அகழிநீர்

உடுபதம் = ஆகாயம்

உடுபதி = சந்திரன், மரமஞ்சள்

உடுபாதகம் = பனை

உடுபுட்பம் = செவ்வரத்தை

உடுபோதகம், உடுபோதகி, உடுபோதகை, உடுபோதம் = பேய்ப்பசளை

உடுப்பாத்தி = ஒருவகைச்சிறிய கடல்மீன்

உடுப்பாநாகம் = பனை

உடுப்பை = உசில் (சீக்கிரமரம்), நெய்ச்சிட்டி

உடுமலகம் = அரிதாரம்

உடும்பரம் = அத்திமரம்

உடும்பிலை = நெடுநாரை

உடும்புக் கல் = உடும்பின் உடம்பில் இருக்கும் கல் மருந்திற்கு உபயோகப்படும்

உடும்பு நாக்கு = இருபிளப்பாயுள்ள நாக்கு

உடும்புப் பிச்சு = உடும்பின் பித்துப்பை

உடும்பு முத்து = உடும்பினிடமாகப் பிறந்த முத்து

உடும்பு லேகியம் = உடும்பின் இறைச்சியைக் கொண்டு தயாரிக்கும் இலேகியம்; உடம்பிற்கு வலிமையையும் தாது புஷ்டியை முண்டாக்கும்

உடும்பை = உசிலை

உடுவின் வேந்தன் = சந்திரன்

உடுவேரகம் = காட்டுச்சீரகம்

உடை = வேலமரம், குடைவேல், நீருடைமரம், உடைவேல், கல்வேல், கால்

உடைகுலம் = வேல்

உடைகொல் = குடைவேல்

உடைக்கல் = காவிக்கல்

உடைக்குள் = வேல்

உடைச்சிட்டை = உடை உசில்

உடைதவப்புல் = சோனைப்புல்

உடைந்த வாய்ச் சிலந்தி = ஆழ்ந்த நீண்ட பிளப்புள்ள சிலந்தி

உடைந் தெழுகாசம் = கண் அதிகமாகச் சிவந்து நீர் வடிந்து பீளை கட்டுவதுடன் கடைக்கண், நெற்றி, காது, உச்சி முதலிய இடங்களில் குத்தல் வலியையுண்டாக்கு மோர் வகைக் கண்ணோய்

உடைமேல் புல்லுருவி = உடைவேலின் மேல் வளரும் புல்லுருவி

உடைமோக பச்சை = கதிர்ப்பச்சை

உடைவாலக்கீரை = தண்டங்கீரை

உடைவேல் = குடைவேல்

உட்கணு = மரத்தினுள் முளி, எலும்பினுள்ளே இருக்கும் முளி

உட்கம் = எருது

உட்கரணம் = கண்ணைக் குருடாக் கும் ஓர் இரணநோய்

உட்கரு = பேய்ப்புடல், முட்டையின் மஞ்சள்கரு, விந்து, கருப்பையிலிருக்கும் பிண்டம்

உட்கருவி = உட்கரணம்

உட்கல் = அழுகல்

உட்கலிசு = வயிற்றைப் பற்றும் ஒரு பாண்டு

உட்கள்ளம் = கட்டி அல்லது புண்ணினுள்ளே இருக்கும் விடப்பொருள்

உட்காந்தல் உட்காங்கை = உட்சூடு உட்சுரம்

உட் காய்ச்சல் = சிலேட்டுமமும், பித்தமும் தொந்தித்து இருக்கையில் வாதமானது வயிற்றுக்குள் அடங்குவதால் இக்காய்ச்சல் வரும் வடமொழியில் 'சந்த சுரம்' என்பர்

உட்கிரந்தி = குடல், ஈரல் இதயம் முதலிய உறுப்புகளில் உண்டாகும் ஒரு விதச் சீழ்க்கட்டி

உட் கிராந்தல் = அம்மை, சயம் முதலியவைகளால் உடம்பில் உண்டாகும் கொதிப்பின் காரணமாய் நேரிடும் இளைப்பு; வெளியே காட்டாது உடம்பினுள்ளே பதுங்கிநிற்கும் சூடு; ஒருவகை உட்சுரம்

உட் குடைச்சல் = உடம்பினுள் உண்டாகும் நரம்பைப் பற்றிய ஒருவலி

உட்குத்தல் = கட்டி, பிளவை சிலந்தி முதலியவைகளிற் காணும் ஊசியினால் குத்தல் போன்ற குத்தல் நோய்

உட்குத்து = உடல் காய்ந்து வியர்த்து பல்கிட்டி நாவறண்டு வாயு கீழ் நோக்கி அன்னம், நீர்செல்லாது வருத்தும் குலையைப் பற்றிய நோய்

உட்குத்துப் புறவீச்சு = அடிக்கடி குத்தல் உண்டாகி உடம்பையும் கழுத்தையும் பின்னுக்கு வளைத்துக் குலையையும் பற்றித் துன்புறுத்தும் ஒருவகைச் சன்னி; ஈரலுக்குண்டாகும் ஒரு வகை இசிவு நோய்

உட்குத்துவாதம் = உட்குத்து

உட்குழி = பின்புறுப்பின் உட்குழி

உட்கூதல் = வெளிக்காட்டாத குளிர் சுரம்; உடம்பினுள் ஏற்படும் குளிர்; இலேசான காய்ச்சல்

உட்கொண்ட விரணம் = உள்ளுக்குள் புடை கொண்டகட்டி அல்லது இரணம்; மேலெழும்பால் உள்ளாகக் கரைந்த கட்டி

உட்கொதிப்பு = உட்காய்ச்சல்

உட்கொள்ளிக் கிரந்தி = மேகத்தினால் உடம்பினுள் காணும் கிரந்திப்புண்

உட்சங்கம் = இரணத்தின் அடி அல்லது ஆழமான பாகம்

உட்சங்கன் = ஆழந்த புண்; கண் மடலின் உட்பக்கத்தி லிருக்கும் குருக்கள்

உட்சலம் = பித்தளை

உட்சாடனம் = தேய்த்தல், புண் ஆறாவிடல்

உட்சிலை = புண்ணிற்குள் ஏற்படும் புறை; பவுத்திரம்

உட்சிறைப் பேசி = தாடை அசைவுற வேண்டி உட்புறத்திற் சிறகைப் போலமைக் கப்பட்ட தசை

உட்சுரம் = உட்காய்ச்சல்

உட்டண கட்டி = வேனிற்காலத்தில் உடம்பின் கொதிப்பு ஏற்பட்டு பலவிடங்களிலுங் காணும் இரத்தக் கட்டிகள்

உட்சொக்காய் = நரம்புச்சுவரின் உட்புறம்

உட்டண கழிச்சல் = உடம்பின் கொதிப்பினால் உண்ட உணவு செரியாமல் குழந்தைகட்குண்டாகுங் கழிச்சல்

உட்டண காசம் = உடம்பிற் கொதிப்புக் கண்டு அதனால் காணு மோர் வகைக் காசநோய்; உடம்பின் சூட்டினால் காணும் ஒருவிதக் கண்ணோய்

உட்டணக் காய்ச்சல் = இரத்தக் கொதிப்பினால் ஏற்படும் காய்ச்சல்

உட்டண சஞ்சீவி = உடம்பிற் தேங்கி நிற்கும் வெப்பத்தைக் கழிக்கு மோர் மருந்து, தண்ணீர், பிரண்டை

உட்டணசயித்தியம், உட்டணசைத்தியம் = உடம்பிலுள்ள வெப்ப மிகுதியால் உண்டாகும் சீதளம்; சூடு அல்லது காரமான பண்டங்களைச் சாப்பிடுவதனால் ஏற்படும் சீதளம்

உட்டண நோய் = உடம்பின் கொதிப்பாலும் வெயிலின் கொடுமையாலும் ஏற்படும் நோய்கள்

உட்டணம் = வெப்பம், மிளகு, தினை, இரத்தத்தின் வெப்பம், சூரிய வெப்பம்

உட்டண வாதக் கிராணி = உடம்பின் கொதிப்பினால் வாயு அதிகரித்து அதனால் ஏற்படுங் கழிச்சல்

உட்டண வாயு = உடம்பிற்சூடு அதிகரித்துச் செரியாமையினாலேற் படும் வாயு, பித்தவாயு

உட்டண வாயு பேதி = வெப்ப வாயுவினால் உண்டாகுங் கழிச்சல்; சத்தத்துடன் மலங்கழியும் ஆசனக் கடுப்புண்டாகும்

உட்டண வியாதி = வெப்பநோய், வெள்ளை

உட்டணாசகம் = குளிர்காலம்

உட்டணோதகம் = வெந்நீர்

உட்டனோபகம் = வேனிற்காலம்

உட்டரம் = தேள்கொடுக்கன்

உட்டினம் = முத்தாதிசாரம், உளுந்து, சிறுகளவாய்ப்பட்டை

உட்டிமரம் = தேள்கொடுக்கி

உட்டிரம் = தேள்கொடுக்கி, செவ்வந்தி, முட்செவந்தி

உட்டுளை = நாசியின் உள்துவாரம், புண்புரை

உட்டுளை பாய்தல் = புரையோடல்

உட்டெளிவு = வடித்த நீர், உள்வயிரம் வடித்தசாறு

உட்டேலனம் = நரிமிரட்டி

உட்பத்தியம் = மருந்துண்ணுங் காலத்து பெண்போகம் விலக்கல்

உட்பிரசவம் = கருவழிதல்

உட்புரை = புண்ணின் உட்புரை, கண்தோலின் உட்புரை

உஷணம் = மிளகு

உஷபம் = ஆமணக்கு

உஷம் = விடியற்காலம்

உஷா = விடியற்காலம், குங்கிலியம், உப்புமண், ஒருதாது உப்பு

உஷை = இரவு, காலை, மாலை

உஷ்ண கணம் = உடலில் சூட்டை உண்டாக்கும் மருந்து; மிகுந்த வெப்பத்தினால் குழந்தைகட்கு ஏற்படும் ஒருவிதக் கண்நோய்

உஷ்ண கபகரி = கக்கரி

உஷ்ண காரி = உடம்பின் சூட்டை அதிகப்படுத்தும் மருந்து

உஷ்ணகாலம் = வேனிற்காலம்

உஷ்ணசமனி = உடலின் வெப்பத்தைத் தணிக்கும் மருந்து

உஷ்ண சன்னி = வெயிலின் மிகுதியால் உண்டாகும் மூளையைப் பற்றிய சன்னிநோய்; கொதிப்பினால் மூளையில் இரத்தம் சேருவதால் உண்டாகும் ஒருவகைச் சன்னிநோய்

உஷ்ணசாந்தி = உஷ்ணசமனி

உஷ்ண சீதளம் = உடம்பின் வெப்பத் தினாலும் காரமான பொருட்களைச் சாப்பிடு வதாலும் ஏற்படும் சீதளம்

உஷ்ண நெரிசல் = விழிநடுவில் இரத்த நிறத்தையும் வெப்பத்தை உண்டாக்கும் ஒருவகைக் கண்ணோய்

உஷ்ண மேகம் = வெட்டைச் சூட்டினால் உடம்பில் பல இடங்களில் கட்டிகள் எழும்பிப் பக்குவிட்டு உள் உறுப்புகள் சீர் குலைந்து உடல் வெளுத்துக் காணும் ஒருவகை மேக நோய்

உஷ்ணம் போக்கி = நெல்லிக்காய்

உஷ்ண வாதம் = அதிக உழைப்பினால் பித்தம் மூத்திரப்பையை அடைந்து ஆண்குறி, ஆசனம் முதலிய இடங்களில் எரிச்சலை உண்டாக்கி மூத்திரம் மஞ்சள் நிறமாகவும் இரத்தத்துடன் கலந்தும் மிகுந்த துன்பத்துடன் வெளிவருமோர் வகை நோய்

உஷ்ணவாயு = உட்டணவாயு

உஷ்ணவாயுக் கிராணி = உட்டணவாயு பேதி

உஷ்ணவிதக் கதகம் = வெப்பத்தினால் கண்ணில் உண்டாகும் ஒரு நோய்

உஷ்ண விதத்தகம் = வெப்பத்தினால் கண்ணில் உண்டாகும் ஒரு நோய்

உஷ்ணை = அகத்தி, ஒரே சூடாகக் காய்ந்த தண்ணீர், வெந்நீர்

உஷ்மசுவேதம் = வேதுபிடித்தல்

உஷ்மதம் = ஒற்றடம்

உஷ்மதுகம் = இலுப்பைப்பூ

உஷ்மன் = ஆவியிலிருந்துண்டானது

உண = உணவு

உணக்கம் = வாட்டம், உலர்ந்த தன்மை, வெளுத்தல்

உணக்குதல் = வாட்டுதல், காய்ச்சுதல்

உணக்கு = உணக்கம்

உணங்கல் = வாடல், உலர்ந்த பூ, மெலிதல், காய வைத்தது, வற்றல்

உணஞ்சை = சிறுபீளை

உணத்தல், உணத்துதல் = காயச்செய்தல், வற்றச்செய்தல்

உணரம் = சோறு

உணர் காங்கை = உணர்ச்சியால் அறியும் சூடு

உணர்ச்சி நரம்பு, உணர்நரம்பு = சுவரணைக்குக் காரணமாயுள்ள உணர்ச்சி நரம்பு

உணர்ந்திடுதல் = உள்ளுக்குக் கொள்ளுதல்

உணர்ந்துபோதல் = இளைத்தல்

உணர்வங்கம் = உணர்ச்சியையறியும் உறுப்பு

உணர்வு நரம்புக் கிளை = நாக்கு, தொண்டை முதலிய இடங்களி லோடும் பரிச நரம்பு

உணவிறக்கம் = பசியேற்பட்டு உணவை ஏற்றுக்கொள்ளல்

உணவு = வேங்கைமரம்

உணவுமறுத்தல் = அரோசிகம்

உணறம் = தும்புருலு, மத்திமரம்

உணா = உணவு, இரை

உணி = உண்ணி, தாய்ப்பால் உண்ணுங்குழந்தை (சிறு குழந்தை)

உணு = சோறு

உணைதல் = மெலிதல்

உண்கலம் = வெண்கலம்

உண்கல் = சுக்கான்கல்

உண்சரம் = திப்பிலி

உண்டதார், உண்டத்தாரா = கள்ளி

உண்டமாகம் = தேள் கொடுக்கு

உண்டறுத்தல் = சாப்பிட்ட உணவைச் செரிக்கச் செய்தல்

உண்டா = கருவுண்டாதல்

உண்டாத்தா, உண்டாத்தர் = கள்ளி

உண்டி = கொட்டைக்கரந்தை, பறவையுணவு, சோறு, உணவு

உண்டிப்பிரிவு = உண்டவுணவு, உடம்பினில் சீரானபிறகு உண்டாகும் மலம், சிறுநீர், தசை, விந்து, மூளை, இரத்தம் முதலிய ஆறு பிரிவினைகள்

உண்டுகம் = பெருவாகை, பெரு வாழை, நுரையீரலின் வலதுபாகம்

உண்டுபடர் கொடி = வெள்ளிண்டங்கொடி

உண்டுவம் = பெருவாகை

உண்டை = மாத்திரை, கவளம், ஓர்வகைச்சர்க்கரை, அபினி அல்லது கஞ்சாவுண்டை

உண்டைக்கார் = ஒருவகைச் சிகப்பு மட்டை நெல்

உண்டைக் = ஒருவகைக்கடல் மீன்

உண்டைச்சம்பா = ஒருவகைச் சம்பா நெல்

உண்டை கொடி = கஞ்சா அல்லது அபினி போடல் உண்டையை வழக்கமாய் உட்கொள்ளல்; பூரணாதி சாப்பிடல்

உண்டையம் = கடுக்காய், காகம்

உண்டையெழுச்சி = காது, கண் முதலியவைகளிற் குத்தலுண்டாகி வீங்கிக்கண் சிவந்து நடுப் பாவையில் அரிப்பு, காதில் சீழ், கடைக்கண்ணிற் குத்தல், நீர் வடிதல் முதலிய குணங்களைக் கட்டும் ஒருவகை நோய்

உண்ணக்கொல்லி = நச்சப்புல்

உண்ணடர் = சதிர்க்கள்ளி

உண்ணதம், உண்ணம், உண்ணல் = ஓடைமரம்

உண்ணா = அண்ணத்துள்ள சிறுநாக்கு

உண்ணாகப் பட்டை = பறங்கிப் பட்டை

உண்ணாக்கு = உண்ணா

உண்ணாக்கு நோய் = உண்ணாக்கில் சதை வளர்ந்து வீக்கத்தை உண்டாக்கி இருமலை யும்; அறுகுதலையும் உண்டாக்கும் நோய்

உண்ணாக் குத்தல் = மேல்நாக்கு நீண்டு வளர்ந்து தொண்டை யைக் குத்தி நிற்றல், இதனால் இருமலுண்டாகும்

உண்ணாக்கு விழல் = உண்ணாக்குதளர்ந்து தொங்கல்

உண்ணாப்பால் = எருக்கம் பால்

உண்ணாவரகு = வெள்வரகு, செருக்கல்வரகு

உண்ணி = பாலுண்ணி, மக்கடம்பு, குழந்தை, ஒருவகை உண்ணிச்செடி மாட்டின் மேல் காணும் பூச்சி பட்டுப் பூச்சிகளின் மேலும் மிருகங்களின் மேலும் ஒட்டிக்கொண்டு இரத்தத்தைக் குடிக்கும், ஓர் உயிர்களுக் குண்டான பொது பெயர் பலவகை உள நாயுண்ணி, குடவுண்ணி, தவிட்டு வுண்ணி, சருகுண்ணி, கோழியுண்ணி, புறா உண்ணி, அடையுண்ணி, அடவுயுண்ணி

உண்ணிக் கொக்கு = ஓர்விதக் கொக்கு

உண்ணீரம் = உள்ளீரம்

உண்ணீர் = வாய்நீர்

உண்ணுங்காலம் = இளம் வயது

உண்மாந்தை = உள்மாந்தை, குழந்தைகட்கு உணவினால் ஏற்பட்ட மாந்த நோய்

உண்முடிச்சு = கட்டி அல்லது புண்ணினுள்ளே இருக்கும் விடப்பொருள்

உண்சிலம் = ஆசனவாயினுட்பக்கமாக இருக்கும் ஆசனவளையங்களில் கிழங்கு முளை களைப் போன்ற மாமிச முளைகளைப் பெற்றிருக்கும் மூலநோய்

உண்மை = முட்டை, ஊர்வரை வேர்

உண்மைப் பொருளில் ஒன்றன்பால் = பசும்பால்

உண்மையாகு = இரசம்

உத = தண்ணீர்

உதகசுத்தி = தண்ணீரைச் சுத்தப்படுத்தும் தேத்தான் கொட்டை

உதகத் தைலம் = கொங்கணர்வாத காவியத்தில் கூறியுள்ள படி நீலகிரியிலுள்ள கனிமச்சத்துக்கள் நிறைந்த நீர்; உதகத்தினின்று தயாரித்த தைலம்

உதக நிறம் = மாங்கிஷச் சிலை

உதகநீர் = தண்ணீர்

உதகபய நோய் = பைத்தியம்

உதக பயம் = பிடித்த நாய்க்கடியால் ஏற்பட்ட ஒருவகைச் சன்னி, தண்ணீரைக் கண்டால் பயப்படும் குணம் இந்நோய்க்குண்டு அன்றியும் மூச்சுத் திணறல், மனத்தடு மாற்றம், வாய் நீர் வடிதல், சுரம் முதலிய குறிகளுங்காணும்

உதகமந்தம் = தண்ணீர்சோறு

உதகமயம் = அதிமூத்திரம், ஒருவித நீரிழிவு

உதகமூலம் = தண்ணீர்விட்டான் கிழங்கு, பச்சைவேர்

உதக மேகம் = கழுநீர் போல மிகுதியாக மூத்திரம் இறங்குவதைக் காய்ச்சினால் சங்குச் சுண்ணாம்பு போல் வண்டல் படிந்து உடம்பு நாற்றங்கண்டு ஒரு வருடத்தில் கொல்லு மோர் வகை மேகநோய்

உதகம் = நீர், மழை, பூமி, நீர்க்கோவை, மஞ்சள், உயர்ந்த பெரிய மலைகளின் உச்சியிலும் உழமண் நிலத்தின் வெப்புகளிலும், உழற்கல்லிலும், உழமண் சுக்கான் பாறைகளிலும் உற்பத்தியாகி நிற்கும் நீர் உப்புச்சுண்ணமும் அதற்குச் சமபாகமான காரமுஞ் சேர்த்துத் தயாரித்த உப்பு செயநீர்

உதகரதந்தம் = பெரும்பல்

உதகவன் = கொடுவேலி, நெருப்பு

உதகவாதி = வெள்ளுகாமரம்

உதகன் = கொடுவேலி

உதகார்த்தி = தாகவிடாய்

உதகான்னம் = நீரும் சோறும்

உதகியை = மாதவிடாய்ப் பெண்

உதகீரியம் = மீன்கொல்லி

உதகு = புங்கு

உதகும்பம், உதகோஞ்சனம் = தண்ணீர்ச்சாடி, நீர்க்குடம்

உதகோதரம் = மேகம், மகோதரம்

உதகோதனம் = அரிசிக்கஞ்சி

உதக்கு = புங்குமரம், வடக்கு

உதங்கன் = கொடிவேலி, நெருப்பு

உதசத்து = வாற்கோதுமைத் தண்ணீர்

உதசம் = பசுமடி

உதச்சீரகம் = பெருஞ்சீரகம்

உதடி = ஒருவகைக்கடல்மீன்

உதடு கறுத்தல் = வாதசுரத்தின் அழற்சியால் உதடு கறுப்பு நிறமாதல்

உதடுப்பு = இந்துப்பு

உதடுலர்தல் = நீரே மூத்திரமாகக் கழியுமோர்வகை நோயினால் உதடு காய்தல்

உதடு வியாதி = உதட்டிற்காணும் பலவித நோய்கள்

உதடு வெடிப்பு = பித்தம், பனி இவற்றால் வெடித்தல்

உதடு வெளுப்பு = உதடு வெளுத்துக் காணும் ஒரு நோய்

உதடுட்டறை = உதடு இரண்டாகப் பிடித்தல்

உதட்டுப்பிளப்பு = உதடு வெடிப்பு

உதட்டுப் புண் = வெப்பம், சுரத்தின் வேகம் பனி முதலிய காரணங்களினால் உதட்டில் உண்டாகும் இரணம்; உதட்டில் வரும் ஒரு வகைக் கிரந்தி

உதட்டுப் புற்று = யானைக்கால் எக்காரணத்தினால் ஏற்படுமோ அவ்விதமாகவே உதட்டிலுண் உண்டாகும் ஒருவிதத் துன்மாமிசவீக்கம்

உதட்டு வெள்ளை = உதடு வெளுத்துக் காணும் ஒரு நோய்

உதண்டபாலை = ஒருவகை மீன்

உததீரம் = தகரம்

உதநலி = மரமஞ்சள்

உதந்தி = உடைமரம்

உதந்திமாகிதம் = கம்பளி மரம்

உதந்தி மேற் புல்லுருவி = உடைமேற் புல்லுருவி

உதபயம் = உதகபயம்

உதபலம் = செங்கழுநீர்

உதபல் = கருங்குவளை

உதபானம் = கிணறு

உதபிந்து = நீர்த்துளி

உதப்பி = தீனிப்பை, செரியாத இரை, பேசுகையில் தெறிக்கும் வாய்நீர்

உதப்புதல் = குதப்புதல்

உதமஞ்சரி = துளசி

உதமதாழி = வேலிப்பருத்தி

உதமந்தம் = ஒருவகைக் கலப்பு

உதமுத்தம் = தண்ணீர்

உதமேகம் = தண்ணீர் மூத்திரம் நீரிழிவு

உதம் = தண்ணீர்,

உதம்பரம் = செம்பு, அத்திமரம்,

உதம்பரி, உதம்பரியம் = கொத்துமல்லி

உதம்பலம் = கருங்குவளை

உதயகங்கை = பசு

உதயசந்திரன் = நேர்வாளம்

உதயசுரம் = விடியற்காலையில் காயுஞ் சுரம்

உதய நோய் = கருப்பிணிகளுக்குக் காலையில் காணும் வாந்தி; அரோசிகம் கூடிய மசக்கை; சாதாரணமாகப் பித்தாதிக்கத்தினால் காலையில் காணும் மயக்கம்

உதயம் = செருப்படை, பிறப்பு, சூரியோதயம்

உதயரவி = காலை வெயில்

உதயவேளை = அதிகாலை, காலை நேரம்

உதயன் = சூரியன்

உதயாலை = விடியற்காலம்

உதரகம் = சோறு, தெங்கு

உதரகோமதம், உதரகோமனம் = பாலாடைப்பூண்டு

உதர கோளம் = வயிற்றின் கீழமைக்கப் பட்ட நீளமான கோளம்

உதரக் கடுப்பு = வயிற்றுக்கடுப்பு, சீதபேதி

உதரக்கவனம் = உதரந்தாங்கி

உதரகற்கனன் = சிலாமத பாடாணம்

உதரக் கனல் = வயிற்றின் கொதிப்பினால் உண்டாகும் பசி, சடராக்கினி

உதரக்கிரந்தி = ஓர் ஈரல் நோய்

உதரக்கிருமி = வயிற்றின் குடலில் உண்டாகும் பூச்சிகள்; கீரைப்பாம்பு

உதரக்கினி = வயிற்றுத்தீ

உதரக் குடோரி = சீதபேதிக்குக் கொடுக்கும் கருடன் கிழங்கு

உதரக்குழாய் = நோயாளிக்கு வயிற்றைக் கழுவும் அல்லது உணவை உட்செலுத்தவும் உபயோகிக்கும் குழல்

உதரக்கொதி = மிகுந்த பசி; வயிற்றின் கொதிப்பு

உதரக் கொதிப்பு = அடிவயிற்றில் அதிகச் சூட்டினால் உண்டாகும் கொதிப்பு

உதரசயம் = குப்புறப்படுத்தல்

உதர சூலை = வயிற்றிலுண்டாகும் நோய்; வயிற்றுவலி; மூத்திரக் குண்டிக்காயில் கல் அல்லது அழற்சியால் ஏற்படும் குத்தல் நோய்; மூத்தித்தாரை வழியாய் கல் வருவதனால் உண்டாகும் வலி; கருப்பைக் கோளாறினால் அல்லது மாதவிடாய்க் காலத்தில் காணும் கொடிய வயிற்றுவலி, உதர கோளத்தின் குற்றங்களினால் ஏற்படும் சூலை நோய்

உதரதாரம் = ஒரு வயிற்று நோய்

உதரத் தலைவலி = வயிற்றுக் கோளாறினால் உண்டாகுந் தலைவலி

உதரத்தீ = உதரக்கனல்

உதரத்துடிப்பு = உதரக்கொதிப்பு

உதரநாடி = வயிற்றிலோடும் இரத்தக் குழாய்

உதர நாளம் = வயிற்றிலோடும் காரிரத்தக் குழல் வயிற்றின் குடல், மண்ணீரல் முதலியவைகளின் வழியாய் ஓடும் காரிரத்தக் குழாய்;

உதர நெருப்பு = வயிற்றில் உற்பத்தியாகி சோற்றை (உணவை) எரிக்கும் நெருப்புத் தன்மை வாய்ந்த சூடு

உதரப் பாலாடை = சித்திரப் பாலாடை (அம்மான் பச்சரிசி)

உதப்பூலிகம் = கருணைக் கிழங்கு

உதரப்போக்கு = வயிற்றுப் போக்கு

உதர மகோதரம் = வாயு திரட்சியினால் வயிறு, மார்பு, கழுத்து முதலியன மறையும்படி வீங்கி, மலம் போகாமல் கனத்திருக்குமோர் வகை நோய்; நீர்க் கோர்வையினால் வயிறு வீங்கிக் காணும் நீர்க்கவிசை இதனால் இரத்த ஓட்டம் தடைபடும்

உதரமண் = கண்டங்காலி

உதமனுபுறம் = செம்பு

உதரம் = வயிறு, கருப்பம், மகோதரம், அடிவயிறு

உதரம்பரம் = செம்பு

உதர ரோகம் = வயிற்றின் உறுப்புகளாகிய வயிறு, ஈரல், மண்ணீரல், குண்டிக்காய் முதலானவைகளில் நோய் ஏற்பட்டு வயிற்றை மாத்திரம் பருக்கச் செய்யும் நோய்கள்

உதரவணி, உதரவணிதம் = கண்டங்கத்திரி

உதரவரம் = உதரரோகம்

உதர வளையம் = விந்து நரம்பானது அண்டத்திற்குள் ஓடுவதற்காக அடிவயிற்றினுள் ஏற்பட்ட ஒரு துவாரம்; வயிற்றின் குடல்கள் அண்டத்திற்குள் இறங்காதபடி தடுப்பதற்காக அணிந்து கொள்ளும் ஒருவித வளையம்

உதரவாசி = வயிற்றிலோடும் ஒரு பெரிய இரத்தக்குழாய்

உதரவாணி = கண்டங்கத்திரி, நாங்கில் மரம், கண்டங்காலி

உதரவாத காரி = வயிற்றிலுள்ள வாயுவைப் போக்கிப் பசியையுண்டாக்கும் மருந்து

உதர வாதம் = வயிறுநொந்து மிடறு கனத்து விக்கலுண்டாகி வாயினால் மலம் தள்ளி இளப்பையுண்டாக்கும் ஒரு வகைக் குடல்வாதம்

உதரவாயு = வயிறு அல்லது குடலில் தங்கும் வாயு; வயிறுப் பிசும்

உதரவாளி = கண்டங்கத்திரி

உதரவி = மரமஞ்சள்

உதர விகிர்திர = வயிற்றின் உள் உறுப்பாகிய குண்டிக்காய், மண்ணீரல் முதலிவைகளில் இரத்தம் சொரிவதால் ஏற்படும் சன்னி

உதரவிப் புருதி = ஐந்துவகை விப்புருதிகளுள் ஒன்று

உதரவெறி, உதராக்கினி = உதரநெருப்பு

உதரா சயம் = பாசக நீர் பிறக்கும் இடம்; இரைப்பை, குடல் முதலிய உள்ளுறுப்புகள் உள்ளவிடம்

உதராடம் = வயிற்றில் உலாவும் ஒருவகைப்புழு

உதராத்துமானம் = வயிற்றுப்பிசம்

உதராந்தர சுழற்சி = குடல்களிலிருந்து மண்ணீரல், கல்லீரல் வழியாய்ச் சுற்றி இருதயத்திற்குள் ஓடும் இரத்தவோட்டம்

உதராபி = உதரவி

உதராமயம் = கிராணி, வயிற்றுளைவு, வயிற்றின் வியாதிகள்

உதராவர்த்தம் = உதிரவியாதி (தீட்டுக்கட்டு)

உதராவி = உதரவி

உதரா வேட்டம் = வயிற்றிலுள்ள கீரிப் பாம்பு, நாடாப்பூச்சி

உதரி = கருங்கடலை, கருப்பிணி, பெருவயிறுடைய பெண்

உதரிகம் = பருத்த வயிறு, பருத்தவுடம்பு

உதரிமுரிப்பான், உதரிமுறப்பன், உதரிமுறிப்பான் = விஷ்ணுகிராந்தி, (உடலிலிருக்கும்) நடுக்கத்தை முறிக்கும் பூண்டு)

உதரியா = வயிறு (குடலுடன்)

உதர்சனன் = சூரியன்

உதர்ச்சி = நெருப்பு

உதர்தம் = மிக்க அரிப்பும் வீக்கமும் இரணக்குறியுமுடைய ஒருவிதப் படை நோய்

உதர்த்தம் = அக்கிநோய், தொத்துசுரம்

உதர்மம் = குடலுட்பட்ட வயறு

உதவகன் = நெருப்பு, கொடிவேலி, தீமுறிப்பூண்டு

உதவாகனம், உதவாசனம் = மேகம்

உதவாத்தேன் = கள்ளிச்செடியின் அருகிற் கட்டியதேன்

உதவிந்து = நீர்த்துளி

உதளிப்பனை = கூந்தற்பனை

உதளை = காட்டுமா, ஆடு

உதள் = ஆடு, வெள்ளாடு (வெள்ளாட்டுக் கிடாய்) ஒருவகை மரம், ஆட்டுக்கடா

உதறி = வெற்றிலை

உதறிமுறித்தான், உதறிமுரிப்பான், உதறிமுறிப்பான் = உதரி முறப்பன்

உதறு சன்னி = கைகால்களில் நடுக்கங் காணும் ஒருவகை சன்னி பாதம்; உடலில் நடுக்க மேற்பட்டு வியர்த்துச் சித்தப்பிரமையை உண்டாக்கும் ஒரு வகைச் சன்னி

உதறுசுரம் = குளிர்சுரம், விஷசுரம்

உதறுவலி = கைகால், உடலில் நடுக்கங்காணும் ஓர் வகைவலிப்பு

உதறு வாதம் = நடுக்குவாதம் சீதளப் பண்டங்களைப் புசிப்பதால் பாதங்கள் நடக்கும் பொழுது ஒன்றோடு ஒன்று அடித்துக் கொள்ளச் செய்யும், துடையில் வலியும் மயக்கமும் ஏற்பட்டு உடம்பு முழுவதும் பரவி நடுக்கத்தை உண்டாக்கும்

உதறு வாயு = உடலில் வாயு கோளாடைந்து நரம்பைத் தாக்கி அதனாலுண்டாகும் நடுக்கம்

உதற்மம் = குடலுட்பட்ட வயறு

உதன்னியம் = நீர்த்தாகம்

உதாகர்ப்பாசயம் = கருப்பச் சிதைவு

உதாகோமதம் = பாலாடைப்பூண்டு

உதாசம் = வெளித்தள்ளல்

உதாசலம் = உரல்

உதாசனம் = கொடிவேலி, சித்திர மூலி, நெருப்பு

உதாசனன் = கண்குத்திப் பாம்பு, கொடிவேலி, நெருப்பு

உதாணன் சீசை = வாய்விடங்கம்

உதாம்பதம், உதாம்பரம் = செம்பு

உதாரம் = விதைவாயுவிலொன்று

உதாரவி = உதரவி

உதாவணி = கண்டங்கத்திரி

உதா வர்த்தம் = இயல்பாய் கீழ்நோக்கிச் செல்லுந் தன்மையுள்ள குடலுக்கு ஏற்பட்ட அசைவு மேல் நோக்கிச் செல்லல்; குதம், மூத்திர மார்க்கம் முதலியவற்றால் வெளிவர வேண்டிய கழிவுகளை அதற்கு மாறாக மேல்நோக்கி இழுத்துப் பிடிக்கும் வாயு

உதாவர்த்த வாதம் = மலம், மூத்திரம் முதலியவற்றை அடக்குவதாலும் மலபந்தத்தை யுண்டாக்கும் பண்டங்களை

உண்பதாலும் வாயு அடிவயிற்றில் தங்கி அதனால் குடலுக் குரிய தன்மை இழந்து மலமூத்திரங்களை மேலாக இழுத்துப் பிடிக்கும் வாத நோய்

உதாவர்த்தனம் = குடல் நோய்

உதாவனி, உதாவாணி, உதாவாரிணி = கண்டங்கத்திரி

உதானதம் = மேல்மூச்சு விடல்

உதான வாயு = மார்பை இடமாகக் கொண்ட நாசி, கண்டம் தொப்புள் ஆகிய மூன்று இடங்களில் உலாவி பேச்சுக்கு முதற்காரணமாயும் உடம்பிற்கு நிறம், ஒளி, நினைப்பு ஆகிய குணங்களையுண்டாக்கும் தசவாயுவிலொன்று

உதானம் = வாயுவிடங்கம், கண் மடல், கொப்பூழ், கண்டத்தில் நிற்கும் தசவாயுவிலொன்று

உதானன் = உதானவாயு, நாபியில் நிற்கும் வாயு (தசவாயு விலொன்று), கண்மயிர், ஒரு பாம்பு, தொப்புள், வாய் விடங்கம்

உதானன்திசை = வாய்விடங்கம்

உதி = ஒதியமரம், கடலாத்தி, உளுந்து, இழைக்கட்டு, உலைத்துருத்தி

உதிச்சியம் = வெட்டிவேர், குருவேர், ஓலைத்துருத்தி

உதிப்பு = பிறப்பு, வீக்கம்

உதிய மரம் = ஒதியமரம்

உதிரகிரி = இரத்தவேங்கைமரம்

உதிர குன்மம் = தலைப்பிரசவத்தின் போது கரு கரைந்த போதும், மாதாந்தருது காலத்திலும் வாதக்கேட்டினாலும்

பத்தியக் கேட்டினாலும் இது போன்ற பல காரணங் களால் வாதம் தடித்து அதனால் சூதகம் தடைப்பட்டு இரத்தம் கட்டிக் கொண்டு மாதவிடாய் நின்று கருப்பிணிகளுக்குள்ள குறி குணங்களைக் காண்பித்து வயிறு மேலும் பருக்காது கருப்பிணியைப் போற் காண்பிக்குமோர் சூதக நோய்

உதிரகோமதம் = பாலேடு

உதிரக் கோமாரி = சிவப்புச்செந்தொட்டி; பசுக்களுக்குண்டாகும் ஒரு வகைக் கோமாரி அதாவது பெருவாரிநோய்

உதிரக் கடுப்பு = ஆசனங்கடுத்துக்காணும் வயிற்றுளைவு, இரத்தக் கொதிப்பு; இரத்த பேதியினால் ஆசனத்தில் காணும் கடுப்பு

உதிரக் கட்டு = இரத்தம் வெளிவருவதை நிறுத்தல்; சூதகம் வெளிப்படாது தடைப்படல்; கருப்பவழுக்கு வெளிப் படாமை; பூப்படையாமை, இரத்தக்கட்டி

உதிரக் கணம் = குழந்தைகட்கு நாக்குப் பூர்த்து வயிறுகடுத்து நாடி அயர்ந்து உடல் வாடி இருமலுடன் இரத்தங்கழியும் ஒரு விதக் கண நோய்

உதிரக்கல் = ஈரற்கல்

உதிரக் கழிச்சல் = அதிசாரத்தாற்காணும் இரத்த பேதி

உதிரக் கழிவு = கருப்பையினின்று பிரசவித்த பெண்களுக் குண்டாகும் அழுக்குப் போக்கு; மாதாந்திர இரத்தப்போக்கு

உதிரக்கற்கனன் = சிலாமதபாடாணம்

உதிரக்கிரகி = இரத்தத்தை உறிஞ்சும் அட்டை, கரடி

உதிரக்குடோரி = கருடன் கிழங்கு

உதிரங்களைதல் = இரத்தம் குத்தி எடுத்தல்

உதிரசலை = இரத்தப்பெருக்கு, இரத்தங்கக்கல்

உதிரசன்னி = உடலிலிருந்து எக்காரணத்தினாலாவது இரத்தம் மிகுதியாக வழிதலால் உண்டாகும் ஒருவகைச் சன்னி

உதிரசீடம் = தலைமண்டையிலுப் பக்கத்திலுள்ள சவ்விற் காணும் இரத்தக் கழலை; உச்சந்தலைத் தோலிற்காணும் இரத்த நீர்ப்பை

உதிரச் சிக்கல் = கருக்குழி நோயினால் மகளிர்சூதகம் தடைப் பட்டு பெண்ணுறுப்பிலும் கருப்பையிலும் நிற்றல், பிரசவித்த பெண்களுக்குக் கருக்குழியினின்று அழுக்கு வராது தடைப்படல்; மாதவிடாய் வராமலும் சிறிது வெளிப்பட்டும் நேரத்திற்கு வராமலும் இருப்பது

உதிரச்சுருக்கி = இரத்த மண்டலிப்பூடு

உதிரணம் = பன்றிசுனம்பு

உதிர தோடம் = இரத்தம் நச்சுத்தன்மை அடைவதால் ஏற்படும் நோய்கள்

உதிரத் தலைவலி = இரத்தப் பெருக்கினால் கண் எரிச்சல், மூர்ச்சை முதலியவற்றுடன் கூடிய ஒருவகைத் தலைவலி

உதிரத்தின் குடோரி = ஆகாசகெருடன்

உதிரநிறத்தி = கட்டுக்கொடி

உதிரநிறம் = மாங்கிஷச்சிலை

உதிரபந்தம் = மாதுளை, இரத்தம் வராது நிற்றல்

உதிரபயம் = இரத்தத்தைக் கண்டு பயப்படும் ஒரு நோய்

உதிரபானம் = நோயைக் குணப்படுத்துவதற்காக இரத்தம் குடித்தல்

உதிரபேரம் = தீம்பாலேடு

உதிரப்பூச்சி = இரத்தவணு, ஒரு நோய், இரத்தத்தில் காணப்படும் பூச்சி

உதிர மண்டலம் = இரண்டு பக்கத்திலும் இரத்தம் வளையமிட்டு நிற்கும் நிலை

உதிரமண்டலி = இரத்த மண்டலிப்பூடு

உதிரமல நாசனி = மலத்தில் இரத்தம் விழுவதை நிறுத்தும் பிரமிப்பூடு; இரத்தத்திலுள்ள அழுக்குகளைப் போக்கு மருந்து

உதிரமலம் = மலத்தோடு விழும் இரத்தம்

உதிரமாகாளி = ஒருவகை வெளவால், காக்காய் விரிச்சி

உதிரமில்லான் = நகம்

உதிரமுரிப்பன் = கொத்துமல்லி

உதிர முமிழ்தல் = நுரையீரலினின்று இரத்தத்தைக் கக்குதல்

உதிரமுரிப்பான், உதிரமுறிப்பன், உதிரமுறிப்பான் = விஷ்ணு கிராந்தி

உதிரமூலம் = ஒரு செடி

உதிரமை = முந்திரிகை

உதிரம் = இரத்தம், இலாமிச்சு, சிலாமதபாடாணம்

உதிரம் பொசிதல் = இரத்தம் வடிதல் (கசிதல்)

உதிரம் போக்கி = உடலினின்று இரத்தத்தை நோய், சூதகம் முதலிய காரணங்களினால் வெளிப் படுத்தும் மருந்து

உதிரராகதம் = இரத்தச்சிவப்பு

உதிரரோகம் = இரத்தம் மிகுதியாலும், இரத்தக்குறைவாலும் ஏற்படும் நோய்; பெண்களுக்குச் சூதகக் கேட்டினால் ஏற்படும் நோய்கள்

உதிரரோம வேங்கை = பட்டையை வெட்டினால் இரத்தத்தைப் போல் தாரைதாரை யாய் வழியும் ஒருவகை வேங்கை மரம்

உதிரவண்ட வாதம் = பீசத்தில் இரத்தமிறங்கி வீங்கிப் பருத்துக் காணு மோர்வித அண்டவாதம்

உதிரவமனம் = இரத்தவாந்தி

உதிரவன்னி = செங்கொடிவேலி

உதிர வாதம் = பக்கத்தையும் மார்பையும் சேர்த்திழுத்துக் கொண்டு மார்பிளைத்து கபம் உயர்ந்து உடம்பையும் காலையும் பற்றி நிற்கும் ஒருவகை வாதநோய்; நாளத்தில் அடைபட்டு இரத்தம், கை, கால், கீல்களில் வாதம் தங்கி வீக்கம், வலி, தலைவலி முதலிய துன்பங்களை உண்டாக்கும் வாத நோய்

உதிரவாயு = சூதகவாயு, கருக்குழியில் வாயுவும் சூடும் சேருவதால் மாதவிடாய் தடை பட்டுத் திரண்டு கருக்குழி அடைபடும்; அடிவயிற்றில் வலிகண்டு உடம்பும் வயிறும் பருத்துக் காணுமோர் வகைச் சூதக நோய்

உதிரவாழை = ஒருவகைச் சிவப்பு வாழை, செவ்வாழை

உதிரவிஷ முறிப்பு = இரத்தத்திலுள்ள விஷச்சத்துக்களை முறித்தல்

உதிரவிந்து = இரத்தங்கலந்த விந்து

உதிரவிரியன் = இரத்த விரியன் பாம்பு

உதிர வெட்டை = வெட்டைச் சூட்டினால் சுக்கிலம் இரத்தத் தோடு ஆண்குறியின் வழியாய் ஒழுகல்

உதிர வேங்கை = ஒருவகை வேங்கை மரம் பட்டையை வெட்டினால் இரத்தத்தைப் போல் தாரை தாரையாக வழியும் ஒரு வேங்கை மரம்

உதிரவேங்கைப் பால் = உதிரவேங்கைப் பிசின்

உதிரன் வாழை = ஒருவாழை

உதிராதிகரணம் = திரட்சி

உதிராமுரி = இரத்தங்கலந்த மூத்திரம்

உதிராவர்த்தம் = தீட்டுக்கட்டு

உதிரி = ஒருவித வாழை, பெரியம்மை, செவ்வாழை, துளசி, சிறுகீரை, புட்டு

உதிரி கோமத்தம் = பாலோடு

உதிரிக் குத்து = பெரியம்மை கண்ட பிறகு பால் சுரந்து கொண்டு குத்தலையுண்டாக்கும் நோய்; பெரியம்மை காணுமுன் ஏற்படும் உடம்பு குத்தல்

உதிரிதம் = சுட்டுக்கொடி

உதிரித் தழும்பு = பெரியம்மை வார்த்து உதிர்ந்த தழும்பு

உதிரிநோய் = கரப்பான்

உதிரிபுறப்படல் = உடலில் குரு எழும்பல்

உதிரிமாரி = ஒருவித அம்மை, ஒரு மரம்

உதிரிமிண்டி = சுரைக்காய்

உதிரிமுறிப்பன், உதிரிமுறிப்பான் = விஷ்ணுகிராந்தி

உதிரியசேகரம் = மகிழம்பூ

உதிர் = உதிரி

உதிரும்பழம் = இலந்தை

உதிருளரிசி = கொத்துமல்லி

உதிர் = முத்தக்காசு

உதிர்காய் = சொரிக்காய், காற்றடித்து உதிர்ந்த காய், குலையினின்று பிரிந்தகாய்

உதிர்காலம் = இலையுதிர் காலம்

உதிர்குக்கிடாரி = கருடன்கிழங்கு

உதிர்கோலகம் = கம்மாறு வெற்றிலை

உதிர்கிடாரி, உதிர்க்குடோரி = கருடன் கிழங்கு

உதிர்சம்பம் = பழுத்த உதிர்ந்த எலுமிச்சை

உதிர்ச்சியுருக்கி = இரத்த மண்டலிப் பூடு

உதிர்த்தல் = பொடி செய்தல்

உதிர்நிறத்தி = உதிரநிறத்தி

உதிர்பன்னீர் = பன்னீர்மரம்

உதிர்ப்பகம் = சவுக்குமரம்

உதிர்மணல் = புதைமணல், சிற்றீரமுள்ள மணல்

உதிர்வாயு = உதரவாயு

உதிர்வேங்கை = உதிரவேங்கை

உதீசம் = குறுவேர், வெட்டிவேர்

உது = மேல்

உதுகதி = வாந்தி செய்தல்

உதுபரம் = செம்பு, அத்தி, எருக்கு, செவ்வகத்தி

உதுமம் = செம்பு

உதும் பரகம் = அத்திமரம், எருக்கு, செம்பு, செவ்வகத்தி, உதும்பரக்குட்டம் எனும் ஒருவகைக் குட்டம், பேயத்தி, அத்திப்பழம், சீமையத்தி (அல்லது) தேனத்தி

உதும்பரக் குட்டம் = உடம்பு முழுவதிலும் செம்புள்ளிகளையுடைய ஒருவகைக் குட்டம்; இது இரத்தத்தில் உதிக்கும் பூச்சிகளால் ஏற்படும்

உதும்பரசிதம் = கொட்டிக்கிழங்கு

உதும் பரபாணி = காட்டாமணக்கு, சிவப்புக்காட்டாமணக்கு

உதும்பர் = அத்திமரம்

உதும்பாரு = செம்பு

உதும்பை = உதும்பர்

உதூகலம் = உரல்

உதைப்பளவு = நொடிப்பொழுது

உதையமலை = சிலாநாக்கல்

உதையம் = செருப்படை

உதையரவிக் கஞ்சி = பச்சைக் கற்பூரம்

உதையவன் பால் = எருக்கன் பால்

உதையவாளிதம் = கொத்தான்

உதோதரம் = பெருவயறு,

மகோதரம் = உது

உத்கடம் = இலவங்கம், பேய்க் கரும்பு, நாணற்தட்டை

உத்கண்டகம் = ஒரு நோய்

உத்கண்டகிதம் = மயிர் கூச்செறிதல்

உத்கம்பசம் = உதறல்

உத்கலிகம் = கொக்கு

உத்காசம் = ஒவ்வொரு வருடமும் கன்று போடும் பசு

உத்காசனம் = இருமிவிடல் சளிகக்கல்

உத்காதம் = சுவாசித்தல்

உத்கார சிலேட்டுமம் = மலம் கட்டுப்பாடு வயிறு கல் போலாகி மாறாத ஏப்பம், வாந்தி, தலைவலி, உடம்பு வலி முதலிய தீய குணங்களையுண்டாக்கும் சிலேட்டும நோய்

உத்காரசூடகம் = ஓர் பறவை

உத்கார சோதின் = கருஞ்சீரகம்

உத்காரம் = ஏப்பம், வாயினால் கல், வாந்தியெடுத்தல், எதிர்க்களித்தல்

உத்காரிகம் = மாக்கட்டு

உத்காரினம், உத்கிரணம் = வாந்தியெடுத்தல், கக்கல்

உத்கிரம், உத்திராந்தி = இறத்தல்

உத்கிலேசகம் = ஒரு விஷப்பூச்சி

உத்குடம் = மல்லாந்து படுத்தல்

உத்குரோசம் = அழும் அன்றில் பட்சி

உத்கோட ரோகம் = எச்சில் தழும்பு, தேமல்

உத்கோதம் = உடம்பின் மேற்றோலின் நிறம் மாறிப் புள்ளி புள்ளியாகத் தழும்புகள் ஏற்படும் ஓர்வகைக் குட்டம்

உத்சர்ச்சனம் = மலந்தள்ளல்

உத்சற்பனம் = வீக்கம்

உத்சேதம் = உடம்பு, உயர்ம்

உத்சேபம் = வாந்தியெடுத்தல்

உத்தகு = புங்கு

உத்தங்க மூடி = ஆமை

உத்தனாதிப்பூடு = விஷத்தாரி

உத்தண்டகி = புடபத்திரி

உத்தண்டகீகரம், உத்தண்டசிகா = குறுஞ்சூலி (வி)

உத்தண்டம் = வலிமை

உத்தண்ட வாசி மூலி = ஆதொண்டை

உத்தந்தம் = மாட்டுப்பல்

உத்பா ரோகம் = ஆண்குறியில் இரத்த பித்தத்தினால் சிறியதும் பெரியதுமான இரணங்கள் உண்டாகி எரிச்சலும் காணும் ஒரு நோய்

உத்தபாலன் = முந்திரிகை

உத்தப்தம் = காய்த்த தோல்

உத்தமகங்கை = நவச்சாரம்

உத்தமகன்னிகை, உத்தமகாலி, உத்தம கோணி = வேலிப்பருத்தி

உத்தமக் கிரியை = வெற்றிலையை மிகவும் உட்கொண்டு தானாகவே சிரித்துக் கொண்டு நினைவில்லாமல் பேசி மனிதனை விட்டுப்பிரிந் திருக்கும் மனவியாதி

உத்தமசத்து, உத்தமசத்துகம் = அவுபலபாடணம் 32 பாடாணங்களுள் ஒன்று

உத்தம சேவகன் = வீரம்

உத்தமதாலி, உத்தமதாழி, உத்தமதாளி, உத்தமதானி = வேலிப்பருத்தி

உத்தமத்தகி = சிறுகுறிஞ்சா

உத்தமபரி = கொத்துமல்லி

உத்தமபலம் = முந்தரிகை

உத்தமபலா = வெள்ளை நாகணம்

உத்தமபாலினி = ஊசிப்பாலை

உத்தமபல்லி = கொத்துமல்லி

உத்தமபாலா = முந்திரிகை

உத்தம பீசம் = பொன்

உத்தமப்பேர் = கொத்துமல்லி

உத்தமமணி = வைரம்

உத்தமமாகாணி = உத்தமாணி

உத்தம மாத்திரை = ஒரே இராப்பகலில் குணத்தைக் காட்டும் மாத்திரை

உத்தம முந்திரி = முந்திரிகை

உத்தம மேகம் = மூத்திரத்தைக் காய்ச்சினால் சுத்தமான தண்ணீரைப் போலிருக்கும் மேலும் அதிகமான தாகமும் ஒவ்வொரு வேளையும் அளவுக்கதிகமாய் மூத்திரம் இறங்கும் ஒரு வகை நீரிழிவு

உத்தமம் = அரத்தை, தண்ணீர், அவுபாடாணம்

உத்தமயோகி = ஆமை

உத்தமலம் = சங்குஞ்செடி

உத்தமன் = வேலிப்பருத்தி சிலேட்டும நத்தால் வந்த 10 வகை நீரிழிவில் ஒன்று, இதன் குணம் ஆட்டின் நிணம் போல் வாசனைவீசும்

உத்தமன்தன் = சிலந்திக்கொடி

உத்தமாகாணி = வேலிப்பருத்தி

உத்தமாங்கம் = தலை, ஆண், பெண்குறிகள்

உத்தமாசம் = உவரி

உத்தமாசான் = வேலிப்பருத்தி

உத்தமாதி = முந்திரி

உத்தமுதகம் = தண்ணீர்வயறு

உத்தமை = திரிபலம்

உத்தம் = முந்திரிகைப்பழம், கொட்டைமுந்திரி, தண்ணீர், தாளி

உத்தம் கொட்டை = முந்திரிகை

உத்தம்பரம் = கண்டில் வெண்ணெய்

உத்தம்பரி, உத்தம்பரியம் = கொத்துமல்லி

உத்தம்பலம் = முந்திரிகைப்பழம்

உத்தம்பலி, உத்தம்பேர் = கொத்துமல்லி

உத்தயதாளி = வேலிப்பருத்தி

உத்தரகாரிகை = விழுதி

உத்தரச மூலம் = வயது காலத்தில் பெண்களோடு அதிகமாகப் புணருவதானலும் மிகச் சூடான அல்லது உப்பும் காரமுமான பண்டங்களை அதிகமாகப் புசிப்பதனாலும் கர்ப்பச் சூட்டினாலும் மூளைக் கொதிப்பினாலும் உண்டாகும் ஒரு வகை மூலநோய்

உத்தரணம் = வாந்தி செய்த உணவு

உத்தரணி = சிறுகரண்டி

உத்தரம் = வடக்கு

உத்தரவம் = அரத்தை

உத்தர வாருணி = நீர்கொடி, வடக்கே வேரோடிய ஆட்டாங் கொடி

உத்தரவேர் = வடக்கேயோடியவேர், மாந்திரீகத்திற்கு இது பயன்படும்

உத்தராபதி = கொடிமுந்திரி

உத்தரி = குதிரை, பருத்திச்செடி, ஊசிக்காந்தம், பலப்படுத்தல், அதிகப் படுத்தல்

உத்தரிப்பு = வருத்தம், எழும்புகை

உத்தரு = சுண்ணாம்பு

உத்தரேணி = நாயுருவி

உத்தரை = கருந்திராட்சை

உத்தலை = சிறுசெருப்படி

உத்தவாணி, உத்தவாலிகம், உத்தவானி = கண்டங்கத்திரி

உத்தா = சரிபாதி

உத்தாசிகம் = கண் பீளை

உத்தாந்தம் = வாந்தி

உத்தாபம் = அதிக வெப்பம், அழற்சி

உத்தாபலம் = சங்கஞ்செடி முந்திரிகை, இசங்கு

உத்தாபனி = விசிநரம்பு, தசை நரம்பு, அழற்றி

உத்தாபீலிகம் = கத்தூரி

உத்தாமணி, உத்தாமதாணி = ஒருபடர்கொடி வேலிப் பருத்தி

உத்தாமதி = பெருங்காரை

உத்தாமல் = சங்கு

உத்தாம்பரி = கொத்துமல்லி

உத்தாம் பலம் = முந்திரிகை, சங்கரு செடி

உத்தாம்பல் = சங்கு, புங்கஞ் செடி

உத்தாரம் = வாந்தி செய்தல், விழியெடுத்த கண்

உத்தாரியம் = வாந்தியால் வெளிதள்ளல்

உத்தாலகம் = ஒருவிதச்சோளம்

உத்தாலம் = நறுவிலி

உத்தால வாதம் = வாயுவைப் பிறப்பிக்கும் ஒரு வகை வாத நோய்

உத்தாளி = உத்தாமணி

உத்தான சயை = பால்குடிக்கும் குழந்தை, மலங்கழித்தல், உயிர்ப்பித் தெழுப்பல் வாயும் முகமும் மேல்நோக்கும் படி மல்லாந்து கிடத்தல், மல்லாத்தல்; மலத்தினால் வெளிப்படுத்தல் வாந்தித்தல், உள்வளைவு

உத்தானம் = அடுப்பு

உத்தானவாத சோணிதம் = வாதசோணித ரோகத்தாற் பிறக்குமோர் நோய்

உத்தானவாதம் = ஒருவகை வாத நோய்

உத்தானன் = தசவாயு விலொன்று

உத்தானி = விசி நரம்பு, தசைநரம்பு

உத்தி = அபின், தேமல், மருந்து, கடல்

உத்திங்கம் = ஒருபூச்சி

உத்தித் தேங்குலி = வில் நீட்டிய உள்ளங்கை

உத்தி மருந்து = அபினி

உத்தியாவனவாசினி = சங்கங்குப்பி

உத்தியானம் = பூந்தோட்டம் (நந்தியாவணம்)

உத்திரட்டாதி சுரம் = உத்திரட்டாதி நட்சத்திரத்திற் துடங்கி ஏழு நாள் வரை அடிக்கு மோர் வகைக் காய்ச்சல்

உத்திரநங்கசம் = துரிஞ்சில்

உத்திரபலம் = முந்திரிகை

உத்திரப்பூண்டு = சிவனார் வேம்பு

உத்திரம் = மஞ்சள், மரமஞ்சள், தேட்கொடுக்கி, வெயிற் காலம், பனிக்கடல்

உத்திரம்நமனார் = தம்பலப் பூச்சிவேர்

உத்திரம் = கோமதம்

உத்தாரங்கம் = ஒரு நோய்

உத்திராடம் = வடதேச ஆமணக்கு

உத்திராட்சம் = உருத்திராட்ச மணி

உத்திராபன்னி, உத்திராயன்னி = சணல்

உத்திரி = பருத்தி, வாந்தி செய்தல்

உத்திரிக நாறி = கத்தூரி நாளி

உத்திரைப்பூண்டு = சிவனார் வேம்பு

உத்திர் = பருத்தி

உத்திரோபம் = புளிமுந்திரி

உத்திர்பண்ணி = கடல்

உத்திவங்கம் = காரீயம்

உத்தினம் = மத்தியானம்

உத்தின் = அபின்மருந்து

உத்தீபகம் = பசியையுண்டாக்கும் மருந்து; மலையெறும்பு சூடுண்டாக்கல், உயிர்ப் பித்தல், ஒரு வகைச் சாம்பிராணி

உத்தீபனம் = பசியை, பலத்தை உண்டாக்கும் மருந்து

உத்துகுதூஸ் = அரேபியா நாட்டில் விளையும் பூடு

உத்தும்பரம் = செம்பு

உத்னவருந்தனம் = அரைத்தல், தேய்த்தல், வாசனையூட்டல், முளைத்தல்

உத்துவேகம் = கமுகு

உத்து வேகன் = காட்டுத்துளசி

உத்தை = எழும்பல்

உத்பலம் = நெய்தல், கீழாநெல்லி, கருங்குவளை

உத்பவம் = உற்பத்தி

உத்பிதம் = ஓர்உப்பு, முளை

உத்பீஜம் = செடியின் முளை, கட்டியின் முளை

உத்மானம் = அடுப்பு

உத்வர்த்தனம் = தைலம் தேய்த்தல், பூசு மருந்து

உத்வாகம் = ஒரு வாயு

உத்வாமின் = வாந்தித்தல்

உத்வேகம் = கொட்டைப் பாக்கு, நடுக்கம்

உந்தத்தகி = சிறுகுறிஞ்சா

உந்தமகன்னிகை = உத்தாமணி

உந்தம் = தண்ணீர்

உந்தரம் = எலி, சுண்டெலி

உந்தல் = மிகுதியான நீர்க்கோர்வையினால் கருவிழியில் பூவிழும் ஒரு கண்ணோய்

உந்தி = ஆறு, கடல், கொப்பூழ், வயிறு, தண்ணீர்

உந்திக்கமலம் = கொப்பூழ் வளைவு

உந்திக் கழலை = உந்தியில் எழுப்புமோர் கொழுப்புக் கழலை

உந்திக்கொடி, உந்திநாளம் = கொப்பூழ்க்கொடி

உந்திப்புண் = கொப்பூழிற்காணுமோர் விரணநோய்

உந்திமணி = நாபி

உந்திரதாரு = தேவதாரு

உந்திராய் = செந்திராய்

உத்திவேர் = உந்திக்கொடி

உந்து = கச்சோலம் அதாவது ஏலக்காய்த்தோல்

உந்துகம் = பெருங்குடல்

உந்து நெரிசல் = வெள்விழியில் துன் மாமித்தை வளரச் செய்யும் ஒரு கண்ணோய்

உந்துரம், உந்துரு = பெருச்சாளி

உந்தூழ் = பெருமூங்கிற்பூ

உந்தொழுச்சி = வெள்விழியில் பருத்திக்காயைப் போல் துன்மாமிசத்தை வளரச் செய்யும் ஒரு வகைக் கண்ணோய்

உப = துணை

உபகச்சம் = வெள்ளையா மணக்கு

உபகஞ்சிகம் = கருஞ்சீரகம்

உபகண்டம் = கழுத்தடி

உபகந்தகம் = கந்தகம் குறைவாக உள்ள ஓர் உப்பு

உபகந்தம் = குறைந்த வாசனை உள்ளது

உபகாரணம் = மருந்து செய்யும் போது துணையாக இருக்கும் மருந்து; துணைச் செய்கை

உபகற்பம் = காயகற்ப மூலிகைகளைக் கொண்டு மருந்து தயாரிக்கும் காலத்து அவைகளுக் குதவியாய்ச் சேரும் சரக்குகள்; தேற்றும்மருந்து

உபகாணிகை = கருஞ்சீரகம்

உபகாதம் = நோய்

உபகாரகன் = வைத்தியனுக்குத் துணையாளி

உபகாரம் = குறைந்த காரம், மலர்ந்தபூ

உபகாரிப்பு = மலர்ந்த பூ

உபகாரி விரணம் = மெழுகு

உபகாலிகம் = கருஞ்சீரகம், ஏலம்

உபகிரகம் = நோய்களை உண்டாக்கும் கிரகம்

உபகிரமம் = நோயாளியைக் கவனித்து சிகிச்சை செய்தல்

உபகிராகம் = சிற்றகத்தி

உபகிருசம் = பல்லினீறு சுரந்து வேரினின்று இரத்தம், சீழ் வடித்து பல்லாட்டங் கண்டுவாயில் தீய நாற்றம் வீசும் ஒருவகைப் பல் நோய்

உபகில்லியம் = திப்பிலி

உபகுசம் = பல்லீற்றில் வரும் கொப்புளம்

உபகுஞ்சம் = கருஞ்சீரகம், சிறு ஏலம், சதுரக்கள்ளி

உபகுஞ்சிகை = ஏலம், கருஞ்சீரகம்

உபகுஞ்சிதம் = கத்தூரியரளி

உபகுஞ்சை = கருஞ்சீரகம்

உபகும்பங்கு = பீசம், சீரகம்

உபகும்பபீசம் = சீரகம்

உபகும்பம் = சீரகம், காட்டாமணக்கு

உபகுலம் = சுக்கு, திரிபாலை

உபகுலியம், உபகுலியை = திப்பிலி

உபகுலோசிகம் = கத்தைக் காம்பு

உபகுல்லம் = சுக்கு

உபகுல்லாவிசம் = கம்பளி மரம்

உபகுல்லிகம், உபகுல்லியை உபகுல்லியம் = திப்பிலி

உபக்குல்லம் = சுக்கு

உபக்கிரமணம் = வைத்தியம் செய்தல்

உபக்கிராமம் = வைத்தியம்

உபக்கிரம், உபக்கிரயம் = முகரல்

உபஷத்தம் = லிங்கம்

உபசந்தி = அந்திசந்தி

உபசமயம் = முட்கத்திரி

உபசமனம் = வலி ஆற்றும் மருந்து

உபசம் = சீந்தில்

உபசயம் = நோய் குணப்படல் உணவு அல்லது மருந்துகளின் குணத்தைக் கொண்டு நோயை நிர்ணயித்தல்

உபசரணம் = இரத்தத்திரட்சி

உபசரம் = பசுக்கள் கருக் கொள்ளுங்காலம்; அயமணல்

உபசரியம் = கருக்கொள்ளல்

உபசருக்கம் = சிவப்பு, மாரி முதலிய கொள்ளை நோய்கள்; நோயின் கடுமை அல்லது மரணத்தைக் காட்டுங் குறிகள்

உபசருச்சி = குறைந்தகாரம்

உபசர்க்க தாகம் = மென்மேலும் உண்டாகும் தாகம்

உபசர்க்கம் = நோயின் வேறுபாடு; நோய் மேல் நோய்; மரணக்குறி

உபசனனம் = பிறப்பு

உபசாந்த மருந்து = நோய் வலியைத் தவிர்க்கும் மருந்து

உபசாயி தத்துவம் = பத்தியம் முதலியவைகளால் நோயைத் தணிக்கும் வலி

உபசாரப்பூநீர் = உவர் மண்ணினின்று தயாரிக்கும் பூநீர்

உபசாரி = தாம்பல் பத்திரம்

உபசிகுவை, உபசிக்லா = உன்ணாக்கு, நீண்டு வீக்கத்தையுண்டாக்கி உண்ண முடியாது இருமல், அருவுதல் முதலிய குணங்களைக் காட்டும் ஒரு நோய்

உபசிங்கி = நாவில்வரும் ஒரு இரணநோய்

உபசித ரோகம் = உஷ்ண சன்னி; வெளியில் திரிவதால் உண்டாகும் சன்னி

உபசித்தி = வெள்ளை நாகணம்

உபசித்திரை = ஆல், எலி

உபசித்தி ரோண்டம் = வெள்ளை நாகம்

உபசிரிட்டம், உபசிருட்டம் = புணர்ச்சி

உபசீரிடம் = கபால வாயுவினால் கருப்பிணிகளின் தலையில் வீக்கத்தை உண்டாக்கி அவ்வாறே வயிற்றிலிருக்கும் குழந்தைக்கும் உண்டாக்கும் ஒரு நோய்

உபசேவை = புணர்தல்

உபஸ்கரம் = கறிமசாலை வாசனைப் பொருள் (உடன் சேரும் பொருள்)

உபஞ்சரோகம் = மேகநோயினால் ஏற்படும் இரணம்

உபதஞ்சக் கறை = மேகவொழுக்கினால் ஏற்படும் மாசு

உபதஞ்சம், உபதம்சம் = மேகக்கிரந்தி

உபதஞ்சநோய், உபதம்சநோய் = சாதாரணமாய் மேக சம்பந்தத்தினா லேற்படும் ஒரு தொற்று நோய்

உபதாகம் = பனைமரம்

உபதாது = கலப்பான உலோகம்; அலோகம்

உபதாபம் = நோய், வெப்பம்

உபதாபன நாடி = சுவாசக் குழலின்

உபதாபனம் = உபதாபம்

உபதானம் = நஞ்சு

உபதி = புல்லூரி, கை

உபதுல்லம் = சுக்கு

உபதூசிதன் = மரணநிலையிலிருப் போன்

உபதேசிகை = பெருமுன்னை

உபதேந்திரியம் = ஆண், பெண் குறிகள்

உபத்தபத்திரம் = அத்திமரம்

உபத்த பாதம் = ஆண்குறிக்குப் போகும் இரத்தக் குழாய்

உபத்தம் = ஆண் பெண் குறி, பெண்குறி, இடுப்பு

உபத்த ரோகம் = பெண்ணின் பிறப்புறுப்பில் வரும் விஷ நீரால் ஏற்படும் நோய்கள்; பெண்ணின் பிறப்புறப்பில் உண்டாகும் நோய்கள்

உபத்தாசயம் = பெண்களுக்கு அடிவயிற்றைச் சுற்றிலுமிருக்கும் எலும்பு

உபத்திரவ சுரம் = இரணம், காயம், வலி முதலியவைகளில் உண்டாகும் ஒருவகைக் காய்ச்சல்

உபத்தை = சிறுகாய்

உபநக ரோகம் = நகச்சந்தில் கட்டியுண்டாகிக் குத்தல், வீக்கம் முதலிய குணங்களைக் காட்டும் இரணநோய்

உபநயனம் = மூக்குக் கண்ணாடி, கண்ணில் மருந்திட்டுக் கட்டுகை

உபநளகம் = முன்காற்சிற்றெலும்பு

உபநறளம் = செருப்படை

உபநாகக் கட்டு = இரணத்திற்கு மருந்து வைத்துகட்டல்

உபநாகம் = தாமரை அடித்தண்டு; கபத்தினால் வெள்விழிச் சந்தில் தாமரைக் கொடியின் அடித்தண்டைப்போல் கட்டியை யெழுப்பி வீக்கத்தையும் தினவையும் வலியை முண்டாக்கும் ஒருவிதக் கண்ணோய்

உபநா கனம் = இரணத்திற்குக் கட்டு மருந்து; மருந்திலைகளை வதக்கியும் கிண்டியும் கட்டுதல் ; தயிலம் பூசுதல் இடித்துக்கட்டு மருந்து

உபநாயம் = உபநாகம்

உபநிபாதம் = திடீரென ஏற்படும் நோய்

உபநேத்திரம் = உபநயனம்

உபபட்சம் = அக்குள், அக்குள் மயிர்

உபபத்திரம் = இலைக்காம்பின் அருகிலுள்ள சிறிய இலை

உபபரிசனை = புணர்ச்சி, உண்டாயிருத்தல்

உபமருந்து = துணையாகக் கொள்ளு மருந்து

உபய கோமுகி = இருபக்கமும் பார்வையுள்ள (புழுக்களுக்கு இருப்பது போல்)

உபயநாக மலர் = சிறுநாகப்பூ, பெருநாகப்பூ ஆகிய இருவகை நாகப்பூ

உபய நொச்சி = வெண்ணொச்சி கருநொச்சி ஆகிய இரண்டு

உபய பாகம் = வாந்தியையும் பேதியையும் உண்டாக்கும் மருந்து

உபயமுகம் = இருபுறத்து முகம் கருப்பிணி உபயமுகரத்த ஒரே காலத்தில் உடம் பித்தம் பின் ஏழு துவாரங்களின் வழியாகவும் மேலும் கீழுமாக இரத்தத்தை வெளிப்படுத்து மோர் வகை நோய்

உபயம் = இரண்டு

உபயவசை = சீரகம், கருஞ்சீரகம்

உபய விட்டகம் = பெண்களுக்குக் கர்ப்ப காலத்திலும் மாதவிடாய் தவறாமல் வெளிப்பட்டுக் கொண்டிருக்கும்; அதனால் இளைத்து வயிற்றினுள் உலாவிக் கொண்டிருக் கும் பிண்டம்

உபய வேர் = வெட்டிவேர், விலாமிச்சைவேர் ஆகிய இருவகைவேர்

உபயுத்தா = முதியார்கூந்தால்

உபயோகம் = கோட்டம்

உபரசங் கற்சத்துமாகி = காட்டுக்கொள்

உபரசச் சத்து = தமிழ்வைத்திய நூலிற் கண்ட 120 உபரசங்களினின்றும் வாதநூலின் மார்க்கத்தின் படி எடுக்கும் சத்து

உபரசச்சத்துரு = சிங்கி பாடாணம்

உபரசச்சத்துவாதி = கற்பூரசிலாசத்து

உபரசச் சரக்கு = தமிழ் வைத்திய நூலின்படி தாதுவர்க்கம் சீலவர்க்கம் முதலியவைகளில் இயற்கையாகவே கிடைக்கக் கூடியதும் வாதம், வைத்தியம், மாந்திரீகம், யோகம், ஞானம் முதலியவைகளுக்கு உபயோகப்படுவனவாயும் ஏற்படும் பொருட்கள்

உபரசத்திலாதி = கற்பூர சிலாசத்து

உபரசத்தைத் தயிலமாக்கி = சின்னாருகை

உபரசத்தோஷம் போக்கி = நறுந்தக்காளி

உபரசப் பஞ்சபூதம் = போகர் நிகண்டிற் கூறியுள்ள உபரசச் சரக்குகளின் ஐந்து வகைப் பேதங்கள் இது பாஷாண பஞ்ச பூதத்திற்கு எதிரானது

உபரசம் = கல்லுப்பு, சேர்க்கையான இரசம், களிம்பு கலந்த உலோகம், கடல் நுரை, இயற்கைச் சரக்கு, உபதாதுக்கள், இயற்கையாகவே மலைகளினின்று மற்ற சீவவர்க்க வழியாகவும் கிடைக்கப் பெற்ற உலோகங்கள், இரண்டு, சாரம், இரண்டாவதுணர்ச்சி, அடுத்த வாசனை

உபரசிதம் = சிற்றகத்தி

உபரதம் = வெடியுப்பு

உபரதாமிரத்தட்டை, உபரதாமிரம் = நாரை மரம்

உபராசிதம் = சிற்றகத்தி

உபராமயம் = வெண்டை

உபரி = ஒருமீன்

உபரிசம் = மேலாக முளைத்தல்

உபரியாவி = கோஷ்டம்

உபர் = குத்தாமணி

உபலகத்திரம் = வெள்ளி

உபல நாடிக்கல் = காதிற்குள்ளாக நரம்புகள் படருமிடத்து இருக்கு மோர் கல்

உபலபேதம் = கல்நார்

உபலம் = கல், கோஷ்டம், சிறு கற்பாறை, சிறுகல், உடம்பிலுண்டாகுங் கல், எருமுட்டை, பளிங்குக் கல், சீந்தில்

உபலியம் = சாணியிலிட்டு மெழுகல்

உபலேபம் = கோமயத்தால் மெழுகல், கபங்கட்டல், மந்தம், கோமயத்தால் சுத்தி செய்தல்

உபலோகத்திரம், உபலோத்திறம் = வெள்ளி

உபலோகம் = உலோகத்தை அடுத்த பொருள்

உபலோத்திரம் = விளாம்பிசின், வெள்ளிலோத்திரம் (வெள்ளில் என்பது)

உபவம் = சீந்தில்

உபவாகப் பிரண்டை = கரனப்பிரண்டை

உபவரி = சீந்தில்

உபவல்லிகம் = ஒருவகைப்பூடு

உபவனம் = காஞ்சொறி, கடுக்காய்

உபவாசகம் = பேய்த்தும்மட்டி

உபவாயுக்கள் = விக்கல், ஏப்பம், இமை கொட்டல், இருமல், தும்மல், வீங்கல் முதலியவற்றிற்கு ஏதுவாயிருக்கும் தசவாயுக்களுக்குத் துணை நிற்கும் வாயுக்கள்

உபவாளிதம் = கொடிவேலி

உபவிடம், உபவிடை = அதிவிடையம், ஒன்பது வகைத் தாவர விடம் அவையாவன எருக்கம் பால், கள்ளிப்பால், சிவனார்கிழங்கு, அலரி, குன்றி, அபினி, ஊமத்தை, எட்டி, நாபி

உபவிட்டக் கருப்பம் = கருப்பையில் தோடம் தாங்கி இரத்தம் கசிந்து அதனால் கர்ப்பம் மெலிந்து துடித்துக் கொண்டிருக்கும் நிலைமை, மூவகை கருப்பத்திலொன்று

உபவுப்பு = பிண்டவுப்பு செயநீர்

உபவேசனம் = மலங்கழித்தல்

உபறியாலி = கோஷ்டம்

உபற்பவம் = பாம்புக்கொல்லி

உபனோரஞ்சகன் = எலுமிச்சை

உபா = உகாமரம்

உபாங்கம் = துணையுறுப்புகள், முகத்தின் சார்புறுப்புகள், புறவுறுப்புகள்

உபாசயம் = நித்திரை

உபாதம் = வெடியுப்பு

உபாத்தியம் = கடைக்கண்

உபாய நிசம் = பூரகம்

உபானகம் = செருப்படை, அரப்பொடி

உபானம் = செருப்படை

உபேட்சை = நலமின்மை

உபேதம் = பனைமரம்

உபோதகம் = பனை, பேய்ப்பசளை

உபோதகி, உபேதம் = பேய்ப்பசளை, பேய்ப்பசளை, பனை

உபோத்தை = கொத்துவசலை

உப்பக்கம் = முதுகு

உப்பங்காற்று = கடற்காற்று

உப்பங் கோரை = உவர்ப்புமிகளில் முளைக்குமோர்வகைக் கைப்புக்கோரை

உப்பசமாயிருக்கை = காச நோயால் பீடிக்கப்படல்; வயிறு உப்பிசமாயிருத்தல்

உப்பசம் = சுவாசகாசம், மூச்சுக் கஷ்டம், வயிற்றுப்பிசம், வாயு கொள்வதால் பருத்தல், வீக்கம்

உப்பட்டம் = உப்புக்குட்டி மரம்

உப்பதம் = முத்து

உப்பந்தரவை = உவர்நிலம்

உப்பந்திராய் = கச்சந்திராய்

உப்பமைப் போர் = உப்பு

உப்பம்பருத்தி = பருத்திச்செடி

உப்பரம் = வயிற்றுப் பொருமல், வயிற்றுப்பிசம்

உப்பரிகை = பூநீறு

உப்பலம் = செங்கழுநீர்

உப்பலி = புலித்தொடக்கி

உப்பல்வ் = குழந்தைகளுக்குச் செரியாமையினால் வயிறு வீங்கித்துன்புறுத்தும் ஒரு வகை மாந்த நோய்

உப்பளநீலம் = ஒருவகை நீலக்கல்

உப்பளம் = கழிநிலம்

உப்பளறு = களிமண்ணும் உப்பு மணலும் கலந்த களர்நிலம்

உப்பறிதல் = உப்பின் தன்மையை அறிதல், உப்பைக் கட்டுவதற்குத் தெரிந்து கொள்ளல்

உப்பறுகு = உவர்மண் நிலத்தில் உள்ள அறுகன்புல்

உப்பார்க்காரன் = உப்பு

உப்பால் = முதுகு, மேல்

உப்பால் வழலை = சவுக்காரம்

உப்பி = செவ்வகத்தி

உப்பிசக் குன்மம் = வயிற்றில் வாயு சேர்ந்து அதனால் உண்ட உணவு செரியாமல் வயிறுப்பிக் கொண்டு துன்புறுத்தும் குன்ம நோய்

உப்பிடுதல் = உணவளித்தல்

உப்பிட்ட சீலை = கருங்கல்

உப்பிட்டது = ஊறுகாய்

உப்பிதாங்கு = கருங்கொள்

உப்பிரண்டு = தாது, தாவரம் ஆகிய இருவகையுப்பு இயற்கையுப்பு, செயற்கை உப்பு

உப்பிலாங்கொடி, உப்பிலாங்கொழுந்து = இண்டங் கொடி

உப்பிலானிலை = இண்டங்கொழுந்து

உப்பிலி = இண்டங்கொடி, ஈர்க்கொல்லி, இலவண பாடாணம், உப்பிலிக் கொடி, புலிதுடக்கி, ஈங்கை

உப்பிலிகம் = கருப்புச்சோளம்

உப்பிலிக் கொடி = ஈர்க்கொல்லிக்கொடி

உப்பிலிதம் = மூக்கத்தாரி

உப்பிலி உப்பு = இலவணபாடாணம்

உப்பிற்குறுதி = கட்டுக்கொடி

உப்பினம் = உப்பைச் சார்ந்த மருந்து வகை, உப்புச்சரக்கு

உப்பீண்டு வாரி = உப்பு நிறைந்த கடல்

உப்பு = இலவணம்- சாவாசம் கடல்காரசாரம்- சரீசம் சிந்து ரத்தம் - காச்சுப்பு, கறுத்த உப்பு செயசோதி - சவுட்டுப்பு அமுரியுப்பு - திராட்சியுப்பு பகருங்கூர்மை லவணம் - சவக்காரம் சலக்கூர்மை - வளையலுப்பு இந்துப இந்து - மூங்கிலுப்பு கந்தகவுப்பு - காந்தத்தின்சத்து கல்லுப்பு - மரவுப்பு இலேந்து - வழலையுப்பு இலேந்து கூர்மை - கதலியுப்பு வஷ்துப்பு - பொட்டிலுப்பு சவர்சலம் - வெடியுப்பு சாருசம் - அக்கினிக்கம்பு சாறேதகம் - காருப்பு கறியுப்பு - கருந்திலால், செங்கழுநீர்

உப்ப கேசருகாசம் = சிறுநீலி

உப்புக்கசடு = சவுட்டுப்பு உப்பின்வண்டல்

உப்புக்கட்டி = சிறுகட்டுக்கொடி, உப்பைக்கட்டும் பொருள்

உப்புக் கட்டு = மருந்துச் சரக்குளினால் உப்பைக்கட்டி நெருப்பிற்கு ஓடாமல் செய்தல்

உப்புக்காரி நீர்முள்ளி = கழுதை முள்ளி

உப்புக்கல் = சிறு உப்புக் கட்டி, ஒருவகை கல்லுப்பு, சமுத்திரவுப்பு

உப்புக் களங்கம் = கட்டிய உப்பை எடுத்து உருக்கு முகத்தில் நாகம், சூதம், வீரம், கெந்தி முதலியவைகளைச் சேர்த்து வாதமுறைப்படித் தயாரித்த ஒரு மருந்து

உப்புக் காய்ச்சல் = உடம்பில் உப்பு மிகுதியாலேற்படும் ஒருவகைக் காய்ச்சல்

உப்புக்காரம் = காரம்

உப்புக் கிண்ணி = உப்பைக் கட்டி உருக்கி வார்த்தெடுத்த ஒருவாய கண்டபாத்திரம்

உப்புக்கீரை = நரியுமரிக்கீரை, மூக்குளி

உப்புக்குஞ்சம் = உபகஞ்சிகம்

உப்புக்குட்டி = கடற்கரையிலுள்ள ஒருவகைச் சிறிய மரம்

உப்புக்குத்தி = ஒருவகைக் குருவி

உப்புக்குயிர் = வீரம்

உப்புக்குறுதி = கொடுக்காய் புளி

உப்புக்கூர்த்தல் = உப்புக்கரித்தல்

உப்புசநாசமாக்கி = சிறுபூனைக்காலி

உப்புச மாந்தம் = குழந்தைகளுக்கு அசீரணத்தினால் வயிறூதிக் கொண்டு துன்புறுத்தும் மோர் மாந்த நோய்

உப்புசம் = உப்பசம்

உப்புச் சத்து = மூலிகை, தாது அல்லது தாவரங்களை எரித்து அவைகளினின்று எடுக்கும் உப்பின் சாரம்

உப்புச்சத்துரு = சீனிக்கரம்

உப்புச் சரக்கு = உப்புச்சத்தடங்கிய காரமான சரக்கு, ஆண் சரக்கு, சுண்ணச்சரக்கு, மஞ்சளுக்குச் சிவக்கும்

உப்புச் சவுடு = உவர்நிலத்து மண்; இது கால்வாய்க் கோமாரிக்கு உபயோகப்படும்

உப்புச்சாறு = கடல்நீர், உப்புச்சத்துள்ள நீர்

உப்புச் சுண்ணம் = கொங்கணவர் வாத காவியத்தில் கூறியபடி கட்டியவுப்பைக் கொண்டு சுண்ண முறைப்படி தயாரித்த

ஒரு மருந்து, இது வாதத்திற்கு உபயோகப்படும்

உப்புச் சுரம் = சிறுநீரில் அதிக உப்பு சேருவதனாலுண்டாகும் சுரம்

உப்புச் செந்தூரம் = வைத்திய முறைப்படிச் சோற்றுப்பை மூவகைச் சாற்றால் அரைத்துப் புடமிட்டெடுத்த செந்தூரம் (வயிற்றுவலி, குன்மம் தீரும்) வாத முறைப்படி
கல்லுப்பைக் கட்டி அதனின்று தயாரிக்கும் ஒரு வகைச் செந்தூரம்

உப்புச்செறிவு = உவர் பூமி, உப்புச் செறிவு

உப்புடாலி = கடற்கொழுஞ்சிச் செடி

உப்புதிரி = சுரம் கண்டு மூன்றாம் நாள் தலையில் குரு தோன்றி உடம்பெல்லாம் பூத்து ஐந்தாம் நாளில் நீர் கோர்த்து

குரு முழித்து ஏழாம் நாளில் இறங்கும் ஒரு வகை அம்மை

உப்புத் தண்ணீர் = கடல்நீர், உவர்நீர், உப்புக் கரைத்த தண்ணீர், உப்பூறிய தண்ணீர்

உப்புத்தரவை, உப்புத்தரை = உவர்நிலம்

உப்புத் தள்ளல் = பத்தியத்தில் உப்பு நீக்கல்

உப்புத்தாரகி = ஆற்று முள்ளங்கி

உப்புத் திராவகம் = சோற்றுப்பைக் கொண்டு காய்ச்சி வடித்த தீநீர்

உப்புத்திரி = குழந்தைகளுக்கு மலம் போவதற்கு ஆசனவாயி லிலேற்றும் உப்பு நீரில் துவைத்த திரி

உப்புநாசமாக்கி = சிறு பூனைக்காலி

உப்புநாதம் = சங்கு

உப்பு நிலம் = உவர்பூமி

உப்பு நீக்கி = காட்டு மருக்கொழுந்து, ஒருகொடி

உப்புநீர் = கடல் நீர் வியர்வை

உப்புநீர்ப் பாய்ச்சல் = உப்பிற்கரைத்த நீரை உடம்பினுள் ஏற்றல்

உப்பு பாகம் = பத்தியத்தில் உப்புக் கட்டு முறை, சங்கிலை, பிறாயிலை இவ்விரண்டையும் உப்போடு சேர்த்து ஆவின் பால் தெளித்து வறுத்துக் கட்டல்

உப்பு புளி தள்ளல் = கடும் பத்தியம் காத்தல்

உப்பு பேதி = மருந்துப்புக் கூடிய பேதி

உப்புப் பற்பம் = மூலிகைச்சரக்குகளைக் கொண்டு சோற்றுப்பை அரைத்துப் புடமிட்டு பற்பமாகச் செய்தல்

உப்புப் புல்லு = உவர்த்தரையில் முளைக்கும் புல்

உப்புப்புளிப்பு = பொதுவாகச் சோற்றுப்பைக் கொண்டு காய்ச்சி வடித்தெடுத்த தீநீர் உப்புச் சுவை கலந்த புளிப்பு

உப்புப்பை = புண்களுக்கிடுவதற்காகச் சல்லாத் துணியில் உப்பை வைத்துக்கட்டும் சிறியபை

உப்புமணி = கல்லுப்புமணி

உப்புமண் = உவர்நிலத்து மண், இது கால்வாய்க் கோமாரிக்கு உபயோகப்படும்

உப்புமா = கருப்பிண்டத்தின் மேல் படிந்திருக்கும் மாவைப் போன்ற உப்பு; ஆண், பெண்ணுறுப்பில் படிந்திருக்கும் மாப்போன்ற வெண்ணிறமான நாற்றமுள்ள உப்புத் தன்மை வாய்ந்த பொருள்; உடம்பில் பூக்கும் உப்பு

உப்பு மாந்தம் = குழந்தைகட்கு வயிற்றை உப்பச்செய்யும் ஒருவகை மாந்த நோய்

உப்பு மூலிகை = உப்புச்சத்துள்ள மூலிகைகள், எருக்கு, துத்தி, குப்பைமேனி, வாழை, முருங்கை, ஊமத்தை, நாயுருவி, தென்னோலை, அறுகு, பிரண்டை, எள்ளு, பூவரசு

உப்பு மெழுகு = கட்டிய உப்பினாற் செய்த மெழுகைப் போன்ற ஓர் மருந்து; நரைதிரையைப் போக்கி உடம்பைச் செந்நிறமாக்கி ஒளியைக் கொடுக்கும்

உப்பு ரெண்டு = தாது, தாவரம் ஆகிய இரு வகையுப்பு; இயற்கை உப்பு, செயற்கையுப்பு

உப்புல் = செங்கள்ளி, செங்கழுநீர்

உப்பு வகை = பலவகை உப்புக்கள், அமுரியுப்பு, இந்துப்பு, கறியுப்பு, கல்லுப்பு, சவுட்டுப்பு, கச்சிக்காரம், உவர்மண் காரமும், பூங்காரமும், மரவுப்பு, வளையலுப்பு, காருப்பு, சங்காரகாலத்துப்பு, பொட்டிலுப்பு அல்லது வெடியுப்பு, சாம்பலுப்பு, வழலையுப்பு, உவர் மண்ணுப்பு, அட்டுப்பு,

பேதியுப்பு, கறுப்புப்பு, திராட்சையுப்பு, கந்த கவுப்பு, மூங்கிலுப்பு, கழியுப்பு, காய்ச்சுப்பு, கற்பூரவுப்பு, மூலிகைவுப்பு, சங்குப்பு, சிவப் புப்பு, சத்தி நாதவுப்பு

உப்பு வாதம் = சோற்றுப்பைக் கட்டிச் செய்யும் வாதவித்தை

உப்பு வாந்தி = பால் உப்புக் கரிப்பதனால் குழந்தைகளுக் கேற்படும் வாந்தி

உப்புவாயு = இலவணவாயு, நச்சுவாயு

உப்பு விந்து = ஆண்சரக்கு

உப்பு வெண்ணெய் = சூதம், தங்கம் முதலியவைகளைக் கட்டுவதற்காக (கொங்கணவர் நூல்) உப்பை வெண்ணெயைப் போற் செய்த ஒரு மருந்துச் சரக்கு

உப்பூரணி = உவர்பூமி

உப்பெல்லாம் வயிரமாக்கி = நறுஞ்சோந்தி

உப்பைத்திரிச்சி = கட்டுக்கொடி

உமகட்டம் = செம்புல்லு

உமக்கம் = அரிதாரம்

உமதகி = சணல், கம்பு, சுண்ணாம்பு

உமதரு = சுண்ணாம்பு

உமதானியம் = கருஞ்சீரகம்

உமத்தி = சணம்பு, சுண்ணாம்பு

உமரக்கடம் = குசபுல்லு

உமரதாசி = சணல்

உமராசி = சணம்பு

உமரி = நாயுருவி, காட்டுமரி, சிற்றுமரி, நிலவுமரி, நீருமரி, பேருமரி, ஆற்று மரி, நரியுமரி, கருவுமரி, நாகாவண்டு, நத்தை, எச்சில், கொள்ளியம், இது வேதாரண்யம் கோடிக் கரைக் காடுகளில் காணலாம்

உமரிச்சாசு = பலகறை

உமரிக்கீரை = கோழிக் காசிரைக் கீரை (கோழிப்பசளை)

உமரிச் சாரம் = உமரிப்பூண்டினின்று எடுக்கும் சத்து; (உமரிச் செடியைக் கொளுத்திய சாம்பல்)

உமரிச்சாறு = உமரி இலையின் சாறு

உமரித்தாமிரம் = கருஞ்சிற்றகத்தி

உமரியுப்பு = உமரிச் செடியைக் கொளுத்திய சாம்பல், அமுரியுப்பு

உமர் = குண்டு மணி

உமர்க்கடகம் = குசைப்புல், தருப்பப் புல், புல்

உமர்க்கடம், உமர்க்கடல் = புல்

உமர்க்குருவி = ஆகாயப்பறவை

உமர்தசி = சணல்

உமலகம், உமலதம் = அரிதாரம்

உமலிட் சாரம் = உமரியுப்பு, இது குடல் விருத்திக்காகக் கொடுக்கப்படும்

உமலேத்திரம் = விளாம்பிசின்

உமலோக்கிரம், உமலேத்திரம் = விளாம், வெள்ளி லோத்திரம்

உமற்கடகம் = தருப்பைப்புல், குசைப்புல்

உமற்கடம் = தருப்பைப்புல், குசைப்புல், புல்

உமா = குன்றி மணி

உமாகடம் = சணல், தருப்பைப்புல்

உமாகட்கம் = தருப்பைப்புல்

உமாக்கடம், உமாக்கடல் = புல்

உமாக்குருவி = ஆகாயப்பறவை

உமாதகி = சணல், இரசதாளிக் கரும்பு

உமாதகியம் = குண்டு மணி

உமாதகியரிசி = கருங் குருவையரிசி

உமாதசி = சணல்

உமாதாதகி = மஞ்சள் செவ்வந்தி

உமாதானம் = சணல்

உமாதி = சணம்பு

உமாபட்சி = ஆகாயப்பறவை

உமாமது = குண்டுமணி

உமாறசி = சணப்பு

உமி = நெல், கோதுமை போன்ற தானியங்களின் மேற்றோல், உமிழ்தல்

உமிக்கரப் பான் = சொறிவதனால் உமியைப் போல் உதிரும், குழந்தைகட் குண்டாகும் ஒரு வகைச் சொறி கரப்பான்

உமிச் சிரங்கு = உமியைப் போன்ற குருக்கள் அல்லது சிறு சிறு சிரங்குகள்

உமிதல் = உமிழ்தல், கொப்புளித்தல், உறிஞ்சுதல்

உமித்தல் = பதமழிதல்

உமித்தேக்கு = பெருங்குமிழ்

உமி நகம் = உமியைப் போன்ற மெல்லிய நகம்

உமிநீர் = உமிழ்நீர்

உமிநீர்ப் பெருக்கி = கொடிவேலி, உமிழ் நீரைப் பெருக்கும் மருந்து

உமிநெருப்பு, உமிப்புடம் = மருந்தளவிற்குத் தகுந்தபடி குழிவெட்டி அதில் நிறைய உமியைக் கொட்டி மருந்தை நடுவில் வைத்து எரித்தல்

உமியம் = பாடாணம் விளையும் நிலம்

உமியம்மை = குழந்தைகட்கு, உமியைப் உமியைப் போல் உடம்பு முழுவதும் கொப்புளிக்கும் ஒருவகை அம்மை

உமியல் = வசம்பு

உமியல்தாரி = கருநெய்தல்

உமியல் நீர் = உமிழ்நீர்

உமியுண்ணி = தவிட்டுண்ணி

உமிரி = உமரி

உமிரிவேர் = உமிரிப் பூண்டின் வேர்

உமிரு = இலாமிச்சு

உமிலிட சாரம் = உமரிச்செடியைக் கொளுத்திய சாம்பல்

உமிழ்தல் = விக்கல், துப்புதல், வாந்தியெடுத்தல், கொப்புளித்தல்

உமிழ் நீர்க்குறி = உமிழும்நீர், தூரம் போய்த் தாக்கிடில் சாவில்லையென நிர்ணயிக்கும் ஒரு மரணகுறி

உமிழ்நீர்க் கோளம் = கன்னத்திற்குள்ளும் வாய்க்குழியிலும் அடிநாக்கிலும் உமிழ் நீரை உண்டாக்கும் சிறு கோளங்கள்

உமிழ் நீர்ச்வ் = பித்த உபரியினாலும் பிற காரணங்களாலும் வாயில் அடிக்கடி நீரூறல்

உமிழ்நீர்ப் புளிப்பு = உமிழ்நீரில் உப்புவாயு கலந்ததனால் உண்டாகும் புளிப்புப் பொருள்

உமிழ்நீர்ப் பெருக்கி = உமிநீர் பெருக்கி

உமிழ் நேசிகம் = ஒருவகைப் பாம்பு ஒரு சிறிய செடி அல்லது மரம்

உமுரி = நத்தை, எச்சில், கொள்ளியம், உமரிப்பூடு

உமை = மஞ்சள்

உமையாளீசன் = சவர்க்காரம்

உமையாள் = சவர்க்காரம், மயிலிறகு

உம்பங்காய் = கொட்டையில் லாப்பனங்காய்

உம்பதம் = அரிதாரம்

உம்பராகம் = ஆத்திமேல் புல்லுருவி

உம்பரூர் = பொன்னாங்காணி

உம்பரோம வேங்கை = ஒருவகை வேங்கை மரம் ; பட்டையை வெட்டினால் இரத்தைப்போல் தாரை தாரையாய் வழியும் ஒருவகை வேங்கை மரம்

உம்பர் = ஆகாயம்

உம்பர் மனைவி = தேவதாரம்

உம்பல் = யானை, ஆட்டுக்கடா, எருது, வலி, குமிழ் குமிழி, ஆண்யானை

உம்பளம் = உப்பளம்

உம்பளி = ஆகாயவெள்ளரி

உம்பிலாதி = உப்பிலிக்கொடி

உம்மல் = ஆனை

உம்மியம் = பாடாணம் விளையும் பூமி

உயக்குல்லம் = சுக்கு

உயங்குதல் = மெலிதல்

உயந்தி = வெள்ளைப்பாடாணம், ஒட்டை மரம்

உயர்திசம் = நோக்கு நோக்கி (மரம்)

உயரம் = யானை, குண்டுமணி

உயராடு = வெள்ளாடு, கொடியாடு

உயர் = குன்றிச்செடி, குண்டுமணி

உயர்சத்தி = அழுகண்ணி

உயர்சீவி = ஒருவாசனைச் சரக்கு, தக்கோலம்

உயர்நிலை = உடம்பு

உயர்ந்த கத்தூரி = சிகப்பு அல்லது கருப்பு நிறமும் காரமும் வாசனையுமுள்ள கத்தூரி; இது வெள்ளைப் பூண்டின் வாசனையை மாற்றும் குணமுள்ளது

உயர்ந்த குளச்சி, உயர்ந்த குளிர்ச்சி = பவளப் புற்றுப் பாடாணம்

உயர்ந்த கொடிச்சி = செந்திராய்

உயர்ந்த மிருகம் = கலைமான் கொம்பு

உயர்ந்த மூலிகை = காய கற்பம்

உயர்ந்த வயது = முப்பு

உயர்ந்தோர் = சித்தர்

உயர்பனம் = காற்று

உயர்புடம் = பெரும்புடம்

உயர்வண்ணத்தி = மருதாணி

உயர்வுக்கல் = வைடூரியம்

உயர்வுக்கொடி = குன்றிமணி

உயர்வேகி = கல்மதம்

உயர்வேதி = தொட்டி பாடாணம்

உயர்வேதிச்சி = செவ்விறகு

உயர்வை = காகணம்

உயவை = காக்கணங்கொடி வெண்கருவிளை, காட்டாறு, முல்லைச்செடி

உயவைப்பூலா = கருப்புப்பூலா

உயவைவேர் = வெள்ளைக் காக்கணம்வேர்

உயா = குண்டுமணி

உயாஸ்தவம் = இலந்தை

உயிடு = மரக்காலி

உயிரங்கல் = மூச்சடங்கல், மூர்ச்சையாயிருத்தல், விஷக்கடியினால் உயிர் அடங்கல்

உயிரடைதல் = மூர்ச்சை தெளிதல், உயிர்த்தல்

உயிரிசத்து = அத்தி

உயிரிரத்தம் = சுத்தமான இரத்தம் அல்லது உயிருக்கு ஆதாரமான இரத்தம்

உயிரீறு = வைடூரியம்

உயிரு = இலாமிச்சு

உயிருக்கு நாயகி = சத்திச் சாரணை அல்லது மூக்கிரட்டை

உயிர் = இலாமிச்சை, காற்று, பிராணவாயு

உயிர்காப்பாற்றி = சஞ்சீவி

உயிர்கொடுக்கு மூலி = உயிர்தரு மருந்து, காயகற்பமூலிகை

உயிர்க்கட்டை = உடம்பு

உயிர்க்கவீரன் = எருமை முன்னை

உயிர்க்காதாரம் = உயிருக்கு ஆதாரமாகவுள்ள ஆறு ஆதாரங்கள்

உயிர்க்கால் = வியானவாயு

உயிர்க்குரங்கு = எலும்புக்கூடு

உயிர்க்குறடு, உயிர்ச்சந்து = எலும்பு

உயிர்ச் சரக்கு = ஒவ்வொரு சரக்கினுள் அமைந்துள்ள வலிவுள்ள பொருள் முதன்மைச்சரக்கு

உயிர்தருமருந்து = மிருதசஞ்சீவினி

உயிர்தருமூலி = உயிர்கொடுக்கும் மூலி

உயிர்த்தவம் = தேமா

உயிர்த்தறுவாய் = மரணவேதனை

உயிர்த்தாது = உயிருக்குச் சாதகமான சரக்குகள்; அம்பர் குங்குமப்பூ முதலியன

உயிர்த்தானம் = உயிர்நிலை

உயிர்த்தீ = உயிருக்கு ஆதாரமாயுள்ள மூன்றுவகைத்தி, அவையாவன உதராக்கினி, காமாக்கினி, கோபாக்கினி, உதரத்தீ, சினத்தீ, விந்துத்தி

உயிர்த்துணைவன் = பிராணவாயு

உயிர்த் தோற்றம் = உயிர்கள் நான்கு வகையாக உற்பத்தியாகும் விதங்கள் அவை கருப்பை, முட்டை, நிலம் வியர்வை

உயிர்நிலைப் புண் = உடம்பின் உயர்நிலைப் பாகங்களில் ஏற்படும் புண்

உயிர்நிலை விஷக்குறி = விஷக்கடியினால் அல்லது விஷத்தை உட்கொள்வதால் உடம்பிலுள்ள உயிர் நிலைப்பாகங்கள் விஷத்தினால் தாக்கப்பட்டு உயிரொடுங்கு வதனாற் காணும் குறி

உயர்நிலை விழிக்குறி = விஷத்தினால் அல்லது விஷக்கடியால் உயிரடங்கிய காலத்தில் கண்கள் மேல் நோக்கி நிலைக் கண்பட்டிருக் கையில் உயிரானது மேற்புறத்தில் அடங்கியிருக்கும்

உயிர்ப் பரிட்சை நிதானம் = விஷத்தினால் இறந்தவனுடைய உடம்பில் உயிர் அடங்கியிருக்கிறதா என்று அடியிற் கண்டவாறு பலவிதமாகச் சோதித்து நிச்சயித்தல் 1.உடம்பில் பிரம்பால் அடித்தால் தடித்துச்சிவத்தல் 2. சவத்தைக் குளத்தில் போட்டு அழுத்தல் 3. குளிர்ந்த தண்ணீரை மேலே ஊற்றுவதனால் மெய் சிலிர்த்தல் 4. கை, கால் விரல்கள் மடக்கில் மடங்கல் 5. தாதுக்களில் ஒன்றாவது மெதுவாக நடத்தல் 6. கத்தியால் கீற இரத்த மொழுகல்

உயிர்ப்புலைவு = மூச்சின் அலைவு

உயர்ப்பு = காற்று, சுவாசம், மூச்சு, பெருமூச்சு

உயிர்ப்பு வீங்கல் = காற்று, சுவாசம், மூச்சு, பெருமூச்சு

உயிர்ப்பு வீங்கல் = பெருமூச்சு விடல்

உயிர்ப்புனல் = இரத்தம்

உயிர்ப்பொறை = உடம்பு

உயிர்மருந்து = உயிரைக் கொடுக்கும் மருந்து, சோறு

உயிர்மீட்டான் = சிறுசின்னி

உயிர் வாதனம் = உயிர்களுக்கியல்பாக ஏற்படும் 12 வகைத் துன்பங்கள் அனல், சீதம், அசனி, புனல், வாதம், ஆயுதம், விடம், மருந்து, பசி, தாகம், பிணி, கோபம் வராமை

உயிர்வி = வேங்கைமரம்

உயிர்வீகம் = இரத்த வேங்கை

உயிர்வேதனை = உயிர்வாதனை

உயிர்வொடுக்கி = ஆமை

உயிர்வொடுங்கி = கிளிஞ்சல்

உயிறு = இலாமிச்சை, இலாமிச்சம்புல்

உய்மணல் = கருமணல்

உய்யக்குலம் = சுக்கு

உய்யகொண்டான், உய்யக்கொண்டான் = எருமை முல்லை, கொய்யா, எருமை, முல்லை

உய்யாக் கடிப்பான் = பிழைக்காதபடி கடிக்கும் பிராணி அதாவது கருநாகம்

உய்யானம் = பூந்தோட்டம்

உரக்கன்னி = நாகமல்லிகை

உரகசீரகம் = காட்டுச்சீரகம்

உரகமல்லி, உரகமல்லிகை = நாகமல்லிகை

உரகம் = நாகமல்லிகை, மல்லிகை, பாம்பு, வெள்ளீயம், சிறுநாகப்பூ

உரகவல்லி = வெற்றிலைக்கொடி

உரகவாதம் = உடம்பில் ஒரு பாதியில் வலி ஏற்படும் வாயும் கோணிக்கண்கள் இமை கொட்டாது துன்புறுத்து மோர் வகை வாதநோய்

உரகன் = பாம்பு, பூவழலை

உரகாரி = கருடன், மயில்

உரக்கெரிதாரம் = புளியாரை

உரக்காரி வாதம் = ஈரலில் வாயு சேர்ந்து நெஞ்சு, குரல்வளை முதலியவிடங்களில் வலியுண்டாகிச் சோறு செல்லாது நெஞ்சடைக்கு மோர் வகை வாதம்

உரங்கமம், உரங்கம் = பாம்பு

உரசகதம் = உப்பு வாயு கலந்த உட்பொருட்கள் (நைட்ரஜன் உப்பு சத்துக்கள்)

உரசகதி = உடம்பின் இரத்தத்தில் உரசக்தி சம்பந்தமான பொருட்கள் ஏற்படும் நிலைமை

உரசம் = சுத்த ரசம், வாலையிலிட்டிறக்கிய ரசம், நாகமல்லிகை

உரசிதக்கட்டி = முலைக்கட்டி

உரசிதம், உரசிருகம் = முலை

உரணம் = ஆட்டுக்கடா

உரணாட்சம், உரணாட்சியம் = தகரை

உரண்டம் = காக்கை

உரண்டை = காக்கை வலி, காக்கை

உரதம் = சுக்கிலம், மாதவிடாய், சிறுபீளை

உரதாரை = நெஞ்சுக்குழல்

உரத்த பித்தம் = பித்த உபரியினால் நல்லது கெட்டதென்று அறியாமற் திடீரெனக் கோபமுண்டாகி அடிக்கடி சண்டையிடத் தூண்டுமோர் வகை வாத நோய்

உரத்த வாயு = குடலைப்பற்றிய ஒரு வாயு

உரத்திரம் = மஞ்சள்

உரத்தை = உத்தாமணி, அரத்தை

உரரோய் = மார்பு நோய், சுளுக்கு நோய்

உரபடி = வலுவான உடம்பு

உரப்பம், உரப்பலசாணன் = பெருங்காயம்

உரப்பலம் = செங்குவளை, சீதேவி, செங்கழுநீர், வெண்ணெய்தல்

உரப்பல் = வலுவான பல்

உரப்பவங்கம் = பிசினொட்டிலை இது சொறியை அகற்று விக்கும் ஓர் ஆகருஷண மூலிகை

உரப்பிரம் = வெள்ளாடு

உரப்பிரு = செம்மறியாடு

உரப்புப் பிசின் = அந்தமான், இரங்கூன் முதலிய இடங்களில் 80 அடிக்கு மேல் வளரும் மரத்தினின்று எடுக்கும் பிசின்

உரமத்துகு = பெருங்குறிஞ்சி

உரமெடுத்தல் = அசாக்கிரதையால் குழந்தைகட்கு ஏற்படும் சுளுக்கை எடுத்தல்

உரம் = மாரடைப்பு, ஓர் அவிழ்தம், மார்பு, பாம்பு, வலி, வைரம், குழந்தைகட்கு உண்டாகும் சுளுக்கு, தங்கம், பற்பம், நஞ்சுக் கொடி வெள்ளியுரம்

உரம்பம், உரம்பல் = பேய்ப்புல்

உரம் விழுதல் = 12 மாதத்திற்குட்பட்ட கைக்குழந்தைகளை அசாக்கிரதையாகத் தூக்குவதால் சுளுக்குண்டாதல்; குழந்தைகள் தரையில் புரள்வதால் மார்பில் சுளுக்கு ஏற்படுதல்

உரலடி = யானை

உரலாகை = கருப்பு வீழி

உரலாணி = உலக்கை

உரலாமணக்கு = குன்மத்தைப் போக்கும் ஒருவகை ஆமணக்கு

உரல் = கோரைப்புல்

உரல் பலம் = செங்கள்ளி

உரவண்டு = ஒரு கொடி வண்டு

உரவம் = சீந்தில்

உரவு = விஷம்

உரவுநீர் = உவர்நீர், கடல் நீர்

உரளி = ஒருபூடு

உரறல் = பெருங்காயம்

உரன் = மார்பு

உரா = அட்டை

உராகசார சந்தனம் = மிக்க வாசனையுள்ள ஒரு வகைச் சந்தனக்கட்டை

உராதரம் = முலை

உராத்திரம் = மஞ்சள்

உரி = மரப்பட்டை, தோல், அரைநாழி (அரைப்படி) கொத்துமல்லி

உரிக்குட்டி = வெண்ணீலமான மீன், ஒருவகைக் கடல்மீன், சிறிது கபில நிறமான ஒருவகைக் கடல் மீன்

உரிஞ்சுமரம் = உசிலமரம்

உரிஞ்சுமீன் = கப்பலொட்டி மீன், இது கப்பலடியில் ஒட்டிக் கொண்டிருக்கும்

உரிணி = கொத்துமல்லி (தனியா)

உரிதாகம் = ஊடுசில் (மரம்)

உரிதாரம் = அரிதாரம், கொத்து மல்லி

உரிதாளகம் = அரிதாரம்

உரிதானம், உரிதோல் = கொத்துமல்லி

உரித்திரம் = மஞ்சள், மரமஞ்சள்

உரிமைச் சடா = ஊழலாற்றி (காட்டில் வளரும்மரம்) இது அழுகிய புண்புரைகளை மாற்றும் குணம் வாய்ந்ததால் இப்பெயர் பெற்றது

உரிவியுப்பு = காரசாரம், நாயுருவி, உப்பு

உரிவை = தோல்

உரு = உடல், அட்டை, நோய், எலுமிச்சை, நிறம், கருமான், புலி, சூரை

உருகம் = பிறப்பு

உருகாவுப்பு = கட்டாதவுப்பு, நெருப்பிற்குருகாவுப்பு

உருகியோடி விடுஞ் சரக்கு = தாதுப்பொருட்களை மூசையிலிட்டு நெருப்பில் வைத்துக் காய்ச்ச முதலில் உருகியும் பிறகு சூடு ஏற ஏற நில்லாத ஓடிவிடுஞ் சரக்கு

உருகுகந்தம் = சந்தனபொடி

உருகுக்கல் = செங்கல்

உருகுமுப்பு = கட்டுப்பு

உருகை = புல்லூரி, அறுகம்புல்

உருக்கம் = தொடை

உருக்கரக் கடை = நெருப்பிலுருகும் அரக்கு

உருக்கரக்கு, உருக்கரம் = வெண்காரம்

உருக்கல் = செங்கல், உருகினகல் அதாவது சிட்டம்

உருக்கனடித்தல் = உடம்பை இளைக்கச் செய்தல், கருகச் செய்தல்

உருக்கன் = உடம்பை இளைக்கச் செய்யும் ஒரு நோய்

உருக்காங் கட்டி = உருகிப்போன செங்கல்

உருக்காங்கல் = செங்கல் சிட்டம்

உருக்காரம் = வெண்காரம்

உருக்கிச் சாய்த்தல் = உலோகங்களை உருக்கி நீளமாக அச்சில் ஊற்றல்

உருக்கினச்சத்து, உருக்கினத்தாது = வெண்காரம்

உருக்கினத்திற்காதி, உருக்கினத்துக்காதி = உலோகங்களை உருக்குவதற்கு ஆதாரமாகவுள்ள சரக்குகள் நிலவுகாய், குக்கில், மொச்சை, கருங்கொள்ளு, சவ்வாது சவ்வீரம், முப்பு இணங்கன் (வெடியுப்பு, வெண்காரம், துருசு, மால் தேவி, வெள்ளைப் பாடாணம், நெரங்கு, வெள்ளைக் குன்றிமணி, தேன், புறா வெச்சம், வெல்லம், ஆமணக்கு முதலியன

உருக்கினத்துக் குடோரி = உலோகங்களை நெருப்பிலிட நீல நிறமாக உருகியாடும்படிச் செய்வதற்காகத் தயாரிக்கும் ஒரு கார மருந்து

உருக்கினத்துச் சரக்கு = நெருப்பிற்குருகும் கந்தகம் அல்லது தங்கம், வெள்ளி, செம்பு முதலிய உலோகங்கள்

உருக்கினம் = உலோகங்களை உருக்கக் கூடிய வெண்காரம் முதலிய சரக்குகள், அஞ்சன பாடாணம், அஞ்சனம், தேன், மெழுகு

உருக்கின் = மெழுகு

உருக்கு = மித்திரி, வெண் முருங்கை, சரக்கு, நேர்வாளம், எஃகு, எருக்கு, செங்கல்

உருக்குக்கல் = செங்கல்

உருக்குக்காரம் = வெண்காரம்

உருக்குக் குடோரி = வெள்ளைக் கிலுகிலுப்பை

உருக்குக்கு மித்திரன் = வெள்ளளையாமணக்கு

உருக்குச்சட்டம் = வார்த்த இரும்பு

உருக்குச்சரக்கு = வெண்காரம்

உருக்குச் சிந்தூரம் = எஃகைக் கொண்டு செய்த செந்தூரம்

உருக்குச் சுண்ணம் = எஃகைக் கொண்டு புடமிட்டெடுத்த சுண்ணம்

உருக்குச் செங்கல் = கற்சிட்டம்

உருக்குதனைச் செம்பாக்கி = செவ்விறகு

உருக்குதனைப் பற்பமாக்கி = கிளுவை

உருக்குத்துதல் = அம்மை குத்தல்

உருக்குத் தைலம் = வெண்ணெய், கோழி முட்டைக்கரு முதலிய பொருட்களினின்றும் இறக்குந் தைலம்

உருக்கு பற்பம் = எஃகைப் புடமிட்டெடுத்த பற்பம்

உருக்குப் பாறை = உட்சூட்டினால் இளகி மொத்தையாகத் திரண்ட கற்பாறை

உருக்குப்பிரமியம் = இரத்தப் பிரமியம் உடம்பை உருக்கு; நீரிழிவு; வெள்ளை ஒழுக்கு உடம்பை உருகச்செய்யும் பிரமேகச் சலக் கழிச்சல்

உருக்குப் பொடி = எஃகுப் பொடி

உருக்குமணல், உருக்குமண் = அயமணல்

உருக்குமம் = பொன்

உருக்குருக்கு = ஒரு வகைக் கற்பூரம்

உருக்குவளை = மெருகாணி

உருக்கொழுந்து = இருப்பவல் (ஒரு கொடி)

உருக்கொள்ளல் = கருவுருவாதல்

உருங்கல்லு = கருங்கல்

உருங்குதல் = உண்ணல்

உருசகதம் = நாம் சுவாசிக்கும் காற்றின் நான்கு பங்கில் மூன்று பங்காயிருக்கும் உப்புவாயு; உப்புவாயு கலந்த பொருள்

உருசகம் = உப்பு வாயு அடங்கிய உப்பு; ஆமணக்கு; மாதுளை; கொம்மட்டி மாதளை; இரணம், புண் முதலியவைகளுக்கிடும் காரம்

உருசங்கிதை = கற்பூர சுக்கு

உருசிகரம் = கொறுக்காய்ப் புளி

உருசிகறி = அரைக் கீரை

உருசிமாந்தம் = பேரீச்சம்பழம்

உருசியசிம் மககுட்டம் = ஒருவகைக்குட்டநோய் உடம்பில் பல கொப்புளங்கள் (முட்களைப் போல் நீண்டும்) மெல்லியதாகவும், பிசுபிசுத்தும், சுரசுரத்தும், உள்ளில் கறுத்தும் முனையிற் சிவந்தும் நெருக்கமாக மெழும்பி இரணங்களாக ஏற்பட்டு அவைகளில் புழுக்கள் நெளிந்து வலியையும் எரிச்சலை முண்டாக்கும்

உருசியம் = காட்டுப்பசு, மயிர்களடர்ந்த எருமையைப் போன்ற மான்; ஒரு வகைக் குட்டம்

உருசு பசந்த விரணம் = வாத பித்தத்தினால் பிறந்த சூதவளையங்களை யொட்டி ஒழுங்கான துவாரங்களையுண்டாக்கி சீழை ஒழுகச் செய்யும் ஒரு வகை விரண நோய்

உருசை = சுவை, மதுரம், சாரம், இனியசுவை

உருசைதரும்பூ = கறியுப்பு

உருச்சிலை = கருங்கல்

உருடகம் = கருநாவி

உருடன் முதலியார் = முருங்கை

உருட்டிக்காய் = பெருந் தும்மட்டி

உருட்டிப் பார்த்தல் = கண் சிமிட்டாது விழியை உருட்டி உற்றுப் பார்த்தலாகிய ஒரு மரணக்குறி; கபால சன்னியில்

விழியை உருட்டிக் கீழாகச் சொருகி மேற் புருவம் வளைய மிட்டுக் காணுதல்

உருட்டிமங்கலம் = செங்கத்தாரி

உருட்டிவிடுதல் = இறக்கச் செய்தல்

உருட்டி விழித்தல் = உருட்டிப் பார்த்தல்

உருண்டகம் = அவுபல பாடாணம்

உருண்டநீர்ப்புட்பி = மாதுளை

உருண்ட விசிகை = உருண்டையான தசைநார்

உருண்டு போதல் = இறத்தல்

உருண்டை = திரட்டிய மருந்து, மாத்திரை, அபினி உருண்டை

உருண்டைப் பிரண்டை = கோப்பிரண்டை

உருண்டை விசிகை = வாத்தின் இறகைப் போல் பருமனுடைய நார்ப்பந்தனம்

உருதந்தி = எக்காலத்துந் தண்ணீர் கசிந்து ஒழுகிக் கொண்டிருக்கும் ஒரு மரம் (அழு கண்ணி)

உருதம் = மிருகம், பறவை முதலியவைகளின் சத்தம்

உருது = மகளிர் சூதகம்

உருத்தகம் = ஒருவித சன்னி

உருத்தகுதம் = ஒருவகைச் குதநோய், ஆசனவாயிலேற்படும் வலியுள்ள ஒரு வித விரணம்

உருத்த மண் = பூமிமண்

உருத்தல் = முளைத்தல்

உருத்தாக சன்னி பாதசுரம் = ஒருவகைச்சன்னி பாதசுர நோய், இது அவயங்களில் மிக்கவலி, உடம் பெரிச்சல், காங்கை கழுத்துவலி, பிரமை, சோர்வு, பிரலாபப் பேச்சு, தாகம், பேதி முதலிய குணங்களைக் காட்டும்

உருத்தாக சன்னிவாத சுரம் = இரைப்பு, இருமல், மயக்கம், கழுத்தின் நரம்பிழுத்தல், உடம்பு முழுதும் குத்தல், நடுக்கம், கழுத்திலும் நெற்றியிலும் வியர்வை, பிதற்றல், தவித்தல், கிடைபொருந்தாது புரளல் உதடு உலரல், முதலிய குணங்களைக் காட்டும் சுரநோய்

உருத்தியை = சாதிக்காய்

உருத்திரகிரந்தி = ஒரு கொடிய கிரந்திப் புண்

உருத்திரகோபம் = மருதாணி

உருத்திரசடை = திருநீற்றுப் பச்சை, மஞ்சிலிக்கான்

உருத்திரசம் = பாதரசம், மாரடைப்பு

உருத்திரசன்னி = கொடிய சன்னி

உருத்திரசாரம் = கூர்ச்சாரம்

உருத்திரசிங்கி = கொங்கணவர் கூறிய வாதமுறைப்படி தயாரித்த ஒரு வீரிய மருந்து

உருத்திரதாகம் = கொடியதாகம்

உருத்திர நங்கை = கருப்புக் காய் அதாவது கருப்பு அகரம் கடைச் சரக்குகளிலொன்று

உருத்திரநட்சத்திரம் = வீரம், பூரம்

உருத்திர நோய் = உருத்திரனுக்கு உறைவிடமாகிய மார்பின் பாகத்தில் ஏற்படுவதால் இப்பெயர்; மூச்சுவிடமுடியாமல் துன்புறுத்தும் ஒரு வகைக் காச நோய்; பொதுவாக மார்பின் உள்ளுறுப்புகளில் உண்டாகும் நோய் (மார்பு நோய்)

உருத்திரபத்திரம் = சிவப்பாமணக்கு

உருத்திரபுடம், உருத்திரபுட்பம் = செம்பரத்தை

உருத்திபூ = இடுகாடு

உருத்திர பூஷணம் = பாம்பு

உருத்திரபூண்டு = பெருமருந்து, சிவனார் வேம்பு

உருத்திரபூமி = இடுகாடு

உருத்திரம் = மஞ்சள், சிவப்பு, சணல், மரமஞ்சள்

உருத்திரராசம் = பாதரசம்

உருத்திர வயிரவம் = வாதம், வலிப்பு முதலிய நோய்களுக்கு அகவை காவியத்தில் கூறியபடி தயாரித்த கடலை அளவு மாத்திரைகள்

உருத்திர வாதம் = இதயத்தின் பலவீனத்தால் அதில் கொழுப்பு படிவதால் அல்லது செரியாமையால் மார்பின் இடது பக்கத்தில் குத்தல் நோய், மூச்சு முட்டல் முதலிய குணங்களைக் காட்டும் வாத நோய் (தமர் வாதம்)

உருத்திர வாயு = தமரகவாயு; வாயு கோளாறினால் மார்பு வலி, மூச்சுவிட முடியாமை முதலியவை ஏற்பட்டுத் திடீரென நொடிக்குள் கொல்லும் இதயத் தொடர்பான நோய்

உருத்திர விஷக் கலிக்கம் = குப்பைமேனித்தோல், வெந்ததலையோடு செம்புத்தூள், துரிசு, துத்தம், புளியிலைச்சாறு முதலியவற்றை அரைத்து உருண்டை செய்து வைத்துக் கொண்டு சன்னி, காமாலை, வலி முதலிய நோய்களுக்கு கண்ணிலிடு மருந்து

உருத்திர வீரியம் = பாதரசம்

உருத்திரவுப்பு = வெடியுப்பு, மதியுப்பு

உருத்திர வேங்கை = ஒரு வகை வேங்கை மரம்

உருத்திரவைரி = கருப்புக்கடலை

உருத்தி ராக்கம் = உருத்திராட்சமணி, உலங்காரை, துப்பாக்கி மரம்

உருத்திராங்க சன்னி = ஒரு வகைச்சன்னி

உருத்திராங்க பீசம் = காகோளி

உருத்திராட்சக் கிழங்கு = ஒரு வகைக் கிழங்கு

உருத்திராட்சந்தம் = நாய்ப்பாகல்

உருத்திராட்ச மரம், உருத்திராட்சம் = துப்பாக்கி மரம், அல்லது தேன் பச்சை மரம், உருத்திராட்ச மணியின் மரம்

உருத்திராணி = சத்திச்சாரணை

உருத்திரிச்சி = பூவழலை

உருந்தியம் = மாதுளை, புட்பராகம், புட்பகல், சகசுர பேதி, வெண்மாதுளை

உருபட்சா = பெருங்காயம்

உருபரு = செங்கழுநீர்

உருபாக்கம் = பனைமரம்

உருபுகம், உருபூகம் = ஆமணக்கு

உருப் படுத்தல் = மருந்தைப்புடமிட்டுப் பூர்த்தி செய்தல்; உருவாதல் அல்லது உருவாகத் திரளுதல்

உருப்பட்டகூர்மை உருப்பட்டபலகை = வளையலுப்பு

உருப்பம் = வெப்பம், தினைமா, மிகுதி, கோபம்

உருப்பிரமம் = ஆட்டுக்கொம்பு

உருப்பு = உருப்பம்

உருமகம் = பொன்

உருமகாலம் = கோடைக்காலம், நடுப்பகல், வெப்பம்

உருமணல் = அயமணல்

உருமணி = கருவிழி

உருமம் = உருமகாலம்

உருமரிரம் = மஞ்சள்

உருமலைவாரி = உலோக மணல்

உருமவேளை = உச்சிப்பொழுது

உருமாம்பழம் = மாதுளை

உருமாறுமூலி = தொட்டாற்சிணுங்கி

உருமிப்பு = வெப்பம்

உருமியம் = பெருச்சாளி

உருமை = உப்பு விளையும் பூமி

உரும் = அச்சம்

உரும்பகானம் = பெருங்காயம்

உரும்பம் = செம்பு, பெருங்காயம், பாம்பு

உரும்பரம் = பெருங்காயம், பாம்பு, செம்பு, செம்பு நிறமான பிசின்

உருரசம் = சுத்தரசம், பாதரசம்

உருரு = கருப்புக்கலைமான்

உருவங்காட்டி = கண்ணாடி

உருவசியம் = ஒரு வகை நோய்

உருவம் = உடல், நிறம், பெருஞ்சீரகம்

உருவரிசி = கொத்துமல்லி

உருவர் = பெருஞ்சீரகம்

உருவலி = ஒருவகைப்பூண்டு, இதனால் இரத்த மேகம் போம்

உருவாசம் = வெள்ளரி

உருவாணி = கழுத்திலுள்ள முதல் முள்ளாகிய சேட எலும்புக்கு அடியிலிருக்கும் இரண்டாமெலும்பு; மெலிந்த உடம்பு

உருவாணிப் பற்றுதல் = மெலிவடைதல், இளைத்தல்

உருவாம் = வெள்ளரி

உருவாரசம் = கலப்பு, வீழி

உருவாரச் சம்மட்டி = வீழிச்செடி

உருவாரம் = வெள்ளரிக்காய், நீர், மஞ்சள், சமட்டி, வீழி

உருவாரியுப்பு = நாயுருவியுப்பு, காரசாரவுப்பு

உருவாரு = வெள்ளரி

உருவி = நாய்க்குருவி, நாயுருவி, செம்முள்ளி, முள்ளி, புல்லுருவி, சூரை

உருவிமலி = நாயுருவி

உருவியுப்பு = உருவாரியுப்பு

உருவிரக்கம் = கத்தூரிநாறி மரம்

உருவிழிப் புடைத்தல் = கண்வலித்து மிகப் புடைத்து விழிமேல் நோக்கிச் சிவந்து நீர் வடிந்து பீளை கட்டி வாய்குளறிச் சொல் தடுமாறி உண்டவுணவு வாந்தி செய்து கிடை கொடுக்காமற்படித் துன்புறுத்தும் ஒரு வகைக் கண்ணோய்

உருவு பற்றல் = பெண் கருப்பையிலுள்ள பிண்டத்திற்கு அவயவங்கள் உண்டாதல்

உருவுள்ளு = கொள்

உருவெடுத்தல் = உருவுபற்றல்

உருவெளி மயக்கம் = உடம்பின் நரம்புகளின் பலக்குறைவினால் உருவங்கள் புலனுக்குத் தோன்றல்

உருவெளி விளங்குமேனி = கௌவுரிபாடாணம்

உருவை = சூரைச்செடி, முள்ளி

உருவைக் கார்த்த வீடு = நஞ்சுக் கொடி

உருளரிசி = கொத்துமல்லி

உருளாவு = நந்தவனம்

உருளி = எலும்புப்பொருத்து

உருளிபாதம் = கம்பம்புல்

உருளிபுரளுதல், உருளிபெயர்தல் = மூட்டுநழுகல்

உருளி யெடுத்தல் = பொருத்துப்புரண்டதை (விலகியதை) எடுத்தல்

உருளி வாதம் = எலும்புப் பொருத்துகளில் வரும் வாதப் பிடிப்பு

உருகுதல் = சாதல்

உருளை = வெள்ளைப் பாடாணம், முட்டை, வாலை

உருளைக்கந்தகம் = சுருள் கந்தகம்

உருளைக்கல் = பரற்கல், பருக்கைக்கல்

உருளைக் காந்தம் = ஒருவகைக் காந்தக்கல்

உருளைநீர் = முட்டையின் வெண்கரு

உருளைப் பிரண்டை = கோப்பிரண்டை

உருளையடி = உருளைக்கிழங்கு

உருளை வாதம் = மூட்டுகளில் வரும் வாதப்பிடிப்பு

உருள்வண்டு = பீவண்டு

உரூட்சம் = மொந்தன் வாழைக் கிழங்கு

உரூட்டண சிகிச்சை = கபம், கோழை முதலியவைகளை அறுத்துத் தள்ளி அந்தந்த உறுப்புகளுக்கும் தாதுக்களுக்கும் போஷாக்கை உண்டாக்கும் முறை

உரூட்சை = வாழைக்கிழங்கு

உரூதி = ஆயில்பட்டை

உரூபிகை = வெள்ளெருக்கு

உரூப்பியம் = பொன், வெள்ளி, வெள்ளை, ஊதின வெள்ளி

உரூமிச் சோம்பு = ஒரு வகைச் சோம்பு

உரே = ஊமத்து

உரேகன் = வெண்கலம்

உரை = பொன்

உரைகல் = கட்டளைக்கல் அதாவது மாற்று அறிவதற்காகப் பொன், வெள்ளி இவை களை உரைக்குங்கல்; இக்கல்லைத் தாய்ப்பாலில் உரைத்துக் கண்ணிலிட கண்மாசு அறும் மருந்தரைக்கும் சிறு சந்தனக்கல்

உரைகள் = வெண்கலம்

உரைக்கிணறு = கல்லுப்பு

உரைப்பான் = வசம்பு

உரைப்பு = உடம்பு

உரை மருந்து = பெருங்காயம், சுக்கு, மாசிக்காய் முதலிய சரக்குகளை வெற்றிலைச் சாறு அல்லது தாய்ப்பாலில் இழைத்து குழந்தைகளுக்கு மாந்த நோய் முதலியவைகளுக்கு கொடுக்கும் மருந்து

உரையறிகருவி, உரையாணி = உரைக்கல்

உரையிசுழி = கொத்து மல்லி

உரோகக்கனம் = நோய்களைத் தீர்க்கும் மருந்து

உரோககரம் = நோய்களைக் கண்டித்தல்

உரோககரி = நோய்களைக் கண்டிக்கும் மருந்து

உரோகக்கினம் = உரோக்கக்கினம்

உரோக சஞ்சீவி = மகாவாத நோய்கள், சன்னிபாதசுரம், கொடிய காசம் முதலிய நோய் களைத் தீர்த்து உயிர் தரும் ஒரு வகைத் தைலம்

உரோகசாந்தகன் = மருத்துவன்

உரோகசிரேட்டம் = சுரம்

உரோகணி = ஒரு வகைக் கடுக்காய், சிறுகாஞ்சொறி, பீத ரோகணி, கடுகுரோகணி

உரோகதம் = மார்புவலி

உரோகதி = நாய்

உரோக நிதானம் = நோயைச் சோதித்தல்; நோயின் கூறுபாடுகளையும் அதன் காரணம், குறி முதலியவைகளையும் கூறும் குணவாகடம்

உரோக நீருறை = பிணிநீர்ப்பை

உரோகம் = நோய், பூவரும்பு

உரோகராசன், உரோகராட்டு = சயரோகம்

உரோகாதம் = நெஞ்சிடித்தல், மார்புதுடிப்பு

உரோகி = நோயாளி, செம்மரம்

உரோகிணி = ஒன்பது வயதுப் பெண், கடுகுரோகிணி, பீத ரோகிணி, கடுக்காய், ஓமை, சிறு காஞ்சொறி

உரோகிணிக் கடுக்காய் = கடுக்காய்

உரோகிதப் பட்டை = செம்மரப்பட்டை

உரோகிதம் = செம்மரம், நரிமுருக்கு, மஞ்சள், சிவப்பு

உரோகிதாசுவம் = நெருப்பு

உரோகி தோவா = செம்மரம்

உரோகிநேயம் = கல் துளசி

உரோகிரகம் = மார்புப் பிடிப்பு

உரோகி = உரோகி

உரோஷம் = கலைமான்

உரோங்கல் = உலக்கை

உரோசல ரோகம் = நெஞ்சறைக்குள் நீர் சேர்வதால் உண்டாகும் ஒருவகைக் குத்தல் நோய்

உரோசனகம் = எலுமிச்சை

உரோசனக் களிம்பு = உரோசனம் என்னும் ஒருவகைப் பிசினைக் கொண்டு செய்யும் களிம்பு

உரோசன மூங்கில் = கல்மூங்கில்

உரோசனம் = முள்ளிலவு, கோரோசனை, ஒரு பிசின்

உரோசனி = கடுக்காய், கோரோசனை கடுகு, செந்தாமரை, சிறுகாஞ்சொறி, கற்பாசி, (இது மேற் பூச்சு மருந்தாக உபயோகப்படும்)

உரோசனியம் = கடுகு

உரோசனை = கோரோசனை, ஒருவித பித்தம், கடுகு, மூங்கிலுப்பு, மகிடரோசனை முதலிய ரோசனை, செந்தாமரை

உரோசி = சூரியகாந்தி

உரோசிகாரம் = பேய்ப்புல்

உரோசினி = சிறுகாஞ்சொறி

உரோஷி = பேய்ப்புல்

உரோணி = கடுகுரோணி; ஒருவகைத் தொண்டை நோய்

உரோதகம் = நெஞ்சறைக்குள் நீர் சேர்வதால் உண்டாகும் ஒரு வகைக்குத்தல் நோய்

உரோதனி = சிறுகாஞ்சொறி

உரோத்தபத்திரம் = விஷப்பாலை

உரோபந்தனம் = மார்புக்கட்டு

உரோபந்திகை = காசித்தும்பை

உரோமகம் = 'சாகம்பரி' எனும் ஒரு உயர்தரமான உப்பு, நால்வகைக் காந்தக் கற்களுளொன்று

உரோமகி = முதியார்கூந்தல் குதிரைவாலி

உரோமகுரு, உரோமகுருபீடம் = பிண்டம்

உரோமகூபம் = மயிர்சிலிர்ப்பு

உரோமக் கட்டி = வயிற்றில் மயிர்கள் போய்த்தங்குவதால் ஏற்படும் கட்டி

உரோமக் கழலை = மயிர்க்கால்களுக்கேற் படும் கழலைக் கட்டி

உரோமக் கால்ரோகம் = மயிர்க்கால்களுக் குண்டாகும் நோய்

உரோமக்கிழங்கு = வசம்பு

உரோமக் குணக்கு = உள்வளைந்த மயிர்

உரோமக் கேடு = மயிர்க்கால்களுக்குக் கெடுதி ஏற்பட்டு மயிர் முறிதல்

உரோமசக்கிரி = சவுக்குமரம்

உரோம சங்காரி = உடம்பில் அதிகமாக முளைத்திருக்கும் மயிரைப் போக்குவதற்காக உபயோகிக்கும் மருந்து

உரோமசத்தி = கெந்த மஞ்சள், அரைக்கீரை

உரோமசய ரோகம் = தலை வழுக்கை

உரோமசல்லடை = மயிர்க்கால்

உரோமசன் = உரோமரிஷி 18 சித்தர்களிலொருவர்

உரோசாலியான் = கக்கரி

உரோமச்சங்கு = முட்சங்கு

உரோமச் சுருளி = மகா மூலிகைகள் 23 இல் ஒன்று; காயகற்பத்துக் கேற்றது

உரோமச் செம்பு = மயிரிலிருந்து எடுக்கும் செம்பு

உரோமதரு = உரோமச்சுருளி

உரோமத்தின் சங்கு = உரோமச்சங்கு

உரோமத் தைலம் = மயிரினின்று இறக்கிய தைலம்

உரோம நாக்கு = நாக்கில் முள்பாய்தல், நாக்குச் சொர சொரப்பு

உரோமநீர் = வியர்வை நீர்

உரோம பயம் = மயிரைக்கண்டு திகிலடையும் ஒரு நோய்

உரோமபுளகம், உரோமப்புளகிதம் = மயிர்சிலிப்பு

உரோமபூமி = உடம்பின் மேற்றோல்

உரோமப் பிளப்பு = மயிர் இரண்டாகப் பிளத்தல்; மயிர் முனை பலவாகப் பிளத்தல்

உரோமப்பைத்தியம் = சென்னி கொண்ட காலத்தில் தன்மயிரைப் பியத்துக் கொள்ளுதல்

உரோமமது = சீமைசாராயம்

உரோமமுட்டி = புறங்கைநாறி

உரோமம் = தலைமயிர், வழலை

உரோமரிஷி கற்பம் = உரோமரிஷி காயற்பத்துக்காக வேண்டியுண்ட மயிலெச்சம்

உரோம ரோகம் = மயிர்க்கால்களுக்கேற் படும் நோய்; மயிருக்கேற் படும் நோய்; பொதுவாக மயிருக்குண்டாகும் நோய்

உரோமலம்பம் = வண்டு

உரோமல வணம் = இலகு குணமுள்ள ஒரு பூர்வவுப்பு

உரோமவல்லி = காக்கணம்

உரோம வழற்சி = மயிர்க்கால்களுக்கு ஏற்படும் தாபிதம்; மகா மூலிகைகள் 23 ல் ஒன்று

உரோம விருட்சம் = காய கற்பத்துக்கேற்றது

உரோம விருகம் = கல்லத்தி

உரோமவுள்ளம் = இதயம்

உரோம வெடிப்பு = மயிர்முனை இரண்டாகவோ பலவாகவோ பிளத்தல்

உரோமவேங்கை, உரோமன் = உதிரவேங்கை எனும் ஒரு வகை வேங்கை மரம்

உரோமன் பொன் = உரோமன் என்னும் மூலிகையைக் கொண்டு செய்யும் பொருள்

உரோமாஞ்சம், உரோமாஞ்சலி, உரோமாஞ்சிதம் = மயிர்முனை இரண்டாகவோ பலவாகவோ பிளத்தல்

உரோமாம்பரம் = கம்பளம்

உரோமி, உரோமிகி = மயிர்ச்சிகைப் பூண்டு

உரோருகம் = முலை

உரோவி பந்தம் = மார்பில் ஏற்படும் துன்பம்; காசநோய்

உலகங்காத்தான் = அவுரி, துத்தி

உலகங்காரணை, உலங்கங்காரணை = அவுரி

உலகநாபி = கோழியவரைக் கொடி

உலகமாதா = சிவப்பு மணித்தக்காளி, மணத்தக்காளி

உலகம் = ஆகாயம்

உலகு = ஆகாயம், பூமி

உலகுலம் = திப்பிலி, திரிபலை

உலகோத்தம ரசம் = நகம், உந்தி முதலிய இடங்களில் தடவினாலும் புட்பச் செண்டில் தெளித்து முகர்ந்தாலும் பேதியாகுந் தன்மை வாய்ந்த மருந்து

உலக்கை = வெருகன்கிழங்கு, மருந்திடிக்கும் ஒருமரத் தண்டவம்; இருப்புத் தண்டு, மூங்கில்; சாவு

உலக்கைக்கனி = தேங்காய்

உலக்கைப்பாலை = ஒரு வகைப் பாலைமரம்

உலக்கைப்பூண்டு = மரவட்டை

உலக்கை வள்ளி = உலக்கையைப் போல் நீண்ட வள்ளிக் கிழங்கு

உலங்கம் = மனோசிலை

உலங்கலம் = கற்பாத்திரம்

உலங்காத்தான், உலங்காரணை, உலங்காரன் = அவுரி

உலங்காரை = உருத்திராட்சம்

உலங்கு = கொசு

உலங்குலி = காவட்டம் புல்

உலங்குனாபி = மனோசிலை

உலண்டங் கொல்லி = புழுக்கொல்லி

உலண்டம், உலண்டு = கோற்புழு, பட்டுப் பூச்சி, பறவைப் புழு

உலத்தல் = இறத்தல், குறைதல், நீங்குதல்

உலத்தி சூலை = பித்த உஷ்ணத்தினாலும் வறட்சி, குன்மம் முதலியவைகளினாலும் உடம்பு வீங்கி, வற்றி உளைக்கச் செய்வதுடன் குத்தலையும் வலியையுமுண்டாக்கும் சூலை நோய்; பித்த உஷ்ணத்தினால் உடம்பில் வறட்சி கண்டு அதனால் மூட்டுகளிலுள்ள பசையை வற்றச்செய்து வீக்கத்தையும் குத்தலையு முண்டாக்கி அப்பாகங்களைச் சூம்பச் செய்யும் சூலைநோய்

உலப்பு = இறப்பு, அளவு

உலமார்க்கம் = குறிஞ்சான்

உலம் = திரண்டகல்; தானாய் சமைந்த லிங்கம்

உலம் பேசம் = காட்டுமுல்லை

உலரக்கு = காவட்டம்புல்

உலராங்குலை = காயாங்குலை

உலரி = ஓலரி என்னும் ஒரு வகை ஆற்று மீன், துளிர்

உலர்தேலம் = உலர்த்தும் எண்ணெய்

உலர்த்து சூலை = உலத்தி சூலை

உலர்ந்த இஞ்சி = சுக்கு

உலர்ந்த இருமல் = வறட்சியினால் உண்டாகும் இருமல்

உலர்ந்த இறைச்சி = உப்புக் கண்டம்

உலர்ந்த கொடி முந்திரி = திராட்சை

உலர்ந்த சரக்கு = காயவைத்த பச்சிலை மூலிகைகள், கடைச் சரக்கு

உலர்ந்த திராட்சை = பதமிட்ட திராட்சை

உலர்ந்த தேங்காய் = தேங்காய் காப்பரைத்

உலர்ந்த பேரீந்து = கர்ச்சூரம்

உலர்ந்த மீன் = கருவாடு

உலர்ந்தம் = தண்டு

உலர்ப்பெலி = ஒருவகை எலி

உலர்மரம் = காந்தள்

உலவங்காரணை = அவுரி

உலவமரம் = இலவம்பஞ்சு மரம்

உலவாசிகை = காயாவரசு

உலவை = ஒடைக்கொடி, காற்று, கிலுகிலுப்பை, தழை (இலை), விலங்கின் கொம்பு, குடைவேல், கொம்பு, வள்ளிக்கொடி, வாத நோய், ஒடை மரம்

உலவைச்சீவியம் = கருவீழி

உலவைநாசி = திப்பிலி

உலாகம் = கூகை

உலாகுணம் = மனோசிலை

உலாகுதம் = கருவாப்பட்டை

உலாகுமம் = நொச்சி, மனோசிலை

உலாகுளு, உலாங்கம் = மனோசிலை

உலாங்கிலி = காவட்டம்புல், கருந்தும்பை, கிலுகிலுப்பை

உலாங்கு = கிலுகிலுப்பை, கொம்பன் பாகல், காவட்டம் புல்

உலாங்குசம் = கழற்சிக்காய்

உலாங்குரி = நாடி, மனோசிலை

உலாங்குலி = காவட்டம் புல், பெருஞ்சீரகம், கருந்தும்பை

உலாங்குவி = காவட்டம் புல்

உலாங்குளு = மனோசிலை

உலாஞ்சல், உலாஞ்சுதல் = கிறுகிறுத்தல், தலைசுற்றல்

உலாதை = சிலந்திப்பூச்சி

உலாத்தகண்டன் = ஓணான்

உலாத்தி = ஊழலத்தி

உலாந்தா = மேனாடு

உலாந்தா கமலம் = வெளிநாட்டு வயிரம் (ஹாலந்து)

உலாந்தாலிங்கம் = பம்பாய் லிங்கம்

உலாமதம் = சிலாமத பாடாணம்

உலாமா = கொழுமிச்சை, கடுகு ரோகிணி, கச்சமரம்

உலாரகு = வேடப்புல்

உலாவரிசி = வெட்பாலரிசி

உலிமரி, உலிமணி = நாயுருவி

உலிமிடி = மாவிலிங்கை

உலிமிடிச் சக்கை = மாவிலங்கப்படடை

உலிமுள்ளு = எலிமுள்ளு

உலிற்கள், உலிற்கன் = வெண்கலம்

உலுகத்தண்டு = கீரைத்தண்டு

உலுகம் = கீரைச்செடி

உலுபம் = ஒருவகைப் புல்

உலுபேனா = பாலுடன் கலந்த முலாம் பழம், வாழைப்பழம் இவைகளின் ரசம் அடங்கிய உணவு

உலுப்பை = சிறுகாய்

உலுலாயம் = காட்டெருமை

உலுவ = கொள்ளு

உலுவம் = வெந்தயம்

உலுவள் = வெங்காயம்

உலுவா = வெந்தயம், கருஞ் சீரகம், வெங்காயம், பெருஞ்சீரகம், கொள்ளு

உலுவாசகெந்தி = தைவேளை

உலுவாவரிசி = பெருஞ்சீரகம், வெந்தயம்

உலுவாவிகம் = கறிவேப்பிலை

உலுவிந்தை, உலுவேந்தம் = ஒரு பூடு

உலூகசம் = குங்கிலியம், பழந்தின்னி வௌவால், கோட்டான், சாக்குருவி

உலூகசித்து = காக்கை

உலூகம் = உரல், கூகை, குங்கிலியம் பழந்தின்னி வௌவால் சாக்குருவி

உலூகலகம், உலூகலசம் = குங்கிலியம்

உலூகலம் = குங்குமப்பூ, உரல், குங்கிலியம்

உலூகல்கம் = குங்கிலியம்

உலூகாரி = காக்கை

உலூதம், உலூதை = சிலந்திப்பூச்சி

உலூநலகம் = குங்கிலியம்

உலூபி = ஒருவகை மீன்

உலோகவாதம் = கண்ணில் பூ விழுதல்

உலைக்காலி = முடவாட்டுக் கால்

உலைந்த பழம் = மிகவும் கனிந்த (அளிந்த) பழம்

உலைப் பொலி = கடிப்பதானல் துன்பத்தை உண்டாக்கும் எலி

உலை முகம் = கொல்லன் உலைவாயில்; கம்மாளன் உலை

உலையழுது = உலைத்தண்ணீர்

உலையிலூதல், உலையிலேற்றல், உலையில் வைத்தூதல் = மருந்தை நீராக்க, வேண்டி கம்மாளன் குமிட்டிச் சட்டியில் வைத்துதல்

உலையிற் பிணந்தின்னி = மாமிசபேதி

உலொட்டி = வெறிமருந்து, கள்ளுக்குடுவை

உலொட்டிக்காரன், உலோட்டிமூஞ்சு = குடியன்

உலோக கற்பஞானி = கஞ்சா (ஆனந்தமூலி)

உலாககாந்தம் = இயற்கைக் காந்தம்

உலோகக் கட்டி = உலோகங்கலந்த மண் கட்டி, பஞ்சலோகத்தையும் உருக்கி வார்த்த கட்டி, இரும்புக்கட்டி, மாழை, வங்காரம்

உலோகக் களிம்பு = இரும்புத்துரு, செம்புக்களிம்பு

உலோகங்களைப் பற்பமாக்கி = காட்டுத்தீ

உலோகங்களைப் பேதிப்பாக்கி = குழலா தொண்டை

உலோகசக்தி = கோழித்தலை கந்தகம்

உலோக சத்துரு = கற்பரிபாடாணம்

உலோக சித்து = வச்சிரக்கல்

உலோகசிப்பி = சிப்பிமுத்து

உலோக சுத்தி = இரும்பைக் கலப்பில்லாமல் செய்வது; உலோகங்களை மருந்திற்க உபயோகப்படுத்த களிம்பு முதலியவற்றை நீக்கல்

உலோகச்செந்தூரம் = இரும்புத் தூளைக் கொண்டு செய்யும் ஒரு வகைச் செந்தூரம்

உலோகதம் = உலோககத்திராவகம்

உலோகதிதம் = புன்கு (மரம்)

உலோகத் தாது = துத்தபாடாணம், உலோகங்கள், வெட்டி எடுத்த இரும்பு

உலோகத்திரம் = வெள்ளிலோத்திரம்

உலோகத்தைச் செந்தூரமாக்கி = சிறுகல்லூரி

உலோகத்தைத் தகர்த்து சாடு மாருதி = பொன் நிமிளை

உலோகத்தை நயத்தவேகன் = பலண்டுறுக பாடாணம்

உலோகத்தைப் பேதிக்குங்கன்னி = ஏகம்பச்சாரம்

உலோகத்தைப் பளிப்பிடக்கூர்மை = பிடாலவணம்

உலோகநாதமூலி = சிறுதும்மட்டி

உலோக நிமிளை = நால்வகை நிமிளைகளில் ஒன்று

உலோகநீர் = உலோகத் திராவகம், இரும்புச்சத்து கலந்த தண்ணீர்

உலோக பஞ்சபூதம் = பஞ்ச பூதக்கூறாகிய உலோகவகைகள் : நிலம்- பிருதிவி - தங்கம் நீர் - அப்பு - இரும்பு தீ - தேயு - செம்பு காற்று - வாயு - காரியம் ஆகாயம் - ஆகாசம் - நாகம்

உலோகபத்திரம் = பனைமரம்

உலோகபந்தினி = மான்செவிக்கள்ளி

உலோக பற்பம் = அயவெள்ளை அல்லது அயபற்பம்; இரத்தத்தைச் சுத்தி செய்து, உடலைப் பலப்படுத்தும் உலோகங்களின் பற்பம்

உலோகபாதம் = கொசத் திராவகம்

உலோக பாந்தவன் = உலோகத்திற்குப் பந்தத்தைப்போல் ஒளியைத் தரும் சூரியன்

உலோக மணல் = இரும்பு, மணல் கருமணல், மண்கலந்த உலோக வகைகள்

உலோக மத்தம் = ஓமம்

உலோக மாரணம் = உலோகத்தை மடியச் செய்தல் வெள்ளீயம்- தாளகத்தால், காரீயம்- மனோசிலையால், உருக்கு- இலிங்கத்தால், தாம்பிரம்- கெந்தகத்தால், வெள்ளி- மாட்சிகத்தால், பொன்- நிமிளையால் மாண்டு போம்

உலோக முசிக்கல் = உலோகங்களைக் களிம்பு போன்ற மாசுகளினின்று பிரித்தெடுப்பதற்காக உலைக்களத்தில் வைத்துருகும்படி ஊதுதல்

உலோகம் = ஏழு வகை உலோகங்கள்; இரும்பு, இரத்தம், அரப்பொடி, அகிலமரம், பஞ்ச லோகம், (பொன், வெள்ளி,

செம்பு, இரும்பு, வெண்கலம், தரா); நவலோகம் தரா, இரதி (பித்தளை) நாகம், கஞ்சம், (வெண்கலம்)

உலோகம் பழுத்தல் = இரும்பு, செம்பு, பொன்னாக மாறுதல், பொன் பழுத்தல்

உலோக ரஞ்சன் = நீலாஞ்சனக்கல், அஞ்சனக்கல்

உலோக விருட்டம் = கழுகு, பருந்து

உலோக விரும்பு = உலோகத்தைச் சார்ந்த இரும்பு

உலோகவேதிச்சி = கருநொச்சி

உலோக வேதியாக்கி = தொட்டிபாடாணம்

உலோகாசம் = அரப்பொடி

உலோ காசவம் = அயப்பொடியோடு மற்ற கடைச்சரக்குகளையும் கலந்து ஆயுள்வேத முறைப்படிப் புளிக்க வைத்துத் தயாரிக்கும் ஒரு வகை ஆசவம் திரிகடுகு, ஓமம், வாய்விடங்கம், கோரைக்கிழங்கு முதலிய கடைச்சரக்குகளையும் சேர்த்திடித்து அத்துடன் காட்டத்திப்பூ, பழைய வெல்லத்தைச் சேர்த்து தண்ணீரில் கரைத்து மட்பாண்டத்தில் அல்லது ஜாடியிலிட்டு வாயை மூடிச் சீலைமண் செய்து 40 நாள் கழித்து வடித்தெடுத்துக் கொள்ளவும் இதுவே ஆசவம்

உலோகாந்தம் = சந்தனம்

உலோ கானந்தர் = அகத்தியர் கூட்டத்தைச் சேர்ந்த ஒரு சித்தர்

உலோகிதகம் = செம்புக்கல்

உலோகிதசந்தனம் = குங்குமப்பூ

உலோகிதம் = இரத்தம், சிவப்பு, மஞ்சளானது அல்லது சிவந்தது, சிகப்பு சந்தனம்

உலோகோத்தமம் = பொன்

உலோசமத்தகம் = ஓமம்

உலோசம் = கண்மணி, ஆகாயம்

உலோசரம் = அவல்

உலோசனம் = கண்

உலோசி = பேய்ப்பசவை

உலோசிதம் = சந்தனமரம்

உலோச்சு நோய் = தலைமயிரைப்பிய்த்துக் கொள்ளும் ஒரு நோய்

உலோடகம் = ஒடைமரம்

உலோட்டம் = இரும்புக் கிட்டம், மண்கட்டி

உலோட்டி = வெறியைத் தரும் சாராயம்

உலோத் திரச்சம் = வெள்ளிலோத்திரம், சவரிலோத்திரம்

உலோபம் = எறும்பு

உலோமசம் = சடாமாஞ்சில்

உலோமதகரி = கல்லால்

உலோமம் = மயிர்வால்

உலோலம் = அசைவு

உலோலம்பம் = வண்டு

உலோலர் சிஷ்ணம் = காத்தொட்டிக்கொடி, இது ஒரு முட்செடி

உலோலாட்ச விருட்சம் = மலைமா

உலோலிதம் = அசைவு, நடுக்கம்

உலோலலை = நாக்கு

உல் = கழுமரம்

உல் நாரு = கல்நார்

உல்பகம் = முலைப்பால், சலத்தால், உண்டாகி குழந்தையைத் தாக்குதவதனால் உண்டாகும் ஒரு நோய்

உல்பம் = கருப்பையில், சிசுவைக், கவர்ந்துள்ள ஒரு பை போன்ற தோல் அல்லது சவ்வு

உல்மஸ் = பருத்த இலைகளை உடைய ஒரு வகைக் காட்டு மரம்

உல்லசீர், உல்ல நீர் = துளிர்

உல்லம் = ஒரு வகைமீன்

உல்லரி = துளிர்

உல்லரிசி = துளிர், திப்பிலி

உல்லாபம் = நலிந்த குரல்

உல்லாபன் = நோயினின்று குணமடைந்தவன்

உல்லான் = உள்ளான் குருவி

உல்லி = வெங்காயப்பூ, தலை, பாலிருள்செடி, உல்லி பாடாணம், மெல்லிய உருவம்

உல்லிக் கோயிறுத்தி = கொத்துமல்லி

உல்லி பாடாணம் = ஒரு வகைப் பாடாணம்

உல்லுவாசவு கெந்தி = வேளை

உல்லேகனம் = வாந்தியெடுத்தல்

உவகரிநீர் = உப்புநீர்

உவகாலி = கடுகுரோகிணி

உவகுலம் = திப்பிலி, திரிபாலை

உவடமதுகம் = இலுப்பைப்பூ

உவட்சி = துவண்டு போதல்

உவட்டல், உவட்டித்தல் = குமட்டல், எதிரெடுத்தல் வாந்தி பண்ணல், அருவருத்தல், தேக்கெடுத்தல் (தெவிட்டுதல்)

உவட்டிற் கூர்மை = மாமிசபேதி

உவட்டு = குமட்டு, குமட்டல், இரத்தப்பெருக்கம்

உவட்டுதல் = அருவருப்புறுதல், தெவிட்டுதல், மிகுதல் புரளுதல்

உவட்டுமண் = சவுட்டுமண்

உவட்டெடுத்தல் = பெருக்கெடுத்தல்

உவணம் = கருடன், கழுகு, பருந்து

உவணன் = கருடன்

உவதை = பேரருவி

உவந்த கொடிச்சி = சேந்தாடு பறவை

உவமன் = ஊமை

உவரம் = கண்டதிப்பிலி

உவராகம் = கிரகணகாலம்

உவரானவுவர் = முப்பு

உவரி = உப்பு நீர், கடல் நீர், சிறுநீர், கடல்

உவரிக்கடல் = கௌவுரிபாடாணம்

உவரிக் கெண்டை = கடற்கெண்டைமீன்

உவரிநீர் = கடல்நீர், உப்பு நீர், சிறுநீர், உப்புக்கரிக்கும் நீர்

உவருப்பின் குலம் = கல்லுப்பு

உவருப்பு = பூநீறு, வழலையுப்பு, கறியுப்பு

உவர் = யானை, கடல், உவர்ப்பு, களர்நிலம், உழைமண், பித்தம், உப்பு

உவர்க்கபம் = எரிந்து போன பித்த நீருடன் சேர்ந்த கபநீர்

உவர்க்கம் = கடற்கரை

உவர்க்கல் = சவர்க்காரம், சுக்கான் கல், சாலக்கிராமம்

உவர்க்கழு = மனோசிலை

உவர்க்களம் = சவர்நிலம், உப்பளம்

உவர்க்காடு = உப்புநிலம்

உவர்க்காரம் = சவர்க்காரம்

உவர்க்குரா = மனோசிலை

உவர்ச்சங்கம் = முட்சங்கு, முள்ளிச் சங்கு, சங்கு

உவர்ச்சாரநீர், உவர்ச்சாரம் = பூனீறு

உவர்த்தரை = உவர்க்காடு

உவர்நாதம் = பிண்டமாவு

உவர்நீராமிலம் = உப்புத்திராவகம்

உவர்நீரிலிடல் = உப்புத்திரா வகத்தில் கலத்தல், சிறுநீரில் போட்டுவைத்தல்; உப்புத் தண்ணீரில் போட்டு வைத்தல்

உவர்நீர் = உவரிநீர்

உவர்நீறு = பூநீறு

உவர்ப்பறுகு = உப்பறுகு

உவர்ப்பு = உப்புக்கரிப்பு, துவர்ப்பு, வெறுப்பு

உவர்ப்பூ = பூநீறு

உவர்மண் = உவர்நிலம் (உப்பு மண் பூமி), உழைமண், சவர் மண், ஓர் உபரசச் சரக்கு

உவர்மண்காரம் = சவர்க்காரம்

உவர்மண் சுண்ணம் = உவர்மண்ணோடு கலந்த பூநீற்று சுண்ணம்

உவர் மண்ணுப்பு = உவர்மண் பூமியிலுள்ள சோடாவுப்பு

உவல் = தழைகள், சருகு

உவளகம் = குளம், இரட்டைகன்மதம், உப்பளம், ஒரு பக்கம்

உவளம் = சோறு

உவளித்தல் = சுத்திசெய்தல்

உவனம் = கருடன், கழுகு, பருந்து

உவனாயம் = துவைத்துக்கட்டு மருந்து

உவனித்தல் = ஈரங்கழிதல்

உவா = உவாத் தேக்கு கடல் யானை, பௌர்ணமி அல்லது அமாவாசை

உவாதி = துன்பம், வேதனை

உவாத் தேக்கு = ஒருவகை உகாமரம் (சிறுகளா அல்லது உவாமரம்)

உவாந்தி = துன்பம், வேதனை

உவாந்தி பிராந்தி = வாந்தியும் மயக்கமும் கூடிய வயிற்றுப் போக்கு

உவாய் = உகாமரம், இலாமிச்சு

உவாய்ப் பட்டை = வாதவலி, வீக்கம், இரணம் முதலியவைகளுக்குத் துவாலையிட உதவும் உவாமரத்தின் பட்டை

உவாரம் = வெள்ளரி

உவாளு = மனோசிலை

உவிதல் = நீர்வற்றியவிதல்; நெருக்கத்தினால் அவிதல்; சாதல்

உவித்தல் = ஆவியால் வேகவிடல், அவித்தல்

உவியல் = சமைத்த கறி

உவை = உவாத்தேக்கு

உவ்வி = தலை

உவ்வை = காக்கணம்

உழ = (மலையாளத்தில்) நோயாளியைக் கிடத்தி உடம்பின் மேல் தைலத்தை ஊற்றி அவன் மீதேறி மிதித்துக் குணப்படுத்துதல்

உழச்சாரம் = சவுட்டுப்பு

உழத்தல் = கலத்தல்

உழப்பு = வலி

உழமண் = சவுட்டுமண், பிண்டமாவு (மங்கலான வெண்ணிறமுள்ள மணல் கலந்த உப்புப் பூர்த்த மண்)

உழமண்காரம் = உவர்மண் காரம்

உழ மண்ணுப்பு = உவர் மண்ணிலிருந்து எடுக்கும் உப்பு

உழமண்தரை = பூநீறு விளையும் பூமி

உழலாத்தி = காட்டில் வளரும் ஒரு வகை மரம் ; இது அழுகிய புண் புரைகளை ஆற்றும் குணம் வாய்ந்ததால் இப்பெயர்; ஊழ்த் தசையை மாற்றும் மருந்து

உழலை = பெருந்தாகம்

உழலைப் படல் = சூரிய கிரணத்தின் கொடுமையினால் தாக்கப்படல், தாகத்தால் வருந்தல்

உழலைப் பிணி = நாவறட்சி, அதிதாகம் முதலிய குணங்களோடு கூடிய நோய்

உழவணிகம் = பொன்னாங்காணி

உழவு தண்ணீர் = தோல் நோய்களுக்கு உபயோகிக்கும் காடி சேர்ந்த சவர்க்காரக் குழம்பு; சவர்க்காரம் சேர்ந்த தண்ணீர்

உழற்சி = சுழற்றி (தலை), வருத்தம்

உழற்றல் = தாகம், வெப்பம், நா உழற்றல்

உழற்றி = உடம்பு முறுக்கு வாங்கல்; நோயில் வருந்தலால் உடம்பைத் திருப்பல்; மிகுந்த தாகம், சுழலுகை

உழற்று = சுழற்சி; புரட்டல் (வயிறு) (உடம்பின் வலி பொறுக்காது திருப்பல், புரட்டல்)

உழன்று வருதல் = களைப்புறல்

உழிஞை = கொற்றான், சிறுபீளை

உழிஞ்சிலை, உழிஞ்சில் = வாகை

உழிஞ்சை, உழினம் = சிறு பீளை

உழு = பிள்ளைப்பூச்சி

உழுகு = எறும்பு

உழுந்து = உளுந்து, ஒருவிதை

உழுவம் = எறும்பு

உழுவான் = பிள்ளைப்பூச்சி

உழுவை = புலி, தும்பிலி, ஒரு வகைச் பச்சை நிறமான கடல்மீன், குண்டல வுழுவை, உளுவை

உழை = மான், பசு, பூவிதழ், விடியற்காலம்

உழைச்செல்வான் = தாயாதி

உழைமண் = உழமண்

உழையன் = பித்தநோயுள்ளவன்

உழைவலி = பக்கவலி

உழைவிழித்தான் = நாகப்பாம்பு

உளகுத்தம் = பெருங்காயம்

உளது கொம்பு = ஆம்பல்

உளப்பு = நடுக்கம்

உளமத்தி = குறிஞ்சான்

உள மாந்தை = சயரோகத்தின் பிரிவாகிய ஒரு வகை நோய்; அது அதிக சம்போகத்தினாலும் மற்ற காரணங்களினாலு முண்டாகும்

உளம் = இதயம்

உளராமருந்து, உளரார்மருந்து = அபின்

உளறி = ஊமத்து

உளறு = தொடை

உளாரமருந்து = அபினி

உளிக் காரம் = பாடாணத்தோடு கந்தகங் கலந்து
உண்டாகிய ஒரு சரக்கு, அரிதாரம்

உளிசம், உளிஞை = சிறுபீளை

உளிட்டிகம் = களாவிழுதி

உளிபரி = நாயுருவி

உளிமை = சிறுபீளை

உளியம் = கரடி

உளிவை, உளினம் = சிறுபீளை

உளு = மரத்தைத் துளைக்கும் ஒருவகைப் புழு

உளுக்கல் = காகச்சிலை, கானக்கல்

உளுக்கு = நரம்புச்சுளுக்கு

உளுத்தமா = உளுந்து மாவு, உளுந்தினால் ஏற்பட்ட மாவு

உளுத்த வெலும்பு = அரித்த எலும்பு

உளுத்திரம் = மஞ்சள்

உளுந்து = உழுந்து

உளுப்பு = உளுத்தமரம்

உளுவா = வெந்தயம், கருஞ்சீரகம், பெருஞ்சீரகம்

உளுவாய் = வெந்தயம்

உளுவை = ஆறுகளில் சேற்றின் அடியில் புதைந்து
கிடக்கும் ஒரு வகை மீன்

உளுவாரம் = வெள்ளரி

உளை = புறமயிர், குதிரை, சிணுக்கு வதாம், சேறு, ஆண்மயிர், உளைதல், அருகை

உளைக்கால் = மயிர்க்கால்

உளைக் குதல் = மார்பு, கை, கால், நெஞ்சு, தோள், முதலியன குடைச்சலெடுத்தல்

உளைச்சல் = சீதளத்தாற் காணும் உடம்புக் குடைச்சல்; வயிற்றுளைவு உடம்பு நோய்; வாத நோயிலொன்று

உளைதல் = பிரசவ வேதனை; கை கால் குடைச்சல்; வயிற்றுளைவு, நெஞ்சு அல்லது மார்பில் வலித்தல், இடுப்புளைதல்

உளைப்பு = உளைக்குதல்

உளை மாந்தம் = குழந்தைகட் குண்டாகு மோர் மாந்த நோய்; இதனால் மலசலங்கட்டிப் பால் குடியாமல் குழந்தை அலறி அழுவதுடன் மிரண்ட பார்வையையு முண்டாக்கும்

உளை மாந்தை = மார்பு, குடல், வயிறு ஆகிய இடங்களில் பருக்கள் ஏற்பட்டு பழுத் துடைந்து உடல்கனத்து வலித்து குத்தல், குடைச்சல், கை, கால், எரிச்சல், இருமல், மயக்கம், சுரம், தலைவலி உண்டாகி இருமலினால் வலித்து நினைவிழந்து உணவு வெறுத்து தூக்கம் பிடியாது உடம்பை இளைக்கச் செய்யும் ஒரு வகைச் சிலேட்டும நோய், ஈரலில் குருக்கள் எழும்பி சீழ்கொண்டு மார்புவலி, சுரம், மூச்சு விட முடியாமை, இருமல், கோழை, இரத்தங்கக்கல் முதலிய குணங்களைக் காட்டும் தீராத நோய், சயரோகம்

உளைவு = உளைச்சல்

உளைவுக் கண் = கண்மணியுள் உளைந்து வரும் ஒரு விதக் கண்ணோய்

உள் = அட்டை, உள்ளான், வெங்காயம் குறி

உள்கழலை = உள்ளுறுப்புகளுக் குண்டாக்கும் கழலை

உள்கொதிப்பு = உட்சுரம், உடம்பின் வெப்பம்

உள்சுரம் = சிலேட்டுமமும் பித்தமும் தொந்தித்து இருக்கையில் வாதமானது வயிற்றுக்குள் அடங்குவதால் வரும் காய்ச்சல் (சந்தசுரம்)

உள்மத்தம் = ஊமத்து

உள்மரித்த குறி = குழந்தை கருப்பையினுள்ளே இறந்ததைக் காட்டும் அடையாளங்கள் குளிர், அசௌகர்யநிலை, உணவில் வெறுப்பு, சுவாச நாற்றம், மார்பு தளர்ச்சி, அடிவயிறு கனத்தல், உடல் சில்லிடல், இருபக்கமும் கனமாகத் தோன்றல், முதலியன அக்காலத்தில் தாய்க்கு ஏற்படும் குறிகள்

உள்மாந்தம் = குழந்தைகட் குண்டாகும் ஒரு வகை மாந்தநோய்

உள்மாந்தை = உளமாந்தை

உள்மூலம் = அபானத்துள் தசைபோல் வளர்ந்து மலத்தை இறுகச் செய்து வயிறு மந்தித்து மலத்தில் இரத்தம் விழச்செய்யும் ஒரு அசாத்திய மூலநோய் இது ஆசனத்துள் மறைந்து நிற்கும்

உள் வயிரிப்பு = புண்ணின் உட்புறத்தில் காணும் கடினமான பாகம்

உள் வறட்சி = உடம்பின் உள்ளுறுப்புகள் தாக்கப்படுவதால் ஏற்படும் ஒரு வகைச் சன்னி இருமலினால் வெட்டைச் சூட்டினாலும் உண்டாகும் வறட்சி

உள் வலிப்பு = அறிவழியாது உடலினுள் உண்டாகும் இழுப்பு

உள்வளம் = மூளைக்குள் இருக்கும் கட்டு

உள் வாங்கல் = உள்ளளுக்கிழுத்தல் (நாக்கு- வாதவலிப்பில், கண்- இறப்பு)

உள்வித்திரிதி = உடலினுள் உண்டாகுங் கட்டி

உள்விப் புருதி = உடம்பினுள் பற்பல உறுப்புகளில் காணும் கட்டி ; வயிற்றின் இடது பக்கத்தில் கடினமாகக் காணும் விப்புருதிக் கட்டி; மிகுந்தவலி கோழையுடன் இரத்தங் கக்கல் உடம்பிளைத்தல் முதலிய குணங்கள் ஏற்படும்; வயது சென்ற பெண்களுக்குக் கருப்பையிற் காணும் கட்டி; மிக்கவலி சூதகமல்லாத இரத்தப்போக்கு; நாற்ற மான நீரொழுக்கு, மிக்க பலவீனம், உடம்பிளைப்பு முதலிய குணங்களை உண்டாகும்

உள்விரணம் = உடம்பின் உள்ளுருப்புகளுக்கு ஏற்பட்ட இரண நோய்; இதுமிக்க அபாய மானது இதனால் கட்டி ஏற்படும்

உள் விழுதல் = உள்ளுக் கிழுத்தல்; நாக்கு (வாதவலிப்பு) கண் (இறப்பு)

உள்வீச்சு சன்னி = உள்ளுறுப்புகளுக்குக் காணும் இசிவு சன்னி

உள் வெக்கை = பல காரணங்களை முன்னிட்டு உடம்பினுள் ஏற்படும் வெப்பம், இதனால் இரத்தக் கேடுண்டாகி நரம்பு பலவீனப்படும்; உட்சுரம்

உள்வெக்கை சுரம் = நாவறண்டு தலை வலித்துக் கண்களில் அனல் புகுந்து அடிக்கடி தண்ணீர் கேட்கும் ஒரு வகைச்சுரம்

உள்வெட்கை, உள்வெதுப்பு = உள்வெக்கை

உள்ளச்சுரம் = உள்ளளட்சுரம்

உள்ளங் காலெரிவு = பித்தத்தினால் அல்லது வாத பித்தம் கோளாறடைந்து இரத்தத்தை அனுசரிப்பதனாலும் உள்ளங்காலில் ஏற்படும் ஒரு வகை எரிச்சல் இது அதிகமான நடையினால் ஏற்படும்

உள்ளங் காற்குத்து = வாதத்தினால் உள்ளங்காலில் ஊசியால் குத்துவது போல் வலியுண்டாகும்

உள்ளங் காற்கை யெரிச்சல் = விஷசுரம், பித்தாதிக்கம், வாத நோய், குடல் கோளாறு முதலிய காரணங்களினால் உள்ளங்கையிலும், காலிலும் காணும் எரிச்சல்; இதனால் தூக்கம் கெடும்; உடம்பு மெலிந்து நரம்பு பலவீனமடையும்

உள்ளங் காற்றிமிர் = உடலில் வாய்வு, கபம் கோளாறடைந்து உள்ளங்காலில் ஒரு வித வலியையும் உணர்ச்சியின்மையையும் உண்டாக்கும் ஒருவித வாய்வு நோய்

உள்ளங் காற்றினவு = உள்ளங்கால் நரம்பில் சீதளம் தோன்றி அதனால் நமைச்சல்மிக உண்டாகி வலியையும் குத்தலையும் கொடுக்கும் ஒரு நோய் இது உள்ளங்கையிலும் தோன்றும்

உள்ளங்கை எரிச்சல் = பித்தத்தினால் ஏற்படும் உள்ளங்கை எரிச்சல்

உள்ளடங்கல் = மூச்சு, இருமல் இவற்றை உடம்பின் உள்ளே ஒடுங்கச் செய்தல்

உள்ளடி கனத்தல் = பாதத்தைத் தூக்கும் போதும், வைக்கும் போதும், களிமண் அப்பியது போன்றும், சருகு ஒட்டிக் கொண்டது போல் தோன்றிக் கால்கள் மரத்துக் காணும் வாத நோய்

உள்ளட் சரம் = குழந்தைகளுக்கு முகமும் நாக்கும் வெளுத்து வாய் வெந்து மூக்கில் நீர் வடிந்து சுரத்துடன் தாகமும் ஏற்படுத்தும் அச்சரநோய்

உள்ளந் கண்டு = கழுத்தெலும்புகள்

உள்ளபானம் = (உள் அபானம்) ஆசனத்தின் உட்புறம்

உள்ள பிள்ளை = கருப்பையிலிருக்கும் (இறக்காத) குழந்தை

உள்ளம் = ஒரு வகை மீன்

உள்ளம்மி = மருந்தரைக்க ஆழமாயுள்ள குழியம்மி

உள்ளழல் = உள்ளான் குருவி

உள்ளழலை = உடற்கொதிப்பு, உள்ளுறுப்புகளுக்கு ஏற்படும் அழற்சி

உள்ளழல் = உட்தி

உள்ளழிவு நோய் = உள்ளுறுப்புகளை அழிக்கும் சயம் முதலிய நோய்கள்

உள்ளனல் = உட்காங்கை

உள்ளன் = நரி

உள்ளா = ஒருவகைக் கடல்மீன்

உள்ளாடல் = மூச்சுவிடல்

உள்ளாடை = உட்சீலை, அதாவது இரண வைத்தியங்களில் பயன்படுத்துவது

உள்ளாணி = தோல் போக்கினது (உள்நரம்பு)

உள்ளாலயம் = இதயம்

உள்ளாளி = உள்ளாணி

உள்ளான் = உள்ளான் குருவி, கோரையுள்ளான், கீரி உள்ளான், சூத்தாட்டி உள்ளான், துடுப்புள்ளான், காட்டுள்ளான், தடிமூக் குள்ளான், கொசு உள்ளான், மாரியுள்ளான், பதுங்கை யுள்ளான், கோழியுள்ளான், மயிலுள்ளான், சிவப்பு மூக்குள்ளான், சட்டித் தலையுள்ளான்

உள்ளி = வெங்காயம், வெள்ளைப் பூண்டு, வெள்ளை வெங்காயம், ஈயம், ஈருள்ளி

உள்ளிகாரன் = இரசம்

உள்ளிக் கோளம் = கழுத்தின் கீழ் மார்பறையுள் திரண்டு காணுங்கோளம்

உள்ளிசிவு = உள்ளுறுப்புகளுக்குக் காணும் இசிவு சன்னி

உள்ளிச்சு வேதம் = உள்ளி

உள்ளிடுதல் = புண்புறைகளில் காரச் சீலை அல்லது மருந்துகளைப் புகட்டல்

உள்ளித்திரி, உள்ளிப்பல் = வெள்ளைப் பூண்டின் உள்ளிருக்கும் பல்

உள்ளிப் பாடாணம் = ஒரு வகைப்பாடாணம்

உள்ளிப்பூடு, உள்ளிப்பூண்டு = வெள்ளைப் பூண்டு

உள்ளியாமணக்கு = ஒருவகை ஆமணக்கு

உள்ளி யெண்ணெய் = உள்ளியாமணக்கு எண்ணெய்

உள்ளிரணி = தோல் போக்கினது

உள்ளு = உள்ளான்

உள்ளுங்கொண்டு புறமும் பூசல், உள்ளுங்கொண்டு மேலும் பூசல், உள்ளளம் புகட்டி மேலும் பூசல் = மருந்தெண்ணெய் அல்லது தைலத்தை உண்டு அதே மருந்தை உடம்பின் மேலும் பூசிக் கொள்ளல்

உள்ளுயிர், உள்ளுயிர்க்குன்று = நத்தை

உள்ளுருக்கி = உடம்பை மெலியச் செய்யும் பொருள் சிலேட்டும் உடம்பினரின் பாலைக் குழந்தைகள் குடிப்பதால் இரசதாது ஓடுகின்ற நரம்புகளின் வழி அடைபட்டு, அதனால் அன்னரசம் மேலுக்கு ஏறாமல் இருமல், இளைப்பு முதலான குணங்களேற்பட்டு உடம்பை இளைக்கச் செய்யும் ஒரு வகைக் கணநோய்

உள்ளுலத் தீதம் = அகத்தி

உள்ளுர்த்தி = கணச் சூட்டினால் குழந்தைகளின் உள்ளுறுப்புகளை உலரும்படிச் செய்து உடம்பைப் பலவீனப் படுத்துமொரு கணை நோய்

உள்ளுலவு = சிற்றொடுவை

உள்ளுறுத்தல் = புண்புரைகளில் காரச்சீலை அல்லது மருந்துகளைப் புகட்டல்

உள்ளூரினாறு = உள்ளூரிலகப்படும் அறுவகைச் சரக்குகள், அவை சவுரி, தூதுவளை, பிரண்டை, கண்டங்கத்திரி, கோவை, இந்திரகோபப்பூச்சி

உள்ளளேயிறக்கல் = விழுங்கல்

உள்ளை = வெள்ளைப்பாடாணம்

உள்ளொட்டி = பிசினொட்டியிலை, இது சொறியை அகற்று விக்குமோர் ஆகருஷண மூலிகை

உள்ளோக் காளம் = குமட்டல் உடம்பினுள் புப்புசம், இதயம், இரத்த நாடி முதலியவை களிலேற்படும் குறு குறுப்புச் சத்தம்

உறக்கமரி = பீநாறி

உறக் காய்ச்சல் = மருந்தின் சத்து இறங்கும் படிக் காய்ச்சுதல்

உறக்கு = தூக்கம்

உறங்கி = புளியமரம்

உறங் கொட்டமை = தூக்கம் படியாமை

உறடை = காக்கை

உறட்டலன் = உடம்பு வற்றி மெலிந்தவன்

உறட்டு = கெட்டவாசனை, வறட்சி

உறட்டுக் கண் = சாய்ந்த பார்வையையுடைய கண்

உறட்டுக்கை = இடக்கைப் பழக்கம், இடக்கை

உறட்டை = கெட்டநாற்றம்

உறண்டல் மண் = வறள்மண்

உறண்டுதல் = நோய், உணவின்மை, பயணம், வருத்தம் முதலியவற்றால் மெலிதல், சாப்பாடில்லாமல் இளைத்தல்

உறண்டை = காக்கை, கெட்டவாசனை

உறத்தல் = பிழிதல் (பழத்தை)

உறத்திரம் = மஞ்சள்

உறந்தி = புளியமரம்

உறப்பலரு = செங்கழுநீர்

உறப்பல் சானன் = பெருங்காயம்

உறமான பந்து = கருநெல்லி

உறவாக்கி = சம்பந்தப்படும்படிச் செய்யும் மருந்துச் சரக்குகள்

உறவாதல் = கலத்தல், ஒருமைப் படல், உயிர், உலைக் களம், மலைமுருங்கை, ஊற்று, எறும்பு, ஒருவகைப் பூச்சி

உறவு = எறும்பு

உறவுகலத்தல், உறவுகூடுதல் = மித்திரச் சரக்குகள் ஒன்றாய் சேர்த்தல்

உறவு முரிதல் = கூட்டுறவினின்று பிரித்தல்

உறவேகாய்ச்சல் = உறக்காய்ச்சல்

உறா = அடை

உறாமருந்து = அபின்மருந்து

உறாவுதல் = சோர்வடைதல்

உறி = கொத்துமல்லி, உறிஞ்சல், இரண்டாழாக்குக் கொண்ட ஓர் அளவு

உறிஞ்சி = உடம்பில் கெட்ட நீரை வாங்கும் மருந்து; அன்னரசத்தை உறிஞ்சும் கருவிகள்

உறிஞ்சுப்பு = மூக்கால் முகரும் ஒருவகை உப்பு

உறுகண் = நோய், கள், நாசினி, செந்திராய்

உறுகண்ணாளர் = நோயாளி

உறுகுங்கனலி = பிரண்டை

உறுகுங் கனைச்சான் = எருமைக்கனைச்சான்

உறுங்கனலி = பிரண்டை

உறுசிலை மேவி = முடவாட்டுக்கால்

உறுசுவை = மிக்கத் தித்திப்பு

உறுண்டமடலி, உறுண்டமணலி = அழுகண்ணி

உறுண்டுகம் = அவுபல பாடாணம்

உறுத்தல் = அணில், வலியுண்டாகல்

உறுத்திரம் = மஞ்சள், கோபம், சிவப்பு

உறுத்தை = அணில்

உறுநாகம் = சிறுநாகப்பூ

உறுநோய் = பலநாள் தங்கிய நோய்

உறுப்படக்கி = ஆமை

உறுப்பறை = அங்கவீனன்

உறுப்பா = ஒருமரம்

உறுப்பில் பிண்டம் = கருவில் உறுப்புகள் அமையா முன்னம் சிதைந்த தசைப்பிண்டம் கருவில் அங்கங்கள் நிறை வில்லாப் பிண்டம்

உறுப்பினங் கெட்டவன் = உறுப்பறை

உறுப்பு = அவயம், உடம்பு

உறுப்புத்தளர்ச்சி = ஆண்குறி தளர்தல்

உறுப்புத் தள்ளல் = மெலிந்தவர்கள் அதிக பாரமான பொருளைத் தூக்குவதனாலும் சீதபேதி காலத்தில் அதிகமாக முக்கி மலங்கழித்தலாலும் ஆசனவாய் வெளிப்பிதுங்கித் தோன்றல், ஆசனப்பிதுக்கம்

உறுப்புத் தோல் = மான் தோல், ஆண்குறிதோல்

உறுப்பு மயக்கம் = உறுப்பு இல்லாமலோ, இரண்டாகவோ, விசேட அவயவங்களுடன் மாறுபாடாய்ப் பிறத்தல்

உறுப்பு மூலம் = ஒன்பது வகை மூலத்துள் ஒன்று இது வெளிபிதுங்கிக் காணும்

உறுப்பைப் பற்று நோய் = தோல், தசை, மூளை, எலும்பு முதலியவை நோய்களைத் தாக்கும் நோய்

உறும்பலாசாவல் = பெருங்காயம்

உறுவல் = துன்பம்

உறுவிழி புடைத்தல் = அழற்சியினால் கருவிழி அல்லது வெளிவிழி பிதுங்கிக் காணும் கண்ணோய்

உறை = உவர்நீர், நீர்த்துளி, மருந்து, வெண்கலம், காரம், உவர் மண்நீர், மழை, நோய் தீர்க்கும் மருந்து, உறை மோர், பாம்பின் விடப்பை, உணவு, பளிங்குக்கண்ணாடி, ஒழுகல், மழைக்காலம்

உறைகல் = வெண்கலம்

உறைகாலம் = மழைக்காலம்

உறைக்குமிலை = வெற்றிலை

உறைச்சாலை = மருந்துச்சாலை, வைத்தியசாலை

உறைநீர் = காரமான நீர், பனிநீர், உறைந்த நீர், மருந்து நீர்

உறைந்த கஞ்சி = ஏடு படர்ந்து இறுகிய கஞ்சி

உறைந்த நோய் = உடம்பில் ஊறியிருந்த நாட்பட்ட நோய்

உறைந்த பால் = தயிர், கட்டிப்பால்

உறை மருந்து = குழந்தைகட்கு முழுக்காட்டியவுடன் தேன் அல்லது முலைப்பாலில் இழைத்து மாந்தம் அணுகாத படிக்கொடுக்கும் காரமான மாத்திரை

உறைமழை = ஆலங்கட்டி

உறையுதிரம் = உறைந்த இரத்தம், செவ்விரத்தக்கட்டி

உறையூர் = கருப்பை

உற்கடம் = நன்னாரி, இலவங்கம்

உற்கடை = கற்பூரம், கிராம்பு

உற்கம பாத்திரம் = சுண்டவைக்கும் பாண்டம்

உற்கமமுறை = சுண்டவைக்கும் முறை

உற்கமம் = ஆவியாகப் போக்கிச் சுண்டவைத்தல்

உற்கரித்தல் = வாந்தி செய்தல்

உற்கருவி = பிரசவகாலத்தில் குழந்தையை வெளியே எடுக்க உபயோகிக்குங்கருவி

உற்காஸ்தி = நீண்டவெலும்பு

உற்காயம் = தோள் முதல் கைவிரல் ஈராக உள்ள உறுப்புகள்

உற்காய வென்பு = தோள், புயம், முன்கை இவைகளிலிருக்கும் எலும்புகள் அல்லது புயவெலும்புகள்

உற்கார சூலை = மூட்டில்வலி, குத்தல் முதலியவைகளோடு கூடிய ஒருவகைச் சூலை நோய்

உற்காரம் = வாந்தி, விக்கல், இரைதல்

உற்கரிப்பு = ஏப்பம்

உற்கீரணம் = வாந்தி செய்தல்

உற்குரோசம் = நீர்வாழ்ப்பறவை

உற்சர்க்கம் = மலம்

உற்சுகா சீரணம் = ஒருவன் நல்ல உணவைச் சாப்பிடுவதைப் பார்த்து மற்றொருவன் ஏக்கங் கொள்கிறான், அதனால் உண்ட உணவு செரியாமல்

புளித்தேப்பம், பொருமல் முதலியவை உண்டாகித் துன்புறுத்தும் ஒருவகைக் குன்ம நோய்

உற்தேசம் = உடல்

உற்படம் = மரப்பொந்தினின்று ஒழுகும்பால்

உற்பட்சமன் = கண் இரப்பையில் மேல் நோக்கிய மயிர்

உற்பத்திக் கிரமம் = தோன்று முறை அதாவது பிரமத்தினின்று ஆகாயமும், ஆகாயத்தினின்று வாயுவும், வாயுவினின்று நெருப்பும், நெருப்பினின்று தண்ணீரும், தண்ணீரினின்று மண்ணும், மண்ணினின்று புல், பூண்டு முதலிய தாவரமும், தாவரத் தினின்று உணவும், உணவினின்று விதை, விதையினின்று மனிதரும் ஆகிய வரிசைக் கிரமங்கள்

உற்பத்து மாசி = ஓரிதழ்த் தாமரை

உற்பல கண்டிகம் = மஞ்சள் சந்தனம், அரிச்சந்தனம்

உற்பல கோபம் = ஊதற்கொடி இதுவே 'சகதேவிப்பூடு', மலையாளத்தில் 'பால் வள்ளி' எனச் சொல்வதுண்டு

உற்பலசட்கம் = ஒரு மருந்து

உற்பவசட்சு = தாமரைக்கண், நேர்த்தியான கண்

உற்பலசாகிதம் = கருவாகை

உற்பலசாசனன் = பெருங்காயம்

உற்பலசாரிவம் = ஊதற்கொடி

உற்பலசானன் = பெருங்காயம்

உற்பலபத்திரம் = நெய்தல் இலை

உற்பலபேதியகம் = ஒருவகைக் கட்டு

உற்பல முரணன் = பெருங்காயம்

உற்பலம் = கருநெய்தல் (நெய்தற் கிழங்கு), கோட்டம், வெள்ளரி, செங்குவளை, வெண்ணெய்தல், குவளை, சீதேவி, இரத்தோற்பலம், செங்கழுநீர், நீலோற்பலம், நீராம்பலுக்குள்ள பொதுப்பெயர்

உற்பலவனதை = சிவதை

உற்பலாதி = குளிர்ச்சியைக் கொடுக்கும் மருந்துச் சரக்குகள்

உற்பவநாடி = குழந்தைகளுக்கேற் படும் நாடி நடை

உற்பவமாதல் = பிறத்தல்

உற்பவம் = பிறப்பு, உற்பத்தி, கருவுற்பத்தி

உற்பழம் = பெருங்காயம்

உற்பனம் = தோன்றியது, பிறப்பு, அனுபானவுற்பன மறிந்து கொடுத்தல்

உற்பன்ன மருந்து = உத்தமமான மருந்து

உற்பாக நிபாகம் = சரியாகச் சமைத்தல்

உற்பாசிதம் = சரிவரக்கொதிக்க வைத்தல்

உற்பாடகம் = காதின் வெளிநோய், மரத்தின் வெளிப்பாக்கத்துப் பட்டை, சரபப்பட்சி

உற்பாடசயனம் = ஒரு விதக்கோழி

உற்பாடம் = காதின் வெளிப்புறம் ஏற்படும் நோய்; வேரோடு எடுத்தல் அழித்தல்

உற்பாதகம் = எண்காற்பூச்சி

உற்பாலசானன் = பெருங்காயம்

உற்பாலனம் = நோயணுகாதபடித் தடுத்துக் கொள்ளல்

உற்பாலனி = வாரணி (நோயிற்கு முன்னரே தடுத்துக் கொள்ளல்)

உற்பிசம் = தாவரம்

உற்பிச்சம் = நிலத்திற்பிறப்பன, இது நால்வகை உற்பத்திகளுள் ஒன்று

உற்பிட்டம் = முறிவு அல்லது சுளுக்கு

உற்பிண்டிதம் = வீக்கம்

உற்பிதம் = கறியுப்பு

உற்பீசம் = உற்பிச்சம்

உற்பீடம் = நசுக்கல்

உற்புடகம் = காதின் வெளிப் பக்கத்து நோய்

உற்பேதம் = முளைத்தல்

உற்முரகாந்தி = கற்பூரசிலாசத்து

உற்றவன் = நோயாளி

உற்றறிவு = தொடு உணர்வு

உனகாகும், உனத்தகு, உனத்தண்டு, உனத்தரு, உனத்தரும் = குறிஞ்சா

உனத்திதம் போக்கி = கற்றுளசி

உனம்பு = அடம்பு

உனினம் = சிறுபீளை

உன்மதகம் = ஊமத்தை, காதுப்புறத்தில் வரும் நோய்

உன்மதகி = குறிஞ்சா

உன்மத்தகம் = ஊமத்தை, குறிஞ்சா

உன்மத்தகி = குறிஞ்சா(ன்), சிறு குறிஞ்சா, ஊமத்தை

உன்மத்தகோரம் = கல்வாழை

உன்மத்த தொந்தம் = தாய், தந்தையிடமிருந்து குழந்தைகளுக்கேற்பட்ட பைத்தியம்

உன்மத்தம் = ஊமத்தை

உன்மத்த ரோகநாசினி = நறுந்தக்காளி, இது உன்மத்தரோகம், உபரசத்தின் தோஷம் இவற்றைப் போக்கும்

உன்மத்த நோய் = வாத பித்த சிலேட்டுமம் தத்தம் வழிகளை விட்டு நடக்கும் போது மேலுக்குச் செல்லும் நரம்புகள் தாக்கப்பட்டு மனதிற்கு ஒருவித விகற்பத்தையுண்டு பண்ணும் ஒரு வகைச் சித்தப்பிரமை

உன்மத்த வாதம் = வாத சூலை அல்லது வதாப்பிடிப்பினால் ஏற்படும் பைத்தியம்

உன்மத்தி = குறிஞ்சா, சிறு குறிஞ்சா, ஊமத்தை

உன்மத்து, ஊமத்தை = உன்மத்தை

உன்மந்தகி = சிறுகுறிஞ்சா

உன்மந்தம் = செவ்விண்டுக் கொடி

உன்மாதகி = குறிஞ்சா

உன்மாத பித்தம் = பித்தாதிக் கத்தினால் அறிவிழந்து வெட்கம் விட்டுத் தூக்கமின்றிப் பைத்தியக்காரனைப் போன்ற குணங்களை உண்டாக்கும் ஒரு வகை நோய்

உன்மாதம், உன்மாத நோய் = உன்மத்த நோய்

உள்மீடம் = பிறக்கும் போதே ஆண்குறியில் ஏற்பட்ட ஒரு வகை உறுப்புக்குற்றம்; இதனால் நீர்த்தாரையின் துவராமானது ஆண்குறிக்குப் பின்னால் ஏற்பட்டு அதன் வழி யாய் சிறுநீர் இறங்கும்; இவ்விதமான பெண்குறியிலும் குற்றம் ஏற்படும்

உன்மீலனல் = கண்ணிமைத்தல்

உன் மேடம் = கண்ணிமையை விரித்தல்

உன் மேதை = கொழுப்பு

உன்மை = தசை எடுக்கும் குறடு உழிஞ்சிலை வாகை

உன்னதி = அழிஞ்சில்

உன்னதை = மும்மரம்

உன்னமாகதம் = புல்லாமணக்கு

உன்னம் = அன்னப்பறவை, நீர் வாழ்ப்பறவைப் பொது, உழிஞ்சிலை வாகை, சடைச்சி, சோறு, தசை எடுக்கும் குறடு

உன்னயவங்கம் = பீனசப்புல்

உன்னயனம் = நீர்வாங்கல்

உன்னலாகம் = பின்தொடரி

உன்னாகம் = கரடி

உன்னாகன்கொடி = பெருமுசுட்டை

உன்னாம் = சீமையிலந்தைப்பழம், ஆப்பிள்பழம்

உன்னாயங் கொடி = ஒருவகைக் கொடி, ஊனான் கொடி, ஊனன் கொடி, ஓணான் கொடி

உன்னாயம் = சோனைப்புல்

உன்னாலயம் = இருயம்

உன்னி = அழிஞ்சில், ஒருவகைக் கொடி, குதிரை

உன்னிசன்னி = இடைவிடாது கண் ஊன்றிப் பார்த்தலினாலும் நினைத்தால் அல்லது யோசித்தலாலும் ஏற்படும் மூர்ச்சை

உன்னிய கோதை = சத்திச் சாரணை

உன்னீர் = வாய்நீர்

உன்னு = சடைச்சி, பலிசை

உன்னுருஞ் சோற்றுக்குருனை = உப்பு

ஊ

ஊ = உணவு, தசை, சந்திரன்

ஊகடகம் = ஒருவகை மீன்

ஊகடன் = முருங்கை

ஊகண்டகம் = கடலை

ஊகதன் = ஊகடன்

ஊகத்தை = ஊமத்தை

ஊகம் = குரங்கு, ஊமத்தை, ஒரு வகைப்புல், கருங்குரங்கு, பெண்குரங்கு, புலி

ஊகம்பழம், ஊகம் = துடைப்பம்

ஊகாக்கியம் = கலவைக்கீரை

ஊகினி = புளியமரம்

ஊகை = வாளம்

ஊக்கவ் = சுறுசுறுப்பை, அசைவை உண்டாக்கும் கபால நரம்பு

ஊக்கிடர் = சீந்தில், சிவந்தி

ஊக்கிர்கெந்தம் = கருவேம்பு

ஊக்கிறாக் குருவி = ஒருவகைக் குருவி

ஊங்கனிமூலி = சிறுபீளை

ஊங்கன் = கன்றுகுட்டி

ஊசகம் = மிளகு, உப்பு, விடியற்காலம்

ஊசணம் = மிளகு, திப்பிலி

ஊசமன் = ஆவி

ஊசம் = உவர்மண் பூமி, சவர்க் காரபூமி, காதின்துவாரம்

ஊசரக்கல் = சுக்கான்கல்

ஊசரசம் = மண்ணுப்பு

ஊசரத்திராவணம் = வெடியுப்பு

ஊசரம் = பூவழலை, சாலாங்க பாடாணம் உவர்த்தரை, களர்நிலம் (உவர்நிலம்)

ஊசலாங்கொடி, ஊசலி = சகுண்டக்கொடி

ஊசா = மூக்குத்திக்கொடி

ஊசானங்கம் = கொழுமிச்சை, நாரத்தை

ஊசி = மருந்தை உடம்பினுட் புகட்டுவதற்காக உபயோகிக்கும் கருவி, எழுத்தாணி, இழைவாங்கி பூண்டுகளின் காய் அல்லது பூவின் கூர்மையைக் குறிக்க வரும் வார்த்தையின் முதற் சொல், (எ. டு) ஊசி மிளகாய், ஊசி மல்லிகை

ஊசிக் கணவாய் = ஒருவகைக் கடல்மீன்

ஊசிக்கணுவலம் = அலரி

ஊசிக்கப்பல் = ஒரு வகைப் புகையிலை

ஊசிக்கழுத்தி = கொக்கு மீன்

ஊசிக்களா = முள் வாய்ந்த ஒரு வகைக்களாச்செடி

ஊசிக்காசா = ஒருவகைக்காசா

ஊசிக்காந்தம் = ஊசியை இழுக்கும் காந்தக்கல்

ஊசிக்காய் = ஒருவகைத் தேங்காய்

ஊசிக்கார் = மூன்றுமாதத்திற்குள் அறுக்கக்கூடிய நெல்

ஊசிக் கால் = சயம், எலும்புருக்கி முதலிய நோய்களினால் இளைத்த மெல்லிய கால்

ஊசிக்குறண்டி = முட்குறண்டி

ஊசிக்கை = இளைத்தகை, கல்லு பயற்றங்கொடி

ஊசிக்கோரை = முட்கோரை

ஊசிக்கோவை = கற்கோவை

ஊசிச்சம்பா = ஒருவகைச் சன்னச் சம்பா நெல்

ஊசித்தகரை = சிறுதகரை, சிறு ஆவரை

ஊசித் திருப்பல் = இரத்த வொழுக்கை நிறுத்துவதற்காக நாடியில் ஊசி குத்தி அதைப் புரட்டல் அதாவது முறுக்குதல்

ஊசித் தூமம் = நெருப்பிலிட ஊசியைப் போல் நீளமாக எழும்பும் புகை; புடமிட்டலிங்கம் முதலிவைகள் இவ்வாறு சோதிக்கப்படும்

ஊசிநரம்பு = காதிலுள்ள ஊசியைப் போன்ற நரம்பு, கேள்வி நரம்பு

ஊசிநீர் = வாய்நீர், சிறுநீர், முப்பு, சுத்தகங்கை (மழைநீர்)

ஊசிப்பாலை = சிறுபாலை, பாலை

ஊசிப்புகை = ஊசித்தூமம்

ஊசிமதுகம் = இலுப்பைப்பூ

ஊசிப்புல் = ஊசியைப் போன்ற புல்

ஊசிப் புழு = மண்ணினின்று தோண்டி எடுக்கும் சன்னப்புழு, இது வேனிற்காலத்தில் மழையினால் உற்பத்தியாகும்

ஊசிமணி = சிந்திரமல்லி

ஊசி மல்லிகை = ஊசியைப் போன்ற சன்னமான முல்லைச் செடி

ஊசிமறுப்பு = ஊசிதிருப்பல்

ஊசிமாகிதம் = கல்லூரிப் பச்சிலை

ஊசி மிளகாய் = கொச்சி மிளகாய், சீமைபச்சை மிளகாய், இது ஊசியைப்போல் சன்னமாயிருக்கும் காடியில் போட்டும் ஊறுகாயிலும் பயன்படுத்துவர்

ஊசிமிளிரை = காசியரளி

ஊசிமுக யோனி = அல்குலில் துவாரத்தை ஊசிநுழையும் துவாரம் போலாக்கி உடலுறவிற் கிடமில்லாமல் செய்யுமொரு நோய்

ஊசிமுல்லை = ஒருவகைச் சிறு முல்லை

ஊசிமுறி = இடைக்காடர் என்னும் சித்தர் இயற்றிய ஒரு நூல்

ஊசியாவரை = வெள்ளையாவாரை

ஊசியுப்பு = வெடியுப்பு

ஊசிரம், ஊசிர் = விலாமிச்சு

ஊசிவேர் = சிறுவேர்

ஊசிவேளை = ஒருவகைச் சிறுவேளை

ஊசஞ்சுரம் = நாட்பட்டசுரம்

ஊசுதல் = பதனழிந்து போதல் (அழுகல்)

ஊச்சில் = தசைநோய் ஊச்சி

விகுக்கம் = புல்லுருவி (குருவிச்சை)

ஊஞ்சமரம், ஊஞ்சல் மரம் = உசிலமரம்

ஊஞ்சற் தோட் பட்டை = முறிந்து ஊஞ்சலைப் போல் முன்னும் பின்னும் அசையுந் தோள் பட்டை

ஊஞ்சில் = ஊஞ்சமரம்

ஊடகம் = ஒருவகைக் கடல் மீன்

ஊடணம் = திரிகடுகு

ஊடணை = திப்பிலி

ஊடரக்கல் = சுக்கான்கல்

ஊடரம் = பூவழலை, உவர்நிலம், உழமண்

ஊடவர் = வெள்ளி

ஊடன் = ஒரு ஆற்றுமீன்

ஊடன்கொடி = ஒருவகைக் கொடி

ஊடான் = ஒருவகைக் கடல் மீன், வெள்ளி நிறம் போன்ற ஒருவகைக் கடல்மீன், மற்றோர் வகைக் கடல் மீன்

ஊடு = நடு, இடை, ஆழ்ந்த உள்பாகம்

ஊடுசில் = கல்லுசில் (உசிலின் ஒரு வகை)

ஊடு தாக்கல் = நோய் மிகுந்து உடம்பு முழுதும் பரவல்

ஊடு பூசாவதி = புட்பராகம்

ஊடு களச்சல் = மாதவிடாய்களுக்கு இடையே காணும் வலி

ஊடுறு, ஊடுறுவி = சாரணை

ஊடைமா, ஊட்டா = தேட்கொடுக்கி

ஊட்டாக் குழந்தை = நோயின் வருத்தத்தால், பாலுண்ணாக் குழந்தை, பால் மறந்த குழந்தை

ஊட்டி = உணவு, குரல்வளை, தேட்கொடுக்கி, மழை, பறவையுணவு, மிடறு

ஊட்டிக்குற்றி = குரல்வளை

ஊட்டிபறிப்பூண்டு = அலரி

ஊட்டிரம் = தேட்கொடுக்கி, தேள்

ஊட்டுணை = வயதான காலத்தின் தலையாட்டம்

ஊட்டுபரமூலி = சிறுபீளை

ஊட்டுரோகம் = தேள்கொடுக்கி

ஊஷகம் = மிளகு

ஊஷகாதி கணம் = உவர் மண்ணிலிருந்து எடுக்கப்படும் ஒரு வகையுப்பு

ஊஷணம் = சுக்கு, மிளகுக்கொடி, மிளகு

உஷணை = திப்பிலி

ஊஷதராசினி = செம்பல்லிப்பூடு

ஊஷம் = விடியற்காலம், உவர்மண்

ஊஷரக்கல் = சுக்கான்கல்

ஊஷரத்திரவணம், ஊஷரத்திராவணம் = வெடியுப்பு

ஊஷரம் = உவர்நிலம், பூவழலை, சவர்க்காரம், சவுட்டுப்பு

ஊஷாத்தின் சாரம் = சவுட்டுப்பு

ஊஷாத்தின் மப்பு = காசிச் சாரம்

ஊஷ்ணக பவாதக்கிணி = புளிநறளைக்கிழங்கு, புளி நறளை

உஷ்ணகாரி = உடம்பில் சூட்டை உண்டாக்கும் மருந்து

உஷ்ண சன்னி = வெயிலின் கொடுமையினால் உண்டாகும் மூளையைப் பற்றிய சன்னிநோய்; கொதிப்பினால் மூளையில் இரத்தம் (அல்லது) நீர் சேர்வதால் உண்டாகும் ஒருவகைச் சன்னிநோய்

ஊஷ்ண வாதக் கிராணி = உடம்பிலுள்ள வெப்ப வாயுவினால் ஏற்படும் கழிச்சல் நோய்

ஊஷ்ண வொத்தடம் = சூடாகக் கொடுக்கும் ஒத்தடம்

ஊஷ்மகம், ஊஷ்மாகமம் = கோடைக்காலம்

ஊறும் = சோறு ஊணல்,

ஊணா = சடைச்சிமரம்

ஊணாங்கொடி = ஊனான் கொடி

ஊணான் கொடி = ஓணான் கொடி

ஊணு = ஊணா

ஊணுரை = இரசம்

ஊண் = சோறு

ஊண்டத்தார் = கள்ளி

ஊண்டழல் = உதராக்கினி

ஊண்டி = இரசிதபாடாணம்

ஊதகம் = விடகம்

ஊதலூட்டல் = புண்புரைகளுக்குப் புகை காட்டுதல்

ஊதல் = குளிர்காற்று, வாதநோய், வீக்கம், பரவிய வீக்கம்

ஊதல் கொடி = ஒருவகைக்கொடி

ஊதளை = சீமையாதளை, ஊதுளை, இது குளத்தோரம், வயல் வாய்க்கால், குட்டை முதலான நீரோடுமிடங்களில் விளையும்

ஊதற் காற்று = பனிக்காலத்தில் சில்லென்று வீசுங் குளிர் காற்று, பனி அல்லது ஈரம் நிறைந்த காற்று

ஊதற்கொடி = ஊதல் கொடி

ஊதா = சிவப்பு கலந்த நீல நிறம் சிற்சில பூண்டின் முதன்மொழி

ஊதாகண்டங் கத்திரி = ஊதா நிறமான பூக்களையுடைய கண்டங்கத்தரி

ஊதாகதம் = காசித்தும்பை

ஊதாகிரி, யாத்துச்செடி = சித்தரத்தையின் ஒரு வகை; நிலவேம்புக்குப் பதிலாக இதனைப் பயன்படுத்தலாம்

ஊதாகத்தரி = ஊதா நிறமான கத்தரி

ஊதா சாமந்தி = ஊதா நிற சாமந்தி அல்லது சீமை சாமந்தி

ஊதாப்பூ = மாசகணி

ஊதாமுள்ளி = நீலச்செம்முள்ளி

ஊதாம்பல், ஊதாவல்லி = நீலச்செவ்வாம் பற்கொடி

ஊதாவிந்திர புட்பம் = ஊதா நிறப்பூக்களை உடைய இந்திர புட்பச் செடி

ஊதாவூமத்தை = ஊதா நிறப்பூக்களையுடைய ஊமத்தை

ஊதானன் = தச வாய்வில் ஒன்று

ஊதிகம் = சோமப்பூண்டிற்குப் பதிலாக உபயோகிக்கும் ஒரு பூடு

ஊதிகா = காட்டத்தி

ஊதிகை, ஊதிசை = முல்லைக்கொடி, முல்லை, ஊசி மல்லிகை

ஊதிப்பார்த்தல் = புடமிட்டுச் சோதித்தல்

ஊதியபொன் = புடமிட்ட பொன்

ஊதியொடுக்கம் = மூச்சு

ஊதினபொன் = ஊதிய பொன்

ஊதினமரம் = வண்டு துளைத்த மரம்

ஊதின வெள்ளி = நெருப்பிலிட்டு கலப்பின்றி ஊதியெடுத்த சொக்க வெள்ளி

ஊது = ஊதுகுழல்

ஊதுகட்டி = ஊதியெடுத்த பொன் அல்லது வெள்ளிக்கட்டி; வீங்கிய கட்டி, வாயுவினால் உப்பிய கட்டி

ஊதுகணம், ஊசிகணை = கணச்சூட்டினால் குழந்தைகட்குச் சுரங் கண்டு செரியாமையால் உடல் மெலிந்து மேல் மூச்சு காணும் ஒரு வகைக் கண்நோய்

ஊதுகண்டகி = பூதமரம் (ஜாராமரம்), ஆலமரம்

ஊதுகரப்பன், ஊதுகரப்பான் = குழந்தைகட்குக் குளிர் காய்ச்சலுடன் கழலைக் கட்டியைப் போல் கண்டு பெரிதாக வீங்கிப் புண்ணாகி மூக்கையரிக்கும் ஒரு வகைக் கரப்பன்

ஊதுகலம் = உரல்

ஊது காமாலை = குடலில் கலக்கும் பித்தநீர் தடைப்பட்டு இரத்ததத்தில் கலப்பதானல் உடம்பு வீங்கி மஞ்சள் நிறமாகத் தோன்றும் ஒருவகைக் காமாலை

ஊதுகிரந்தி = மேகத்தினால் உடலில் கொப்புளங்கள் எழும்பி வீக்கத்தையுண்டாக்கும் கிரந்தி நோய் ஊது

சங்கம் = ஒருவகைச் சங்கஞ்செடி

ஊதுசுருட்டை = ஒருவகைச் சுருட்டைப்பாம்பு

ஊது திட்டம் = மருந்து, உலோகம் இவை தயாரிக்கும் போது துருத்தி கொண்டு ஊதும் கால அளவு

ஊது பாண்டு = உடம்பில் தீய நீர் பரவித் தங்குவதனால் வீக்கத்தை உண்டாக்கும் ஒரு வகை பாண்டு

ஊது மரந்த கணம் = குழந்தைகட்குச் செரியாமையால் சுரம் ஏற்பட்டு காணும் வீக்கம் குழந்தைகட்கு மூச்சுவிட மாந்தம் முடியாமல் வயிறு ஊதி கழிச்சலுடன் சுரம் வாந்தி முதலியவை காணும் மாந்த நோய்

ஊது முறைவரிசை = ஊது திட்டம்

ஊது யந்திரம் = துருத்தி

ஊது வழலை = கடித்தவுடன் உடம்பு முழுமையும் வீக்கத்தை உண்டாக்கும் ஒருவகை விரியன் பாம்பு

ஊதுவாரம் = வெள்ளி ஊது

வெள்ளி = சுத்தமான வெள்ளி

ஊதுளை = நீர்நிலைகளின் ஓரங்களில் விளையும் ஒரு பூண்டு

ஊதை = காற்று, குளிர்காற்று, குளிர்ந்த காற்றினால் ஏற்பட்ட வாதம்

ஊதைக்காற்று = ஊதற்காற்று

ஊதைநீர் = வாதநீர்

ஊதைவலி = வாதத்தினால் உண்டாகும் வலி

ஊத்தங்காய் = புதைத்துப் பழுக்க வைத்தகாய்

ஊத்தட்டம் = உலோகங்களை உருக்குவதற்காக இடும் நெருப்பு

ஊத்தம் = வீக்கம்

ஊத்தல் = பித்தளை

ஊத்தாம்பிள்ளை, ஊத்தாம்பெட்டி = மூத்திரப்பை

ஊத்தாம் பெட்டி வீக்கம் = மூத்திரப்பையிக்கும் மலவாயிலுக்குமிடையே வாயு தங்கி அதிகரித்துச் சிறு கல்லைப் போல் கனமாயும் கெட்டியாயுமுள்ள கட்டியையெழுப்பும் ஒரு வாத நோய்

ஊத்திரம் = தேட்கொடுக்கி

ஊத்தினம் = ஊதும்வகையிற் சேர்ந்த உலோகங்கள்

ஊத்து = உடம்பூதல்

ஊத்து முறை = மருந்து, உலோகம் முதலியவை தயாரிக்கும் பொழுது துருத்தி கொண்டுதும் கால அளவு

ஊத்தை = அழுக்கு, ஊன், சுரோணித நீர், பல்லழுக்கு, புலால், பீநாறி

ஊத்தைக் கழலல் = அழுக்கு வெளிப்படல் சுரோணித நீர் வெளிப்படல், கருப்பை அழுக்கு வெளியேறல்

ஊதறிகம் = கழற்சிக்காய் இதன் விதையினின்றெடுக்கும் எண்ணெயை மூட்டு நோய், வாத நோய் இவைகளுக்குத் தேய்க்க குணமாகும்

ஊத்தைக் கழற்றல் = நஞ்சுக் கொடியை வெளிப்படுத்தல், மாதவிடாய் வெளிப்படுத்தல்

ஊத்தை நாதி = பீநாறி, மாத விடாயான பெண்

ஊத்தைப்பல் = அழுக்கு படிந்த பல், சீழ்வடியும் பல்

ஊத்தை பாண்டம் = நாற்றமான உடம்பு

ஊத்தைவாசல் = பெண்ணுறுப்பு

ஊநீர் = சுரோணிதம்

ஊந்து = கச்சோலம், ஏலத்தோல்

ஊபுகம், ஊபூகம் = ஆமணக்கு

ஊப்ப லோத்திரம் = வெள்ளிலோத்திரம்

ஊம சிங்கன் = நாவில் உண்டாகும் ஒரு வகை விரணநோய்

ஊமச்சி = ஒருவகை நத்தை, கிளிஞ்சில், சங்க மச்சி, தேருமச்சி

ஊமணை = ஊமை

ஊமணைச்சி = ஊமைப்பெண்

ஊமண் = கூகை

ஊமத்தங்கூகை = பெரிய ஆந்தை

ஊமத்தம், ஊமத்தி, ஊமத்திகம், ஊமத்து = ஊமத்தஞ்செடி, வெள்ளூமத்தை, கரூமத்தை, அடுக் கூமத்தை, பொன்னூமத்தை

ஊமத்தூக நாறி = பீநாறி

ஊமத்தை = ஊமத்தம்

ஊமத்தைக் கட்டு = கட்டிகளுக்காக ஊமத்தையினின்று தயாரித்த ஒரு கட்டு மருந்து

ஊமத்தைக்கூடு = கிளிஞ்சில்

ஊமத்தைப் பிளாஸ்திரி = ஊமத்தையினின்று தயாரித்த ஒரு சீலை மருந்து

ஊமத்தேதிகம், ஊமம் = பூவரசு

ஊமல் = கிழங்கு நீங்கிய பனங்கொட்டையின் மேலோடு

உமற்கரி = பனங்கொட்டையைச் சுட்டகரி

ஊமண் = கூகை, பெருங்கோட்டான், ஊமை

ஊமாண்டி = ஊமை

ஊமிகா = சிறுபிளை

ஊமியற்பூடு = வெள்ளைப்பூண்டு

ஊமிளை, ஊமிள், ஊமின் = சிறுபீளை

ஊமை = கீரி, முட்டை, நண்டு, உம்பு, ஆமை, கிளிஞ்சல் சிப்பி, மூன்று மாதத்திய கருப்பிண்டம், மூகை

ஊமைக்கடுப்பு = ஊமைவலி

ஊமைக் கட்டி = முகங்கொள்ளாத கட்டி, கூகைக்கட்டி

ஊமைக் கணவாய் = ஒருவகைக் கடல் மீன்

ஊமைக்காடை = ஒருவிதக்காடை

ஊமைக் காயம் = வெளியே தேன்றாது உள்ளே வீக்கத்துடன் கூடிய காயம்

ஊமைக் காய் = சதைப்பற்றில்லாத காய், பருப்பில்லாத காய்

ஊமைக்காய்ச்சல் = உட்சுரம்

ஊமைக் கிளாத்தி = ஒருவகைக் கடல்மீன்

ஊமைக் கோட்டான் = ஒருவகைப் பெரிய கோட்டான்

ஊமைக் கோட்டான் வெயில் = மேகமூட்டத்தில் உறைக்கும் வெயில்

ஊமைச்சி = ஒருவகைக் கடல்மீன், ஒருவகை நத்தை

ஊமைச்செவிடு = சவர்க்காரம்

ஊமைச் சொறி = மிகக் தினவையுண்டாக்கும் ஒருவகைச் சொறி

ஊமைத் தனம் = உடம்பினுள்காயம் அடைவதால் பேச்சுத்தன்மையை இழத்தல், பேச முடியாமை

ஊமைத் தன்மை = உதடுகள், நாக்கு, குரல் வளையிலுள்ள தொனித் தந்தி முதலியவைகள் பேசுதற்கு இசைந்தபடிச் செயல்பட ஒன்று சேர்ப்பதற்கு முடியாத தன்மை ; சன்னி, பாரிசவாயு முதலிய கொடிய நோய்களின் மூளை தாக்குண்டு அதனாலேற் படும் பேச்சுகுளறல்; சாதரணமான செவிட்டுத் தன்மையாலும் நாக்கு, உதடு இவைகளுக்கு பிறவியில் ஏற்பட்ட குற்றத்தினாலும், கருப்பத்தின் பரம்பரைக் கோளாறினால் மூளையில் கேடுண்டாவதாலும், பேச்சுறுப்புகளுக்கு நோயினால் ஏற்பட்ட கோளாறுகளினாலும் கர்ப்பிணியாயிருக்கும் போது ஏற்படும் பிரசவக் கோளாறினாலும், குழந்தை பிறக்கும் போது மூளையில் ஏற்படும் காயத்தினாலும் பெரியவர்களுக்கு மூளை தாக்கம் பெறுவதினாலும் பேச முடியாத தன்மை

ஊமைத்தேங்காய் = நீராடாத தேங்காய், இளநீர்த் தேங்காய், உள்ளே ஒன்றுமில்லாத தேங்காய்

ஊமைப்பூச்சி = அட்டை

ஊமைப்பூடு = மூன்று மாதத்திய கருப்பிண்டம்

ஊமைப் போரிகம் = வேர்ப்பலா

ஊமைமரம் = மலைவேம்பு

ஊமையறுவன் = முட்டை

ஊமைவலி = மந்தவலி

ஊமைவீக்கம் = உள்வீக்கம்

ஊமைவெயில் = ஊமைக்கோட்டான் வெயில்

ஊயினை = சிறுபீளை

ஊய்ஞ்சு போதல் = பெருவாரி நோயால் இறத்தல்

ஊய்தல் = பதமழிதல், கனிந்தழிதல்

ஊய்ந்து போதல் = ஊய்ஞ்சு போதல்

ஊரகமல்லி = நாகமல்லி

ஊரணம் = புருவத்தின் இடையே உள்ள மயிர்ச்சுழி, சிலந்திப்பூச்சி

ஊரண்டி, ஊரண்டினார் = கள்ளி, ஊமத்தை, ஊரருகே முளைக்கும் பூண்டு, நாரி

ஊரத்திகம் = கல்லத்தி

ஊரப் பார்த்தல் = விஷம் முதலியவற்றைப் போக்குதல்; மந்திரித்து இறக்குதல்

ஊரமுகம் = ஆமணக்கு

ஊரம் = ஊமத்தை, பசலை

ஊரல் = காய்ந்து வரும் புண், கிளிஞ்சில், தினவு, ஒரு வகைத் தேமல், ஈரம், படர்தாமரை, குளுவைப் பறவை, பசுமை, உறிஞ்சல்

ஊரல்பதம் = பச்சைப்பதம்

ஊரறுகு = ஊருக்குள் சாதாரணமாக முளைக்கும் அறுகு

ஊரற்குடிநீர் = பச்சை அல்லது உலர்ந்த மூலிகைகளின் வேர், பட்டை, இலை, பூ, விதை முதலியவைகளை வெந்நீரில் ஊறப் போட்டு எரிக்காமலே வடித்த குடிநீர்

ஊரற் சொறி = மிக்க தினவையுண்டாக்கும் ஒருவகைச் சொறி

ஊரற்பரி = சேம்பு; இதன் இலையும் கிழங்கும் உணவுக்கு உதவும் ; நீர்ச்சேம்பு

ஊரற்புண் = ஆறாப்புண், பச்சைப் புண், தினவெடுத்து நீர்க்கசியும் புண்

ஊரா = ஊர்ப் பசு

ஊராமை = பெண்களுக்குக் கருப்பையிலுண்டாகி ஆமையைப் போல் ஊருங்கட்டி, இதைக் கெண்டைக்கட்டி, வல்லைக் கட்டியென்று கூறுவர்

ஊராம்பல் = ஒருவகை மகோதரம், இதனால் மேல்வயிறு பொருமி, முகம் வெளுத்து உடம்பு கனகனத்து தலை பாரம், மயக்கம் முதலிய குணங்கள் உண்டாகும்

ஊரி = மேகம், கிளிஞ்சில், சங்கு, தேள்கொடுக்கு, புல்லுருவி

ஊரிகாணம், ஊரிதார் = அரிதாரம்

ஊரிதாளம் = அரிதாரம், சங்கு, மேகம்

ஊரிலழகர் = எருக்கிலை, எருக்கு

ஊரிலுகரன் = தூக்கணாங்குருவி

ஊரிலுப்பு = சோற்றுப்பு

ஊரில்கணக்கன் = முருங்கை

ஊரு = அட்டை, தொடை

ஊருகால் = சங்கு, நத்தை

ஊருகிலானி = தொடையின் பலவீனம்

ஊருக்கிரகம் = தொடைவாதம்

ஊருசுத்தி = கழுதை

ஊருடமுதலியார், ஊருடம், ஊருடன்முதலி, ஊருடன் முதலியார், ஊருடன் மூலி, ஊருடை, ஊருடைமுதலி = முருங்கை

ஊருத்தம்பம் = தொடை சுவர்ணையற்றுத் தம்பித்துப் போதல்

ஊருத்தம் பவாதம் = ஒருவகைத் தொடை வாதம் இதற்கு மகாவாதம் என்று பெயர்

ஊருத்தம்பை = வாழை

ஊரபருவனம் = தொடையின் மூட்டு

ஊருபலகம் = தொடையெலும்பு, இடுப்பெலும்பு

ஊருப்பு = சோற்றுப்பு

ஊருப்புக் குற்றம் = சோற்றுக்கு இயல்பிலேயே அமைந்த 4 வகை குற்றங்கள் உடம்பில் கசிவுண்டாதல், வியர்வை கக்கல், அமுரியிலிறங்கல், நரையுண்டாக்கல்

ஊருவஸ்தம் = தொடையெலும்பு

ஊரு வாதம் = சீதளத்தினால் உண்டாகி தொடை நரம்புகளைத் தாக்கி குத்தல், குடைச்சல், வலி முதலியவைகளை உண்டாக்கும் ஒரு தொடை வாதம்

ஊருவாரப்பொன், ஊருவார், ஊருவார்பயன் = வெள்ளரிக்காய்

ஊரேறு = ஊர்ப்பன்றி

ஊரை = பேயீந்து, காமமரம்

ஊர் = ஊமத்தம், சாலங்கி பாடாணம்

ஊர்க்கங்கை = குளம், ஆற்று நீர்

ஊர்க்கல் = சுக்கான்கல்

ஊர்க்கள்ளி = கள்ளிகளுள் ஒன்று, கொம்புக்கள்ளி, இபேசு நாத மூலி

ஊர்க்கற்செம்மை = புடமிட்ட நிலைமை

ஊர்க்காரம் = உவர்க்காரம்

ஊர்க்குருவி = அடைக்கலங் குருவி, சிட்டுக்குருவி

ஊர்க்கூரம் = பாகற்காய்

ஊர்க்கொள்ளை = ஊழிநோய்

ஊர்சுத்தி = கழுதை

ஊர்சுத்திப்பால் = கழுதைப்பால்

ஊர்சுத்தியமுரி = கழுதை மூத்திரம்

ஊர்சுற்றி = கழுதை

ஊர்சூல் = சோலைவனம்

ஊர்ச்சங்கிழங்கு = கார்த்திகைக் கிழங்கு

ஊர்ச்சசம் = பலம்

ஊர்ச்சம் = கார்த்திகை மாதம், மூச்சு

ஊர்ச்சுற்று = நகச்சுற்று

ஊர்ணநாபி = ஒருவகைச் சிலந்திப்பூச்சி

ஊர்ணம் = ஆட்டுமயிர், புருவநடுச்சுழி

ஊர்ணாயு = ஆடு, சிலந்திப்பூச்சி

ஊர்தல் = தினவெடுத்தல், உடலில் படருதல், கழறுதல், வடிதல்

ஊர்தி = எருது, குதிரை, யானை

ஊர்திறம் = ஒருவகை இழிந்த செம்புக்கல்

ஊர்த்த சுவாசம் = மூச்சுமேல்நோக்குவதால் தலை குனியவொட்டாது முக நரம்புகள் உப்பி மேல் பார்வை மயக்கம், பேச முடியாமை எனும் குணங்களைக் காட்டும் ஒருவகை இரைப்பு நோய், மேல் மூச்சு

ஊர்த்துவ கததோடம் = அபானவாயு, பித்த கப தானங்களிற்கு மேல் நோக்கிச் சென்று பீனிசம், இருமல், முதலியவைகளோடு கூடிய இளைப்பு, தோளில் வலி,

தலைநோய், குரற்கம்மல், அரோசகம் எனும் ஆறுவகைக் குணங்களையுங் காட்டும் ஒரு வகைச் சயரோகம்

ஊர்த்துவகதம் = மேல்முக நோக்கம்

ஊர்த்துவகதீ = கீழிருந்து மேல் செல்வது

ஊர்த்து வகந்தம் = தண்ணீர்விட்டான் கிழங்கு

ஊர்த்துவ காயம் = உடலின் மேற்புறம், உடல்

ஊர்த்துவ குதம் = குடல்வாதம், குடல் சூலை முதலிய நோய்களில் மலம் கீழ்நோக்கிச் செல்லத் தடைபட்டு வாயின் வழிப்படுத்தும் குடல் நோய்கள்; தொப்புளின் கீழிருக்கும் அபான வாயு பலவித நோய்களின் காரணங்களை முன்னிட்டு மேல்நோக்கிச் செல்வதனால் வாயில் நாற்றம் முதலிய குணங்களையுண்டாக்கும் ஒருவகை நோய்

ஊர்த்துவசிதம் = பாகற்காய்

ஊர்த்துவசீலம் = நெருப்பு

ஊர்த்துவ சுவாசம் = மூச்சு மேனோக்குவதால் தலை குனியமுடியாது முக நரம்புகள் உப்பி மேல்பார்வை, மயக்கம், பேசமுடியாமை எனும் குணங்களைக் காட்டும் ஒருவகை இரைப்பு நோய்

ஊர்த்துவ தேகம் = நாபிக்கு மேற்பட்ட உடம்பின் பகுதி

ஊர்த்துவ நயனம் = சரபப்பட்சி

ஊர்த்துவபாகம் = மேல்பாகம்

ஊர்த்துவ பாதம் = மேனோக்கிய பாதத்தையுடைய எட்டுக் கால் பூச்சி

ஊர்த்துவ பாதனம் = சூடுண்டாக்கி ஆவியாக மாற்றி மேலேழும்பும்படிச் செய்தல், அதாவது பதங்கித்தல்; இரசம் மேலே எழும்பும்படிச் செய்தல், இரசப்பதங்கம்

ஊர்த்து பாதன யந்திரம் = அடிப்பாத்திரத்தில் இரசம் முதலிய பொருளையிட்டு ஆவியாக்கி மேற்பாத் திரத்திற் படியும்படிச் செய்வதற்கு உபயோகிக்கும் பாத்திரம்

ஊர்த்துவ பித்த நோய் = ஒருவகைப்பித்த நோய் இதனால் அதிக கோபம், எப்போதும் சண்டை செய்யும் குணம், இரைந்து கூவல், பேதி, கண்சிவத்தல், தூக்கமின்மை, உடம்பு பருத்தல் முதலிய குணங்களுண்டாகும்

ஊர்த்து வபித்தம், ஊர்த்துவ முகம் = மேனோக்கிய பித்தம்

ஊர்த்துவ முகரத்த பித்தம் = ஒருவகை இரத்த பித்த நோய் இதனால் உடம்பிலுள்ள இரத்தமானது மேனோக்கி செவி, கண், மூக்கு, வாய் முதலிய மேலுறுப்புகளின் வழி யாய் வெளிவரும் நாளங்களிலேற்படும் இரத்த வொழுக்கு

ஊர்த்துவ முகவாதம் = முகத்தை மேல் நோக்கிய படி இருக்கச் செய்யும் ஒருவகை வாத நோய், பகல் நித்திரை, எப்போதும் படுத்திருத்தல் அல்லது உட்கார்ந்திருத்தல், மலசலம் அடக்கல் முதலிய காரணங்களை முன்னிட்டு கீழுள்ள அபானவாயுவானது விசை கொண்டு மேல்நோக்கி சமானனென்னும் வாயுவோடு கலந்து மேல்வயிறு, மார்பு கையைப்பற்றி நிற்கும் ஒருவகை வாத நோய்

ஊர்த்துவ முக, இரத்த வொழுக்கு = நாளத்தின் வழியாக மேனோக்கிய முகமாக இரத்தம் வெளிவருதல்

ஊர்த்துவயந்திரம் = பதங்கத்திற்கு உபயோகிக்கும் கருவி

ஊர்த்து வாங்கம் = உடம்பின் மேற்பகுதியில் உள்ள உறுப்புகள்

ஊர்த்துவா மிச்சிர வாதம் = அடிவயிற்றிலிருக்கும் அபானவாயு மேனோக்கிச் செல்வதால் தலைவலி, கனத்தல், கழுத்து மரத்தல் முதலிய குணங்களையுண்டாக்கும் ஒரு வகை தலையைப்பற்றிய வாத நோய்

ஊர்நாளம் = கரடி

ஊர்புகழ், ஊர்ப்புலம் = ஆமணக்கு

ஊர்ப்பன்றி = நாட்டுப்பன்றி

ஊர்ப்புகம், ஊர்ப்புலம் = ஊர்ப்பலம்

ஊர்ப்புல் = ஒருவகைப்புல், இது கோரையைப்போல் இருக்கும் 3 முதல் 6அடி உயரம், மூன்று மூலையுள்ளது மிருதுவானது, பூக்கள் அதிகம் விதை முக்கோணமாக இருக்கும் பள்ளத்தாக்குகளிலும் குளத்தோரங்களிலு மிருக்கும்

ஊர்ப்புள் = ஊர்க்குருவி

ஊர்மபூதம் = ஆமணக்கு

ஊர்மயக்கி = ஊமத்தம்

ஊர்மருந்து = அபினி

ஊர்மி = வயிற்றின் மடிப்பு

ஊர்வரப்பன், ஊர்வரப்பான் = வெள்ளரிக்காய்

ஊர்வாசுகி = சிறியாணங்கை

ஊர்வாரிக் காய்ச்சல் = ஒரு ஊரில் ஒரே நேரத்தில் பலரை நோயுறச் செய்வது மட்டுமின்றி மிகுந்த சேதத்தையுண்டாக்கும் ஒரு வகை தொத்துக் காய்ச்சல் இது கெட்ட காற்றினால் ஏற்படுவதாகக் கருதப்படுகிறது

ஊர்வாளம் = நேர்வாளம்

ஊல் = ஒருவகைமீன்

ஊவக்காய் = ஒரு தித்திப்புக்காய் (அக்ரோட்டு)

ஊவிகை = முல்லை

ஊவுண்ணகொல்லி = நச்சுப்புல்

ஊழகம் = விடியற்காலை

ஊழ நாற்றம் = கெட்டவாசனை

ஊழலத்தி, ஊழலாற்றி = காட்டில் வளரும் ஒரு வகை மரம்; இது அழுகிய புண்களை ஆற்றும் குணம் வாய்ந்தது

ஊழலித்தல் = இளைத்தல் (சோர்வு), பதனழிதல், அருவருத்தல்

ஊழலிப்பு = பதனழிவு

ஊழலுடம்பு = பருத்துத் தளர்ந்த உடம்பு; நாற்றமான உடம்பு

ஊழல் = ஊத்தை, கெட்டுப் போனது சேறு

ஊழல் நாறி = மாதவிடாய்ப்பெண்

ஊழல் நாற்றம் = ஊழநாற்றம்

ஊழல் மூக்கு = எப்போதும் சளி வடியும் மூக்கு

ஊழிக்கனல் = சிவப்புக்கல்

ஊழிக் காய்ச்சல் = ஒரு ஊரில் ஒரே நேரத்தில் பலரை நோயுறச் செய்வது மட்டுமின்றி மிகுந்த சோகத்தையுண்டாக்கும் ஒருவகைத் தொற்றுக் காய்ச்சல், இது கெட்ட காற்றினால் ஏற்படுகிறது

ஊழிக்காரம் = இரசம்

ஊழிக்காரன் = காசம்

ஊழிக்காற்று = நச்சுக்காற்று

ஊழிக்குறுது = விழுதி

ஊழித்தீ = காட்டுத்தீ

ஊழிநோய் = பெருவாரி நோய், ஊர்வாரிக்காய்ச்சல் (கெட்ட தேவதை, கெட்ட காற்று இவற்றால் ஏற்படும்)

ஊழியக்காரன், ஊழியங்கொள்வான் = இரசம்

ஊழிலை = காய்ந்த இலை

ஊழுறுதல் = குடைதல்

ஊழை = பித்தம்

ஊழைக் கழிச்சல் = பித்தக் கோளாறு, ஈரல் நோய், உணவில் குற்றம் முதலிய காரணங்களால் ஏற்படும் பித்தக் கழிச்சல்

ஊழைக் காசம் = பித்தக்கோளாறினால் உடம்பில் கனல் மிஞ்சி ஏற்படும் காசநோய்

ஊழைக்காய்ச்சல் = பித்தசுரம்

ஊழைக்குருத்து = துளசி

ஊழைக் குன்மம் = ஈரலுக்கேற்படும் அழற்சியினால் பித்த கேடுண்டாகி சூலை நோய், பசியின்மை, வாயு பொருமல், வெளுத்த முகம், பலமின்மையை உண்டாக்கும் பித்தகுன்மம்

ஊழைச்சுரம் = ஊழைக் காய்ச்சல்

ஊழைச்சூலை = பித்த வாந்தியோடு கூடிய வயிற்றுவலி

ஊழைவாந்தி = பித்தகுன்மம், சூலைநோய் முதலிய நோய்களிற்காணும் பித்தத்தோடு கூடிய வாந்தி

ஊழ் = வெயில், பதனழிவு

ஊழ்தல் = முதிர்தல்

ஊழ்த்தசை = புலால், தீச்சுட்ட புண், இரத்தக்குறைவு முதலியவற்றால் உடம்பில் ஏற்படும் அழுகிய தசைப்பாகம்

ஊழ்த்த நோய் = ஆட்டின் ஈரலுக்கேற் படும் ஒரு நோய்

ஊழ்த்தல் = ஊன், பதனழிவு, புலால, பருவம், முடை நாற்றம், வாடுதல், மடித்தல்

ஊழ்த்தவக்கரம் = குழந்தைகளுக்கு வாய், உதடு, கண் இமை, முதலிய இடங்களிலுள்ள உட்சவ்வின் அழற்சியினால்

கொப்புளங்கள் எழும்பி நாற்றங்கண்டு துன்புறுத்தும் ஒரு விரண நோய்

ஊளல் = ஒருவகை மீன்

ஊளன் = ஊளையிடும் நரி, நாய் முதலியவை

ஊளா = கருப்பும் நீலமும் கலந்த நெடுவாய் மீன் என்னும் கடல் மீன்

ஊளான் = சாம்பல் நிறமாயும் வெள்ளியைப் போன்ற பளபளப்பாயுமுள்ள ஒருவகைக் கடல்மீன்

ஊளி = கருப்பும் நீலமும் கலந்த நிறமுள்ள நெடு வாய் மீன் என்னும் கடல்மீன், பசி, சத்தம்

ஊளை = ஊத்தை, சளி

ஊளைக்கள்வன் = நண்டு

ஊறப் போடல் = மூலிகையினின்று சத்தெடுக்க நீரில் அமிழ்த்திவைத்தல்

ஊறல் = களிம்பு, உடம்பின் தினவு, பஞ்சலோகக்கலப்பு, நீருற்று, சாறு, குடிநீர், ஊரற்குடிநீர், உலோகக் கலப்பு, பெண்ணுறுப்பில் ஏற்படும் நமைச்சல்

ஊறல் கஷாயம் குடிநீர் = மூலிகைகளை இடித்துக் குளிர்ந்த நீர் அல்லது வெந்நீரிலூறவைத்து வடிக்கும் குடிநீர்

ஊறல் தெறித்தல் = களிம்பற்றுப்போதல், உடம்பின் தினவுபோதல்

ஊற வைத்தல் = மூலிகைகளை வெந்நீர், சாராயம் இவற்றில் மென்மையாகும்படி ஊறவைத்தல்

ஊறற்பதம் = பச்சைப்பதம்

ஊறற்புண் = தினவெடுக்கும் புண், ஆறிவரும் புண், பச்சைப்புண்

ஊறிகணம் = அரிதாரம்

ஊறிலளக்கர் = எருக்கிலை

ஊறு = உடம்பு, வல்லூறு

ஊறு காசம் = கண்ணில் அடிபட்டது போலக் கடுத்து, நொந்து சிவந்து, எரிச்சல் ஏற்பட்டு இரவில் தூங்கும் பொழுது கண் முழுவதிலும் சதை விரிந்து மூடிக்கொள்வ துடன் கண் இடுங்கி, இமைகனத்து இருண்டு பலவிதமாய்த் தோன்றும் ஒரு கண்நோய்

ஊறுகோள் = காயம்

ஊறுநீர் = புண்ணிலிருந்து கசியும் நீர், ஊற்றுநீர், உமிழ்நீர், பெண்ணுறுப்பில் ஊறும் நீர்

ஊறுபுண் = ஆறிவரும் புண்

ஊறெண்ணெய் = மண்டை குளிர்ச்சி துடை அடைவதற்கும் கபால வறட்சியைப் போக்கு வதற்காகவும் உச்சியில் காலையில் தடவு மெண்ணெய்

ஊறை = சவ்வரிசி, இது போர்னியூ தேசத்தினின்று இறக்குமதியாகும் பொருள்

ஊறோடு, ஊற்றம் = அமுக்கிரா

ஊற்றறிவு = பரிசவுணர்ச்சி (தொடு உணர்வு)

ஊற்றாம் பெட்டி = முத்திரம் ஊறும்பை

ஊற்றின வெண்ணெய் = வேகவைத்து வடித்த கொட்டை முத்து எண்ணெய் இது செக்கில் ஆட்டி வடிக்கும் எண்ணெயைவிட மேன்மையானது

ஊற்றுப்பூ = தேங்காய்ப் பிண்ணாக்கு

ஊற்றெண்ணெய் = ஊற்றின வெண்ணெய்

ஊனகச்சாந்தி = கானல்மா

ஊனகத்தண்டு = கதண்டு, கருவண்டு

ஊனக்க தண்டு = கருவண்டு, கதண்டு, ஒருவகை உபரசச் சரக்கு

ஊனஞ்சவ்வு = ஊன்வழியும் சவ்வு

ஊனமுரி = மூத்திரத்தில் ஊன் கலந்து போகும் ஒரு நோய்

ஊனம் = ஊனீர், கீரி, தசைநீர் கொழுப்பு

ஊனன் = ஊனாங்கொடி, நரி

ஊனாம்பதி = கல்விருசு (ஒரு செடி)

ஊனாம்பல் = ஊதாவல்லி

ஊனான் = உன்னாயங்கொடி, பெருமுசுட்டை

ஊனான் சத்தி = உடும்பு

ஊனி = அமுக்கிராக்கிழங்கு

ஊனினம், ஊனின்பூடு = சிறுபீளை

ஊனின்வுருக்கினம் = தேன்

ஊனீர் = தசையினின்று வடியும் நீர், இரத்தத்தின் மேற்படியும் நீர்

ஊனுப்பு = மூன்று மாதத்திய பிண்டத்தினின்று எடுக்கும் சத்து; பூனீருப்பு

ஊனுப்பு செயநீர் = பூனீருப்பு, செயநீர், மூளைச்சத்தினின்று தயாரிக்கும் செயநீர்

ஊனுருக்கி = இது சாதாரணமாய் உடலிலுள்ளதசை, நிணம், சுக்கிலம், கொழுப்பு, எலும்பு முதலிய சத்துக்களைப் போக்கி அதனால் அவைகளைச் சார்ந்த உறுப்புகளையும் மெலியச் செய்யும் நோய்களுக்கு ஏற்பட்ட ஒரு பொது பெயர் நுரையீரல் தாக்கப்படுவது; சயரோகம் குடல்களைத் தாக்குவது; குடல் உருக்கி குண்டிக் காயைத் தாக்குவது; குண்டிக்காய் ரோகம் எலும்பைத் தாக்குவது; எலும்புருக்கி நிணநீர்க் கோளம் தாக்கப்படுவது; ஊனுருக்கு

ஊனேரு = அமுக்கிரா

ஊனேறி = கருப்பம்

ஊனொட்டி = உடம்பின் சதையோடு கலக்கும் உடும்பிறைச்சி; உடும்பு

ஊன் = தசை, சுக்கிலம், கொழுப்பு, உடல், மூளைச்சத்து

ஊன்செய் கோட்டம் = மாமிசத்தினாலான உடம்பு

ஊன்பூச்சுத் தைலம் = வேண்டாத சதை, கட்டி, இரணம் முதலியவைகளை அறுவைச்சிகிச்சையால் நீக்காது தானாகவே கரைவதற்கும் இரணங்களை ஆற்றுவதற்கும் உபயோகிக்கும் ஒரு வகைத் தைலம் (தேரையர் நூல்)

ஊன்மலவாசம் = மீனம்பர்

ஊன் மூத்திரம் = மூத்திரத்தில் ஊன் கலந்து போகும் மூத்திர நோய்

ஊன்றக் கட்டுதல் = புண், காயம் முதலியவற்றை உறுதியாய்க் கட்டுதல்

ஊன்றி = ஒருவகைப்பாம்பு

ஊன்றிக்காய் = தான்றிக்காய்

ஊன்றுகால் செடி = கழுதைத் தும்பை

ஊன்றுதாள் = காளி

எ

எஃகாதல் = உருக்காகமாறல்

எஃகு = உருக்கு

எஃகு சிந்தூரம் = உருக்கினின்று புடமிட்டுத், தயாரித்த ஒரு வகைச் எஃகு சிகப்பு மருந்துத் தூள் செந்தூரம் இது குன்மம், இரத்த சுத்தி முதலிய நோய்களுக்கு கொடுக்க உதவும்

எஃகுபடுதல் = இளகுதல்

எஃகு பற்பம் = உடல்வலிவடைய வேண்டி உருக்கைக் கொண்டு செய்யும் பற்பம்

எக = திப்பிலி

எகச்சம் = ஆலம்

எகடம் = தென்னை

எகபகம் = ஆல்

எகம் = திப்பிலி

எகரவல்லி = பாகல்

எகவாசம் = ஆல்

எகறாவல்லி, எகாரவல்லி = பாகல்

எகி = முருங்கை

எகிடவாகம், எகிடாவகம் = அதிமதுரம்

எகிர்க் கொழுப்பு = பல்லீற்றின் வீக்கம்

எகினத்திலை = புளியிலை

எகினத்தும்பை = கழுதைத் தும்பை

எகினமதீதம் = கழுதைக்குளம் படி

எகினம் = அழிஞ்சில், நீர்நாய், கவரிமான், புலி, அன்னம், கழுதை, செம்மரம், கடலிலும் பெரிய ஆறுகளிலும் காணப்படும் நீர், புளியமரம், நாய், யாழி

எகினன் = நாய், நீர்நாய்

எகினி = மான், புள்ளிமான்

எகினை = புளியமரம்

எகின் = நாய், செம்மரம், நீர்நாய், அழிஞ்சில், ஆண்மரம், எஃகு, மாமரம், புளி, சேங்கொட்டை, அன்னம், புளியமரம், கவரிமான்

எகு = எஃகு

எகுண்டு = குண்டுமணி

எகுத்து = வாயு

எகுவை = கோரை, இரதம்

எகுறவாங்கு = வாட்டுவாலன்

எகுன்று = குன்றிச்செடி

எக்கச்செக்கம் = வயிறு, குடல் முதலியவைகளின் ஒவ்வாமை

எக்கண்ட வலி = உடம்பு முழுமையும் ஏற்படும் வலி

எக்கண்ட வீக்கம் = உடம்பு முழுமையும் பரவிய வீக்கம்

எக்கத்தடந்தை = கண்டங்கத்தரி

எக்கர் = மேலுக்கேறச் செய்தல், நுண்மணல்

எக்கலாதேவி = செவ்வாமணக்கு

எக்கல் = வயிற்றை மேலுக்கிழுத்தல்; மேலுக்கேறச் செய்தல்; வற்றல்

எக்காகம் = ஊமத்தை

எக்கி = பீச்சாங்குழல், நீர்பீச்சும் கருவி

எக்கிய குமாரி = செம்மரம்; இது ஓமத்திற்கு உதவுவதால் இதற்கு இப்பெயர்

எக்கியசத்தான் = தர்ப்பைப்புல்

எக்கியத்தாடு = வெள்ளாடு

எக்கு = எஃகு

எக்குண்டு = எகுண்டு

எக்குதல் = வயிற்றை மேலுக்கிழுத்தல், உள்ளுக்கிழுத்தல்

எக்குத்தாளி = பச்சிலை, முள்ளங்கி

எங்கணேசனி = கவிழ்தும்பை

எங்கனம் = ஓமம், அசமதாகம்

எங்கு மந்தி = பொன்னூமத்தை

எங்குமிருக்கும் புழு = ஈ

எசம் = நரம்பு

எசர் = உலை நீர்

எசி = கிளி

எச்சம் = எச்சில், பறவை மலம், குழந்தை, ஒருவாசனைப் பண்டம், உடற்குறைவு, வாயெச்சில், நரம்பு

எச்சரித்தல் = விழிக்கச் செய்தல்

எச்சல் = வாயெச்சல், பறவை மலம், உமிழ்நீர், சளி, மலசலம்

எச்சவாய் = ஆசனவாய், குதம்

எச்சற் கோளம் = காதருகில் உட்புறத்திலிருக்கும் ஒரு பெரிய உமிழ்நீர்க்கோளம்

எச்சிக் கணை = அமாவாசை, பௌர்ணமி திதிகளில் குழந்தைகளின் மேல்வாய் அண்ணத்தின் பின், சேவல் கொண்டை (அல்) பூப்போல் சதை வளர்ந்து சிவந்து காணும் ஒருவகை நோய்

எச்சில் = எச்சல்

எச்சில் தோஷம் = குழந்தைகளுக்குச் சில சமயம் காணும் ஒரு வகைத் தோடம் இதனால் தலையெடுக்கக் கூடாத மயக்கம், முலையுண்ணாமை, அற்பபேதி, இமையொட்டல், சுரம், சீறி அழுதல் முதலிய குணங்கள் காணும்

எச்சிற்படுத்தல் = புண்ணாக்குதல்

எச்சிற்றழுதணை = உடம்பில் தினவெடுத்து வளையத்தைப் போல் பல இடங்களிலும் தழும்பு தழும்பாகக் காணும் ஒரு விதத் தொற்று நோய்

எச்சிற்றடிப்பு = உடம்பில் பலவிடங்களில் தடிப்புகளை எழுப்பும் ஒரு வகைப் படை

எச்சிற்றழும்பு = உடம்பில் பல இடங்களில் பிறருடைய வாய் நீரொழுக்கலினாலும் அல்லது பல்லி முதலிய பிராணிகளின் மலசல தோடத்தினாலும் உண்டாகும் தோல் நோய்; தினவோடு கூடிய படர் மேகத் தடிப்பு

எச்சிற்றுப்பு = எச்சில் நீரூறும் நோய்

எச்சிற்றேமல் = உடம்பில் பல இடங்களில் மஞ்சள் நிறமான படைகளை உண்டாக்கும் தோல் நோய்

எச்சினி = ஏழாமாதம்

எஞ்சல் = குறைதல், சுருங்கல், மஞ்சுதல்

எஞ்சியவுப்பு = அடியில் நிற்குமுப்பு

எடகம், எடதம் = தென்னைமரம்

எடு = வெளிக்குக் கொண்டுவா, வாந்தியெடு

எடுத்தல் = வாயிலெடுத்தல், சுளுக்கெடுத்தல், குணப்படுத்தல்

எடுத்துக் கட்டல் = நழுகிய (அல்) முறிந்த எலும்பைச் சீர்திருத்திக் கட்டல்

எடுத்துக் கூட்டுதல் = பல மருந்துகளை அளவின்படி எடுத்து ஒன்றாகக் கலத்தல், இரண்டு எலும்புகளை ஒன்றாய்ப் பொருத்துதல்

எடுத்துப் போடுதல் = மேலுக்கு வாங்கி இறங்குதல் (குழந்தைகளுக்கு விலாவெடுத்துப் போடல்)

எடுத்து விடல் = நோயை வேரோடு களைதல்

எடுபடல், எடுபடுதல் = அழிந்து போதல், நீக்கப்படுதல்

எடுப்பல் = தூங்குபவரை எழுப்புதல்

எடுப்பார் பிடிப்பார் = நோயாளிக்குத் துணையாளர்

எடை = துயிலெழுப்புதல், ஓர் அளவுவிறகின் நிறையளவு

எடை பாகம் = நிறுத்தலின் முறை, இராமதேவர் செய்த ஒரு வாத நூல்

எட்கடை = எள்ளளவு

எட்கம் = பனை, தென்னை, முதலியன

எட்கிடை = எள்ளளவு

எட்கை = பனை, தென்னை, முதலியன

எட்சம் = ஈருள்ளி

எட்சி தோஷம் = குழந்தைகளுக்கு இரத்தத்தில் கொதிப்பு கண்டு கண்ணில் பீளை கட்டி, உடல்வற்றி, கனல் மீறி மயங்கிக் கிடக்கச் செய்யும் ஒரு நோய்

எட்டடிப் பறவை = சரபம், சிம்புள்

எட்டடி விரியன் = கடித்ததும் எட்டு அடி போவதற்கு முன் ஆளைக் கொன்று விடும் விரியன் பாம்பு

எட்டாங் காய்ச்சல் = எட்டுமுறை கரைத்துத் தெளிவிறுத்துச் சுத்தி செய்த வெடியுப்பு; வாரத்திற் கொருமுறை வரும் சுரம்

எட்டாங் குட்டம் = எட்டாம் (நிலை) படியைக் கடந்த குட்ட நோய்

எட்டாமாறல் = எட்டாங் காய்ச்சல்

எட்டாமுட்டி = பேராமுட்டி

எட்டி = விஷமுட்டி, காஞ்சிரை மரம்

எட்டிகம் = சீந்தில், சிலந்தி, ஓர் குருவி

எட்டி காஞ்சிரம் = நீரடிமுத்து, விஷமுட்டி

எட்டிக்கசப்பு = மிகக் கசப்பு

எட்டிக்கும் = சிலந்தி

எட்டிக்கொடி = சீந்திற்கொடி

எட்டிக் கொட்டைச் சத்து = எட்டிக் கொட்டையின் சாரம்

எட்டிக் கொட்டைத் தைலம் = எட்டிப் பழத்தின் கொட்டையினின்று வடிக்கும் எண்ணெய்

எட்டிச்சத்து = எட்டிக் கொட்டைச்சத்து

எட்டிச் சிமிழ் = பண்டைக்காலத்தில் சூரணங்கள் காரம் போகாதபடி அடைத்து வைக்க எட்டி மரத்தினால் செய்த சிமிழ்

எட்டிச்சுறா = குரங்கன் சுறா

எட்டித் திரவசத்து = எட்டிக் கொட்டையினின்று தயாரிக்கும் சத்து நீர்

எட்டித் தைலம் = எட்டிக் கொட்டை எடுத்து வடிக்கும் எண்ணெய்

எட்டிப் பாவனத் திரவம் = எட்டி கொட்டையை வெல்லத் தண்ணீரில் போட்டு புளிக்க வைத்தெடுத்த ஒரு வகை அரிட்டம் இது நரம்பிற்கு வலுவைத் தரும்

எட்டி உப்பு = எட்டிக் கொட்டையினின்று எடுக்கும் உப்பு: சிறு மணலைப் போலும் பழுப்பு நிறமாயும் கசப்பாயுமிருக்கும் கொட்டையைப் போல் விடத்தன்மை இதற்குமுண்டு பக்கவாதம், துத்தி ரோகம், சுரம், அந்திசுரம் முதலியவைகளுக்கு உபயோகப்படும் ஈயத்தின்விடம், பாம்புக் கடி, குளோரபார்ம், சாராயம், அபினி முதலியவைகளால் உண்டாகும் விடத்தை முறிக்கும்

எட்டியுப்பு செயநீர் = எட்டியுப்பைத் தனியாகவாவது மற்ற சரக்குகளுடன் சேர்த்தாவது பனியில் வைத்திறக்கிய காரநீர்

எட்டியூறற் கஷாயம் = எட்டிக் கொட்டையை இடித்துக் கொதிக்கும் தண்ணீரிலிட்டு ஊற வைத்து இறுத்த கஷாயம், இதை பலவீனர்களுக்கும் பாண்டு நோயுள்ளவர்க்கும் கொடுப்பர்

எட்டி யெண்ணெய் = எட்டிக் கொட்டையைப் புதிதாக எடுத்து நறுக்கி அதனின்று வடிக்கும் எண்ணெய் இது வாத நோய்க்குப் பயன்படும்

எட்டிலொன்றாய்க் காய்ச்சல் = மூலிகைகளைத் தண்ணீரிலிட்டு எட்டிலொரு பங்காகச் சுண்டும் படிக்காய்ச்சி எடுத்தல்

எட்டி விரியன் = ஒருவகை விரியன் பாம்பு

எட்டி வேர்ப்பட்டை = எட்டி மரத்தின் பச்சை, வேர்ப்பட்டை இதன் இரசத்தைப் பிழிந்து அதில் சில துளிகள் வாந்தி பேதிக்கும் சீத பேதிக்கும் கொடுப்பர் எலுமிச்சம் பழரசம் விட்டரைத்து மாத்திரை செய்துதர வாந்தி பேதி குணமாகும்

எட்டீகம் = சீந்தில்

எட்டீ = விஷமுட்டி, எட்டி

எட்டுடையாதி = காட்டெருமை

எட்டுபின் = அபின்

எட்டுவயது = சவரன், பொன்

எட்டு மாற்றுப் பொன் = கலப்புப்பொன

எட்டேகாலட்சணம் = கழுதை

எட்டொன்றாக்கல், எட்டொன்றாய்க் காய்ச்சல் = எட்டிலொன்றாய்க் காய்ச்சல்

எட்பாகு = எள்ளுத்துவையல்

எட்பிரமாணம் = எள்ளின் அளவு

எணம் = மான்

எண் = எள்

எண்கனப்பூடு = வெங்காயப் பூடு

எண்காஞ்சான் = புனுகு

எண்காற்பறவை, எண்காற்புள் = சரபம், சிம்புள்

எண்கு = கரடி

எண்கேதனம் = நிலம்புரண்டி

எண்சானுடம்பு, எண்சாண்வல்லம் = மானிட உடல்

எண்ணவி = நல்லெண்ணெய்

எண்ணான் = உளுந்து

எண்ணெய் ஊற்றுமரம் = எண்ணெய் சத்து எடுக்கும் மரம்

எண்ணெ யெரித்தல் = கொதிக்க வைத்துத் தைலம் இறக்கல்; சூடுண்டாக்கி எண்ணெய்ச் சத்து வடித்தல்

எண்ணெய் = எள்ளினின்று எடுப்பது அனைத்துப் பூண்டு (அல்) மரத்தினுடைய பூ, பட்டை, விதை, பருப்பு முதலியவைகளினின்று வடிக்கும் நெய்ச்சத்து, மூலிகை களிலிருந்தாவது, மூலிகைகளின் எண்ணெயிலிட்டாவது வடிக்குந்தைலம், இது உள்ளுக்குக் கொடுக்கவும் மேற்பூச்சுக்கும் உதவும் எண்ணெய்மரம், மண்ணெண்ணெய், மீனெண்ணெய்

எண்ணெய்க்கசடு, எண்ணெய்க்கடுகு = எண்ணெயின் அடிவண்டல்

எண்ணெய்க் கஷாயம் = தைலம்; தைலம் வடிக்கும் போது சேர்க்குங்கஷாயம்

எண்ணெய்க் கரை = கருவேப்பிலை, கருவேம்பு

எண்ணெய்க் கரை மரம் = கருவேம்பு

எண்ணெய்க்கவாள் = பேராமணக்கு

எண்ணெய்க் காப்பிடல் = எள் நெய்யால் அபிடேகம் செய்தல்; எண்ணெய் வழியும்படித் தேய்த்தல் (அல்), ஊற்றல்

எண்ணெய்க் குத்தல் = வாத நோய்களுக்கு எண்ணெய் (அல்) தைலத்தைச் சிறுக சிறுக விட்டுத் தேய்த்தோ (அல்) காலினால் மிதித்துத் துவைத்தோ செய்யும் சிகிச்சை

எண்ணெய்க் கோவை = கருங்கோவை

எண்ணெய்ச் சிக்கு = எண்ணெய்ப் பண்டம் செரியாமல் வயிற்றினுள் தங்குவதால் ஏற்படும் செரியாமை நோய்

எண்ணெய்ச் சுண்டு = மருந்தெண்ணெய் (அல்) தைலம் காய்ச்சும் போது அடியிற் பற்றியது

எண்ணெய்ச் சொக்கி = கோனியப்பூடு

எண்ணெய்த் தண்டு = எண்ணெய் ஊற்றி வைக்கும் மூங்கிற் குழாய்

எண்ணெய்த் திரி = ஆசனவாயிற் புகட்டுவதற்காக ஆமணக் கெண்ணெயிற் பிரட்டி யெடுத்த சீலைத் திரி

எண்ணெய்ப் பற்று = மருந்துச் சரக்குகளை எண்ணெய் (அல்) தைலங்களிலிட்டுக் குழப்பி புண், புரை, கட்டி, முதலானவைகளுக்குப் போடும் பற்று; எண்ணெய் பண்டம் செரியாமல் வயிற்றினுட் தங்குவதா லேற்படும் செரியாமை நோய்

எண்ணெய்ப்பனையன் = எண்ணெய்ப் பளபளப்புள்ள பனைவிரியன் பாம்பு

எண்ணெய்ப் பிசுக்கு = எண்ணெய்ப்பண்டம் செரியாமல் வயிற்றினுட் தங்குவதால் ஏற்படும் செரியாமை நோய்

எண்ணெய் பிணக்கு = எண்ணெய் தேய்த்து முழுகுவதனால் சில சமயம் ஏற்படுங் காய்ச்சல்

எண்ணெய்ப் பூச்சு, எண்ணெய்ப் பொருத்துதல் = உடம்பில் நோய், (அல்) புண், வீக்கம் முதலியவைகள் உள்ள

இடங்களில் தைலம் (அல்) மருந்தெண்ணெயைப் பூசுதல்

எண்ணெய்ப் போக்கி = சீயக்காய், மல்லிகை, உவர்மண், இலுப்பைப் பிண்ணாக்கு

எண்ணெய் மரம் = மலையாளத்தில் வளரும் ஒரு எண்ணெய் மரம்

எண்ணெய் மறித்தல் = பழுக்கக் காய்ச்சிய இரும்புக் கரண்டியிலிட்டாவது, இரும்பைப் பழுக்கக் காய்ச்சி எண்ணெயிற் தோய்த்தாவது, எண்ணெயில் நீர்க் கலப்பு முதலிய தோடங்களை நீக்கல்

எண்ணெய் முறியிலை = சாதாப்பிலை

எண்ணெய் மெழுகு = உறைந்த இலுப்பெண்ணெய் (அல்) தேங்காய் எண்ணெய்

எண்ணெய் மேகம் = மேகமூத்திரம், எண்ணெய் கலந்தது போலும் அல்லது எண்ணெயைப் போலும் அடிக்கடி நீரிறங்கும் ஒரு வித நீரிழிவு

எண்ணெய் விரியன் = ஒருவகை விரியன் பாம்பு

எண்ணெய் வெங்காரம் = ஒருவகை வெங்காரம்

எண்பது = அயம், இரும்பு

எண்பலி = கடுகு

எண் பொருள் = தமிழ்வைத்தியத்தின் படி மரம் (அல்) செடிகளின் எட்டுவிதப் பிரிவுகள், அவை வேர்பட்டை, கிழங்கு, பிசின், இலை, பூ, கனி, வித்து

எண்வகைத் தேர்வு = நோயாளிகளை எட்டு விதமாகச் செய்யும் ஆராய்ச்சி

எண்வகைத் தோடம் = இரசத்திற்கு இயல்பிலே உண்டான எட்டுவகைக் குற்றங்கள்

எண்வகைப் பதார்த்தம் = ஆயுள்வேதப்படி மூலிகைச் செடிகளின் எட்டுவகை பிரிவுகள் வேர், பட்டை, கட்டை, இரசம், (அல) சாறு, இலை, பூ, காய் (அல்) பழம், விதை

எண்வகை ஆராய்ச்சி = எண்வகைத் தேர்வு

எண்வித மூலம் = எட்டுவித நோய்கள்

எதகம் = திப்பிலி

எதண்டம் = சிலந்திநாயகம்

எதம் = திப்பிலி

எதளா, எதளை, எதனா, எதனை, எதாளரி, எதாளா, எதிணை = புளியமரம்

எதிரது கொடுத்தல் = விடத்திற்கு விடம் கொடுத்து மாற்றல்; சத்துருச் சரக்கால் கொல்லுதல்

எதிரது கொல்லல் = விடத்தைக் கொள்ளல் மருந்துட் கொள்ளல்

எதிரழற்சி = ஒரு பக்க முண்டாயிருக்கும் அழற்சியை நீக்க வேண்டி மற்றொரு பக்கம் உண்டாக்கும் அழற்சி; எரிச்சலை உண்டாக்கும் மருந்து

எதிர்ப்படை முறித்தான் = விச்சுளி

எதிருக் களித்தல் = அதிகமாகச் சாப்பிடுவதாலும் பித்தாதிக்கத்தாலும் குன்மத்தினாலும் உண்ட உணவு மேல் நோக்கி வருதல்

எதிருக் கெடுத்தல் = வாந்தியெடுத்தல்; ஏப்பமிடுதல், உண்டது மேலுக்கு வருதல்

எதிருறை = நோயால் ஏற்பட்ட குணத்திற்கு மாறுதலான குணத்தையுண்டாக்கும் படி கொடுக்கும் மருந்து

எதிரெடுத்தல் = எதிருக்கெடுத்தல்

எதிரேறு = வல்லமை, பலம்

எதிரேற்றல் = எதிர்த்தல், தடுத்தல்

எதிர்க்கொண்டடெடுத்தல் = எதிருக்கெடுத்தல்

எதிர்க்களித்தல், எதிர்க்காற்று = எதிருக்களித்தல் நேராக அடிக்கும் காற்று, இது நோயாளிக்கு ஆகாது

எதிர்க் கெடுத்தல் = எதிருக்கெடுத்தல்

எதிர்த்தவன் = சோர பாடாணம்

எதிர்நிலை = கண்ணாடி

எதிர்பாஞ்சான், எதிர்பாய்ஞ்சான், எதிர்மீன் = தண்ணீர் ஓட்டத்திற்கு எதிராகப் பாய்ந்தோடும் மீன்

எதிளை, எதினை = புளியமரம்

எதுக்களித்தல் = எதிருக்களித்தல்

எத்துளாச் சுண்ணம் = ஈரற் சுண்ணம்

எந்தாவாசம் = கத்தூரி

எந்திரத் தைலம் = எள், வேர்க்கடலை முதலியவைகளினின்று இயந்திரங்கள் வாயிலாக எடுக்கும் தைலம், மூலிகைச்சரக்கு, மூலிகைச்சத்து முதலியவைகளினின்று வடிக்கும் மருந்தெண்ணெய்கள்; மந்திரயந் திரத்தகடுகளின் மேல் பூசும் ஐங்கோலத்தைலம் முதலிய கருத்தைலம்

எமக்கடலிங்கட்டி = காசுக்கட்டி

எமஞ்சம் = ஓமம்

எமனுட்குணத்தி = சத்திச்சாரம்

எமதுத்தம் = அத்தி

எமதூதன் = நாகப்பாம்பின் மேல் வரிசை, நச்சுப் பற்கள் இரண்டினுள் ஒன்று

எமத்துரம் = மலையறுகு

எமநாகம், எமநாசம் = அசமதாகம், ஊமத்தை

எமநாதம் = அசமதாகம்

எமநாபி, எமநாமம் = ஊமத்தை

எமபதி = குங்கிலியம்

எமபதியம், எமபத்தி, எமபத்திரம் = மலையத்தி

எமபுகம் = நிலக்கடம்பு

எமம் = பொன்

எமலி = மாந்திரீக மை

எமனாகம் = ஊமத்தை, ஓமம், மலையத்தி

எமனாசம் = ஓமம், ஊமத்தை

எமனாதங்கி = கொத்தான்

எமனாதம், எமனாதி மூலி = ஊமத்தை

எமனார்வள்ளி = இலவமரம்

எமன் = நாகப்பாம்பின் மேல்வரிசை, நச்சுப் பற்கள் இரண்டினுள் ஒன்று

எமன்கற்பம் = ஆடுதின்னாப் பாளை

எமினாகம் = ஓமம்

எம்பதியம் = மலையத்தி

எம்பாரி = கெந்தியுறு பாடாணம்

எம்புகம் = நிலக்கடம்பு

எம்மாலி, எம்மாலிகம் = வெள்ளுமத்தை

எயம் = ஏலம்

எயி = முள்பன்றி

எயிறதைப்பு = பல்லின் அடி வீக்கம்

எயிறழற்சி = பல் அடியிற் காணும் அழற்சி

எயிறு = பல், பல்லின் விளிம்பு, யானைக் கொம்பு

எயிறுகட்டி = பல்லீறண்டை உண்டாகுங்கட்டி

எயிறுகரை = பல்லீறு

எயிறுகாரை = பற்காரை

எயிறுதின்றல் = பற்கடித்தல்

எயிற்றுக்கண்ணன் = துரிசு

எயிற்றுக் கழலை = பல்லின் சதைப்பாகத்தில் தாடையருகில் ஏற்படும் கழலை

எய் = முள்பன்றி

எய்து = கால்

எய்துமாலன் = திப்பிலி

எய்துலாலனுக்கு = வாட்டு வால்

எய்த்தல் = இளைத்தல்

எய்ப்பன்றி = முள்பன்றி

எய்ப்பு = எய்த்தல்

எய்ப்போத்து = ஆண்முள்ளம் பன்றி

எய்மா = காட்டுமா

எரசம் = சத்திச்சாரம்

எரணம், எரண்டம், எரண்டை = ஆமணக்கு

எரந்தை = பிடரிநரம்பு

எரம் = சத்திச்சாரம்

எரல் = சமுத்திரசுண்டி (அல்) கடற்சிப்பி

எராவல்லி = பாகல்

எரி = கந்தம், மிளகாய், கொடி வேலி, எரிச்சல் காணும் மேகவேட்டை, நெருப்பு, செரிக்கச் செய்தல், மருந்தெரித்தல்; நெல்லிக்காய் கந்தகம் இது எல்லா வகைகளையும் விடச்சுத்தமானது

எரிகடுப்பு = எரிச்சலையுண்டாக்கும் ஒரு வகை வலி

எரிகட்பலம் = தான்றி

எரிகணம், எரிகணை = குழந்தைகளுக்கு உடல் முழுவதும் எரிச்சல் ஏற்பட்டு வாய் வழியாக மூச்சு விட்டு தூக்கம் பிடிக்காமல் வருத்தும் கணநோய்

எரிகண் = நச்சுக்கண், எரிச்சலை உண்டாக்கும் ஒரு வகைக் கண்ணோய்

எரிகரும்பு = விறகு, கரும்பு

எரிகல் = கந்தகம்; எரியுந்தன்மையுள்ள ஒரு வகைக்கல்; இது கருப்பாகவும் நாற்ற முடையதாயும் நெருப்பிற் கொளுத்தபற்றுந் தன்மை வாய்ந்ததாயும் தண்ணீர் தெளிக்கச் சுவாலை விட்டெரியவும் எண்ணெய் தெளிக்க அவியவும் கூடிய தன்மையுள்ளது

எரிகறி = சுண்டற்கறி

எரிகாசு = அகிற் கட்டை ஐந்து வகையிலொன்று; அதாவது காசுக்கட்டி, நீரியாசப் பாற் செடி

எரி காய்ச்சல் = உடலில் எரிச்சல் உண்டாகும்படி காயுஞ் சுரம், உடலைக் கொளுத்தும் சுரம்

எரி காலனுப்பு = காட்டாமணக்குச் செடியை எரித்து அதனின்றெடுத்த ஒரு வகை உப்பு

எரிகாலன், எரிகாலி, எரிகாலை = காட்டாமணக்கு, வெள்ளைக் காட்டாமணக்கு

எரிகிருமி = மலத்திலுண்டாகு மொரு வகைப்பூச்சி

எரிகுஞ்சி = சிகப்பு மயிர், மயிர்ச்சிகைப்பூடு

எரி குடலன் = குன்ம நோயாளி, குடலெரிச் சலையுடையவன், அதிக பசியையுடையவன்

எரிகுட்டம் = ஒருவகைக் குட்ட நோய்

எரிகும்ப வாயு = வயிற்றில் எரிச்சலை உண்டாக்கும் ஒரு நோய்

எரிகுழி = வயிறு

எரி குளிரான் = எரிச்சலைத் தணித்து உடலைக் குளிர செய்யும் பூடு, அதாவது கருநொச்சி

எரி குன்மம் = அட்டகுன்மத்திலொன்று ஒரு வகைக் குன்ம நோய்; இதனால் அடிவயிற்றில் எரிச்சல், குடல் பிரட்டல், வாய் நீரூறல், தலை சுழற்சி, வயிற்றுப்பிசம், இரைச்சல், புளியேப்பம், வியர்வை அதிகமாதல், பேதி, உடம்பிளைப்பு, இருமல், சோறு செல்லாமை முதலிய குணங்களுண்டாகும்

எரிகை = காட்டுப்பச்சிலை

எரிகொள்ளி = கொள்ளிக் கட்டை

எரிக்குத்தக்காரி = கலைமான்

எரிக்கொடி = முடக்கொற்றான்

எரிசாலை = நீர்மேல் நெருப்பு, இதனால் முன்னிசிவு, பின்னிசிவு, சூலை, கீல்வாயு, திமர்வாயு முதலிய வாத நோய்கள் போம்

எரிசிங்கி = நாக்கிலுண்டாகும் எரிச்சலுடன் கூடிய வோர் இரணநோய்

எரி சிலந்தி = எரிச்சலையுண்டாக்கும் ஒருவகைக் குன்மச்சூலை

எரிசுரம் = கொடியசுரம்

எரி சூதகம் = எரிச்சலையுண்டாக்கும் ஒருவகைக் குன்மச் சூலை

எரிசூரை = சூடான சாராயம், அமலைப் பூடு

எரி சூலை = நெஞ்சு, தொண்டை, வயிறு ஆகிய இடங்களில் குத்தலையும் எரிச்சலை முண்டாக்கி புளித்தேப்பத்தையும் உண்டாக்கும் குன்மச் சூலை

எரிச்சக்கறி = சுண்டற்கறி

எரிச்சல் = உடம் பெரிச்சலை உண்டாக்குமொரு நோய் பெருங்காயம், உறைப்பு, பசியால், நெருப்பு சுட்டதால், சதை வலுவுண்டதால் ஏற்படும் எரிச்சல். விஷபாகம், விஷத்தினால் உடம்பில் ஏற்பட்ட ஒரு வித நோய் இதனால் வாயினின்று இரத்தம் விழல், உடம் பெரிச்சல், கோழை தள்ளல், மேல் மூச்சு, மாரடைப்பு, இரணசதை வளர்ச்சி, நெஞ்சில் கட்டி போல் புரளல், பேதி, வீக்கம் முதலிய குணங்களை உண்டாகும்

எரிச்சினப்பு, எரிச்சினைப்பு = எரிச்சலையுண்டாக்கும் தினையைப் போல் சிறிய பருக்கள் (அல்) வேர்க்குருக்கள்

எரிதயிலம் = காய்ச்சி வடித்த மருந்தெண்ணெய், எரிச்சலையுண்டாக்கும் மருந்துத் தைலம்

எரித்தல் = சீரணித்தல், புடம் போடல்

எரிநகை = வெட்சிமலர்

எரிநா = நெருப்பு

எரிநோவு = ஆட்டிற்கு வரும் ஒரு வகைத் தொற்று நோய்

எரிந்தி = பேராமுட்டி, எறாமட்டி

எரிபடுவன் = எரிச்சலையுண்டாக்கும் தோலைப்பற்றிய ஒரு நோய்; எரிச்சலை உண்டாக்கும் ஒரு வகைச் சிலந்தி

எரிபாண்டு = எரிச்சலையுண்டாக்கும் ஒருவகை பித்தம்

எரிபித்தம் = ஒரு வகைப் பித்தநோய், அடித்தொடை பாதம், கண், உள்ளங்கால், உள்ளங்கை இவைகளில் எரிச்சல், காது, முதுகு இவ்விடங்களில் வறட்சி, முழங்கை, முழங்கால்களில் விறுவிறுப்பு, குளிர்ந்த இடம், குளிர்ந்த காற்றுள்ள இடத்தில் இருக்க விருப்பம் ஆகிய குணங்களையுண்டாக்கும்

எரி பிளவை = எரிச்சலையுண்டாக்கும் கட்டி

எரிபுண் = அழற்சியால் எரிச்சலை உண்டாக்கும் புண்

எரிபுத்து = எரிச்சலையுண்டாக்கும் ஒரு வகைச் சிலந்தி

எரிபுழு = தொட்டால் எரிச்சலை உண்டாக்கும் ஒரு வகைப் புழு, கருப்பு மயிர்க்குட்டி

எரிபுழுகு = சவ்வாது

எரிபூச்சி = தொட்டால் எரிச்சலை ஏற்படுத்தும் ஒரு வகைக் கம்பளிப் பூச்சி

எரிபூண்டு = வெள்ளைப்பூண்டு

எரி பொழுது = சூரியன் மறையும் அந்தி நேரம்

எரிப் பரங்கி = எரிச்சலையுண்டாக்கும் பரங்கிப்புண்

எரிப்பு = கார்ப்பு, நெஞ்செரிவு

எரிப்புத் திட்டம் = புடம்வைப்பதற்கு வேண்டிய சூட்டின் அளவு; மருந்தெரிப்பதற்கு வேண்டிய நெருப்புத் திட்டம்; தீபாக்கினி, கமலாக்கினி, காடாக்கினி

எரிப்புமா = கார்ப்புள்ள ஒரு வகை மாம்பழம்

எரிப்பூ = நெருப்பைப் போன்ற நிறமுள்ள பூ; சிவப்பு மலர்

எரி மருந்து = புடமிட்டெடுத்த மருந்து; உறைப்பான மருந்து; பாடாணம்; உள்ளுக்குச் சாப்பிட அழற்சியையும் (அல்) வெளியிற் பூச எரிச்சலையுண்டாக்கும் மருந்து

எரிமலர் = கலியானமுருக்கன் பூ, செந்தாமரை

எரிமலைத் தனம் = எரிமலைகளின் அருகாமையில் கிடைக்கும் கெந்தகம்

எரிமாந்தம் = குழந்தைகட்குச் செரியாமையினால் எரிச்சல் காணும் மாந்த நோய்

எரிமுகம், எரிமுகி = சேங்கொட்டை

எரிமுகி நெய் = சேங்கொட்டையினின்று இறக்கும் மருந்தெண்ணெய்; குட்டத்திற்கு உதவும்

எரிமுட்டை = வறட்டி

எரிமுட்டை பீநாறி = வெதுப்படக்கி

எரிமுலை = பெண்களின் முலைக் காம்பு வெடித்து எரிச்சலையுண்டாக்கும் நோய்

எரிமுள்ளி = ஒருவகை முள்ளி

எரிமூத்திரம் = சூட்டினால் எரிச்சலுடன் வெளிவரும் சிவப்பான சிறுநீர்

எரி மூலிகை = பட்ட இடத்திலே எரிச்சலையுண்டாக்கும் மூலிகை; பச்சையாக அடுப்பிலிட எரியும் மூலிகை

எரி மூன்று வர்ணத்தி = பன்றமுள

எரியர் = ஆடுதின்னாப்பாளை

எரியவிட்ட மருந்து = சிந்தூரம் (நீற்றின பற்பம்), நெருப்பிலிட்டு எரித்த மருந்து

எரியாருட வசம் = செய்யான், செம்பூரான்

எரியிடல் = புடமிடல்

எரியெண்ணெய் = பிறருடைய தீய பார்வை தாக்காதவாறு காய்ச்சிய நல்லெண்ணெய், அதனைச் சோற்றிலூற்றி பின் அது எரியும் போது தலையைச் சுற்றி நாய்க்கிடுவர்

எரியொளி மழுங்குதல் = சூரியனைப் பார்க்கும் போது கண்கனத்துக் கலங்கி நீர் வடிந்து புருவம், மூக்கு இவைகளில் வலியையுண்டாக்கும் கண்ணோய்

எரிவகல் = அசமதாகம், ஓமத்தைப் போன்ற ஒரு கடைச்சரக்கு

எரிவண்டு = கண்ணிலடிக்கும் கருப்பு வண்டு

எரி வண்டுக் களிம்பு = எரி வண்டையும் ஒலியை எண்ணெயையும் மஞ்சள் மெழுகு, குங்கிலியம் முதலியவைகளையும் சேர்த்து காய்ச்சிய களிம்பு: இரணங்களுண்டாக்கப் பயன்படுத்துவர்

எரிவண்டுக் காடி = எரிவண்டைப் பொடித் துக் காடியிலிட்டு வடித்த தெளிவு

எரிவண்டு (பிளாஸ்திரி) = அக்கினிப் பிளாஸ்திரி, எரிவண்டைத்தூளாக்கி மஞ்சள் மெழுகு, கொழுப்பு இவைகளை உருக்கி அதிலிட்டு ஊட்டிய சீலை மருந்து இதை இரணங்களை உண்டாக்கவும், இருமல், பித்தம், காது நோய், மண்ணீரல், நரம்புவலி இவற்றிற்கு அவ்வவ்விடங்களில் போட்டால் நீங்கும்

எரிவந்தப்பரு = எரிச்சலையுண்டாக்கும் சிலந்தி (அல்) பிளவை

எரிவந்தம் = எரிச்சலையுண்டாக்கும் நோய்

எரிவனம் = சுடுகாடு

எரிவாதம் = எரிச்சலையுண்டாக்கும் ஒரு வகை வாத நோய்

எரிவிரியன் = கடிப்பதனால் எரிச்சலை உண்டாக்கும் விரியன் பாம்பு

எரிவு = அழற்சி, உடற்காந்தல்

எரு = எருது, சாணம், வறட்டி (வயலுக்கிடுமெரு)

எருக்கங்கரி = எருக்கஞ்செடியின் அடிக்கட்டையைக் கொளுத்தி அவித்தெடுத்த கரி

எருக்கங் கோல் = மருந்து (அல்) மருந்துச் சரக்குகளை வறுப்பதற்காக பயன்படுவது; எருக்கன் செடியின் கொம்பு

எருக்கத்தி = குருக்கத்தி

எருக்கம் = நிசைச்செடி

எருக்கம் பஞ்சு = எருக்கங்காய் முற்றி வெடிப்பதனால் அதினின்று எழும்பிப் பறக்கும் பஞ்சு

எருக்கம் பாலடித்தல் = எருக்கஞ்செடியின் எல்லா பாகத்திலும் பால் வடியும் வேர், இலையினின்று வடியும் பால் தான் சிறந்தது, புண் புரை முதலியவைகளுக்கு எருக்கம்பாலிடுவர்

எருக்கம் வேர்ச் சூரணம், எருக்கம் வேர்ப் பட்டைச் சூரணம் = வாந்தியை ஏற்படுத்தும், பலத்தையுண்டாக்கும், பற்குச்சியாக இவ்வேரினைப் பயன் படுத்துவர், கிரந்தி, புண் முதலியவற்றிற்கு எண்ணெயிற் குழைத்துத் தடவலாம்

எருக்கலை = எருக்கு

எருக்கிலைப் பழுப்பு = பழுத்த எருக்கிலை மருத்துவத்திற்கு உபயோகப்படும்

எருக்கிலைப் பாலை = குளப்பாலை

எருக்கிலை மஞ்சி = எருக்கநார்

எருக்கு = வெள்ளெருக்கு, செவ்வெருக்கு, மலையெருக்கு

எருணம் = செங்குவளை

எருதுகன்னி = பசுமுன்னை

எருதுப் பித்து = எருதின் ஈரலிலிருக்கும் கசப்பாயுள்ள பித்தத்தை வெண் மலம் போகும் நோயாளிகளுக்குக் கொடுக்க குணமாகும்

எருதுவழை = வனக்கருவாடு

எருத்தம், எருத்து = பிடரி

எருத்து வாலன், எருத்துவாற் குருவி = நீண்டவாலுள்ள ஒரு குருவி (கருவாட்டு வாலி) கோரைக்கிழங்கு

எருத்தை = பிடரிநரம்பு

எருந்தி = இப்பி (சிப்பி), பேராமுட்டி, கிளிஞ்சல், புளிமா, சங்கு, குண்டுமணி

எருந்து = உரல், கிளிஞ்சல், சிப்பி

எருந்தூகம் = நிலவூமத்தை

எருந்தை = தசநாடியில் ஒன்று

எருப்புழு = சாணிப்புழு

எருமணம் = செங்குவளை

எருமணல் = உரல், செங்குவளை

எருமணி = செங்குவளை

எருமாகிதம் = காசினிக்கீரை

எருமுட்டை = பீநாறி, வெதுப் படக்கி, வறட்டி

எருமுட்டைப் பீநாறி = வெதுப்படக்கி (கடுப்படக்கி)

எரு முன்னை = பெருமுன்னை மரம்; இதன் இலை வட்டமாயும் பூ சிறிது மஞ்சள் நிறமாயு மிருக்கும்

எருமை = கோரைக்கிழங்கு, எருமைவிருட்சம்

எருவைத்தாழை = கொவ்வை

எரோகம் = களிப்பாக்கு

எர்க் கட்டு = கருப்பை வலிமை, பிரசவ வலி, பிரசவத்திற்குப் பிறகு ஏற்படும் இரத்தப் போக்கு, முள்ளந்தண்டு வலிக்குப் பயன்படுத்தும் ஒருவித கோதுமை

எலங்கசம் = ஆடாதோடை

எலதிரிக்காய் = ஒருவகைக்காய்

எலதீரிக்கொடி = ஒருவகைக் கொடி

எலந்தம்பழம் = இலந்தை

எலந்துகல் = கரியுப்பு

எலமிஞ்சி = பேரண்டம்

எலவை = எரிமரம்

எலாக் கொட்டி = கொட்டிக் கிழங்கு

எலி = பெருச்சாளி, கள், கள்ளி மரம், கழுகு, யானை

எலி காரம் = வெள்ளைப் பாடாணம், வெள்ளைப் பாடாணத்தை மேற்கொண்ட ஒருவகை மேனாட்டு கலப்பு பாடாணம், அப்பிரக பாடாணம், காட்டா மணக்கு

எலிக்காதிலை, எலிக்காது = எலிச்செவிப் பூடு (ஆகாநிலை, பிரட்டைக் கீரை)

எலிக்காலன், எலிக்கால் = வெள்ளைப் பாடாணம், ஒருவகைப் பூண்டு

எலிக்குக் காலன் = வெள்ளைப்பாடாணம்

எலிக்குச்சிப்புல், எலிக்குஞ்சப்புல் = இராவணன் மீசை என வழங்கும் கடற் கரையிலுள்ள ஒருவகைக் கூர்மையான புல்

எலிக்கூடு பாஷாணம் = அரிதாரம்

எலிக் கொல்லி = வெள்ளைப் பாடாணம்

எலிச்சீரகம் = பெருஞ்சீரகம்

எலிச்சுக்கில விஷம் = எலிகள் புணருங்காலத்தில் சிதறும் சுக்கிலம் மனித உடலில் படுவதால் உண்டாகும் விஷ நோய், கிரந்தி, வீக்கம், குளிர்க்காய்ச்சல், கீல்வலி, வாந்தி, அரோசிகம், நடுக்கல், தாகம், மூர்ச்சை, சுரம் முதலிய குணங்கள் உண்டாகும்

எலிச்செவி = எலிச்செவிபூடு சவரியார்கூந்தல் (கொடியார் கூந்தல்)

எலிச்செவிக் கள்ளி = எலிக்காதைப் போன்ற இலைகள் வாய்ந்த ஒரு வகைக்கள்ளி

எலிச்செவிக் கீரை = எலிக்காதிலை

எலிச்செவித் துத்தி = எலிக்காதைப் போன்ற இலைகளையுடைய துத்தி

எலிச்செவிப்பூடு = எலிக்காதிலை

எலித்தாம்புகம் = முள்ளிக்கத்திரி

எலித்துருமம், எலித்துருமல் = தான்றிமரம்

எலித்துளசி = குழிமீட்டான் பூடு, "சாணாச்சி"

எலிபகம், எலிபாகம், எலிபாலை = காட்டாமணக்கு

எலிபீகம் = கள்ளி

எலிபூரம் = கள்ளி, எலி

எலிப் பயறு = ஒரு வகைக் காட்டுப் பயறு, வயற்காடுகளில் முளைக்கும் வயல்பயறு

எலிப் பாகம் = காட்டாமணக்கு, கள்ளி

எலிப் பாடாணம் = வெள்ளைப் பாடாணம், வெள்ளைப் பாடாணத்தை மேற்கொண்ட அப்பிரக பாடாணம், ஒருவகை மேனாட்டு கலப்பு பாடாணம், காட்டாமணக்கு

எலிப் பாலை = ஒருவகை ஆமணக்கு, புல்லாமணக்கு, காட்டாமணக்கு

எலிப்பால் = முப்புரமெரித்தான், காட்டாமணக்கு

எலிப்பாற் பாடாணம் = எலிப்பாடாணம்

எலிப் பிடுக்கன் = ஒருவகைப் பூடு, கிலுகிலுப்பை

எலிப்பிட்டை, எலிப்பிழுக்கை = எலியின் மலம்

எலிப்புலி = பூனை

எலிப்பொறி = கிலுகிலுப்பை

எலி மருந்து = வெள்ளைப் பாடாணம்

எலிமனை = தாமரை

எலிமாதர் = காட்டாமணக்கு, கள்ளி

எலிமுள் = உபரசச் சரக்குகளிலொன்று

எலிமுள்ளு = எலிக்குச்சிப்புல்

எலிம்பிச்சு = சம்பீரமுறுக்கு

எலியரல் = காட்டாமணக்கு

எலியாமணக்கு = ஒருவகை ஆமணக்கு, சிற்றாமணக்கு, காட்டாமணக்கு

எலியாரி = கற்கோரை

எலியார் = ஆதளை

எலியாலங்காய் = காட்டாமணக்கு, சீமைக் காட்டாமணக்கு

எலியாலம் = அரிதாரம், காட்டாமணக்கு, சீமைக்காட்டாமணக்கு

எலியாலு = காட்டாமணக்கு

எலியால் = காட்டாமணக்கு, ஆதளை, புல்லா மணக்கு, முப்புர மெரித்தான்

எலியொட்டி = ஒட்டொட்டிப்புல், பூண்டு, குறுக்கி

எலியொட்டிகம் = கற்சூரை

எலியோட்டி = குருக்குப்பூடு

எலியோட்டிச் சோபி = காலையாங்குலைச் செடி (எலிகளை வீட்டினின்று விரட்டி விடும்)

எலியோட்டிப் பூண்டு = எலியோட்டி

எலிவாரி = திப்பிலி

எலிவிஷ சுத்தி = வெள்ளைப்பாடாண சுத்தி; சுத்தி செய்யும் முறை

எலி விஷம் = எலிக்கடியினால் ஏற்பட்ட விஷம்; வெள்ளைப் பாடாணம்; எலிச் சுக்கிலத் தினாலுண்டாகும் விஷம்

எலிவை = கள்ளி

எலினன் = கள், மது

எலு = கரடி, பிஞ்சு, சங்கஞ்செடி

எலுக = சங்கஞ்செடி, பிஞ்சு

எலுமாசிகம் = வேர்க்கடலை

எலுமிச்சங் காய் = பச்சையெலுமிச்சை

எலுமிச்சந்துளசி = பெருந்துளசி

எலுமிச்சந்தோ லெண்ணெய் = எலுமிச்சங்காயின் மேற்றோலிலிருக்கும் எண்ணெய்

எலுமிச்சம் பழவுப்பு = எலுமிச்சம் பழத்தினின்று எடுக்கும் உப்பு

எலுமிச்சம்புல் = ஒருவகைப்புல்

எலுமிச்சை = பெரிய எலுமிச்சை (பிள்ளையார் எலுமிச்சை); கொடி எலுமிச்சை, மலை மிச்சை, காட்டெலுமிச்சை, கத்தூரி (அல்) மணிலா எலுமிச்சை, ஆனை எலுமிச்சை,

நாய் எலுமிச்சை, கோடை எலுமிச்சை, எருமை எலுமிச்சை, சம்பீர எலுமிச்சை இதுவே (கிச்சிலி)

எலுமிச்சை யெண்ணெய் = எலுமிச்சந்தோ லெண்ணெய்

எலுமிச்சை வெற்றிலை = கற்பூர வெற்றிலை

எலும்பண்ட வாதம் = பிடுக்கிற்குள் எலும்பைப் போல் கெட்டியாக ஏற்படும் கழலை

எலும்பழற்சி = எலும்பு பருத்து மிருதுவாகி வலி காணும் ஒரு நோய்

எலும்பி = ஒரு மரம், காட்டு மஞ்சரி, வெள்ளெலும்பு

எலும்பிணக்கி = ஒடிந்த எலும்புகளை ஒன்று சேர்க்கும் மருந்து

எலும்பிலி = ஒரு மரம், புழு

எலும் பிளக்கம் = எலும்பில் பசை அதிகரிப்பதால் அது மிருதுவாதல்

எலும்பு = வெள்ளெலும்பு

எலும்புக் கட்டு = மூக்கின் மேற்பகுதி, மூக்குத்தண்டு

எலும்புக் கணம் = எலும்புக்குள்ளிருக்கும் மச்ச தாதுவைப் போக்கி உடம்பை மெலியச் செய்யும் கணநோய்

எலும்புக் = எலும்பின் கண்ணறைகள்

எலும் புக்கரி = எலும்பைப் பாண்டத்திலிட்டுக் காற்றுப்படாமல் எரிப்பதாலுண்டாகும் கரி இது விஷத்தை முறிக்கும் தன்மை பெற்றது (எட்டி அபினி விடத்திற்கு)

எலும்புக் குத்தல் = மேக நோயினால் எலும்பிலுண்டாகும் குத்தல் நோய்

எலும்புக்குவளை = எலும்புக்குழி

எலும்புக் குறுக்கி = குழந்தைகளுக்கு நோயினால் எலும்பு சிறுத்துக் காணல், தாயின் கருப்பத் தில் பிண்டமாய் இருக்கும் போதே எலும்புக்கு ஏற்படும் நோய்

எலும்புக் கூட்டு = எலும்பமைப்பு, எலும்புப் பொருத்து

எலும்புக் கேடு = நாளுக்கு நாள் எலும்பு கெட்டுக் குறுகிக் கொண்டே வருதல்

எலும்புக்கோர்வை = எலும்புக்கூடு

எலும்புக்கோறை = எலும்பின் துளை

எலும்புச்சந்தம் = தில்லை மரம்

எலும்புச் சிலந்தி = எலும்பினுட்பக்கம் காணும் ஒருவகைச் சிலந்தி

எலும்புச்சாம்பல் = எலும்புக்கரி

எலும்புச்சில், எலும்புச்சில்லி = முழந்தாளிலுள்ள எலும்புருளை

எலும்புச்சீப்பு = சீப்பைப் போன்ற விலாவெலும்பு

எலும்புச் சூலை = முழங்கால், முழங்கைகளில் மோது கட்டி குத்தல் கண்டு கடுத்து வெடித்து சீழும் சலமும் ஒழுகி துன்புறுத்தும் குடைச்சல் வலி

எலும்புச்சூலை வாயு = மூட்டுகளில் மருந்துகளும் தசைபாகங்களும் வளர்ந்து கடினமடைவதால் முழங்கால், முழங்கைகளில் கொடியவலி, எரிச்சல், வீக்கம் முதலிய குணங் களோடு கூடிய ஒருவிதச் சூலைநோய்

எலும்புத்தின்றி = கழுதைக் குடத்தி

எலும்புத்தாபிதம் = எலும்பழற்சி

எலும்புத் தாரை = ஊன், இரத்தம், பசை, முதலியவை நடமாடுவதற்காக எலும்புற்குள் உள்ள கால் வழிகள்

எலும்புத்திருத்தி = எலும்பிணக்கி

எலும்பு நீராக்கி = எலும்பை நீராக்கும் மருந்து; யானைகளுக்குக் கொடுக்கும் பேதி மருந்து (அல்) காரச்சரக்கு

எலும்பு நோய் = எலும்புருக்கி, எலும்பைப் பற்றிய நோய்

எலும்புபற்பம் = எலும்புக்கரி

எலும்புப் புடைப்பு = எலும்பு வளர்த்தி

எலும்புப் புளி = வியர்வையில் கலந்துள்ள ஒருவகைப் புளிப்புப் பொருள்

எலும்பு முருந்து = வெண்சத்துள்ள எலும்பின் மிருதுவான பாகம், எலும்புக்குருத்து

எலும்பு மொத்தை = அதீத எலும்புத் திரட்சி

எலும்பு கட்டல் = எலும்பு வளர்ந்து மொத்தை கட்டல்

எலும்புருக்கி = எலும்பைத்தாக்கும் நோய் அத்திபேதி எலும்பு அல்லது எலும்பின் குருத்து தாக்கப்பட்டு மச்சை அழிந்து உடலை இளைக்கச் செய்யும் நோய்; குழந்தைகட்குண்டாகும் ஒரு வகைக் கணநோய் இது எலும்பின் மச்சையை உருக்கி சூலையுடன் வெளிப்பட்டு உடலை இளைக்கச் செய்யும்; குழந்தைகளுக்குண்டாகும் உடம்பையடுத்த நோய்; மேக சம்பந்தத்தினால் எலும்பிற்கு அழற்சி கண்டு உடம்பை இளைக்கச் செய்து எலும்பை நொய்மையாக்கி வெளித்தோற்றுவிக்கு மொருவகை

நோய், எலும்புகளுக்கு அழற்சி ஏற்படும் அதனால் எலும்புகளில் பரு, சிலந்தி முதலிய குருக்கள் ஏற்பட்டு சுரம், இருமல், கபம் உண்டாகி எலும்பையுருக்கி உடம்பை இளைக்கச் செய்யும் நோய் ஒருவகைக் கருப்பமேகம் ; முரட்டுப்புணர்ச்சி, அகாலப் பிரசவம், கருப்பைக் கோளாறு ஆகிய காரணங்களால் பெண்ணுறுப்பு, கருப்பை இவற்றிலிருந்து பால் போல், சீழ், சளி போன்ற திரவம் வெளிப்பட்டு அடிவயிறு, தோள், முதுகு இவற்றில் வலி ஏற்பட்டு கை, கால் ஓய்ந்துபோய் வேலை செய்ய மனமிராது உடம்பை இளைக்கச் செய்யும் நோய்

எலும்புருக்கிக் காய்ச்சல் = சயரோகத்தினால் தினமும் வரும் காய்ச்சல் எலும்புருக்கி, கண்நோய், எலும் புளுத்தல், வெள்ளையொழுக்கு முதலிய நோய்களில் எலும்பு தாக்கப்படுவதால் ஏற்படும் காய்ச்சல்

எலும்புருக்கிக் கிராணி = காசநோய் மேகம், பரங்கிப் புண் முதலிய நோய்களில் எலும்பு தாக்கப்பட்டு வரும் கழிச்சல்

எலும்புருக்கிச் சுரம் = எலும்புருக்கிக் காய்ச்சல்

எலும்புருக்கி மேகம் = உடம்பை இளைக்கச் செய்யும் மேகவெட்டை; பெண்களுக்குக் கருப்பையின் கோளாறினால், வெள்ளை வெளிப்பட்டு உடம்பை இளைக்கச் செய்யும் மேக நோய்

எலும் புருவல் = வாத நோய், வாத சூலை, சுளுக்கு முதலிய நோய்களுக்கு வலியுள்ள இடங்களில் எண்ணெய் தடவி உருவல்

எலும்புவக்கிரம் = எலும்பு வளைவு

எலும்பு வறட்சி = எலும்பின் அழற்சியால் முள்ளந்தண்டு பசையற்றுப் போதல்

எலும்பு வளர்ச்சி = நோயால் எலும்பு மென்மேலும் வளர்தல்; முறிந்த எலும்பு மறுபடி வளர்தல்; எலும்பைச் சுற்றிலும் ஏற்படும் வளர்ச்சி

எலும்பு வாதம் = எலும்பு மருந்துகள் கடினமாவதால் பொருத்துகள் அசைவுறாது முடமாக்கும் வாத நோய்; வாத நோயினால் உடம்பிளைக்கும் நோய்

எலும்பு விஷச்சூலை = எலும்பு, எலும்புமச்சை, எலும்புத் துவாரம் இவற்றிற்கு அழற்சி ஏற்பட்டு அதிகமான வலி, குத்தல் நோய் முதலியன உண்டாக்கும் நோய்

எலும்பு விரணம் = காயம், மேகம், கட்டி, சிலந்தி, வாத நோய் முதலியவைகளினால் எலும்பில் உண்டாகும் புண்

எலும்புளுத்தல் = எலும்பணுக்கள் மிருதுவாகி துளைகள் ஏற்பட்டு உதிரல்

எலும்பூறல் = முறிந்த எலும்புகள் ஒன்று சேருதல்

எலும் பெண்ணெய் = எலும்புகளை வாலையிலிட்டிறக்கிய மங்கல் நிறமான எண்ணெய் இது பல நோய்க்கு மாற்றாகக் கொள்ளப்படும்

எலும்பை நீறாக்கி = எலும்பை நீறாக்கும் மருந்து; யானைகளுக்கு கொடுக்கும் பேதி மருந்து (அ) காரச்சரக்கு

எலும்பொட்டி = எலும்பையொட்டிக் கொண்டிருக்கும் ஒருவிதச் சவ்வு; நொறுங்கின (அல்) முறிந்த எலும்புகளை ஒன்று சேர்க்கும் மூலிகை

எலும்பொட்டி நோய் = எலும்பைச் சுற்றிலுமுள்ள தசையின் வீக்கம்; எலும்பு பாதிப்படைந்து மெலிவுறும் நோய்கள்

எலைப்பாலை = காட்டாமணக்கு

எல் = இரவு, கிளிஞ்சல், சூரியன், இஞ்சி, பகல், வெயில், சூரியன் தோன்றும் மறையும் நேரங்கள்

எல்லம் = இஞ்சி

எல்லார்க்கும் பெருவழி = பெண்ணுறுப்பு

எல்லி = சூரியன், சந்திரன், இரவு

எல்லிநாதகி = சந்திரகாந்தி

எல்லிநாதன் = சந்திரன்

எல்லிப்பகை = வெளிச்சம்

எல்லிமனை = தாமரை

எல்லியகண்டம் = எலும்பு

எல்லியறிவான் = சேவல்

எல்லியிருள் = அதிகமான இருட்டு

எல்லை = பகல், சூரியன், இறக்கும் நேரம், நாள்

எல்லோர்க் களிவாள், எல்லோர்ப் புகழுடையாள் = பசு

எவுகுதன், எவக்குகன், எவசூரணம் = சவுக்காரம்

எவச்சாரம் = வெடியுப்பு

எவச்சி, எவட்சாரம் = சோற்றுப்பு, கல்லுப்பு, பூநீர், வெடியுப்பு இவைகளை அமுரியி லிட்டுக் காய்ச்சி எடுக்கும் செய்யுப்பு

எவட்டம் = சந்திராவட்டம்

எவருகன் = சவுக்காரம்

எவம் = குருசி

எவர்கள் = அசமதாகம்

எவலம் = இஞ்சி

எவனாசம் = அசமதாகம், ஓமம்

எவா அரிசி = வடநாட்டில் விளையும் எவா தானியத்தின் அரிசி

எவாகு = கஞ்சி காய்ச்சல்

எவாகு கஷாயம் = பங்குநீர் விட்டு எட்டி லொன்றாய்க் காய்ச்சும் குடிநீர்

எவாக்கஞ்சி = எவா அரிசியின் கஞ்சி

எவாக்கோது, எவாதானியம் = வாற்கோதுமை

எவானி = ஓமம்

எவி = கருப்பை

எவ்வம் = தீராத நோய், நாட்பட்ட நோய்

எவ்வனம் = இளமை

எழால் = ஒரு பறவை, குரலோசை

எழில் = இளமை, வலி, அழகு வண்ணம் (நிறம்)

எழிற்குமரி = கெவுரிபாடாணம்

எழு = எஃகு, ஏழு, ஒருமரம்

எழு காசம் = கண்ணிற்றினவுண்டாகிக் கடுந்து சிவந்து நீர் வடித்து பார்வையில் புகைச்சலேற்பட்டு மேகம் சூழ்ந்தாற்போல் இருண்டு காணுவதுடன் உள்ளங்கால், உள்ளங்கையில் குத்தலை உண்டாக்கும் கண்ணோய்

எழுகின்ற கதிரி = முத்திருக்கன் செவி

எழுகு = எஃகு, உருக்கு

எழுக்காம்பு = உருக்குலக்கை

எழுசீலை சுற்றல் = மருந்திட்ட பாண்டத்தைக் காற்று புகாதவாறு

எழுசீலை செய்தல் = களிமண் தடவிய சேலைத்துண்டை ஏழு தரம் சுற்றுதல்

எழுசுண்ணக் குகை = அதிகசூட்டை தாங்க, சுண்ணவகைகளாற் செய்த வச்சிர மூசை

எழுச்சி = வெள்விழிநோயின் ஒரு பிரிவு; காதினின்று சீழ் வடிதல்; காதில் எழும் சதை வளர்ச்சி; உடம்பில் குரு, பரு கொப்புளம், கட்டி முதலியவைகளை குறிக்கும் பொதுப்பெயர்; கண்ணெழுச்சி, இதனால் காது, புருவம், நெற்றி முதலிய இடங்களில் குத்தலுண்டாகி கண்ணிற்குள் சதை வெளுத்து திரண்டு முளைத்து மீன் கண்ணைப்போல் தோன்றி நீர் வடியும், வரியெழுச்சி, இரணவெழுச்சி, குவையெழுச்சி, நீர் எழுச்சி, உந்தெழுச்சி என இதில் பலவகையுண்டு

எழுச்சிக் கண்ணோய் = கண்ணில் கூச்சமுண்டாகி வெளிச்சத்தைப் பார்க்க முடியாத நோய்

எழுச்சிக் கொடி = கண்ணில் கொடியைப் போல் சிவந்த வரிகள் படர்ந்த வெள் விழிநோய்; கட்டுக்கொடி

எழுச்சி நோய் = அழற்சியினால் காதில் ஏற்படும் நோய்

எழுச்சியிலை = கண்ணோய்க்கு உபயோகிக்கும் பச்சிலை

எழு ஞாயிறு = வெயில் அதிகமாக அதிகரித்து சாயுங்காலத்தில் குறைந்து போகும் வேளையில் ஏற்படும் ஒரு வாதத் தலைவலி இதற்கு மாறாக இரசக் காலத்தில் உண்டாகுமாயின் அது "படு ஞாயிறு" எனப்படும்

எழுதினக் காய்ச்சல் = ஏழு நாள் வரையில் அடிக்கும் வாரக் காய்ச்சல்; ஏழுநாள் அடிக்கும் காமாலைச் சுரம்; இது அசாத்தியம்

எழுதுகல் = மாக்கல்

எழுது நாணல் = சீவி மைதொட்டெழுதுவதற்கு உபயோகப் படுத்தப்படும் ஒரு வகை நாணல்

எழுத்தாணி, எழுத்தாணிகூர் = இதற்கு கடற் கொழுப்பை என்ற பெயருண்டு; எழுத் தாணியைப் போன்ற மலர்களை உடைய ஒருவகைச் செடி

எழுத்தாணிப் பச்சிலை = சுவர்முள்ளங்கி

எழுத்தாணிப்பச்சை = எழுத்தாணிப் பூடு, முத்தெருக்கஞ்செவி, வரையாதளை (அல்) மலையாதளைபூடு

எழுத்தாணி பூடு, எழுத்தாணிப் பூண்டு = முத்தெருக்கஞ், செவி (கூத்தன் குதம்பை)

எழுத்தாணி முனை = காதெலும்பின் ஒரு பிரிவாகிய பாரையென்புக்கு அடியில் இருக்கும் எழுத்தாணியைப் போல் கூர்மையான எலும்பின் முனை

எழுத்தாதகம் = அரளி

எழுத்தாதியத்தகடு = அயத்தகடு

எழுநா = நெருப்பு, கொடிவேலி

எழுநாமித்திரன் = காற்று

எழு நாயகம் = கட்டி, சிலந்தி முதலியவைகளைப் பழுக்கச் செய்யும் ஒரு சிறந்த மூலிகை (அல்) மருந்து

எழுநாயிறு = எழுஞாயிறு

எழுநீரலரி = அடுக்கலரி

எழு பிறப்புக்கல் = பிரமகற்பக்கல் (அல்) அண்டக்கல்

எழுபொருப்புக்கல் = மஞ்சட்கல்

எழுபோது = காலை

எழுப்பி = பாடாவரை

எழுமான், எழுமான்புலி = கள்ளிமுளையான்

எழுமுகனை = கட்டியின் முனை

எழுமுறை சுத்தி = மருந்தை (சரக்கை), ஏழுமுறை சுத்தி செய்தல்

எழுமுள்ளுக்கொடி = ஒரு முட்கொடி

எழும்பிய வள்ளி = மாவிலங்கு

எழும்பும் நேரம் = எழுபோது

எழு லோகம் = செம்பொன், வெண்பொன், இரும்பு, ஈயம், பஞ்சலோகம், வெண்கலம், தரா ஆக எழுவகை உலோகம்

எழு வகைத் தாது = உடலிலுள்ள இரத்தம், எலும்பு, சுக்கிலம், தசை, தோல், மூளை, இரசம் ஆகிய எழுவகை தாதுக்கள்

எழு வகைப் பால் = தில்லைப் பால், எருக்கம் பால், கள்ளிப்பால், மாங்காய்ப்பால், கப்பட்டிப் பால், குண்டலிப்பால்

எழுவரைக் காட்டி, எழுவரைக் கூடி = சவ்வீர பாடாணம்

எழுவாகை = பெருவாகை

எழுவாய் = கட்டியின் முனை

எழுவாரி = மஞ்சட்கல்

எழுவிதன் = நெருப்பு

எளனம் = ஆமணக்கு

எளிமை = தளர்வு

எளுகடுகு = கடுக்காய், செருப்படி

எள் = காரெள், சிகப்பெள், பேயெள், வெள்ளெள், காட்டு மயிலெள், காட்டெள் மலையெள், மயிலெள், சிற்றெள்

எள்முக்கத்தனை = எள்மூக்களவு

எள்ளிடை = எள்ளின் அளவு

எள்ளுச்செவி = ஒரு சிறிய பூண்டு

எள்ளுப்பு = எள்ளுச் செடியை எரித்து அதனின்றெடுத்த உப்பு

எள்ளுமிச் சாம்பல் = எள்ளுமியை எரித்ததனா லுண்டான சாம்பல்

எள்ளுலவணம் = எள்ளுப்பு

எள்ளோதனம், எள்ளோரை = எள்ளிட்ட அரிசிப் பொங்கல்

எறணம் = ஆமணக்கு

எறித்தல் = வெயில்காய்தல்

எறிமுகச்சாலை = உலைக்களம்

எறிமுத்து = அம்மை நோயில் இடையிடையே உண்டாகும் கொப்புளங்கள், சிறிய அம்மை

எறியாலம், எறியால் = ஒருவகை மீன், இதனின்று எண்ணெய் எடுக்கப்படும்

எறியுப்பு = கல்லுப்பு

எறியூரகம் = நீர்ச்சுண்டி

எறுந்து = பேராமுட்டி

எறும்பி = யானை

எறும்புப் புற்று = எறும்பினிருப்பிடம்

எறும்பு விழுங்கி = எறும்பைத் தின்னும் உயிரி

எறுழி = காட்டுப்பன்றி, பன்றி

எறுழ்வலி = மிகுந்த வலி

எற்கோலி = இன்புறத்தான் பூண்டு

எற்பாடு = பகல் 20 நாழிகை முதல் 30 நாழிகை வரை

எற்றோற்றம் = சூரியோதயம்

எனபலி = கடுகு

எனம் = எள்ளு, பன்றி கொம்பு

எனல் = தினையரிசி

என் = எள்

என்பணி = உட்காதின் ஒரு பகுதி அதாவது கம்பு இது கேட்டலுக்கு ஒரு முக்கியமான கருவி

என்பலி = கடுகு

என்பாதல் = இளைத்தல்

என் பிணக்கி = எலும்புணக்கி (ஒடிந்த எலும்புகளை ஒன்று சேர்க்கும் மருந்து)

என்பிலி = புழு எலும்பில்லாத பிராணி

என்பு = எலும்பு, புல், அத்தி, எலும்பு புடைத்திருத்தல்

என்புக்கணு = எலும்பின் மேலுள்ளகணு

என்புக்கரி = எலும்புக்கரி

என்புக் குழி = தொடைச்சந்து பொருந்து

என்பு தின்றி = கழுதைக்குடத்தி, ஒரு வகைப்பூடு, எலும் புருக்கி

என்புத்தாபிதம் = எலும்பு பருத்து மிருதுவாகி வலி காணுமொரு அழற்சி

என்புப்புடைப்பு = என்புக்கணு

என் புருக்கி = எலும்புருக்கி ஒரு வகைப்பூடு, எலும்பைத் தின்று கொண்டே போதல்

என்பு வாதம் = எலும்புக்குக் காணும் வாதவலி, நாடி நரம்புகளுக்கு வியாதி ஏற்பட்டு அருகேயுள்ள, எலும்பின் கோளாறினால், ஏற்படுவதாக உள்ள சமவாதம்

என்பு வெட்டி = எலும்பைத் தறிக்கும் கருவி

என்புறி = கருஞ்சீந்தில்

என்றவன் = சூரியன்

என்றூழ் = சூரியன், கோடை வெயில்

என்னவேர் விழியான் = பத்திராட்சி

ஏ

ஏக = ஒன்று, பௌதிகநூலில் ஏக அணுவைக் குறிக்கும்

ஏகக் கம்பி = ஏகம்பச்சாரம், வாத முறையில் உபயோகிக்கும் ஒரு வைப்புச் சரக்கு; வெடி உப்பு, கல்லுப்பு, அமுரி உப்பு, சோற்றுப்பு, காசிச் சாரம் முதலியவைகளை யானையின் சிறு நீரில் கரைத்துப் பதமாய் எரித்திடச் சுண்டி அடியில் பூர்த்து நிற்கும் உப்பு

ஏகசரம் = காண்டாமிருகம்

ஏகசரும குட்டம் = தோலானது யானையின் தோல் போன்று தடித்தும், தோலுரிந்து சிவந்தும், சொரசொரப்பாயும் இருக்கும். உணர்வின்மை, வீக்கத்துடன் பார்ப்பதற்கு

விகாரமாயும் தோன்றி கை, கால் விரல்கள் கனத்தும், குறைந்தும் காணும், இதனைச் சடைக் குட்டம், யானைக்குட்டம், பெருவியாதி என்றும் கூறுவர்

ஏகசிருங்கம் = ஏகசரம்

ஏக சூத்திரம் = ஒருவகை வைடூரியம்

ஏகச்சரம் = ஏகம்பச்சாரம்

ஏகண்டு = குன்றிமணி

ஏகதிருட்டி(ஷ்) = காக்கை

ஏகநிறம் = வெயில்

ஏக நிறவுப்பு = வெடியுப்பு, தமிழ் நூலின் படி வெடியுப்பு, சோற்றுப்பு, கல்லுப்பு, பூநீறு இவைகளை அமுரியிலிட்டுக் காய்ச்சியெடுக்கும் ஒருவகை செய்யுப்பு

ஏகபஸ்மி காமிலம் = உப்புச் சத்து குறைந்த திராவகம்

ஏக பத்திரிகை = வெண்டுளசி

ஏக பந்தனம் = ஏக சலவாயு சம்பந்தப்பட்ட பொருள்

ஏகபலம் = ஒரே காயைக் கொடுக்கும் செடி, ஒரே தடவை காய்க்கும் மரம், ஒரு பலம்

ஏகபானம் = ஒருவேளை மருந்து

ஏகபிண்ட கருப்பம் = கருப்பத்தில் ஒரே பிள்ளை உண்டாயிருத்தல்

ஏகபுத்திரகம் = ஒரே குஞ்சு பொறிக்கும் ஒரு பறவை

ஏகமதி = தொடுவுணர்வு (ஓரறிவுயிர்)

ஏகமலடு = ஒரு பிள்ளையைப் பெற்று பிறகு பிள்ளை யில்லாதிருத்தல்

ஏகமித்திரம் = காரம்

ஏகமூலி = மாதுளை

ஏகம் = வெண்கலம், திப்பிலி, தனிமை, முழுமை, ஒன்று

ஏகம் பச்சாரம், ஏகம் பச்சூலி = வாதமுறையில், உபயோகிக்கும் ஒரு வைப்பு சரக்கு, வெடியுப்பு, கல்லுப்பு, அமுரியுப்பு, சோற்றுப்பு, காசிச்சாரம் முதலியவற்றை யானை மூத்திரத்தில் கரைத்துப் பதமாய் எரித்திட அடியிற் பூர்த்து நிற்கும் உப்பு

ஏகம்பபாடாணம் = ஏகம்பச்சாரம்

ஏகயாமம் = உடலின் ஒரு பாகத்தை மட்டும் முற்றிலும் தாக்கும் வாத நோய்

ஏகயிட்சிகம் = எருக்கு

ஏகரம் = முத்து, மருந்து

ஏகலாகிகம் = திப்பிலி

ஏகலிங்கச் செடி = ஆண்பூவாவது, பெண் பூவாவது மட்டும் தனியாக உண்டாகும் செடி, ஆண்பூ ஒரு செடியிலும் பெண்பூ மற்றொரு செடியிலும் முண்டாகும் செடிகள்

ஏகலியம் = களைக்கொட்டி

ஏகலைத் தனிட்சியாகம் = பிரபுண்டரீகம், அதாவது அல்லி ஏகலைத்தன் தாமரை

ஏகவட்சி = காக்கை

ஏகவாசம் = திப்பிலி, ஆலமரம், ஒருவேளை உணவு

ஏகவாசல் = ஆல்

ஏக வாந்தி = ஒருமிக்கச் செய்யும் வாந்தி, உட்கொண்ட மருந்தை அல்லது உண்ட உணவை முழுதும் வாந்தி செய்தல்

ஏகவிரிந்தம் = ஒரு தொண்டை நோய்

ஏகவீக்கம் = உடல் முழுமையும் பரவிய வீக்கம்

ஏகவீரக்கள்ளி = மான்செவிக் கள்ளி

ஏகவீரம் = மான், மான் செவிக்கள்ளி

ஏக வைத்திய பாகம் = எல்லாவித நோய்களுக்கும் பரிகாரமாக, அவற்றைக் கண்டிக்கும் வகையில் ஒரே மருந்தை உபயோகித்தல்

ஏகா காரம் = பொன், ஒரே விதமான உணவு, ஒருவேளை உணவு

ஏகாகிகசுரம், ஏகாகிதசுரம் = அன்று தோன்றி அன்றே நீங்கும் சுரம்

ஏகாக்கம் = காக்கை

ஏகாங்கம் = சந்தனம், தலை

ஏகாங்க வாதம் = ஒரே உறுப்பைப் பற்றிய வாதநோய்; இளம் பிள்ளை வாதம்; இது கர்ப்பக்கோளாறு அல்லது பிறவிக் குற்றத்தினால் குழந்தைகளுக்கேற்படும்

ஏகாங்குலம் = சிறுநீர்

ஏகாஞ்சலி = கைகெண்ட அளவு

ஏகாட்சி = காக்கை

கந்தரகாண்டம் கந்தரக்காட்டம் = வெள்ளைப் பாஷாணம்

கந்தரசபரச்சி = அப்பிரகபாஷாணம்

கந்தரசம் = போளம், சந்தனம், விளாத்தி

கந்தரசு = சாம்பிராணி

கந்தரம் = தான்றிக்காய், கடற்பாசி புனல் முருங்கை, கழுத்து, கடுக்காய், கற்கடக பாஷாணம், தீமுறுகற் பாஷாணம்

கந்தராசம் = சந்தனம்

கந்தராசனம் = சந்தனம், ஒருவகை மல்லிகை

கந்தராளம் = மலைக்கோங்கு, பச்சை குருபாலை, கலத்துள்ளி

கந்தருசை = வாளை

கந்தருவம் = குதிரை

கந்தருவன் = குயில், குதிரை

கந்தருவா = ஆமணக்கு

கந்தரூபம் = வைடூரியம்

கந்தரேணுகை = கத்தூரி

கந்தலைக்கெந்தி = கெந்தகம்

கந்தவகம் = காது, மூக்கு, காற்று, செங்காந்தள்

கந்தவகன் = காற்று

கந்தவசம் = மூக்கு

கந்தவாகம் = வாயு

கந்தவாகனடக்கி = வாதமடக்கி

கந்தவாகன் = காற்று

கந்தவாகை = மூக்கு

கந்தவிதாரிகை = புனுகுசட்டம்

கந்தவேணி = கத்தூரி

கந்தளம் = தளிர்

கந்தளி = தினையரிசி

கந்தற்கூபம் = யோனி

கந்தறுவா = ஆமணக்கு

கந்தனுப்பு = கல்லுப்பு

கந்தனை = சிற்றரத்தை

கந்தன் = சூதபாஷாணம், சீர்பந்த பாஷாணம்

கந்தா = தான்றி

கந்தாங்கம் = பெருங்கிச்சிலி, கெந்தகம்

கந்தாசலம் = கெந்தக பாஷாணம்

கந்தாத்திரி = நெல்லி

கந்தாயம் = பேய்ப்புடல்

கந்தாராம் = இரசம்

கந்தாரி = தும்பை, பேய்ப்புடல்

கந்தாவம் = குயில்

கந்தி = கந்தகபாஷாணம், பேய்ப்புடல்

கந்திகலைச்சி = பச்சைக்கல்

கந்திகை = சிறுதேக்கு, துளசி

கந்தித்தம் = சீலை

கந்தியுப்பு = கந்தகவுப்பு

கந்திரதாரி = பச்சை மரகதம்

கந்திலம் = ஒருவகை முருங்கை, தூதுவளை

கந்தி வாருணி = பேய்த்தும்மட்டி

கந்திணி = ரேணுகை, முரவென்னும் வாசனைத் திரவியம்

கந்து = யாக்கையின் மூட்டுச் சந்து, கழுத்தடி, தாளிசம்

கந்துகம் = குதிரை, தான்றிமரம், தான்றி

கந்து பரிச்சுனை = பூசனிக்காய்

கந்துளம் = பெருச்சாளி

கந்துள் = கரி

கந்தேறு, கந்தேறுகம் = கோடகசாலை

கந்தை = கருணைக்கிழங்கு, கருணை, மலட்டுப் பாகல், ஓமம்

கந்தை சடகம் = தமரத்தை

**கந்தோடம் = கருங்குவளை, வெண்குவளை**

**கந்தோதகம் = தாமரை**

**கந்தோதம் = தாமரை, நீலோற்பலம்**

**கந்தோலிகம் = செஞ்சூரை**

**கந்தோத்கடம் = மருக்கொழுந்து**

**கந்தோத்தமை = கள்**

**கந்தோபலம் = கெந்தகம்**

**கந்றி = கற்றாழை, கெந்தகம்**

**கந்றிகாரம் = கோங்கிலவு, இலவு**

**கந்றிகை = பூவரும்பு, தாமரைக் கொட்டை**

**கபகம் = கமுகு**

**கபக்காய் = தேங்காய்**

**கபக்கினி = சிகப்பு, சாறுவேளை**

**கபங் கோரை = கோரை**

**கபசம் = மருக்காரை**

**கபடகச்சு = வேளை**

**கபடகரம் = கொடிவேலி**

**கபடாதி = புளிவசலை**

**கபடுரத்தி = சிற்றரத்தை**

கபடேரிகம் = அகில்

கபத்தம் = துளசி

கபத்தின் நாசினி = கடுக்காய்

கபநாசம் = தூதுவேளை, கண்டங் கத்திரி, கரிசாலை

கபநாசினி = தேற்றான் வித்து

கபநீலதீபனம் = ஆதளை

கபந்தாளி = தாளி

கபபித்தகரம் = வெண்ணெய்

கபமகற் பங்குடோரி, கபமறுக்குங் குடோரி = யானைத்திப்பிலி

கபமோதா = பிரண்டை

கபம் = கோழை

கபம்பம் = வாலுளுவை

கபரி = பெருங்காயம், பால் துத்தம், வேளை

கபரியம்பரிதுங்கி = நாய்வேளை

கபர்த்திகா = பலகரை

கபலகலஞ்சாளி = குமிழ்

கபலாக்கினி = ஈருள்ளி

கபலாத்தி = ஆவிரை

கபவாதகிது = மாகாளிக்கிழங்கு

கபவாதநாசினி = அரத்தை

கபவாதமறி, கபவாதமறியான், கபவாதமிறயான் = கொடுக்காய்ப்புளி

கபவிஷபாகம் = வன்மரை, ஓரிதழ்த் தாமரை

கபவிரணகரி = ஆட்டுச்செவி

கபவிரோதி = சிற்றரத்தை

கபவுதிரநாசினி = அரத்தை

கபளி = முழங்கை

கபனி = காகோளி

கபாடக்கட்டி கபாடமீட்டி = வசம்பு

கபாப்சீனி = சீனமிளகு

கபாலகாந்தி = ஆவிரை

கபாலபாஷாணம் = சீர்பந்த பாஷாணம்

கபாலபாணியோன் = சிவனார் வேம்பு

கபாலமேனியோன் = சிவனார் வேம்பு, சீர்பந்தபாஷாணம்

கபாலம் = தலைமண்டை, மண்டையோடு

கபாலலாடம் = கலுவம்

கபாலவம் = ஈரப்பலா

கபாலவாடை = தலை நோய்

கபாலன் = சீர்பந்த பாஷாணம்

கபாலி = சிவனார் வேம்பு

கபாலிகம் = பல் சொத்தை

கபாவேகி = தேவதாரம்

கபானிலக்கினம் = மான்செவிக்கள்ளி

கபி = குரங்கு, செஞ்சந்தன மரம், யானை

கபிகச்சுகம் = கரும்பூனை காஞ்சொறி

கபிகாண்டவம் = செந்தகரை

கபிசை = ரேணுகை

கபிச்சம் = அமபாளம்

கபிஞ்சலம் = காடை, ஆந்தை, சாதகப்புள்

கபிதசீரம், கபிதம் = கருஞ்சீரகம்

கபிதனம் = மாங்காய், குறுவாழை, வாகை

கபிதாத்திரி = நெல்லி

கபித்தகம் = நீர்விளா

கபித்தபத்திரை = தார்

கபித்தம் = கொட்டிக்கிழங்கு விளா, விளாமரம்

கபித்தலம் = விளாமரம்

கபிலா = புளிமுந்திரி

கபிலபுட்பம் = நுணா

கபிலை = பெண்யானை, பசு, கடவுள், வேணுகை, தக்கோலம், கருந்திராட்சை

கபிலோகம் = பித்தளை

கபிவல்லி = யானைத்திப்பிலி

கபிஷடம் = பாலைமரம்

கபீதகம் = மரக்கால்

கபீதனம் = வாகை

கபீந்திரியம் = புனம்புளி, கொடுக்காய்ப்புளி

கபீர் = அலரி

கபுகு = கமுகு, கொட்டைப்பாக்கு

கபோகரனா = பாற்சோற்றி

கபோசிடம் = பிறாமுட்டி

கபோணி = முருங்கை

கபோதகம் = புறா, பிராச்செடி

கபோதகாஞ்சனம் = சுரோதாஞ்சனம்

கபோதசாரம் = ஓர் அஞ்சனக்கல்

கபோதம் = கரும்புறா, புறா, சூரியகாந்தம்

கபோதவங்கம் = மண்டூகவல்லாரை சூரியகாந்தி

கபோத வர்ணன் = சிற்றேலம்

கபோத வள்ளி = ஏலம்

கபோதாங்கிரி = பவழம்

கபோதாஞ்சனம் = அஞ்சனக்கல்

கபோதை = மகிழமரம், புறா

கபோத்தம் = சூரியகாந்தி, வல்லைக்குரை

கப்பகம் = மஞ்சள்

கப்படம் = சீலை

கப்பட்டி = குதிரைப்பல் மெழுகு

கப்பம் = மஞ்சள், வாலுளுவை

கப்பலரி = ஒருவகை அலரி

கப்பல்கதலி = வாழையின் வகை

கப்பல்துறச்சி = சாதிக்காய்

கப்பல் மிளகு = மிளகாய்

கப்பல் வழங்கினோன் = நவச்சாரம்

கப்பல் வள்ளிக் கிழங்கு = பூச்சர்க்கரைக் கிழங்கு

கப்பற்கடலை = பெருங்கடலை, பட்டாணிக்கடலை

கப்பற்கடுக்காய் = பெருங்கடுக்காய்

கப்பற்றுரைச்சி = பெருங்கடுக்காய், சாதிக்காய்

கப்பி = வெள்ளைக்கிலுகிலுப்பை

கப்பிகா = ஊணாங்கொடி

கப்பு = சிப்பு, சிப்பி, இளங்கொம்பு

கப்புடநாபு = ஏலம்

கப்புகா = எலிச்செவிக்கீரை

கப்புறுக்காய் = சீயக்காய்

கம = காற்று, நீர், தலை, வெண்மை, ஆகாயம், மேகம்

கமஆரம் = வாய்விடங்கம்

கமங்களம் = நாயுருவி

கமங்காளி = மஞ்சிட்டி

கமடம் = ஆமை

கமடி = பெண்ணாமை

கமட்டி = ஆமை

கமண்டலி = குருவாலம்

கமபாகம் = எட்டி

கமபிதம் = உற்பலத்திரயம்

கமப்பாலை = வெட்பாலை

கமத்தர் = திரிநெல்லி

கமத்தர்திரு = நெல்லி

கமம் = சேற்றுமம்

கமமுகம் = மருது

கமயிலேயம் = ஏலாவாலுகம்

கமரகம் = தமரத்தை

கமரதம் = மணித்தக்காளி, கருப்பு மணித்தக்காளி

கமரம் = ஆச்சா

கமரி = கோரைக்கிழங்கு

கமலகம் = கோடகசாலை

கமலபீடம் = மணிபூரகம்

கமலபுத்திரி = முசுக்கட்டைச்செடி

கமலமுண்டகம் = நீர்முள்ளி

கமல மூலம் = தாமரைக்கிழங்கு

கமலம் = கோடகசாலை, தாமரைநீர், பித்தளை, செம்பு, ஆமை, வெண்கலம், கமலாப்பழம், சீமைக்கமலம், வெட்பாலை

கமலா = ஒருவகைக் கிச்சிலிப் பழம், ஒருவகை நாரை, மூத்திரப்பை, அசலித்தாமரை

கமலாக்கினி = இரண்டு விரல் கனமுள்ள விறகால் எரிக்கும் தீ

கமலாதகம் = எருமைக் கனைச்சான்

கமலாப்பொடி = குரங்கு மஞ்சணாறி

கமலி = குங்குமபாஷாணம், காகோளி, தேள்கெடுக்கு

கமலிகம் = சிறுதாமரை

கமலினி = தாமரை

கமல் = குடசப்பாலை, கொடிப் பாலை, வெட்பாலை

கமழ்தல் = நாறுதல்

கமளோதயம் = சங்கிலை

கமறாமா = மருந்து

கமனம் = கருஞ்சீரகம்

கமாதகம் = கருப்புமணித் தக்காளி

கமாதாதி = கருநெல்லி

கமதாதிக்கம் = எலிசூல் எனும் காட்டாமணக்கு

கமாய் = சிறுகரை

கமாலபத்திரி = இலவங்கப்பத்திரி

கமாநெல் = மணித்தக்காளி

கமி = மிளகு, கோளகச்செடி

கமிசகம் = மிளகு

கமிவிருட்சம் = வெண்கருங்காலி

கமீரணி = ஈச்சமரம்

கமுகு = பாக்குமரம், தந்தி பூகம், மிருதார் சிங்கி

கமுனை = மாதுளை

கமை = கரும்பு

கம் = ஆட்டுக்கடா, வில்வம்

கம்பகம் = காந்தக்கல்

கம்பசன்னியம் = மஞ்சள்

கம்படம் = வாலுளுவை

கம்பந்தராய் = கம்புதிராய்

கம்பம் = நடுக்கம், தாலம், பாஷாணம், கடப்பமரம், வாலுளுவை, வெள்ளைப் பாஷாணம், சர்வாங்க பாஷாணம், காற்பரி பாஷாணம்

கம்பலம் = கம்பிலி

கம்பலை = கிலுகிலுப்பை

கம்பவம் = சீலைப்பேன்

கம்பவாதம் = உதறுவாதம், நடுக்கு வாதம், சிரக்கம்பவாதம்

கம்பளம் = செம்மறிக்கடா, கம்பளிப் போர்வை, சர்க்கரைப் பூசனி

கம்பளி = கம்பளிப்பூச்சி, முசுக் கொட்டை, மயிர், கருவண்டு

கம்பளி கொண்டான் = முசுக்கொட்டை

கம்பாரி = குமிழஞ்செடி, பெரும்பூசனி, பூசனி

கம்பானதகரை = பொடுதலை

கம்பி = வெடியுப்பு, கம்பியுப்பு, இலவணபாஷாணம், ஓர் வகைமரம், கற்றேக்கு, டீக்காமல்லி

கம்பிகம் = எலுமிச்சை

கம்பிச்சரவீணை = கருவண்டு

கம்பிபுட்பிகம் = சங்கங் குப்பிச்செடி

கம்பிலிவெட்டி = பறளை

கம்பில்யம் = கம்பில்லகம்

கம்பில்லம் = கிரந்திதகரம்

கம்பு = சங்கு, சிறுதடி செந்தினை, சேம்பு, விலாமிச்சுவேர், மரக்கொம்பு, கம்புள், சம்பங்கோழி

கம்புகம் = அபின், சங்கு

கம்புகள்ளி = கொம்புக்கள்ளி, திருகுகள்ளி

கம்புகாஷ்டம் = அசுவகெந்தி

கம்புபுஷ்ரு = தாமரைக்கொடி

கம்புமணல் = செம்புமணல்

கம்புள் = சங்கு, சம்பங்கோழி, வானம்பாடி

கம்பூ = செம்பு

கம்பை = எட்டி

கம்போச்சு = இரேவல் சின்னிப் பால்

கம்போத்தம் = குவளை

கம்மடம், கம்மட்டி = வாலுளுவை

கம்மல் = இருமல், சேட்டுமம்

கம்மவீகம் = மயிர்மாணிக்கம்

கம்மற்பூண்டு = தொண்டைச்சளி

கம்மாளன் = கடுகுரோகணி

கம் மூகாரி = மந்தாரை

கம்மை = சிறுகீரை

கயங்கு = கம்பு

கயச்சோளம் = படுகைச்சோளம்

கயடேரிகம், கயடேரியம் = அகில்

கயட்டி = சிற்றரத்தை

கயத்தம், கயத்தல் = துளசி

கயந்தலை = யானைக்கன்று, யானை அறுகு

கயபுட்டேலம் = கையாப்புடைத் தைலம்

கய பேரிகம் = அகில்

கயப்பிணை = வங்கமணல்

கயப்பூ = நீர்ப்பூ

கயலப்பைக் கிழங்கு = கார்த்திகைக் கிழங்கு

கயமலாகி, கயமலாகிசம் = வசம்பு

கயம் = குளம், நீர், கெண்டை மீன், ஒருவகை நோய் (இளைப்பு நோய்) நீர்யானை

கயர், கயர்ப்பு = துவர்ப்பு

கயமுனி = யானைக்கன்று

கயலம் = செவ்வாம்பல்

கயலிரியம் = குரும்பு

கயல் = தாமரை

கயவமா = பன்றி

கயவாசம் = பெருங்காஞ்சொறி

கயவாய் = கரிக்குருவி, கருங்குருவி

கயாகடிவாசி = ஊர்க்கள்ளி

கயாமவாதி = வசம்பு

கயாரி = சிங்கம்

கயிடிரிகம் = கருவேப்பிலை

கயிட்டோரியம் = குடல்

கயித்திய தேஷலம் = நீர்க்கடம்பு

கயிப்பு = இலாகிரி

கயிலமாதி, கயிமவாசி, கயிமவாதி = வசம்பு

கயிரம் = அலரி

கயிரவம் = வெள்ளாம்பல், வெள்ளாட்டுப்பால், செவ்வாம்பல்

கயிர்க்காளி = கெள்ளிக்காய்

கயிலாய தோயம் = நிலவேம்பு

கயிலாயரம் = ரசிதமலை

கயிலை = வெள்ளிமலை

கயிலையிற் கடுக்காய் = மாங்கிஷபேதி

கயில் = பிடரி

கயிறு = நரம்பு

கயோதலங்கம் = பேராமுட்டி

கரர்கடகம் = நண்டு

கரகணடகம் = நகம்

கரகதேவி = மணித்தக்காளி

கரகதோயம் = தென்னைமரம்

கரகம் = கீரி, தாது மாதுளை, ஆலங்கட்டி நீர், பாகல், கடுக்காய், மரம், கமண்டலம், வட்டில்

கரகர = நாணல்

கரகனறம் = அகில்

கரகாங்கம் = கெந்தகம்

கரகாடம் = மரக்காரை

கரகிரேத்தம் = வருணசுண்டி

கரகு = முதலை

கரகொடி = காஞ்சொறி

கரகோலி = கருஞ்சீரகம்

கரகோளி = சீரகம்

கரக்கினம் = காட்டுத்துளசி

கரக்குண்டை = சிற்றாமணக் கெண்ணெய்

கரக்கேரிமுட்டை = கருப்புக்கட்டி

கரக்கைரசம் = சாராயம்

கரக்கோடம் = கவிழ்தும்பை

கரசகனி = அம்மான் பச்சரிசி, தபாட்சிகம்

கரசம் புலித்தொடக்கி = கரசதை கத்தூரி

கரசி = சீரகம்

கரசுகொடி = தேள்கொடுக்கிலை

கரசேர் = புனுகு

கரச்சி = உரைந்தது

கரஞ்சகம் = புன்கு

கரஞ்சம் = புங்கு, கழக்கொடி, சிறுபுங்கு

கரஞ்சல் = புங்கு

கரஞ்சி = சிவகரந்தி, செஞ்சாதிப்பூ

கரஞ்சிகம் = மயூரசிகை, புங்கு

கரடம் = காக்கை, யானை மதம்

கரடிக்கு மருவு மித்திரி = புத்தான்பழம்

கரடிவல்லபம் = சிறுகளிறு வாய்ப் பட்டை

கரடு = கரட்டுத்தாளகம்

கரட்பாளை = சுழல் வண்டு

கரணம் = அந்தக்கரணம், ஐம்பொறி, இந்திரியம், நான்கு-மனம், புத்தி சித்தம், அகங்காரம் ஆக நான்கு

கரணி = மருந்து, சஞ்சீவி, உத்தாமணி, செயல், சல்லிய கரணி

கரணிகம் = வெள்ளைக்காக்கணம்

கரணிகை = தாமரைக்காய், துளசி,

கரணை = கருணை, துண்டு, இலைக்காம்பு, பாவட்டை, தூதுளை

கரணைப்பலா = வெருகு

கரண் = புண்வடு

கரண்டகம் = கரிநீலோற்பலம்

கரண்டம் = நீர்க்காக்கை, கமண்டலம், செம்பு

கரண்டாகிதம் = பிரண்டைக்கொல்லி

கரண்டை = காட்டுக்கருணை, நாணல்

கரண்டைப்பூடு = புலிநகக்கொன்றை

கரதபகம் = வெள்ளைக்கில்லாரம்

கரதமவிரணம் = சேற்றுப்புண்

கரதலம் = உள்ளங்கை

கரதலன் = மிருகபாஷாணம்

கரதாளம் = பனை

கரநீர் = கழுதைநீர்

கரந்தை = சிவகரந்தை

கரந்தைக் கொடி = கொட்டைக் கரந்தை

கரபகம் = மஞ்சள்

கரபதி = கருடன், சரகண்ட பாஷாணம்

கரபத்திரம் = சுக்கு, மருக்கொழுந்து

கரபத்திரி = கருந்துளசி

கரபந்தம் = காரைமிஞ்சிரி செடி

கரபம் = உத்தாமணி, காட்டுத் திப்பிலி

கரபர்ணம் = செவ்வாமணக்கு, செவ்வாமணக்கிலை

கரப்பல்லபம் = விளாமரம்

கரபவல்லவம் = கைவிரல்

கரபவல்லவம் = விளாமரம்

கரபார்வை = மூங்கில், வெண்காக் கட்டான்

கரபி = யானை

கரபிப்பிலி = நாயுருவி

கரபிறத்தி = கிளா

கரபுஷம் = மருட்கிழங்கு

கரப்பு = மத்து

கரமஞ்சரி, கரமண்டலி = நாயுருவி

கரமார்த்திகை = திராட்சைக்கொடி

கரமாலம் = புகை

கரமை = யானை, வசநாபி

கரம் = கழுதை, சூரியகிரணம், கை, நஞ்சு, இடுமருந்து, முழம், ஒளி, வசநாவி

கரம்பம் = கஞ்சி

கரம்பரி = சிறுகளா

கரம்பு = நார்க்கரந்தை, பாழ்நிலம்

கரம்பூதம் = அப்பைக் கோவை

கரம்பை = கிளர்ச்செடி, களிமண், சிறுகளா, கரம்பரி, புங்கு

கரயவல்லவம் = விளாமரம்

கரவந்தி = கிளா

கரரம் = அகத்தி

கருருகம் = நகங்கள்

கரலாம் = அலரி, புங்கு

கரவத்தம் = காகம்

கரவம் = காட்டிந்து

கரவல்லபம் = மனோசிலை

கரவாகம் = காக்கை

கரவாக்கிப்பூ = வெள்ளைக்காய் வேளை

கரவாடகம் = மருவு

கரவாடம் = வெட்பாலை

கரவாட்சி = சற்பாட்சி

கரவாலம் = நகம்

கரவிந்தை = களாச்செடி

கரவிரம் = அலரிச்செடி

கரவீரம் = புங்கு, அலரிச்செடி, கப்பலரி, அலரி, செவ்வலரி, துவரை, கம்மரேணு

கரவீராருதாமசம் = கம்மரேணு

கரவிரேகை = மனோசிலை

கரவு = முதலை

கரவேகம் = அடுக்குச்செம்பரத்தை

கரவொலி = கிலுகிலுப்பை

கரழ் = பளிங்கு

கரளாகவேர் = எட்டிவேர்

கரளம் = காஞ்சிரமம், நாபி, வசனாபி, கருநீலத் துளசி, நஞ்சு, எட்டிமரம்

கரளியை = வாய்விடங்கம்

கரா = முதலை, ஆண் முதலை, இலவங்கம்

கராகரி = தேவதாரு

கராசகம் = அரோரூட்மாவு

கராசலம் = யானை

கராசனம் = புலி

கராசி = வெண்கடம்பு

கராசிகம், கராடம் = மருக்காரை

கராத்திரி = யானை

கராபத்தினி = பேராமுட்டி

கராமம் = வெண்கடம்பு

கராமலை = சிறுகளா

கராம் = முதலை, ஆண் முதலை

கராலகம் = கருந்துளசி, நீலத்துளசி

கராவு = முதலை

கராளம் = கத்தூரிமான், கருநீலத் துளசி, குங்கிலியத் தைலம், நன்னாரி

கரி = யானை, நஞ்சு, அத்தி மிளகு, வயிரம், தாளிப்பனை

கரிகணம், கரிகணு = யானைத்திப்பிலி

கரிகனலி = காமலம்

கரிகனிகற்கண்டு = கரிசலாங்கண்ணி

கரிகன் = கையான்

கரிகன்னி = வெருகு

கரிகண்ணி = வெருகன்கிழங்கு

கரிகுருவி = வலியன்குருவி

கரிகோலம் = அழிஞ்சி, அழிஞ்சில்

கரிக்கட்டி = காசுக்கட்டி

கரிக்கண்டு = கரிசலாங்கண்ணி, கையாந்தகரை

கரிக்கணை = யானைத்திப்பிலி

கரிக்கரம் = ஆனாந்தழை எனும் காட்டுக் கரிவேப்பிலை

கரிக்கருமா = கரிக்குருவி

கரிக்களா = கையாந்தகரை

கரிக்கன்ரவி = யானைத்திப்பிலி

கரிக்காய் = பூவாழைக்காய்

கரிக்கை = கரிசலாங்கண்ணி, கையாந்தகரை

கரிக்கொம்பு = யானைக்கொம்பு

கரிக்கோலம் = அழிஞ்சில்

கரிக்கோழம் = கரிக்கோலம்

கரிக்கோனிம்பு = பெருவேம்பு

கரிசத்திரம் = ஆட்டங்கொடி

கரிசலாங்கண்ணி = கறுப்பான், கையான்

கரிசலாம் = கையான்

கரிசலை = பொற்றலைக் கையாந்த கரை, மஞ்சள்-கரிசலாங்கண்ணி

கரிசனம் = பொற்றலைக் கையாந்த கரை, யானைக் கொம்பு

கரிசனி = வெள்ளைக்காக்கணம்

கரிசன்னி = வெண்காக்கணம்

கரிசாராங்கண்ணி = கரிசலாங்கண்ணி

கரிசாலி = கையாந்தகரை

கரிசாலை = கையாந்தகரை, கரிசலாங்கண்ணி

கரிசிலாம் = கையாந்தகரை

கரிசினி = வெள்ளைக்காக்கணம்

கரிசோளம் = இருங்குசோளம்

கரிச்சக்காய் = புளிச்சக்காய்

கரிச்சாலம் = கரிப்பான் பூண்டு

கரிச்சாலை = கரிப்பான்

கரிச்சால் = கரிசலாங்கண்ணி

கரிச்சான் = கரிப்பாலை, பூண்டு, கரிசலாங்கண்ணி, சிறுதேக்கு

கரிச்சி = கையாந்தகரை

கரிச்சை = கையராண்

கரிஞ்சம் = அன்றில் பறவை

கரிணி = யானை, கரிசலாங் கண்ணி

கரிண்டு = சிறுகத்திரி

கரிதபார் = யானை

கரிதாபம் = ஒட்டறை

கரிதாரகம் = சிங்கம்

கரிதிப்பிலி = யானைத்திப்பிலி

கரிதூபம் = ஒட்டறை

கரித்திப்பிலி = யானைத்திப்பிலி

கரித்திரா = ஆட்டுசெவிக்கள்ளி

கரித்தோல் = அத்திப்பட்டை

கரிநேயம் = மலைநாரத்தை

கரிந்து = சிறுகத்திரி, பொன்

கரிபத்திரம் = தாளிசபத்திரி

கரிபம் = அரசு

கரிபயுரித்தோன் = குப்பைமேனி

கரிபிப்பிலி = யானைத்திப்பிலி

கரிபுங்கம் = சூரியகாந்தம்

கரிபுளிப்பு = கரியமிலம்

கரிபோனம் = நறும்பிசின்

கரிசபாலை = கொடிப்பாலை

கரிப்பாலை = பொன்னாங்காணி

கரிப்பான் = கரிசலாங்கண்ணி, கறியுப்பு, கையாந்தகரை

கரிப்பிப்பிலி, கரிப்பிலி = யானைத்திப்பிலி

கரிப்புளிப்பு = கரியமிலம்

கரிப்பொன் = நறும்பிசின்

கரிப்போகி = கரிப்பாலை

கரிமட்டை = கருமருது

கரிமருந்து = வெடிமருந்து

கரிமாசலம் = சிங்கம்

கரிமார்க்கம் = மயிலடிச்செவி

கரிமிளகு = யானைத்திப்பிலி

கரிமுகமாசி = சீவகமூலி அதாவது சீந்தில்

கரிமுரடு = அரவிந்த கொள்ளிக் கட்டை

கரிமுள்ளி = கண்டங்கத்திரி, சிறுமுள்ளி

கரிம்பான்சார் = கையாந்தகரை

கரிய இலை = கருவேப்பிலை

கரியசீரகம் = கருஞ்சீரகம்

கரியதூபம் = ஒட்டடை

கரியநாச்சன் = அழிஞ்சில்

கரியநாழிகை = அந்திக்காலம்

கரிய நிம்பம் = கறிவேப்பிலை மரம்

கரியபிலை = கறிவேப்பிலை

கரியபிள்ளை = பாலாட்டங்கொடி

கரியபிள்ளை ஆட்டமுரி = வெள்ளாட்டுச் சிறுநீர்

கரியபேர்வளம் = கற்றாழைப்பால்

கரியபோவளம் = கற்றாழம்பால், கற்றாழம், நறும்பிசின் பால்

கரிய போளம் = கற்றாழம்பால், நறும்பிசின்

கரியமணி = கருஞ்சீரகம்

கரியமாலை = துளசி, காச்சற் பாஷாணம்

கரியமால் = துளசி, காய்ச்சற் பாஷாணம், கருந்துளசி

கரியரயுரித்தோன் = குப்பைமேனி

கரியரிகம் = சிறுபுங்கு

கரியரியுரித்தோன் = குப்பைமேனி

கரியரைச்சான் = அழிஞ்சில்

கரியர் = கருஞ்சீரகம், கரியான் மிளகு

கரியலாங்கண்ணி = கரிசலாங்கண்ணி

கரியல் வடலி = பனங்கருக்கு

கரியவிஷமுஷ்டி = பெரும்பாம்பு

கரியனாச்சான் = அழிஞ்சில்

கரியாசு = இலவு

கரியாத்து = நிலவேம்பு

கரியாமணக்கு = பறங்கியாமணக்கு

கரியான் = கையாந்தகரை

கரியுப்பு = பிரமவுப்பு

கரிரம் = அகத்தி, தம்பம், யானை

கரிரெத்தம் = ஆடுதின்னாப்பாளை

கரிலரம் = துளசி

கரிவரி = வெள்ளைப்பாடாணம்

கரிவரிதேவி = தாளகம்

கரிவேம்பு = கறிவேப்பிலை, கரிவேப்பிலை

கரிவைரி = வெள்ளைப்பாடாணம்

கரினா = பூனைக்காஞ்சொறி

கரினி = பெண்யானை

கரிஷ்டம் = பாலைக்கொடி

கரீட்டகம் = பவளம்

கரீயகம் = வெள்வேல்

கரீரமா = மூலபவுத்திரம், நெபத்திகை

கரீரம் = அகத்தி, தெங்கு, விடதாரி, யானைப் பல்லடி, அகத்திக் கருவேல், கும்பம், யானை, பாகல்

கரு = முட்டைக்கரு, பிறப்பிடம், சுக்கிலம், முட்டை, மருக்காரை

கருகந்து = நத்தை

கருகாஞ்சோறி = சிறுகாஞ்சொறி

கருகுமிளை = நிமிளை

கருகூலம் = கருப்புக்கட்டி

கருகை வாக்குவை = கலம்

கருகாத்தாமரம், கருகரத்தூரா = கருக்குவாளி

கருக்கா = கொன்னை

கருக்காய் = இளங்காய்

கருக்கு = பனைமட்டைத் தண்டிலிருக்கும் முள்

கருக்குடி = சவர்க்காரம்

கருக்குருமான் = கரிக்குருவி

கருக்குவா = கருக்குவாச்சி எனும் கருவாலி

**கருக்கொட்டான் = கருக்குவாச்சி மரம்**

**கருங்கசன், கருங்கஞ்சம், கருங்கஞ்சன், கருங்கஞ்சனம் = வெண்கலம்**

**கருங்கட்டான் = கருப்புக்காக்கட்டான்**

**கருங்கத்தி = வெண்கருங்காலி**

**கருங்கந்தன் = கருங்காந்தள்**

**கருங்கல் = தீமுறுகற்பாஷாணம்**

**கருங்கற்றாழை = யானைக்கற்றாழை**

**கருங்காகமாசி = கருந்தக்காளி**

**கருங்காஞ்சோறி = கருப்புக்காஞ்சொறி**

**கருங்காணம் = கருப்புக்கொள், காட்டுக்கொள்**

**கருங்காலகம் = கருப்புமிளகு, தக்காளி**

**கருங்காலி = உடுக்கை மரம், அவுரி, உளுந்து, கார்போகி, பாபஞ்சி, மருந்துண்டை, கருங்குவளை**

**கருங்காவி = கருங்குவளை, எட்டி, அவுரி, மருந்துண்டை**

**கருங்கிரை = கருமண்**

**கருங்குதளை = நீலோற்பலம்**

**கருங்குத்திரிக்கம் = கருங்குங்கிலியம்**

**கருங்குமிரி = காகோளி**

**கருங்குரா = காட்டுக்கரணை**

கருங்குரோசிகம் = குரோசாணி ஓமம்

கருங்குவளை = நீலோற்பலம்

கருங்குவளைக் கிழங்கு = குவளையின் வேர்

கருங்குறிஞ்சா = மிளகு தக்காளி

கருங்கேசம் = வெண்கலம்

கருங்கையான் = கருப்புக்கரிசாலை

கருங்கொட்டி = கருநெய்தல், கருங்கோல், இரும்பு, கொட்டி

கருங்கொட்டை = கருக்குவாய்ச்சி

கருங்கோல் = இரும்பு

கருசிரங்கம் = கருஞ்சீரகம்

கருஷபலம் = தான்றிக்காய்

கருஷம் = கிரந்தி, கச்சோலம்

கருச்சாரம் = சவ்வீரம்

கருச்சீவல் = கடற்பாசி

கருஞ்சத்திரகம் = குருக்கு

கருஞ்சனம் = முருங்கை, முருங்கை மரம்

கருஞ்சாட்டியம் = கருந்துவரை

கருஞ்சாலிகம் = எலுமிச்சை

கருஞ்சாளி = காண்டாமிருகம்

கருஞ்சிட்டம் = கடுகுரோகணி

கருஞ்சிலி = குறிஞ்சா

கருஞ்சிலை = கருங்கல் கெண்டி

கருஞ்சிவரி = கழுதைத்தும்பை

கருஞ்சீரகம் = சனி, ஞாயிறு

கருஞ்சீல் = பேய்ச்சீந்தில்

கருஞ்சுக்கான் = கரும்மிறை, சுக்கான்கல்

கருஞ்சுக்கிரன் = ஒருவகைக் கண்ணோய்

கருஞ்சுரை = சுரை

கருஞ்சூகம் = அகசம்பங்கி

கருஞ்சூரசம் = செங்கத்தாரி

கருஞ்சூரை = செங்கத்தாரி, சூரை, செங்கத்தாரிபட்டை

கருஞ்செங்கை = கொத்துமல்லி

கருஞ்சேதகம் = கருஞ்சீரகம்

கருஞ்சேரன், கருஞ்சோளம் = அகில்கட்டை

கருஞ்சோன் = அகில்

கருடக்கல் = கருடபச்சைக்கல்

கருடக்கொடி = பெருமருந்துக்கொடி, குறிஞ்சா

கருடசாரம் = சிந்துலவணம்

கருடதெண்டை = காக்கணம், கோவை

கருடமூக்கு = தேள்கொடுக்கி

கருடம் = மருக்காரை

கருடர்கண்ணர் = சந்திரன்

கருடன் = கொல்லன் கோவை, செம்பருந்து, கருடப் பட்சி, ஆகாசகருடன், பாதாள கருடன்

கருடன் கிழங்கு = பெருமருந்து, ஆகாச கருடன் கிழங்கு, கொல்லன் கோவை, சாகாக்கிழங்கு

கருடன் கொடி = கொல்லன் கோவை, சீந்தில்

கருடன்முள் = துளசி

கருடா கணத்தி = காக்கணத்தை

கருட்டை = எலி

கருணகாஞ்சம் = சிறுபுங்கு

கருணம் = தாமரை பூங்கொட்டை, பூவினுட கொட்டை

கரணை = கரணை, பொரியல்

கருநஞ்சிப்பயிறு = சிறுபனிப்பயறு, சிறுதுவரை

கருநந்து = நத்தை

கருநாககாரி = காரியம்

கருநாகத்தி = காட்டாத்தி

கருநாகம் = கருவங்கம்

கருநாகவி முதிச்சி = சத்திச்சாரணை

கருநாங்கு = நாகசம்பங்கி மரம்

கருநாபி = கருநாவி, கல்லுப்பு, அண்டச்சுண்ணம்

கருநாரகம் = காட்டீருள்ளி

கருநி = முத்துச்சிப்பி

கருநிறம் = கருமை, கந்தபாஷாணம்

கருநிறமலச்சி = குன்றிமணி

கருநிறவாயு = கரியமிலவாயு

கருநீர் = பனிக்குட நீர்

கருநீலக்குருத்து = மூவிலைக்குருத்து

கருனைமுன்னை = எருமை முன்னை

கருணைரவி = கரும்பு

கருணைவாசி = கிச்சிலி

கருண்டோதி = கருந்துளசி

கருதயம் = கழுதை

கருதரன் = தசவாயுவிலொன்று

கருதாகண்டகம் = சிறுகாஞ்சொறி

கருதுதையம் = குதிரை

கருதுருவாதி = கல்லுப்பு

**கருதேக்கு = சிறுதேக்கு**

**கருத்தகாக்கட்டான் = காக்கட்டான்**

**கருத்தச்சம் = புறங்கை நாறி**

**கருத்தநிறத்தி = கருவூமத்தை**

**கருத்த மலைச்சி = கருங்குன்றி**

**கருத்தவம் = கழுதை**

**கருத்தன் = அருகன், அஞ்சன பாஷாணம்**

**கருத்தொண்டை = காக்கணங்கோவை**

**கருநெய்தல் = கருங்குவளை, நீலோற்பலம், நீலம்**

**கருநெல்லி = மிளகு, நஞ்சுக்கொடி, உச்சிலிந்தி, கருப்பு நெல்லி, சகலசித்தி**

**கருநெறி = நெருப்பு**

**கருநொச்சி = நொச்சி**

**கருநொச்சிகம் = இந்திரியம்**

**கருந்தகரை = தகரை**

**கருந்தகி = காக்கைக்கொல்லி விதை**

**கருந்தண்பை = கருப்புத் தாமரம்**

**கருந்தணல் = செந்நாயுருவி**

**கருந்தந்தீகம் = இரசகற்பூரம்**

**கருந்தானம் = நாணல்**

கருந்தாது = இரும்பு

கருந்தாறிதம் = கற்பூரம்

கருந்தினை = தினை

கருந்திப்பிலி = யானைத்திப்பிலி

கருந்தும்பிரா = கற்பூரவல்லி

கருந்தும்பை = கருப்புத்தும்பை, கதும்பை, பேய்மருட்டி, கருங்காலி, கருப்பு மரம்

கருத்துருபயன் = மிளகு

கருந்துலிகம் = காடி நீர்

கருந்து வரை = தோதகத்தி, துவரை, கருப்புத்துவரை, மரவிஷேடம்

கருந்துளகம் = கற்பூர வெற்றிலை

கருந்துளசி = துளசி

கருந்துளபம் = கருந்துளசி

கருந்தேகி = கருங்கழுதை

கருந்தேனகம் = தொடரி

கருந்தேன் = கொம்புத்தேன்

கருந்தொட்டி = சிற்றாமுட்டி

கருந்தொண்டை = காக்கணாஞ்செடி

கருந்தோல் விரல் = நூக்கமரம்

கருந்தோழி, கருந்தோளி = அவுரி

கருபாதினி = கலப்பைக்கிழங்கு, பேய்க்கரும்பு

கருபாரு = மரகதம்

கருப்பக்கீரை = சாணாக்கீரை

கருப்பக்கு = கருமருது

கருப்பதாகம் = செம்முருங்கை

கருப்பதூம்பிரம் = நீர்மேல் நெருப்பு

கருப்படம் = கந்தல்சீலை, ருதுச்சீலை

கருப்பட்டி = கரும்பினின்றும் எடுக்கப்படும் இனிப்புப் பொருள்

கருப்பம்மான் பச்சரிசி = கருப்புசித்திரம், பாலாவி

கருப்பம்வேர் = கரும்பின் வேர்

கருப்பன் = கரகபாஷாணம், காக்கை

கருப்பாதம் = செம்முருங்கை

கருப்பு = இரும்பு

கருப்பிலவு = முள்ளிலவு

கருப்பி = கருநொச்சி, சட்டை

கருப்புக்காஞ்சோரி = சிறுகாஞ்சொறி

கருப்புக்காய் = உருத்திர நங்கை

கருப்புக் காஞ்சோறி = சிங்கிபாஷாணம், நீலபாஷாணம்

கருப்புக் கொடிவேலி = காகநிமிளை, மீனம்பர்

கருப்புநாவல் = சம்புநாவல்

கருப்புப்பில்லாஞ்சி = பூலாஞ்சி

கருப்பு மரம் = நூக்கமரம்

கருப்பு மாதிறம் = கருவூமத்தை

கருப்பு மொச்சை = காட்டுமொச்சை

கருப்பூரம் = பொன்

கரும்பை = காரெலி, எலி கருமேந்திரியம், இந்திரியம்

கருப்போடம் = கடுகுரோகணி

கருமகரமே தோரி = கருவேல்

கருமருது = இரும்பிலி

கருமருதை = கருங்கொடி

கருமலாகி = நாயுருவி

கருமா = பன்றி, யானை

கருமாடக்காரி = ஓணான்

கருமாமிர்தம் = கழுதைத்தும்பை

கருமாலிகை = பேரீச்சம்பழம்

கருமாவெயிரு = பன்றிக்கொம்பு

கருமான் = கலைமான், பன்றி

கருமுகில் = கார்முகிற் பாஷாணம், காக்காமூக்கு

கருமுகில் சிலை = காக்கை சீலை, பாஷாணம், காந்தக்கல்

கருமுகில் மேனி = கருவாகை

கருமுகில் வானம் = தீமுறுகற் பாஷாணம்

கருமுகிற்கல் = காந்தக்கல்

கருமுகை = மஞ்சாடி, இருவாட்சி, செண்பகம், முல்லை

கருமகள் = காக்கை

கருமகா = கருவேல்

கருமகாலி = பெரும்பாடு

கருமஞ்சரி = நாயுருவி

கருமஞ்சாரிகம் = காட்டு வெண்டை

கருமணலின்வாரி, கருமணல் = உலோகமணல்

கருமணலின் சரக்கு = கருஞ்சுரை

கருமணி = கண்மணி

கருமத்தம், கருமத்தன் = கருவூமத்தை

கருமமூலம் = தருப்பை

கருமம் = கருவாமுப்பு, பொட்டிலுப்பு

கருமயிகடம் = எருமை

கருமயிர் = கரடி

கருமரமாத்தி = வெண்காயம்

கருமூலிகை = தோல், இறைச்சி, எலும்பு முதலானவை

கருமேகன் = துரிசு

கருமேதை = எருமை, மாட்டின் கொம்பு

கருமேந்திரியம் = ஐந்து; அவை- வாக்கு, பாதம், பாணி, பாயுரு, உபர்த்தம்

கருமை = வெள்ளாடு, கொடுமை, கருப்பு

கருமோலி = காத்தொட்டி

கரும்பசம் = வண்டு

கரும்பசலி = கருப்புப்பசலை

கரும்படை = மேகப்படை

கரும்பந்தன் = சாரைப்பாம்பு

கரும்பி = கருவண்டு

கரும்பிள்ளை = காக்கை

கரும்புரசேவிதம் = காட்டெள்ளு

கரும்புல் = பனைமரம்

கரும்புள் = வண்டு, குடிலைச்சி, ஊன், ககதண்டு

கரும்புள்ளிக்கல் = கானக்கல்

கரும்பூ = நீலோற்பலம்

கரும்புறம் = பனை, பனைமரம்

கரும்பூரம் = பனை

கரும்பூனகம் = கருநெல்லி

கரும்பை = நாயுருவி, எலி, கரடி, காடி, காடை

கரும்பொனி = இரும்பு

கரும்பொன் = இரும்பு, அபினி

கரும் பொன்னர் = கருவங்கம்

கருமேகன் = துரிசு

கருலோகம் = இரும்பு, தரா, தார்

கருவஞ்சி = எழுத்தாணிப் பச்சிலை

கருவண்டுநாபி = நவச்சாரம், காஞ்சொறி, தொட்டி பாஷாணம், இரும்பு

கருவம் = மருதமரம்

கருவம்பம் = திருகுகள்ளி

கருவர்ணசாரம் = காசிச்சாரம்

கருவழலை = கரும்பாம்பு, இராசமாநாகம்

கருவளையல் = வளையலுப்பு

கருவளைச்சுக்கான் = கருஞ்சுக்கான்

கருவா = இலவங்கமரம், கருவாமரம்

கருவாசினம் = மூங்கில்

கருவாசம் = வெள்ளரி

கருவாதியுப்பு = பூரணாதியுப்பு

கருவாபிஞ்சம் = எலிப்பயிறு

கருவாப்பட்டை = சன்னலவங்கப் பட்டை, இலவங்கப் பட்டை, கருவேலம் பட்டை

கருவாப்பூ = இலவங்கப்பூ

கருவாழுப்பு = வெடியுப்பு, மனம், கருப்பம், முதன்மையான விலங்கு, புஷ்பம், உப்பு, மஞ்சள் கரு, வெண்கரு

கருவாயம் = சாராயம்

கருவாயப்பட்டன் = சூடன்

கருவாலி = கருக்குவா, கவுதாரி

கருவாலிகம் = காரைச்செடி

கருவாள் புஷ்பகத்தரவு = கருப்பரிசி

கருவிஞ்சி = கருநொச்சி

கருவியுப்பு = பூரணாதியுப்பு

கருவிரதாரம் = கடுகுரோகணி

கருவிருகணம் = காட்டெள்

கருவிலாகிதம் = வில்வமரம்

கருவில்லி = ஆண்பிள்ளை

கருவிழி = கண்மணி

கருவிளம் = காக்கணான் செடி

கருவிளா = வில்வம்

கருவிளாதிகம் = கீரைத்தண்டு

கருவிளை = காக்கணஞ்செடி, காக்கணங் கொடி, காக்கணம்

கருவீட்டுப்பு = அண்டவுப்பு

கருவீ = காக்கை

கருவீடு = நஞ்சுக்கொடி

கருவீரிகம் = குல்கந்து

கருவுநாதம் = விந்து

கருவுப்பு = கல்லுப்பு, பிலால வணம், கருப்புப்பு, பிண்டவுப்பு

கருவுள்ளி = பேயுள்ளி

கருவூர் = வஞ்சிக்கொடி

கருவென்ற சாரம் = காய்ச்சுலவணம், ஆறாங்காய்ச்சலுப்பு

கருவேம்பு = கறிவேப்பிலை

கருவை = வைக்கோல், வரகு வைக்கோல், குகைக்கல்

கருவோளி = இரசம்

கருவோடு = பேரண்டம் அதாவது தலைமண்டை

கருள் = கருப்பு

கருணம் = சாடி

கருனன் = கருடன்

கருனொச்சி = நல்வயல்

கரேடு = சிறுவசலை, கொடிவசலை

கரேனு = யானை, பெண் யானை, வெண்ணாங்கு

கரேறு = பெண்யானை

கரை = தாளிப்பனை, ரத்தம், உரல், யானை, மாத விடாய், மாசி நிறம், கருப்பு

கரைகண்டர் = துரிசு

கரைகாணுமாது = கழுதைத்தும்பை

கரைக்கல்லோலம் = கடற்பாசி

கரைக்கல்லோலன் = நீர்ப்பாசி

கரைசிலை = இந்துப்பு

கரைஞ்சால், கரைஞ்சான் = அகில்

கரைஞ்சோன் = அகில்கட்டை

கரையடி = யானை

கரையரிக்கும் மனல் = கருமணல்

கரையான் = செல்

கரைவிரி = கரும்பு, கம்பு

கரோகம் = நகம்

கரோடிகை = கழுதை

கரோமம் = கை, கழுதை

கரோமியம் = பெருவேம்பு

கரோருகம் = நகம்

கரோர்த்தினி = எட்டி

கலகசெந்தயன் = விச்சுளி (சிறுபறவை)

கலகண்டம் = அன்னம், குயில், புறா

கலகமிடாண்டி = எருமை முன்னை

கலகம் = தும்பைச்செடி, வன்னி மரம், தான்றிக்காய், துருஷ்கம், எருக்கு, குங்கிலிய மரம்

கலகி = கோலப்புன்னை, நரிவால்

கலகிநீ = மருட்கிழங்கு

கலகை = கத்தூரி மான்

கலக்கம் = அமுதம்

கலங்கம் = காஞ்சிலை, காக்கை, வெள்ளி

கலங்காயம் = காத்தாயம்

கலங்கிண்ணி = வெண்கலம்

கலசம் = குடம், பால், தாமரை, வெண்கலம், அப்பம், நீர், கஞ்சா, கற்கடக பாஷாணம்

கலசி = பெருமல்லிகை

கலசித்தியல் = சிற்றாமல்லி

கலச் = பெருமல்லிகை

கலசீருகை = கண்குத்துக்கிழங்கு, கண்குத்துக்காய்

கலச்சுரை = கும்பச்சுரை

கலஞ்சாரி = கோரோசனை

கலதம் = உரோமம்

கலதவுதம் = வெள்ளி

கலபத்திரம் = அரசு

கலப்பை = நாஞ்சில், லோகம், கனலிடும் பொருள், முகப்போர்

கலப்பைக் கிழங்கு = கார்த்திகைக் கிழங்கு

கலநவுதம் = வெள்ளி

கலமா = மாக்கல், பற்பக்கல்

கலமுரசு = சாந்து

கலம் = வெண்கலம், மரக்கலம்

கலம்பகம் = துழாவல், கலவை

கலம்பம் = தாலம்ப பாஷாணம், கடப்பமரம்

கலம்பாதி = கர்ப்பூரவெற்றிலை

கலம்பி = கொடிப்பசலை, கொத்துப்பசலை

கலயகம் = செங்கழுநீர்

கலரி = எருமை

கலவகம் = காக்கை, பொன்

கலவகை = நால்வகைச்சத்து

கலவசம் = காக்கை

கலவம் = மயிற்றோகை

கலவரம் = புறா, குயில்

கலவாயோடு = கடல் நுரை

கலவிங்கம் = குயில்

கலவை = சாந்து

கலவைச்சேறு = பரிமளச் சேறு

கலனம் = பெரும்பாடு

கலாகிஞ்சு, கலாகிஞ்சுகம் = கறுப்புவாகை

கலாங்கண், கலாங்கம், கலாங்கழி = துத்தபாஷாணம்,

கலாசந்தம் = தாமரைக்கிழங்கு

கலாசி = உவரி, உவாரி

கலாநிதி = சந்திரன்

கலாபம் = மயில் தோகை

கலாபி = ஆண்ம யில், மயில், மயிலிறகு

கலாபிருந்து = சந்திரன்

கலாபூ = பீர்க்கு

கலாம் பூரம், கலாம்பூர் = கருப்புநிற பச்சைக்கற்பூரம்

கலாயம் = பட்டாணி, மோர், தயிர், வெட்பாலை அரிசி

கலாரம் = மஞ்சள்

கலாலாபம் = வண்டு

கலாவல் = துழாவல்

கலாவிசம் = கோழி

கலாவு = பீர்க்கு

கலி = பெருவழுதலை, தாமரை, தான்றிக்காய், கடல்

கலிகம் = கற்பரிபாஷாணம், வன்னிமரம்

கலிகாரகம் = வறட்சுண்டி, ஆடு தின்னாப் பாளை

கலிகாலிதாது = சேவகனார் கிழங்கு

கலிதி = குருந்தில்

கலிகை = இளம்பூவரும்பு, உசில மரம், நாக மல்லி, சீக்காய்த்தூள்

கலிகொட்டு = கழற்சி

கலிக்கல் = கற்பரி பாஷாணம்

கலிக்கால் = முடவாட்டுக்கால்

கலிங்கத்துருமம் = தான்றிக்காய்

கலிங்கம் = ஆற்றுத்தும்மட்டி, தேசம், ஊர்க்குருவி, குடசப்பாலை, கண் மருந்து, பாசி, வானம் பாடி, குதிரை, ஆடை, விடப்பாலை, மிளகு, வெட்பாலரிசி

கலிங்காதீகம் = நாய்ப்பாகல்

கலிங்குது = தான்றி

கலிசம் = வன்னி மரம்

கலிசிகல் = குருக்கல்

கலிஞ்சிகம் = மீன், வன்னி, கலிசம், வாகை

கலிதம் = பெரும்பாடு

கலிதி = திப்பிலி

கவிதை = வலம்புரிக்காய்

கலித்துருமம் = தான்றிக்காய்

கலிந்தன் = சிற்றரத்தை

கலிந்துரு, கலிந்துருனா = தான்றி

கலிப்பு = தரா

கலிமதி = மருது

கலிமரக்காய் = தான்றிக்காய்

கலிமாகம் = கிலுகிலுப்பை

கலிமாங்கம் = அகில்

கலிமாரகம் = கிலுகிலுப்பை, மயிலச்செடி

கலிமாலகம் = கலிமங்கம், அகில்

கலிமுதலை = கத்தூரி

கலிமுள்ளு = எலிமுள்ளு

கலியகம், கலியம் = வெட்பாலையரிசி

கலியாச்சா = பசலாத்தி

கலியாணம் = பொன்

கலியாணி = பொன், நிலப்பனை, நீர்க்கடம்பு

கலிலாரம் = உற்பலத்திரயம்

கலிவனம் = தராகாந்தம், கார் போகி விதை, மஞ்சிட்டி

கலிவிருட்சம் = தான்றிமரம்

கலினம் = கற்பரிபாஷாணம்

கலினார் = வால்மிளகு

கலினி = திரிபலை, திப்பிலி

கலினை = மிளகு, கொள்ளு, கீழாநெல்லி, கழற்சேம்பு

கலின் = திப்பிலி

கலீரம் = முறுக்கு

கலுடம் = கலங்கல்நீர்

கலுவடம் = பூவரும்பு

கலுழக்கல் = கருடப்பச்சிக்கல்

கலுழம் = கலங்கனீர்

கலுழன் = கருடன்

கலுழி = கலங்கல் நீர், காட்டெருமை, காட்டெரு

கலுழ் = கலைவல்லோர், ஆண்மான், ஆண்முசு, சிலை

கலுளி = காட்டெருமை, காட்டெரு

கலேகம், கலேயகம், கலேயம் = மஞ்சள்

கலை = சுறாமீன், மகரமீன், காரைக்கீரை

கலைநாறி = கத்தூரி

கலை நீராக்கி = மாமிசபேதி

கலைப்பதி = பெருஞ்சின்னி

கலைமான்மூலி = திருகுகள்ளி

கலையம் = கயிறு, குடம்

கலைவல்லோர் = காஞ்சிமரம்

கல் = குதிரைப்பல்பாஷாணம்

கல்கண்டுடத்தி = கருநாகம்

கல்கபரி = பெருங்காயம்

கல்கபலம் = மாதுளை

கல்கம்பி = பூதத்தான்றி மரம்

கல்கலிங்கி, கல்களிஞ்சி = சிவப்பு அகில்

கல்கோரை = வசுவாசி

கல்சூரி = கழற்கொடி

கல்துரிஞ்சி = கருவாகை

கல் நாதம் = அன்னபேதி, கல்லுருவிப்பூடு, கல்மதம்

கல்நீராக்கு = மாங்கிஷபேதி

கல்பட்டன் = காட்டுவெக்காலி

கல்பந்தா = கற்றாழை

கல்பாதி = கல்லத்தி

கல்புகப்பிரமம் = கல்லாரை

கல்பூரம் = பொன்னாங்காணி

கல்மதமாலி = நெய்க்கொட்டான் மரம்

கல்மரம் = கருஞ்சந்தனம்

கல்மரிக்கல் = சுக்கான்கல்

கல்மா = காட்டுமா

கல்முசு = மகரமீன், மரவயிரம், பெண், துகில், புடவை, மூவாட்டுக்கால்

கல்முசுப்பிரமம் = கல்லாரை

கல்முரசு = கப்பிட்டிமரம்

கல்முராகி = குன்றிமணி

கல்முருக்கு = கலியாணமுருக்கு

கல்மூளை = சுண்ணாம்பு

கல்யாணம் = நால்வகைச் சாந்து

கல்யானை = காண்டா மிருகம்

கல்லகம் = மலை

கல்லகாதிகம் = பாம்புக்கொல்லி

கல்லகாயம் = செங்குவளை

கல்லகாரகி = கொட்டைக்கரந்தை

கல்லகாரம் = செங்குவளை, பனை, வெல்லம், நீர்க்குமிழ், நீர்க்குளரி

கல்லக்காரம் = பனங்கற்கண்டு

கல்லங்கோரை = கோரை

கல்லடி = தீமுறுகற்பாஷாணம்

கல்லடிச்சேம்பு = பேய்ச்சேம்பு

கல்லடிமூலம் = கற்கடகபாஷாணம்

கல்லத்தி = அத்தி

கல்லம் = செவிடு, மஞ்சள்

கல்லரவிந்தம் = கல்தாமரை, இத்தி

கல்லரணை = பூநீறு, உத்தாமணி

கல்லரைத்தான் = தான்றிக்காய்

கல்லவி = கச்சவிர்ப்பூடு

கல்லறம் = மஞ்சள்

கல்லறவிந்தம் = கற்றாமரை

கல்லாகம் = செங்குவளை

கல்லாமணக்கு = புல்லாமணக்கு

கல்லாரம் = மஞ்சள், நீர்முள்ளி, செங்குவளை, நீர்க் குளிரி, கருங்குவளை, கல்லசாரம், கரந்தை, செங்கழுநீர்

கல்லார்மா = அண்டிமா

கல்லாலம் = கல்லால், கற்றாமரை

கல்லால் = விழுதில்லா ஆலமரம், ஆல்

கல்லாவிதம் = கல்தாமரை

கல்லாளிகம் = குருந்து

கல்லான்காரி = கல்வாழை

கல்லி = ஆமை, ஊர்க்குருவி

கல்லிகை = நாகமல்லிகை

கல்லிசிலைக்காய் = நாய்த்தேக்கு

கல்லிச்சி = கல்லித்தி மரம், இஞ்சி

கல்லிந்தாரம் = நீலாஞ்சனம்

கல்லிபம் = அலரி

கல்லியசிங்கி = கற்கடகசிங்கி

கல்லியம் = கள், சாராயம், மது, கடுக்காய்ப்பூ

கல்லிழலங்காய் = கல்லிசிலைக்காய்

கல்லிறாமூலி = அழுகண்ணி

கல்லின்காரம் = கல்நார்

கல்லீகம் = குமிழ்

கல்லீசம் = வன்னி

கல்லீயம் = நீலாஞ்சனம்

கல்லீரம் = முருக்கு

கல்லீனியம் = நீலாஞ்சனக்கல்

கல்லு = கல்லுருவி

கல்லுகம் = பெருவாகைமரம்,

கல்லுக் கலைத்தான் = பொன்னாங்காணி

கல்லுக் குதைச்சு = அளும்பு

கல்லுக்குரைத்தான் = பொன்

கல்லுக்குள் சவளை = கல்நார்

கல்லுக்குள்சுதம் = கல்மதம்

கல்லுக்கொடி = கல்லுருவி

கல்லுசிலைக்காய் = நாய்த்தேக்கு

கல்லுணி = புல்லுருவி, குருவிச்சை, நத்தைச்சூரி

கல்லுதெத்தான் = பொன்னாங்காணி

கல்லு நீராக்கி = மாங்கிஷபேதி

கல்லுப்பரசிதம் = வரிக்கற்றாழை

கல்லுப்பீனசம் = கல்லடி சேம்பு

கல்லுப்பொருக்கி = தூதணம் எனும் புறா

கல்லுமா = காடிலை, கோங்கை

கல்லுயிர் = சாத்திரபேதி

கல்லுராய்ஞ்சி = நண்டு கண்ணுப்பூடு, குன்றிமணி

கல்லுருணி = குருவிச்சி, புல்லுருவி

கல்லுருவி = புல்லுருவி, நீர்மேல் நெருப்பு, சிறுமுலை வேர்

கல்லுரைத்தான் = பொன்

கல்லுளான்கல் = கருடக்கல்

கல்லுளி = பேய்க்களா, மலைக்களா, பேய்ச்சுரை

கல்லுறவாலி = குதிரைவாலி

கல்லுறுளி = குருவிச்சி, புல்லுருவி

கல்லுறுந்தல் = கல்லடைப்பு

கல்லுறைத்தான் = பொன்னாங்காணி

கல்லூசி = ஒரு மருந்துக்கல், கல்நார்

கல்லூஞ்சை = கல்துரிஞ்சி

கல்லூரணி = குருவிச்சு, புல்லுருவி

கல்லூரி = கல்நார்

கல்லெல்லாஞ் சத்தாம் = வேகவைத்த கொள்ளு

கல்லை நீராக்கி = மாங்கிஷ பேதி

கல்லொட்டி = நத்தை

கல்வசமாதி = நாயுருவி

கல்வம் = துலாவல், கலுவம்

கல்வருக்கை = காட்டுப்பலா

கல்வளை = மலைபிளப்பு

கல்வாழை = சிலைவாழை, காட்டு வாழை, மலைவாழை

கல்வீதி = ஈயம்

கல்வியதுரி = கல்லூரிச்செடி

கல்விஷக்கரந்தை = கல்லரளி

கல் விருசு = மலைவிருசு கல்

வீரியம் = அன்னபேதி

கல் வெள்ளி = வெள்ளி

கல்வெள்ளங்கு = காட்டுப்பச்சிலை

கல்வேகம், கல்வேகிகம் = அன்னபேதி, கல்வீரியம்

கல்வேதம் = கல்வீரியம்

கல்வேதி = சாத்திரபேதி

கவகம் = காளான், பற்பாடகம்

கவஞ்சகம் = கரும்பு

கவடகம் = வெண்கடம்பு

கவடச்சி = வெட்பாலை, எவட்சாரம்

கவடாக்கட்டி = வசம்பு

கவடி = பலகரை

கவடிதகாரம் = படிக்காரம்

கவடு = சோம்பு, மரக்கொம்பு, யானை கட்டுங்கயிறு

கவணம் = கட்டுமருந்து

கவந்தம் = நீர், முண்ட ம், பேய், உடற்குறை

கவந்தித்தோண் = பற்பாடகம்

கவமு = கருஞ்சீரகம்

கவம் = கோழை

கவயமா = காட்டுப்பசு

கவயம் = காட்டெருமை

கவயல் = காட்டுப்பசு

கவரச்சு = பூவரசு, எவட்சாரம்

கவராடகம் = கற்கோவைச்செடி

கவரி = எருமை, கவரிமான், சாமரம்

கவரியம் = கூந்தற்பனை

கவரியா = வாழை

கவரு = கொம்பு

கவரெழு சங்கம் = சங்கஞ்செடி, முட்சங்கு

கவர் = கிளைகள், மரக்கொம்பு, வாழை

கவர்ச்சி = வெள்ளைக்காக் கணம், கமுக்கை

கவர்தல் = தழுவல், புணர்தல், கடைதல், இச்சித்தல்

கவர்மண் = உவர்மண்

கவலங்கொடி = கவலைக்கொடி

கவலம் = எருமைக்கொடி

கவலி = கவலைக்கொடி

கவலிகம் = கொத்தவரை

கவலிகா = செந்தினை

கவலிகை = பஞ்சு

கவலியம் = நரிவழுக்கை

கவலுதல் = கவலித்தல்

கவலை = தினையரிசி, ஒருகொடி, செந்தினை, சஞ்சலம், தண்ணீர்

கவலைக்கொடி = கவலங்கொடி

கவளமான் = யானை

கவளை = செந்தினை, ஒரு கொடிக்கம்பு

கவள் = காந்தற் பாஷாணம்

கவறிறுக்கு = கடவுமரம்

கவறு = பனைமட்டை

கவற்சீரகம் = பிளவுச்சீரகம்

கவனக்குளிகை = சித்தர்குளிகை

கவனி = கொன்றை, கந்தக பாஷாணம்

கவா = வெள்ளைக்காக்கணம், இளங்கொம்பு, கவர்ச்சி காட்டு மல்லிகை

கவாக்கட்டி = வசம்பு

கவாச்சி = வெள்ளைக் காக்கணம்

கவாடக்கட்டி = வசம்பு

கவாட்சி = பேய்க்கொம்மட்டி

கவாடம் = வெட்பாலை, அபினி, கவாடமருந்து

கவாடவடகம் = கட்டுவாங்குளிகை

கவாதிணை = கோமூத்திர சிலாசத்து

கவாப்பிரியம் = சாமை

கவாம் = அரளி

கவாரம் = தாமரை

கவாவப்பிரியம் = சாரை

கவாவு = பீர்க்கு

கவாளம் = குதிரைபேதி மருந்து, புண்ணாற்று மருந்து, காயக்கட்டு

கவான் = தொடை

கவி = மந்தி, குரங்கு, புலவன், வெள்ளி, பூனைக்காலி, முருங்கை

கவிகச்சு, கவிகச்சுறா, கவிகச்சூ, கவிகச்சூரம் = பூனைக்காலி

கவிகட்டை = காட்டத்தி

கவிகம் = குக்கிலி, குக்கில் பிசின்

கவிகுருங்கம் = கந்தக பாஷாணம்

கவிகை = நாகமல்லிகை

கவிசம் = வன்னிமரம்

கவிசாகம் = பூனைக்காலி

கவிசி = கவசம் செய்தல்

கவிசினம் = கோவணம்

கவிசை = ஒருவயிற்று நோய்

கவிச்சீரகம் = வெண்துவரை

கவிஞன் = வெள்ளி

கவிட்சு = ரப்பர்பால் (அத்தி)

கவிதனம் = காட்டுவாகை

கவிதுசம் = குக்கில்

கவித்தம் = கடுகுரோகணி, விளாமரம்

கவித்துரு = தான்றிக்காய்

கவிந்தம் = விளா

கவிந்தி = அரேணுகம், வால் மிளகு

கவிந்துரு = தான்றி

கவிபலுகை = கடுகு

கவியகா = குராமரம்

கவியங்கம் = வெட்பாலை

கவியணம் = மராமரம்

கவியம் = காட்டெருமை

கவிரம் = அலரி, அலரிச்செடி

கவிரயாசம் = ஓட்டொட்டி

கவிரோமம், கவிரோம் = பூனைக்காலி

கவிர் = முள் முருக்கு, அலரி, முருக்கு (பலாசு)

கவிர்துருமம் = தான்றி

கவிழம் = மோர்

கவிழ்வேல் = குடைவேல்

கவிளம் = மோர்

கவினம் = மோர், வெண்ணெய், பன்னீர்

கவினி = சடைச்சி, திரிபலை

கவின் = திராட்சைப்பழம், அழகு

கவீதனம் = காட்டுவாகை

கவீரகம் = ஆடாதோடை

கவீரம் = கரவீரம், முள்முருக்கு

கவீர் = அலரி

கவீழ்கி = கம்மாறு வெற்றிலை

கவீனம் = வெண்ணெய்

கவுகம் = அம்மைப்பால்

கவுசி = கொன்றை, நரை

கவுசிகம் = குக்கில், கோட்டான்

கவுசீரா = நிலக்குமிழ்

கவுசுபான் = ஒருயுனானிச் சரக்கு

கவுஞ்சம் = அன்றில்

கவுஞ்சா = தாமரைமணி

கவுடகம், கவுடதம் = வெட்பாலை

கவுடி = செண்பகப்பூ

கவுடிகம் = குளிர்தாமரை

கவுடிகக்கண்டி = கவிழ்தும்பை

கவுட்டுப்பு = சவுட்டுப்பு

கவுடு = சோம்பு

கவுத்துக வாதம் = கலைஞானம்

கவுதம் = கிச்சிலிக்குருவி, வெள்ளி

கவுதரி = பலகரை

கவுதாரிப்புடம் = ஐந்து எருவில் போடும் புடம்

கவுதி = கொன்றை

கவுதும்பை = கவிழ்தும்பை

கவுந்தம் = கற்கடக பாஷாணம், மணிப்பாஷாணம், கோளக பாஷாணம்

கவுபதம் = வெட்பாலை

கவுபீதம் = புனம்புளி

கவுரம் = மஞ்சள்கரு

கவுரி = கவுரிபாஷாணம்

கவுரிவர்ணம் = மஞ்சள் நிறம்

கவுரிவான்வதி = மஞ்சள்

கவுரு = கொன்றை

கவுளியம் = பலகரை

கவுளீயம் = கரடி

கவுள் = மதம், கதுப்பு

கவூடகம் = நிலவேம்பு

கவூடம் = நாயுருவி

கவேதனம் = ஒருவகை வெள்ளரி

கவேது, கவேதுகை = காட்டுக் கோதுமை

கவேலம் = குவளை

கவை = எள், அகில், காடு, எள்ளின்காய்

கவைக்கால் = அகில், அகரு

கவைத்தாள் = நண்டு

கவையமா = காட்டுப்பசு

கவையம் = காட்டெருமை

கவையல் = மாதுளை, காட்டுப்பசு

கவோதம் = பேராமுட்டி

கவ்வல் = தினையரிசி

கவ்வியம் = நவநீதம், இது பூநீறு கோசலம், கோமயம், பால், தயிர், நெய்

கவ்வு = கருஞ்சீரகம்

கவ்வை = ஒலி, துன்பம், எள்ளிளங்காய்கள்

கழக்கொடி = தும்பை

கழங்கு = கழற்சிக்கொடி, காய்

கழச்சிவேர் = அதிவிடையம்

கழஞ்சி, கழஞ்சு = ஒரு நிறை 40 குன்றிமணி (அல்) 1 1/4 வராகன் எடை

கழப்பாகம் = வெண்மிளகு

கழர் = களாமரம்

கழலடி = கழற்சிக் கொடிவேர்

கழலாபு = பீர்க்கு

கழலி = திப்பிலி, பிரண்டை

கழலிலை = கழற்சியிலை

கழலை = சேற்றுமம், கட்டி

கழல் = கழற்சிக் கொடி, செருப்பு, பாதம்

கழல்மணி = கழற்சிக்காய்

கழளகம் = எலி

கழற்காய் = கழற்சி, கழற்சிக்காய்,

கழற்கொடி = கழற்சிக்கொடி

கழற்சி = கச்சைக்காய்

கழற்சிபதம் = அதிவிடையம்

கழற்பதி = பெருங்குமிழ்

கழற்பேதி = பாச்சான் கள்ளி

கழனி = நெய்தல்

கழனை = மாதுளை

கழாயம் = சிறுகீரை

கழாய் = கமுகு, சிறுகீரை

கழாய்வனம், கழாய்க்கூத்தர் = சிறுகீரை

கழாரம் = பாக்கு, கமுகு

கழாலக்கு = சிறுகீரை

கழாரம் = பாக்கு, கமுகு

கழி = உவர்த்தாரை, உப்பளம்

கழிகம் = வாலுளுவை

கழிஞ்சி = ஏரழிஞ்சில்

கழிநிலம் = உப்பளம், உவர்மண்

கழிப்பிரண்டை = கோப்பிரண்டை

கழிமுகம் = அருவி

கழிவாசல் = இரைப்பை

கழிவாறு = ஆறு

கழிவு = சாவு

கழிவிந்து = விந்து

கழு = கழுகு, காசம்

கழுகு = கூலி

கழுக்கான் = அழிஞ்சில்

கழுங்கு = வைரம்

கழுசி = சீந்திற்கொடி

கழுச்சி = சீந்தில்

கழுதிலை = கழுதைத்தும்பையிலை

கழுது = வண்டு

கழுதை = எள்

கழுதைக் காரிகம் = ஊணாங்கொடி

கழுதைக் குறண்டி = பூனைமுட்குறண்டி

கழுதைக் குளம்படி = வட்டக்குளம்படி

கழுதைப்பாடாண் = கிளுவை

கழுதைப் பாலாட்டங் கொடி = நஞ்சறுப்பான் கொடி, கழுதைப்பாலை, கருவேசரி

கழுதைப்பாலை = நாய்ப்பாலை, நஞ்சறுத்தான்

கழுதைப்பால் = நஞ்சறுப்பான்

கழுதைப் பாளை = நஞ்சறுபாளை, நஞ்சற்பாஞ்சன்

கழுதைப் புட்டைமரம் = அண்டிமாங் கொட்டை மரம்

கழுதை முள்ளி = கோழிமுள்ளி, கழுதை முள்ளிச்செடி

கழுதை வண்டு = குறுவண்டு

கழுத்தடி = கழுத்து

கழுத்திருக்குறள் = பூச்சி

கழுத்தூட்டி = தொண்டை

கழுநீர் = ஆம்பல், குவளை, செங்கழுநீர், உற்பலம், செங்குவளை

கழுநுழையாள் = ஒட்டகம்

கழுப்பாலை = நஞ்சறுப்பான்

கழுமீன், கழுமுள், கழுமுன் = மாதுளை

கழுவண்டம் = வைத்தியமுப்பு

கழுவாகதம் = குறிஞ்சா

கழுனை = மாதுளை

கழை = மூங்கில், கரும்பு

கள = களாச்செடி

களகண்டம் = குயில், கழுத்து, வீக்கம், தொண்டை எழுச்சி

களகபுதம் = வெள்ளரி

களகபூதம் = வெள்ளி

களகம் = எலி, பெருச்சாளி, சுண்ணாம்பு

களகயுதம் = வெள்ளி

களக்கலவை = சீதாங்கபாஷாணம்

களங்கசத்துரு = ஈயமணல்

களங்கம் = சுண்ணாம்பு, கருப்பு, சீதாங்கம், வெட்பாலை, கழற்சி, களிம்பு, கரும்பு, மாசு, நீலநிறம், சீதாங்க பாஷாணம், நில வேம்பு

**களங்கன் = சந்திரன்**

**களங்காசிகம் = சிவப்பு அந்திமல்லி**

**களங்காய் = மனோரஞ்சிதம்**

**களங்கி = களச்சி, கழற்சி**

**களங்கு = கழற்சி, மிருதார் சிங்கி, ஆதி, காரீயம்**

**களங்குமுறை = பலலோகங்கள் உண்டாக்குகிற இரசகுளிகை**

**களசி = கழற்சி**

**களசுவேதம் = அதிவிடையம்**

**களச்சாமா = புளி**

**களச்சுவேதம், களச்சுவேரம் = அதிவிடையம்**

**களஞ்சி = சூதக பாஷாணம்**

**களஞ்சிபாஷாணம் = சுக்கிலம்**

**களதபுதம் = வெள்ளி**

**களதம் = பெருச்சாளி**

**களதவுகம், களதூதம் = வெள்ளி**

**களதௌதம் = வெள்ளி, கண்ணாடி**

**களத்துயிர் = குழவி**

**களந்தியம் = அரேணுகம், ரேணுகம்**

**களந்தின்னி = தான்றி**

களந்துரி, களந்தூரி = தான்றி, தான்றிக்காய்

களந்தூன்றி = சாதிக்காய்

களபத்தி = பெருங்குமிழ்

களபம் = யானை, யானைக்கன்று

களப்பதி = பெருங்குமிழ்

களப்பரிதகம் = அரிதாரம்

களப்பன் = பெருங்குமிழ், களப்பன்றி

களப்பன்னை = கெந்தகமாஞ்சில்

களமம் = நெல்

களம் = காந்தம், கந்தகம், எலி, களச்சி, கழுத்து, தொண்டை, விஷம், கருப்பு, களர் நிலம், மிடறு, களாச்செடி

களரசம் = இரசம்

களரம் = புறா, காட்டுப்புறா, மயில்

களரவம் = காட்டுப்புறா, புறா, குயில்

களரி = காடு

களர் = களாமரம்

களர்க்காய் = கழற்சி

களர்மண் = உவர்மண்

களர்வா = கார்கோளி, கார் கோள்மரம்

களர்விழுதி = ஒருவகைமந்தாரை

களலை = சேத்துமம்

களல் = கழற்சி

களவம் = யானை

களவன் = நண்டு

களவு = களாச்செடி

களவுணி = சிறுகளா

களவுதம் = வெள்ளி

களற்காசிகம் = கொய்யாமரம்

களனை = மிளகு

களன் = நண்டு, ஊமத்தை கழுத்தடி, மயக்கம், தொண்டை, சிலேட்டுமம்

களா = சிறுகளா, முள்ளுக்களா, பெருங்களா, சொத்தைக்களா, கருஞ்செம்பை

களாகம் = சோளம்

களாக்காய் = கழற்சி

களாசி = சிறுகீரை

களாச்செடி = நஞ்சு

களாஞ்சு = தண்டங்கீரை

களாரம் = பாக்கு, கமுகு

களால் = சிறுகீரை

களாவகம் = சிறுகீரை, களாசி

களாவக்கு = சிறுகீரை

களாவம் = புறா

களாவி = தரா

களாவிழுதி = சிறுகுறிஞ்சான்

களாவு = சிறுகீரை

களி = வெங்கை, கள், மிளகு, கண்குத்துக் கிழங்கு, பெரும் பூசனி

களிகஞ்சா = கஞ்சாங்கோரை

களிகம் = வாலுளுவை அரிசி

களிகள் = குழம்பு

களிகை = நாகமல்லி, அரும்பு, பவளம்

களிக்கம் = வாலுளுவை

களிக்குரு = களிச்சுண்ணம்

களங்க மல்லிகை = கரபுஷ்பை

களிங்கம் = மரங்குத்திப்பறவை, வெட்பாலை

களிச்சத்தி = மிளகரணை

களிச் செம்மண் = பூங்காவி

களிஞா குடோச்சம் = கஞ்சாங்கோரை

களிஞ்சி = சிகப்பு அகில்

களித்துயர், களித்துயிர் = குளவி

களிநீர் = களிச்சாறு

களிந்தம் = ஏலம்

களிபகத்தும் = வண்ணான், கோடா சூரிபாடாணம்

களிபவம் = எலி

களிபூதி = வேங்கைமரம்

களிப்பாக்கு = மருந்து

களிப்பாங்காற்று = கோமேதகம்

களிப்பாசிதம் = கொய்யா, களற்காசிகம்

களிப்பிரண்டை = கோப்பிரண்டை

களிப்புக்கள்ளி = கொடிக்கள்ளி

களிப்புடையான் = கஞ்சா

களிப்புறா = மணிப்புறா

களிமம் = எலி

களிம்பு களிம்புக்கல் = அன்னபேதி

களியடைகாய் = களிப்பாக்கு

களியுப்பு = வழலை (அல்) முப்பு

களிரபம் களிர்வம் = முருக்கு

களிரினம்பு, களிறினம்பு = யானைத்திப்பிலி

களிறு = ஆண்பன்றி, யானை, சுறா, கள்வன்

களுக்காணி = அழிஞ்சில்

களுசி = சீந்தில்

களுப்பட்டான் = கிளுவை

களுமின் = மாதுளை

களேபரம் = உடல், எலும்பு, பிணம்

களை = மனோசிலை, மூங்கில், பெரும்பூசனி

களைதவம் = கொடித்துத்தி

களைதீர்க்கி = மயில் விசிறி

கள் = மகிழம், தேன்

கள்வன் = குரங்கு, பூநீறு, பூவழலை, நண்டு

கள்ளக்கடவி = கொடிநெல்லி

கள்ளங்கடலி = கருந்தொட்டி

கள்ளச்சி = வாழைப்பூவின் நரம்பு

கள்ள நாயகன் = வெளிச்சைப்பிசின்

கள்ளம் போக்கி = காரீயம்

கள்ளர்மலை = தகரம்

கள்ளன் = சோரபாஷாணம், கையாந்தகரை, கரல், விறகு

கள்ளா = தகரம்

கள்ளாம் = பலதகரம்

கள்ளாம்பல் = வெள்ளாம்பல், தகரம்

கள்ளாம் பிதம் = சதாப்பிலை

கள்ளி = திப்பிலி, கொடிக் கள்ளி, ஆட்டாங் கள்ளி, திருகுக்கள்ளி

கள்ளிக்காக்கை = செம்புகம்

கள்ளிக்கிரந்தி = கள்ளிப்பூக்கிரந்தி

கள்ளிக்குருவி = பன்றிக்குருவி

கள்ளிச்சிலைக்காய் = நாய்தேக்கு

கள்ளிச்சேம்பு = நீர்ச்சேம்பு

கள்ளி நாயகம் = நாங்குரவு

கள்ளி நாலுக்கும் பேர் = கொடிக்கள்ளி, சதுரக் கள்ளி, இலைக் கள்ளி, திருகுக்கள்ளி

கள்ளிப்பால் = காட்டு மாட்டுப்பால்

கள்ளிப்பூக்கிரந்தி = கள்ளிப்பூப் போலும் நிறமுள்ள கிரந்தி

கள்ளிமடையான் = கள்ளிமந்தாரை

கள்ளிமந்தாரை = பெருங்கள்ளி, ஆட்டான் கள்ளி

கள்ளிமாதிதம் = சதுரக்கள்ளி

கள்ளிமுளையான் = எழுமான்புளி, கள்ளி, நாணாங்கள்ளி

கள்ளியிடையான் = இலைக்கள்ளி

கள்ளு = கள்

கள்ளுசி = கொடிவலங்கத்திரி

கள்ளுண் = தேன்வண்டு, வண்டு

கள்ளூறும்பானை = இடுக்குப்பானை

கள்ளூன் = வண்டு

கள்ளை = மிளகு, சிலேற்றுமம்

கறகம் = இலுப்பை

கறடகி = பவளப்புற்றுப் பாஷாணம்

கறங்கோலம் = இரும்பு

கறச்சிகம் = குக்கில்

கறடு = இழிந்தமுத்து

கறந்தமேனி = உடலுறவு கொள்ளாத உடம்பு

கறப்பான் சோன் = பெருங்காயம்

கறம்பை = கிளாச்செடி

கறலி = தேற்றான் கொட்டை, விறகு, துரு

கறவாச்சி = கருந்தும்பை

கறவிரடை = காட்டுக்கரணை

கறவீரம் = அரப்பு

கறி = மிளகு, இறைச்சி

கறிகோலம் = அழிஞ்சில்

கறிக்கன்று = கையாந்தகரை

கறிக்காய் = மிளகு

கறிக்கும்மட்டி = சாம்பற்பூசனி

கறிசலமாக்கி = மாங்கிஷ பேதி

கறிசனி = வெள்ளைக் காக்கணம்

கறிச்சோம்பு = பெருந்தும்பை

கறித்தும்பை = தும்பை

கறிபலை = கறிவேப்பிலை

கறிப்பாலை = பாலைக்கீரை

கறிமிளகு = வால்மிளகு

கறிமுள்ளி = கண்டங்கத்திரி, முள்ளி, முள்ளிக்கத்திரி

கறியசீரகம் = கருஞ்சீரகம்

கறிய சூரி = நத்தைச்சூரி

கறியபோளம் = கருப்புக்குங்கிலியம்

கறியமால் = துளசி

கறியன் = செந்நெல்லி

கறியாமணக்கு = பறங்கியாமணக்கு, பப்பாளி

கறீர் = கத்தி

கறுகஞ்சன் = வெண்கலம்

கறுக்கே = பொன்

கறுங்கோல் = இரும்பு

கறுத்தவளை = தூதுவளை

கறுத்த நிறத்தி = கருவூமத்தை

கறுநாகம் = காரியம்

கறுப்பாச்சி = எவட்சாரம்

கறுப்பார் = துளசி

கறுப்பி = எவட்சாரம், மிளகு

கறுப்புத் தேயிலை = சீனத் தேயிலை

கறுப்புராசோன் = கனதூரம்

கறுப்புநாய் = மூக்கத்தாரி

கறுப்புமரம் = கறுந்தும்பி, தும்பிலி

கறுப்பேரண்டம் = கறுப்பு ஆமணக்கு

கறுப்பேற்றிக் கொள்ளல் = அபினி தின்னல்

கறுவளந்தான் = விச்சுளி

கறுவா = இலவங்கமரம்

கறுவிருளை = உருங்காக்கணம்

கறை = உரல்

கறைகண்டன் = துருசு

கறைக்கோங்கு = கலைப்புங்கு

கறைப்படுதல் = உதிரம்படுதல்

கறை போக்கி = சவர்க்காரம்

கறையடி = யானை, கறை

கறையான் நோய் = உதிரநோய்

கறைவிலங்கு = செந்தரைப்பூடு

கறை விழியாள் = கஞ்சாங் கோரை

கறைவிளங்கு = வெண்தேக்கு

கறோடிகை = கழுதை

கறோதி கெத்தை = பச்சைப்பாம்பு

கற்ககத்தி = பேய்ப்புடல்

கற்கக்கடி = இலுப்பைப்பூ

கற்கங்கம் = வெட்பாலை

கற்கசம் = உத்தாமணி, வேலிப் பருத்தி, இலவு, புல்

கற்கஞ்சான் = வெண்கலம்

கற்கடககரம் = நண்டுவாய்க்காலி

கற்கடகசிங்கி = கற்கடகசிரிங்கி, கடுக்காய்ப்பூ

கற்கடகசிரிங்கி = கடுக்காய்ப்பூ

கற்கடகநாதி = கிச்சிலி

கற்கடகம் = நண்டு, ஒரு இராசி, ஒரு விஷவேர், ஒரு வித எலும்பு முறிவு

கற்கடகாதி = நண்டு

கற்கடகப்படை = பேரேலம்

கற்கடகரிஷகம் = இலிங்கம்

கற்கடகமாதர் = சதுரக்கள்ளி

கற்கடம் = கரும்பு, வில்வம், வசலை, சிறுமுள்ளங்கி

கற்கடகனவரி = குரங்கு

கற்கடகனாளி = சந்திரன், பூனை

கற்கடி = வெள்ளரி

கற்கடை = வெள்ளெருகு, குறுவாழை, சுக்கான்

கற்கணம் = சிலாமதம்

கற்கண்டம் = அகில், மலைவேம்பு

கற்கண்டு = பெரும் வில்வம்

கற்கந்தம் = விஷ்ணுகரந்தை

கற்கந்து = தொடரிப்பட்டை, கல்நார்

கற்கபலம் = மாதுளை

கற்கமருந்து = கடைச்சரக்கு

கற்கம் = இலுப்பைப்பூ, தாமரை

கற்கரம் = ஆந்தை

கற்கரகம் = மத்து, காகம், தூதுவளை

கற்கரி = மத்து, நிலக்கரி

கற்கா = பிரண்டை

கற்காசம் = விஷ்ணுகரந்தை, தருப்பை

கற்காடகம் = வெள்ளைக்கரும்பு

கற்காடகி = கக்கரிக்காய்

கற்காடசிங்கிகை = கடுக்காய்ப்பூ

கற்காடிகை = மலட்டுப்பாகல்

கற்காணம் = கருஞ்சீரகம், கருங்கொள்ளு

கற்காமி = கல்மதம்

கற்காவி = காவிக்கல்

கற்காரகம், கற்காரம் = விஷ்ணுகிரந்தி

கற்காரு = அகில்மரம், பூசனி

கற்காலவணம் = சவ்வர்ச்சலவணம்

கற்கானம் = கருஞ்சீரகம்

கற்கி = குதிரை

கற்குரி = சிலாமதப்பாடாணம்

கற்குரு, கற்குருவி = கற்பூரச்சிலாசத்து

கற்கொடி = கூந்தற்பனை, காட்டிகவிதை

கற்கொழிஞ்சி = கெட்டிநாரத்தை

கற்கோடகி = கற்றாழைச்செடி, மலட்டுப்பாகல் கொடி

கற்கோரிகை = நுரைப்பீர்க்கு

கற்கோரோசிகம் = சதகுப்பி

கற்கோவை = கொல்லன்கோவை, கருடன் கிழங்கு

கற்சலை = கல்நார்

கற்சவுடு நாதம் = அன்னபேதி

கற்சாகம் = பச்சைக்கல், (அல்) மரக்கல், மரகதம்

கற்சித்தியல் = சிற்றாமல்லி

கற்சூரக்காய் = பேரீச்சங்காய்

கற்சூரசுங்கன் = சப்பாத்திக்கள்ளி

கற்சூர பத்திரை = நிலப்பனை

கற்சூரம் = கழற்கொடி, பேரீந்து, கிச்சிலிக் கிழங்கு

கற்சூரமாதிதம் = சவுக்கு மரம்

கற்சூரம்பழம், கற்சூரம்பா = பேரீச்சம்பழம்

கற்சூரி = பேரீச்சம்பழம், நிலப்பனை, கோழிமுட்டை

கற்சூரை = பெரும் பூசனி, காஞ்சொறிவிதை

கற்சேணி = மணித்தக்காளி

கற்சேரம் = கழற்சிக்காய்

கற்சோகம் = அசோகு

கற்ணிகை = தக்காளி, செவ்வந்தி

கற்தபகம் = வெள்ளைக்கல்லாரம்

கற்தபாஞ்சாலிகை = கூந்தற்பனை

கற்தபி = வெள்ளைக்காக்கட்டான், உற்பவத்திரவியம்

கற்தபை = கற்பூரவழுதலை

கற்தாரம் = இரசம்

கற்திட்டுக்கல் = கல்மதம்

கற்தூரம் = கழற்சி, பேரீந்து

கற்ப ஆசை = வெண்வழுதலை

கற்பகமாரீசம் = கருந்தக்காளி

கற்பகம் = புளியாரை, மாஞ்சில், பனங்கள், தென்னை, தாழை, மஞ்சள், வெள்ளைக்கல்லாரம்

கற்பகவெல்லம் = பனைவெல்லம்

கற்பகாண்டம் = கோழிக்கீரை

கற்பகெந்தி = தலைச்சூடு வள்ளி

கற்பக்கடம்பு = நீர்க்கடம்பு

கற்பக்கரம் = கோழித்தலைக் கெந்தகம்

கற்பக்கல் = சுக்கான்கல்

கற்பிடி = வெண்வழுதலை

கற்பஞ்சோனம் = பெருங்காயம்

கற்பத்தி = புளியாரை

கற்பம் = கஞ்சம், இரசம், தீமுறுகற்பாஷாணம், நாகபாஷாணம்

கற்பரம் = துரிசு, துளசி, குந்துருக்கம்

கற்பரன் = வெள்ளைப்பாஷாணம்

கற்பரி = துத்தம்

கற்பலவணம் = சிந்துலவணம்

கற்பலா = கல்லுப்பலா

கற்பாக்கினி = பப்பாளி

கற்பாசம் = பஞ்சு

கற்பாசி = பாசி

கற்பாஞ்சன் = பெருங்காயம்

கற்பாதன் = காலத்துக்குருத்தி, விழி

கற்பாதி = கல்லத்தி

கற்பாரனம் = அடசோளம்

கற்பாரனுடம் = பெருங்களிறு வாய்ப்பட்டை

கற்பாலவணம் = சிந்துலவணம்

கற்பாலன் = சீர்பந்த பாஷாணம்

கற்பாவதி = கார்போகிவிதை

கற்பான் = வெள்ளைப்பாஷாணம்

கற்பி = காந்தம்

கற்பிரண்டை = முப்பிரண்டை

கற்பிரம், கற்பீரகம் = கல்லாரை

கற்பு = முல்லைக்கொடி

கற்புடையாள் = முல்லை

கற்புஷ்பை = வேளை

கற்புரம் = பொன்னாங்காணி, அழிஞ்சில், பொன்

கற்புரி = முல்லை

கற்புரை = சாம்பிராணி

கற்பூ = கல்லாரை, கற்றாமரைப்பூ

கற்பூடு = பவளம்

கற்பூரக்கண்ணி = பொன்னாங்காணி

கற்பூரக்கிளுவை = மலைக்கிளுவை

கற்பூரகம் = சீமைக்கிச்சிலிக்கிழங்கு

கற்பூரணி = கற்றாழை

கற்பூரத்திரவியம் = கற்பூரத்தைலம்

கற்பூரத்தோதியம் = காட்டுக்கொள்ளு

கற்பூரபுரிகை = எள்

கற்பூர புல் = புல்

கற்பூரமணித்தைலம் = அம்பர்தைலம்

கற்பூரம் = பொன்னாங்காணி, தங்கம், காசுக்கட்டி, கற்பூரவல்லி, அசோகு

கற்பூரவள்ளி = வள்ளி

கற்பேதி = சிறுபீளைச்செடி

கற்பை = கற்பூர வழுதலை

கற்பொடி = அன்னபேதி

கற்பொறி = தூதுணம், குருவி

கற்போன் = நறும்பிசின்

கற்மாரம் = மூங்கில்

கற்றாணை = காவித்துணி

கற்றாமரை = தாழையின் ஒரு இனம்

கற்றாலிகம் = வேர்க்கடலை

கற்றாழை = குமரி, குறத்தி, தாழை

கற்றீண்டு = கழுதைத்தும்பை

கற்றுளசி = மலைத்துளசி

கற்று = இளங்கன்று

கற்றூசிதம் = தலைச்சுருளிப்பூடு

கற்றேக்கு = தேக்கு

கற்றை = கழுதை

கற்னிகை = தக்காளி, செவ்வந்தி

கனகசாரம் = கற்பூரம், வெண்காரம்

கனகதம் = ஒட்டகம்

கனகத்தும்பி = பொன்வண்டு

கனகந்தம் = காட்டுமா

கனகபலம் = நேர்வாளம்

கனகபாரகம் = பொன்தூள்

கனகப்பிரவை = முடக்கத்தான்

கனகமாழை = பொன்கட்டி

கனக மிளகு = வால் மிளகு

கனகமுரம் = வெள்ளி

கனக மூலி = சோற்றுக்கற்றாழை

கனகம் = காந்தம், களசி பொன், செவ்வகத்தி, மிளகு, கழற்சி, வால் மிளகு, ஊமத்தை, நெல்லிக் காய், மீன் கொத்தி, வெண்காரம், நந்தியா வட்டம்

கனகதம் = ஒட்டகம்

கனகரசம் = அரிதாரம்

கனகவச்சிரத்தி = கட்டுக்கொடி

கனகவர்ணி = மஞ்சள்

கனகவுப்பு = கல்லுப்பு, கஞ்சியுப்பு

கனகாகுவயம் = ஊமத்தை

கனகாட்சி = சோதிப்புல், வெள்ளி

கனகாமகம் = சிறுகீரை

கனாகாமவயம் = கருவூமத்தம்

கனகாமிரதம் = வெள்ளி

கனகாவயம், கனகாரியம் = ஊமத்தை

கனகொம்மட்டி = குன்றிமணி

கனங்கம் = சுண்ணாம்பு

கனங்கா = கோரைக்கிழங்கு

கனங்கானம் = திப்பிலி

கனசாரம் = கற்பூரம், யுகாதம்

கனசாரவள்ளி = கற்பூரவள்ளி

கனசிரிங்கி = ஒதியமரம்

கனச்செடி = கழற்சிக்கொடி

கனதந்தி = நெருஞ்சி

கனதூரம் = கற்பூரம்

கனத்தாளை = கோரை

கனத்துருமம் = நீர்முள்ளி

கனபல்லம் = முருங்கை

கணபல்லவம் = வெண்முருங்கை

கனபிரகம் = கற்பூரம்

கனபீரம், கனபீர் = அலரி

கனப்பிரகம், கனப்பிரசம் = அரிதாரம்

கனப்பிரயம் = அரிக்கலம், பேரீச்சு, கொடிச்செடி, கோரைக்கிழங்கு

கனப்பூண்டு = ஒருவகைப் பூண்டு

கனமகளிர் = கிளா

கனமஞ்சரி = உலிபிரி

கனமாயை = புளிய மரம்

கனம் = நந்தியாவட்டம், செவ்வகத்தி, இரசம், மேகம், காந்தம், பாரம், பருமண், செறிவு, ஈயம், கோரைக்கிழங்கு, கிளா, ஊசிக்காந்தம், முத்தக் காசு, அகிலம், பொன், புள், கணை, கீதம், உழலைமரம்

கனைய பீர்க்கம் = அரிதாரம்

கனரசம் = நீர்

கனர்வாகம் = சிறுகீரை

கனலாக்கினி = ஆதளை

கனலாதிபம் = இந்திரகோபம்

கனலி = பன்றி, கொடிவேலி, சூரியன், நெருப்பு, கள்ளி, கருப்புச் சித்திர மூலம், இரத்த மூலம், காட்டு முருங்கை, கருகுதல், கனல் நெருப்பு, கருப்புப் பாஷாணம்

கனலை = காயா, வெள்ளுள்ளி

கனல் = நெருப்பு, வெப்பம், மூங்கில், சோதி மரம், நிலக்கனல், கெம்புக்கல்

கனல் நாசினி = செந்திராய்

கனல்பூமிமரம் = வைக்கிரந்த பாடாணம்

கனல் பேதி = சாத்திரபேதி

கனல் மரம் = உமர்ப்பூடு, சோதி மரம்

கனவட்டம் = குதிரை

கனவரி = அவுரிச்செடி

கனவன் மூளை = கழை மூங்கில்

கனவிதிலோ = காஞ்சிரை

கனவிரதம் = நீர்

கனவீதய் = கற்பூரம்

கனவீரம் = அலரி

கனவுதிரம் = உதிரவேங்கை

கனவு பிறா = விஷமூங்கில்

கனவு மூலி = மூங்கில்

கனற்கூர்மை = வளையலுப்பு

கனற்சி = வெப்பம்

கனற்சிலை = மந்தாரச்சிலை

கனன்மரம் = சோதி மரம்

கனா = திப்பிலி

கனாகரம் = மழைக்காலம்

கனாகனம் = மதயானை

கனாக்கஞ்சன் = வெண்கலம்

கனாங்கொல் = இரும்பு

கனாசமால் = கஞ்சாங்கோரை

கனி = வேங்கைமரம், பூனைக்காலி

கனிசாரி = மொக்கு

கனிட்டகம் = சுண்டு விரல்

கனிட்டகன் = கடைசியாகப் பிறந்த ஆண்

கனிட்டை = கடைசிமகள், இளைய பெண், கடைவிரல்

கனிபல முலை = பூசனிக்காய்

கனிபலா = வாகை

கனிப்பு = இனிப்பு

கனிமாசம் = இந்துப்பு

கனிமுதல் = வெள்ளி

கனிமேதி = கற்கண்டு

கனியாத நாயகி = பிளிச்சிறுகீரை

கனியாப் பழச்சாறு = தலைபிண்டச் செயநீர்

கனியாமணக்கு = பப்பாளி மரம்

கனிவல்லி = வெள்ளைக் குன்றிமணி

கனிவு = முதிருகை

கனேராசி = கோரைக்கிழங்கு

கனை = மூங்கில், இரும்பு, கரும்பு, திரட்சி, அம்பு, பூரநாள்

கனைப்பன் = பெருங்குயில்

கனைப்பரம்பல் = இதளை

கனைமுலை = மூங்கில்

கனையாகன்னி = வாடாமல்லிகை

கனோபலம் = ஆலங்கட்டி

கன் = கல்

கன்சருக்கரை = கற்கண்டு

கன்சாரி = பச்சைக்கற்பூரம்

கன்மகளிர் = கீரை

கன்மஷம் = கன்மடம்

கன்மடம் = அழுக்கு

கன்மநிமர்த்தி = கன்மசாந்தி

கன்மநோய் = ஊழிநோய்

கன்மமேகம் = கோரைக்கிழங்கு, பொன்

கன்மம் = எலி, கோரைக்கிழங்கு

கன்மலி = ஏலம்

கன்மாரகி = ஈரப்பலா

கன்முரசு = பெருவாகை

கன்முரிசு = புரசமரம்

கன்மேய்வு = மலைப்புறா

கன்றி = சிறுகீரை

கன்றிரவம் = சதுரக்கள்ளி

கன்றினி = பலாவெருகு

கன்று = ஆண்சுறா, ஆண் பன்றி, ஆண்யானை, எருமை, ஒட்டை, கவுரி, காட்டா, குதிரை, மரை, மான்

கன்றுக்குட்டிப்புல் = கானாவாழை

கன்றுசுத்திதாசன் = நாபி

கன்றுமம் = கற்பூரம்

கன்று முளை = முகில்

கன்றுரம் = கற்பூரம்

கன்றூசி, கன்றூதி = காஞ்சொறி

கன்றூரி = பன்றி

கன்றைக்கட்டி = கற்கண்டு

கன்னகரணி = நீலபாஷாணம், கெந்தி பாஷாணம், சில்மத பாஷாணம்

கன்னகூதம் = குறும்பி

கன்னக்கீரை = சிறுகீரை

கன்னதாளி = நிலப்பனை

கன்னபத்திரிகை = காது

கன்னபூரகம் = அசோகு

கன்னபூரம் = அசோகம், கருங்கு வளை, அசோகு, நீலோற்பலம், காது

கன்னப்பிளவை = சிவந்த குருவைப் போன்று கன்னத்திலேற் பட்டு ஊழ்த்தசையாக மாறி அழுகி, கன்னத் தசையை அரிந்து துளை யுண்டாக்கும் பிளவை

கன்னமலம் = கன்ன கூதம், குறும்பி

கன்னமலி = ஏலம்

கன்னமிலை = தகரை இலை

கன்னம் = யானைச்செவி, காது, நரம்பு, தங்கம்

கன்னரடி = கற்கண்டு, அடிக்கரும்பு

கன்னர் = கட்டி கற்கண்டு

கன்னலமுது = கரும்பு

கன்னல் = கரும்பு, கிராம்பு, வெள்ளைச்சர்க்கரை நாழிகை, தூக்கணாங் குருவி, மணற்பாகு

கன்னவகம், கன்னவம் = சிறுகீரை

கன்னவேர் = கையாந்தகரை

கன்னற்கட்டி = கற்கண்டு, சர்க்கரை

கன்னன் வேர் = கையாந்தகரை

கன்னா = தில்லைமரம்

கன்னாங்கீரை = காரைவாழை

கன்னாதம் = அன்னபேதி

கன்னி = கற்றாழை, காக்கணாஞ்செடி, காவிளை, அழுகண்ணி, சதாபச்சை, இளமை, தவப்பெண், தசநாடியிலொன்று புரட்டாசி, வாலைப் பெண், கரந்தை, கற்றாழை, காக்கணாஞ் செடி, கருவிளை, பவளப்புற்று, சத்திச்சாரணை, வழலை, மணித்தக்காளி, வாலுளுவை

கன்னிகோலி = கற்றாழை

கன்னிகம் = மணித்தக்காளி

கன்னிகா = குரங்கு

கன்னிகாரம் = கோங்கு (மலைக்- கோங்கு), சோம்பு

கன்னிகுமரி = இளங்கற்றாழை

கன்னிகுமரிப்பல் = வாழை

கன்னிகை = தாமரைக்கொட்டை, தக்காளி, பூவரும்பு, கற்றாழை, செவ்வகத்தி

கன்னிகைகுமரி = தாமரைக்கொட்டை, பூவரும்பு, கொன்றை

கன்னிக்கிழங்கு = சின்னிக்கிழங்கு

கன்னிக்கொம்பு = செம்புளி

கன்னிக்கோரை = இளங்கோரை

கன்னிச்சாம்பல் = முட்டைச்சாம்பல்

கன்னிநாகு = ஈனாத எருமை, ஈனாத இளம்பசு, காய்க்காத இளமரம், பெண்மீன்

கன்னிநீர் = தலைப்பிண்டச், செயநீர், சோற்றுக் கற்றாழை, குமரிநீர்

கன்னி நிலம் = கடற்றாமரை

கன்னிப்பால் = கற்றாழம்பால், இளம் பெண் முலைப் பால், சதுரக்கள்ளிப்பால்

கன்னிமயிலி = கஸ்தூரி மஞ்சள்

கன்னிமரம் = வாழை

கன்னிமலம் = பெண் மாதவிடாய்

கன்னியபெருமாள் = இலிங்க பாஷாணம்

கன்னியமுதம் = கற்றாழம்பால்

கன்னியம் = கற்றாழைச் சோறு

கன்னியாகியம் = சிறுநீர்

கன்னியாகுமரி = வெள்ளைச் சாரணை, சோற்றுக் கற்றாழை

கன்னியாகுமரிக் கிழங்கு = சாரணைக் கிழங்கு

கன்னியாகுமரி நீர் = புறவிடைநீர்

கன்னியாகோபி = நன்னாரி

கன்னியூசரி = சீமையாமணக்கு

கன்னியை = கற்றாழை

கன்னிரம் = இசங்கு

கன்னிறம் = சங்கஞ்செடி, இசங்கு

கன்னு = பருத்தி

கன்னுறுகம் = சிறுகீரை

கன்னெஞ்சி = அவுரி

கன்னோங்கம் = சீமைவிளா (அல்) வெள்விளா

கன்னோசிகம் = செம்மொச்சை

கன்னோமியம் = சீமை வெங்காயம்

கா = பூந்தோட்டம், கள், நூறுபலம், ஆல், ஒன்பது துவாரங்களில் ஒன்று, கக்கரிக்காய்

காககந்தம் = நிலத்தாமரை

காககிஞ்சம் = மஞ்சிட்டி

காகக்கரிப்பான் = கரிசலாங்கண்ணி, கறுப்புக்கரிசலாங்கண்ணி

காகக்கல் = கறுப்பு நிறக்கல்

காகசங்கை = புடபத்திரி

காகசம்பு = கறுப்பு நாவற்பழம், சம்புநாவல்

காகசம்புகை = குறுநாவல்

காகசனி = மஞ்சள்

காகசாங்கை, காகசி = மணித்தக்காளி

காகசிங்கி = குன்றிச்செடி

காகசிஞ்சை = குன்றிக்கொடி

காகசிந்துகம் = கருவேல்

காகசிம்பி = மலைப்பச்சை

காகச்சுக்கான் = கருமணற்சுக்கான்

காகசுத்திரம், காகசுந்திரம், காகசூத்திரம், காக செங்கிகை = பேயத்தி,

காக ஞானம் = புங்கு

காகணந்தி = காகணந்திரை, குன்றிக்கொடி

காகணம் = ஒருவகைக் குட்ட நோய்

காகண்டம் = குன்றிக்கொடி, மருக்காரை, பறவைக் கொல்லி எனும் மருந்து, அகில், பிரண்டை

காகண்ணான் = ஒரு சாதிக்காய்

காகதண்டி = காக்கைப் பொன்

காகதந்தம் = நிலத்தாமரை

காகதாளி = ஆச்சா, கருங்காலி

காகதிக்கம் = குன்றி

காகதிண்டு = ஒருவகைக் கருங்காலி

காகதித்தம் = குருஞ்சூலி, அகச்சூலி

காகதித்தை = புடபத்திரி, பண்ணை

காகதிந்துகம் = கருந்தும்பை, பெருந் தும்பை, ஆரைச்செடி

காகதிறம் = குறிஞ்சா

காகதுண்டம் = நீர்க்கோழி, ஒருவகை வாசனைக் கட்டை, ஒரு வகைப் பித்தளை, அகில்

காகதுண்டி = காக்கைப் பொன், ஒருவகைச்செடி, காகணத்தி, புடபத்திரி, பண்ணை, கஞ்சாப்பூண்டு

காகதுண்டிகை = பண்ணைக் கீரை

காகதும்பி = கருந்தும்பி

காகதூண்டி = காகதுண்டி

காகதேசி, காகதேரி, காகதேனி = மணித்தக்காளி

காகத்தாரி = இரேவல் சின்னி

காகத்தி, காகத்திது = குறிஞ்சா

காகத்திருப்பி = திப்பிலி

காகத்தீருகம் = காட்டுப்புகையிலை

காகத்துரத்தி = ஆதொண்டை, காத்தொட்டி

காகநசத்துவம் = அனிச்சை

காகநந்தி = பாதிரி

காகநந்திகை = குன்றி

காகநாசம் = நரிமுருங்கை, தவசு முருங்கை, காக்காய் கொல்லி

காகநாசி = பாற்சோற்றி

காகநாசிகை = சிறுகோவை

காகநாசினி = சேவகனார்க்கிழங்கு, காகநாசம்

காக நாசை = கருமணித்தக்காளி, கருங்கோவை

காகநாபி = கருநாபிக்கிழங்கு

காகநாமன் = அகத்தி

காக நிமிளை = ஈயக்கரடு, கருப்பு நிமிளை, காக்கைப் பொன்

காகநேமி = கருங்குங்கிலியம்

காகநேரி = மணித்தக்காளி

காகந்தகம் = ஆற்றுமுள்ளங்கி

காகபஞ்சி = புடபத்திரி, பண்ணை

காகபரி = காக்கைப்பொன்

காகபர்ணி = நரிப்பயறு

காகபலம் = எலுமிச்சை

காகபிந்து = கரும்புள்ளி

காகபீருகம் = கருந்தும்பை

காகபீலி = குன்றிக்கொடி

காக பீலு = காசரு

காகபீலுகம் = ஆரைமரம், காகவாரை

காகபுச்சம் = குயில்

காகப்புள் = காக்கை

காகமஞ்சி = காட்டு சாதிக்காய்

காகமர்த்தகம் = தூதுவளை

காகமாங்கிஷம் = கருணைக்கிழங்கு

காகமாசி = கருந்தக்காளி, மணித் தக்காளி, மிளகுதக்காளி

காகமாசிகம் = வழுதலை

காகமாமதி = திராட்சை

காகமூங்கில் = கரமூங்கில்

காகமேறாத கொம்பு = மான்கொம்பு, பில்லாய்க் கொம்பு

காகமேறுங்கொம்பு = வாளம்

காகமை = கஸ்தூரி

காகம் = பேயத்தி, பேய்க் கரும்பு, சிலந்தி- நாயகம், சிறுசிலந்தி நாயகம், காக்கை, கீரி, கீரை

காகயா = ஆதொண்டை

காகரந்தம் = விட்ணுகரந்தை

காகரி = திப்பிலி

காகருகம் = எள்ளுச்செடி, எட்டி, குருவிச்சை

காகருடம் = எள்

காகரூபலா = பூசனிக்காய்

காகரூபி = குயில்

காகரெத்தம் = வறட்சுண்டி

காகலதை = குடபத்திரி, கீரி

காகலம் = குரல்வளை

காகலீரவம் = குயில்

காகலூகம் = ஆந்தை

காகலோத்திரம் = அரக்காம்பல்

காகவசுகம் = ஆல்

காகவல்லாரி = குன்றிச்செடி

காகவாலுகம் = கங்குட்டம்

காகவிருட்சம் = புல்லூரி

காகவீசி = செவ்வியம்

காகளி = தேள்கொடுக்கன்

காகனம் = கருவிளை

காகனாசினி = சிற்றாமல்லி

காகன்டம் = வெள்ளைக்கரும்பு

காகன்னி = வெள்ளைகாக்கணான்

காகா = நாணல்

காகாச்சி = வெண்சிவதை

காகாடகம் = அடித்தூறு, மருக்காரை, மூசை

காகாண்டம் = செருப்படை, மலைவேம்பு

காகாதணி = சங்கு, காசரம்

காகாமவம் = நீலோற்பலம்

காகித்திரன் = குறிஞ்சா

காகிரத்தம் = வறட்சுண்டி

காகுகாசி = புடோல்

காகுரட்டை = கறுப்புக்காக்கணம்

காகுரா = நற்புடல்

காகுராகி = புடோல்

காகெந்து = கருந்தும்பை

காகேடளி = கருஞ்சீரகம்

காகேட்சு = கொருக்குச்சு, முள்வெள்ளருகு

காகேந்துகம் = துமிக்கிமரம்

காகொச்சி, காகொடலி = வாலுளுவை

காகொடி = எட்டிமரம், காஞ்சொறி

காகோடியன் = கழைக்கூத்தன்

காகோட்டியான் = தாமரைவிதை

காகோதம், காகோதிரம் = பாம்பு

காகோதும்பரிகை = பேயகத்தி

காகோலம் = அண்டங்காக்கை

காகோளி = கருஞ்சீரகம், அசோக மரம், தேட்கொடுக்கி, அரசு, கொடி

காகோனி = அசோக மரம்

காக்கட்டான், காக்கணத்தி = காக்கணம்

காக்கணை = கரு மணித்தக்காளி, ஆதொண்டை

காக்கமாசி = மணித்தக்காளி

காக்கம் = காக்குரட்டைச் செடி, கோவைக்கொடி, குரட்டைக்கொடி

காக்கள்ளி காக்கன் = தேள்கொடுக்கன்

காக்கிரட்டை = கறுப்புக்காக்கணம்

காக்கினி = தேள்கொடுக்கன்

காக்கு = திருநீறு

காக்கு ரோட்டை = காக்குரட்டை

காக்கை = இரசம், சாறு, காக்கணம்

காக்கைமல்லி = நுணா

காக்கைரசம் = சாராயம்

காக்கை வேர் = காக்கணவேர்

காக்கைவேலி = உத்தாமணி, வேலிப்பருத்தி, கருப்புக்காக்கணான்

காங்கு = கோங்கு

காங்கெணி = தேள், கொக்கு

காங்கேணி = செருப்படை

காங்கேயம் = பொன்

காங்கேயன் = சேவற்கோழி

காங்கேயை = செருப்படை

காங்கேருகி = களா, நாரை

காங்கை = சூடு

காங்கை சாற்றி = மணித்தக்காளி, கல்லூரி

காங்கையன் = நீலபாஷாணம்

காசகாரி = பெரும்பலா

காசக்கினம் = தூதுவளை

காசக்கினி = கண்டுபாரங்கி, சிறுவழுதலை

காசந்தகரம் = தூதுவளை

காசமரத்தம் = பெரும்பலா, தூதுவளை

காசமல்லி = நத்தைச்சூரி

காசம் = வளையலுப்பு

காசரம் = குங்கிலியம்

காசலவணம் = சவ்வர்ச்சலவணம்

காசவிதியை = கோமூத்திரசிலாசத்து

காசனம் = செண்பகப்பூ

காசனி = மஞ்சள்

காசா = நாணல், எருமை, காய்ச்சலுப்பு

காசம்பு வர்ணன் = துரிசு

காசார் = தூதுவளை

காசாலினி = பழுபாகல்

காசா விருட்சம் = குடசப்பாலை

காசி = சீரகம், அவரை, சீந்தில்

காசிகம் = கருஞ்சீரகம், ஆடு தின்னாப்பாளை

காசித்தம் = குறிஞ்சான், வறட்சுண்டி

காசித்தும்பை = பேய்த்தும்பை

காசிரெத்தம் = வறட்சுண்டி

காசினி = வெள்ளைக்காக்கணம், அரைக்கீரை

காசு = காசுக்கட்டி

காசுமரியம் = குமிழ்

காசை = தண்டையாம்புல், காயா, நாணல், காசா, களா

காசைகண்டை = ஆம்பல்

காசோ = புனுகு

காச்சக்கீரை = புளிச்சக்கீரை

காச்சம் = குங்குமப்பூ, வளையலுப்பு

காச்சி = துவரை

காச்சிரம் = நிலப்பனைக்கிழங்கு

காச்சுரை = புளிச்சக்கீரை

காச்சா = கசகசா

காஷ்டபாலை = வெண்பாதிரி

காஷ்டிரசம், காஷ்டிலை = வாழை

காஸ்தமரியம் = குமிழ்

காஸ்மதி = பெரும்பூசனி

காஸ்மரியம் = பூசனி, பெரும்பூசனி

காஸ்மிரி = பூசனி

காஸ்மிரை = திராட்சைப்பழம்

காஸ்மீரம் = குங்குமப்பூ, சகஸ்ர பேதி, புஷ்பரை மூலி

காஞானம் = புங்கு

காஞானி = மஞ்சள்

காஞ்சகம் = புங்கு

காஞ்சகண்டகி = சங்கஞ்செடி

காஞ்சதிப்பிலியம் = செருப்படை

காஞ்சநகை = ஊமத்தைச்செடி, தாமரைவளையம், நந்தியாவட்டைப்பூ

காஞ்சநம் = ஊமத்தை, அத்தி, செண்பகம், பொன், பொன்னூமத்தை, சிறுநாவல்பூ, செவ்வகத்தி, அரிதாரம்

காஞ்சநமவயம் = சிறுநாகப்பூ

காஞ்சநரி = ஏமாட்சிகம்

காஞ்சநி = அம்மான் பச்சரிசி

காஞ்சம் = வஞ்சிமரம், புன்கு, நீலாஞ்சனக்கல்

காஞ்சளி = மஞ்சள்

காஞ்சனகாரிணி = தண்ணீர்விட்டான் கிழங்கு

காஞ்சனம் = புங்குமரம், புங்கு, பொன்

காஞ்சனி = மஞ்சள்

காஞ்சா = கஞ்சா

காஞ்சாரம், காஞ்சாறு = பொன்

காஞ்சான் புஷ்பம் = கிலுகிலுப்பை

காஞ்சி = ஒருமரம், சௌராஷ்டிர பாஷாணம், உழமண், எலி

காஞ்சிகம் = காடித்தண்ணீர், பாலைமரம், புளிக்காடி

காஞ்சிகை = புளிக்காடி, பாலைமரம்

காஞ்சிக்காய் = எட்டிக்காய்

காஞ்சிரம் = காஞ்சொறி, எட்டி, பலம்

காஞ்சிரை = எட்டிக்காய்

காஞ்சிலா = எட்டிமரம்

காஞ்சு = பூநீறு

காஞ்சுகம் = காடி, முருங்கை

காஞ்சூர் = எட்டிக்காய்

காஞ்சொறி = எட்டிக்காய், செந்தொட்டி, முடக்கத்தான்

காஞ்சோறு = எட்டி

காடசிரி = அம்மான் பச்சரிசி

காடபுஷ்பம் = மகிழம்பூ

காடம் = இலுப்பைப்பூ

காடாக்கினி = 2 விரல் கணமுள்ள 4 விறகால் எரிக்கும் தீ

காடாக்கினிவேர் = சித்திரமூலவேர்

காடி = புளித்தநீர், புளித்த கஞ்சி

காடுகுடு = காணம்

காடெரி = கருஞ்சீரகம், கள்ளு

காடெலி, காடேளி, காடேனி = கருஞ்சீரகம்

காடைக்கழுத்தி = முன்னைமரம்

காட்டகத்தி = வீழி, பேயகத்தி, பெருங்குமிழ்

காட்டணம் = பெருங்குமிழ்

காட்டமிர்தம் = தில்லை மரப்பால்

காட்டம் = விறகு, பெருங்குமிழ்

காட்டரி = கள்ளி

காட்டா = காட்டுப்பசு

காட்டாணம் = பெருங்குமிழ்

காட்டாணை = சுழல்வண்டு

காட்டாமணி = உத்தாமணி

காட்டாரை = கல்லாரை

காட்டி = பன்றி, வயிரம்

காட்டிலம் = வாழை

காட்டிலவு = காட்டுப்பருத்தி

காட்டிலா = வெள்ளெருக்கு

காட்டினவாடை = நன்னாரி

காட்டினுட ஆமணக்கு = காட்டாமணக்கு

காட்டீசன் = கார்த்திகைக்கிழங்கு

காட்டுக்கத்திரி = முள்ளிக்கத்திரி, காவேளை, கொழுஞ்சி, சிறுவழுதலை

காட்டுக்கரும்பு = பேய்க்கரும்பு

காட்டுக்குறுந்து = காட்டுக்குருந்த மரம், காட்டெலுமிச்சை

காட்டுக்கொட்டை = காட்டாமணக்கு

காட்டுக்கோவை = பெருங்கோவை

காட்டுச்சந்தனம் = தேவதாரு

காட்டுநெருஞ்சில் = யானை நெருஞ்சில்

காட்டுப்பாகல் = பழுபாகல்

காட்டுப் பால் = கூகை நீறு

காட்டுப் புடோல் = பேய்ப்புடோல்

காட்டுப் பேரிகை = கிலுகிலுப்பை மரம்

காட்டுமஞ்சள் = கஸ்தூரி மஞ்சள்

காட்டு மந்தாரை = காட்டு அத்தி, மந்தாரையில் ஒருவகை

காட்டு மயிலம் = காட்டு நொச்சி, காட்டு மயிலை

காட்டு முருங்கை = மாவிலிங்கு, பெருஞ்சீரகம், பேய்க்கொம்மட்டி

காட்டுமுட்டை = எருமுட்டை

காட்டு முந்திரி = பிரண்டை, புளி, புளிநரளை, முல்லை

காட்டுவள்ளி = பெருஞ்சீரகம், பேய்க் கொம்மட்டி

காட்டு வெளிரி = பெருமிட்டிக்காய்

காட்டு வெள்ளரி, காட்டு வெள்ளி = பேய்க்கொம்மட்டி

காட்டெருமைப் பால் = காவேளை கள்ளி, , கூகைநீறு

காட்டெருமைக் கள்ளி = சதுரக்கள்ளி, எருக்கு

காட்டெலி = கருஞ்சீரகம்

காட்டெறி, காட்டேறி = கள்ளி

காட்டொலிவம் = மின்மினி

காட்டொளி = சோதிமரம்

காட்டோலை = பனைஓலை

காணகன் = கழுதை

காணகி = பூநீறு, சௌராஷ்டிர பாஷாணம்

காணம் = பொன், சீந்தில், கொள்ளு

காணா = சிறுபாம்பு

காணாக்கிலை = வெண்சீரகம்

காணாவேளை = கண்ணோய் போக்கும் மூலி

காணி = பொன்னாங்காணி

காணிகம் = மணித்தக்காளி

காணியகம் = கக்கரிக்காய்

காணிலம் = கொடுவேலி

காண்டகடிகம் = பாகல்

காண்டகம் = நிலவேம்பு, நோய்

காண்டகருக்கை = செங்கடுகு, பால்

காண்டகை = காட்டுக்கரணை

காண்டசாதை = சீந்தில்

காண்டசிரம் = நாரைப்பூ

காண்டதித்தகம் = நிலவேம்பு

காண்டபுஷ்பி = பொன்னாங்காணி

காண்டமிருக ரத்தம் = வேங்கைப்பிசின்

காண்டம்பலா = குதிரை, சீந்தில், வஞ்சி மரம், நிலவேம்பு

காண்டருகை = கடுகுரோகணி

காண்டவம் = நிலவேம்பு

காண்டிகை = மருந்துப்பெட்டி

காண்டீரம் = பிரண்டை

காண்டை = காட்டுக்கரணை

காதட்டி = ஆதண்டை

காதணியோம்பி = கிடைச்சி, நெட்டி

காதம் = கீரி, பன்றி

காதம்பம் = கானாங்கோழி, கரும்பு, கடப்பமரம்

காதம்பரம் = தயிர், மேலேடு

காதம்பரி = ஈச்சங்கள், சாராயம்

காதம்பரியம் = கடம்பை, மிருகம், காட்டுக்கடம்பு

காதலி = வாழைமரம்

காதவம் = ஆலமரம், வான் கோழி, நிலவேம்பு, சீந்தில்

காதளிகம் = சிறுசின்னி

காதாங்கி = பாற்சோற்றி

காதிதம் = குறிஞ்சான்

காதித்தம் = குறிஞ்சி

காதித்தா = குறிஞ்சான்

காதித்திரம் = குறிஞ்சான்

காதிரப்பயம் = கருங்காலிப்பிசின்

காதிரம் = பாம்பு

காதுடன் நெட்டி = நெருஞ்சில்

காதொட்டி = ஆதண்டை

காதோடம் = வெண்கடம்பு

காதோதி = கொசு

காத்தகுட்டி = காற்றொட்டி

காத்தளம் = கலப்பைக் கிழங்கு

காத்தாட்டி = ஆதண்டை

காத்திரம் = பாம்பு, கருங்காலி, கீரி

காத்திரவிருட்சம் = தடைமரம்

காத்திரவேயும் = பாம்பு

காத்திரி = கீரி

காத்தொட்டி = ஆதண்டை, எட்டி

காநாகம் = கருஞ்சீரகம், காடு, குறிஞ்சி நிலம்

காந்தசத்தரு = நவச்சாரம்

காந்தத்துரு = அசோகு

காந்தப்பூ = மதனகாமப்பூ

காந்த ரூபம் = தான்றிக்காய்

காந்தலம் = வெந்தோன்றி

காந்தளம் = வெந்தோன்றி, நாய் வேளை, கலப்பைக் கிழங்கு

காந்தளிகம் = சின்னிமரம்

காந்தள் = வெண்தொட்டி, வெந்தோன்றி, நீர்ப்பூ, நாய்வேளை, கலப்பைக் கிழங்கு, காந்துகம், சூரிய காந்திச்செடி, வெண்காந்தள், கார்த்திகைப்பூ

காந்தனம் = நாய்வேளை

காந்தன் = கார்த்திகைப்பூ

காந்தாட்சி = மயில்

காந்தாரகம் = காடு, வெண்கரும்பு

காந்தாரசந்தனம் = அகில்

காந்தாரம் = வெண்கரும்பு

காந்தாரி = சிவனார் வேம்பு, திசைநாடியிலொன்று

காந்தாரிகை = மஞ்சிட்டி

காந்தாவகம் = நந்தியா வட்டைச் செடி

காந்தி = ஒளி

காந்திகம் = திப்பிலி மூலம்

காந்திதம் = மூங்கில்

காந்திமெய் = சூரியகாந்திப்பூ

காந்தியுடமூலி = சோதி விருட்சம்

காந்திரம் = கலப்பை

காந்தி விரை = பேய்க்கரும்பு

காந்துகம் = வெண்காந்தள்

காந்துணி = தந்துரி

காந்தை = நிலத்தாமரை, பூசனி

காந்தோரசம் = செங்கரும்பு

காபசுவாசம் = பச்சிலை, புங்கன்

காபபாத்திரி = இலவங்கப்பத்திரி

காபலபிகம் = நாய்

காபாலி = திருகுக்கள்ளி, ஈஸ்வரமூலி

காபித்தம் = விளாமரம்

காபியம் = ஈரத்துணியால் உடம்பைத் துடைத்துக் கொள்ளும் குளியல்

காபில்லியம் = தயிர்

காபுதம் = கோழி

காபோதகம் = சுரோதாஞ்சனம்

காப்பர் சுடகம் = நிழலுணத்தல்

காப்பான் = கையாந்தகரை

காப்பு = திருநீறு, மூங்கில், பெருங்காயம், மிளகு, வெங்காயம்

காப்பெட்டை = பெருங்குமிழ்

காமகஸ்தூரி = திருநீற்றுப்பச்சை

காமகாகம் = அண்டங்காக்கை

காமக்கல்லை = காமநோய்

காமதூத்திலை = பாதிரி

காமபலை = யானை, எலுமிச்சை

காமப்பால் = முலைப்பால்

காமப்பூ = மதனகாமப்பூ

காமம் = காமப்பூ, பனையின்பூ (அல்) அகில்

காமரசம் = மாமரம்

காமரசி = நெருஞ்சில்

காமரசேபிகம் = நத்தைச்சூரி

காமரம் = அகில் மரம், அடுப்பு, ஆல்

காமரி = புளிநரளை

காமரிச்சம், காமரீசம், காமரூபினி = புல்லுருவி

காமரூபி = பச்சோந்தி

காமலம் = கழுதைலத்தி

காமல் = சிவமூலம்

காமவல்லம் = மாமரம்

காமவல்லி = நன்னாரி

காமவி = ஆலமரம்

காமளை = சிறுகிழங்கு

காமறம் = அகில்

காமனை = சிறுகிழங்கு

காமன் = திப்பிலி, சிறுமூலம், வண்டு

காமன் தேவி = காந்தம், இலந்தை, மொத்தை

காமன் பீச்சினப்பால் = முலைப்பால்

காமன்வில் = கரும்பு

காமவி = ஆலமரம்

காமாமிர்தம் = விந்து நாதம்

காமாலை நீக்கி = கீழாநெல்லி

காமுகம் = அசோகமரம்

காமுகசிரியை = சிறுமல்லிகை

காமுகப்பரியம் = கஸ்தூரிமஞ்சள்

காமூஞ்சி = பழம்தின்னி வௌவால்

காமை = கொள்ளு

காம்பரி = செந்நெருஞ்சி, செப்பு நெருஞ்சில்

காம்பவுரி = நெருஞ்சில்

காம்பிரம் = சாம்பிராணி, முருக்கு

காம்பு = பாதிரி, மூங்கில், திருநீறு, பூசனிக்காய்

காம்போகி = குண்டுமணி

காம்போசம் = குன்றி, வெண்கருங் காலி, புன்னைமரம்

காம்போசி = குதிரைவாலி

காம்போதி = குன்றிமணி

காம்பை = கிளாச்செடி

காம்மியகம் = வேம்பு

காயகம் = மருக்காரை

காயசித்தியாக்கி = சேங்கொட்டை, கஞ்சா

காயசித்தியுப்பு = அமுரியுப்பு

காயசுத்தி = பொன்னாங்காணி

காயசை = துளசி

காயத்தி = கருங்காலி

காயத்திரி = வெங்காயம், கருங்காலி

காயத்தேனுகம் = நாகமல்லிகை

காயந்தணம் = நாய்வேளை

காயப்பொடிசாதி = இஞ்சி

காயம் = பெருங்காயம், மிளகு, வெங்காயம்

காயல் = அப்பளம்

காயா = மிளகு, தடகம்

காயாகுடகம், காயாதடகம் = நிழலுலர்த்தல்

காயாத பூமரம் = வேங்கைமரம்

காய் = மிளகு

காய்க்கீரை = முருங்கைக்கீரை

காய்ச்சுரை = புளிச்சக்கீரை

காய்த்தாணியம் = முசுக்கொட்டை காய்

வள்ளி = சர்க்கரைவள்ளி

காய்வேளை = கொழுஞ்சி

காரகம் = இந்துப்பு

காரக்கொடி = பழுபாகல்

காரடம் = மருக்காரை

காரடி கொம்மந்தம் = கண்டந்திப்பிலி

காரணம் = எருமை

காரணாதி மூலி = பொன்னூமத்தை

காரண்டம் = அண்டங்காக்கை

காரண்டவம் = நீர்க்காக்காய்

காரபத்திரம் = கருந்துளசி

காரபி = ஓமம், குரோசாணி ஓமம், சதகுப்பை

காரப்பாசம் = பருத்தி

காரமஞ்சுக்கும் பேர் = பொரிக்காரம், சீனக்காரம், வெங்காரம், விரிகாரம், படிகாரம்

காரம் = அகத்தி, வெங்காரம், மரமஞ்சள், சீனக்காரம், முதலை, ஆண்முதலை

காரலகுரி = அபின், கஞ்சா

காரவலியம் = கடல்

காரவல்லி = பாகல், மிதிபாகல்

காரவி = ஓமம்

காரளிகம் = கண்டங்கத்திரி

காரா = எருமை

காராசாரநீர் = பனிக்குடத்துநீர்

காராசாரநீறு = பூநீறு

காராடம் = மருக்காரை

காராடு = வெள்ளாடு

காராமணி = தட்டைப்பயறு

காராளம் = கருந்துளசி

காரான் = எருமை

காரி = காக்கை, ஆவாரை, அவரை, கண்டங்கத்திரி, கரிக்குருவி, காக்கை, கிளி, நஞ்சு, தூணி (அளவை)கள், ஆண்மயில்

காரிகம் = காவிக்கல்

காரிகல் = நத்தைச்சூரி

காரிகை = கலப்பைக்கிழங்கு

காரிகொள், காரிகோலி = முத்தக்காசு

காரிசம் = கருவூமத்தை

காரிதலா = விருசி

காரித்தம் = குறிஞ்சா

காரிபற்றம் = ஆடுதின்னாப்பாளை

காரிமை = கொடிவேலி

காரியகை = கட்டுக்கொடி, கலப்பைக் கிழங்கு

காரியமுள்ளோன் = கட்டியங்காரன்

காரியனேக்கம், காரிரெத்தம் = ஆடுதின்னாப் பாளை

காரிரெத்தினம் = வாழைத்தண்டு

காரிவிரை = கண்டங்கத்திரிவிதை

காரீய தோஷம் போக்கி = ஆற்று முள்ளங்கி

காரீய பந்தம் = பொன்னூமத்தை

காரீயம் = கருநாகம்

காரு = முதலை, நற்புடல்

காருகம் = கருங்குரங்கு

காருச்சீவல் = கடற்பாசி

காருடம் = மரகதம், மருக்காரை

காருணி, காருண்ணி = ஆடுதின்னாப்பாளை, வானம்பாடி

காருத்தமகம் = பச்சை

காருத்தம் = பாதிரி

காருராசி = நற்புடல்

காருருகி = கறிப்புடல்

காருருளை = காட்டு மல்லிகை

காருலும்துளசி = கருந்துளசி

காரூகம் = கருங்குரங்கு

காரெடம் = மருக்காரை

காரெள் = காட்டு எள்ளு

காரை = காரைச்செடி

காரொளி = கருஞ்சீரகம், வறட்சுண்டி

காரோட்டி = ஆதொண்டை

கார் = சித்திரமூலம், கருங்குரங்கு, வெள்ளாடு, முதலை, மதலை

கார்கண்டம் = அகில்

கார்குள்ளி = அரசு

கார்கொடி = எட்டி

கார்கொளி = தேள் கொடுக்கு

கார்கொள் = நிலப்பனை

கார்க்கோடம் = பிரண்டை

கார்கோடல் = கருங்காந்தள்

கார்கோணி = கொள்ளு, தேள்கொடுக்கு

கார்கோலரிசி = கார்போகரிசி

கார்கோளி = நிலப்பனை, தேள் கொடுக்கு, கடல், கோரைப்புல், முத்தக்காசு, கார்கோழி, கருஞ்சீரகம், கருங்காணம், கருங்கொள்

கார்கோழி = கருஞ்சீரகம்

கார்சபை = குரோசாணி

கார்சவம் = கருவூமத்தை

கார்த்திகை = காந்தள், வெந்தோன்றி கலப்பைக் கிழங்கு

கார்த்திகைக் கிழங்கு = கலப்பைக் கிழங்கு

கார்த்திகைப்பூ = காந்தள் மலர்

கார்நிதி = பேய்ப்பீர்க்கு

கார்பாகம் = பருத்தி

கார்பாசபீசம் = பருத்திவிரை

கார்பாசம், கார்பாசி = பருத்தி

கார்புளி = புளிநரளை

கார்போகம் = கார்போக அரிசி

கார்ப்பாலை = தீங்கோவை

கார்ப்பாசம் = பருத்தி

கார்ப்பாச பீசம் = பருத்தி விதை

கார்ப்பாசி தளம் = பருத்தி இலை

கார்ப்பாதி = பருத்திச்செடி

கார்ப்பான் = கையாந்தகரை

கார்மகாரம் = வரகு

கார்மணி = கையாந்தகரை

கார்மலிகை = பெருங்களா

கார்முகம் = மூங்கில், தவணம், வெண்கருங்காலி

கார்முகில் = கார்முகில் பாஷாணம்

கார்மேகம் = கருங்குரங்கு, சவர்க்காரம், வெண்காரம், அக்கிமுக்காரம், கழுதைவிட்டை, சீனக்காரம்

கார்வலயம் = கடல்

கார்வளை = காட்டுமல்லிகை

காலகாந்தாரி = மந்திஷ்டி

காலகாலக் கினியோன் = குப்பைமேனி

காலகுணத்தான் = அரளி

காலகுஷ்டை = கோட்டம்

காலக்கினியோன் = குப்பைமேனி

காலக்கையிலை = அத்திநீர்ப்பூலா

காலசாகம் = கறிவேப்பிலை, மலை வேம்பு

காலஸ்தானி = கழற்கொடி

காலடக்கி = வாதமடக்கி

காலதுர்கதி = காத்தொட்டி

கால நரியாசம் = மைசாட்சி, குங்கிலியம்

காலபர்ணி = செங்கடுகு

கால புஷ்பகம் = பிராச்செடி

கால மூலம் = கருப்புச் சித்திர மூலம், கருநீலத்துளசி

காலமேஷகம் = மஞ்சிட்டி, மண்டூரம்

காலம் = சேட்டை

காலவச்சகம் = தேவதாரம்

காலவர்ணம் = கிராம்பு

காலவள்ளி = யானைத்திப்பிலி

காலவிருங்கம் = கொள்ளு, கழற்கொடி

காலவிருந்தகை = பலா

காலனையுதைத் தோன் = சிவனார் வேம்பு

காலன் = சிலந்தி, நீலபாஷாணம்

காலாயுதம் = கோழி

காலாறு பறவை = வண்டு

காலானுசாரி = மரவள்ளிக்கிழங்கு, சிவனார் வேம்பு

காலானு சாரியகம் = கிரந்திதகரம்

காலானு சாரியம் = கிரந்தி

காலூரம் = தவளை

காலேபம் = அகில்

காலேயகை = மரமஞ்சள்

காலேயம் = கத்தூரிமஞ்சள், மோர், அகில்

காலை = காரைக்கீரை

காலையகம் = கிச்சிலிக்கிழங்கு, பெரிய கிச்சிலிக்கிழங்கு

காலைக்கரிப்பான் = உளுந்து

காலை நொச்சி = கருநொச்சி

காலை மாலை = துளசி

காலோலம் = அண்டங்காக்கை

கால் = காற்று

கால்கோல்மூலி, கால்கோள்மூலி = பல்லிப்பூடு

கால் துரத்தி = காத்தொட்டி

கால்பாசம் = பருத்திச்செடி

கால்பூதம் = கோழி

காவ உசிலி, காவஉசினி = வாழை

காவகர், காவகா = சேங்கொட்டை

காவகூசலி = வாழை

காவசாகம் = மலைவேம்பு

காவசினி = வாழை

காவதம் = கற்கம், காகம்

காவரட்டை = காட்டுத்தவளை

காவர், கலி, காவர்கிலி = வாமை

காவலம் = நெருப்பு

காவளை = கொழுஞ்சி, காட்டு மல்லிகை, பேய்த்தும்பை

காவற்கலி = வாழை, வாழைமரம்

காவற்கா = காட்டு மல்லிகை

காவற்காலி = வாழை

காவன் = சிலந்திப்பூச்சி

காவா = காட்டுமல்லிகை

காவாரம் = நீர்ப்பாசி

காவாளை = பேய்த்தும்பை, காட்டு மல்லிகை, கொழுஞ்சி

காவானை = காட்டுமல்லிகை

காவி = கருங்குவளை, காவிக்கல்

காவிக்கருப்பு = கொடிவேலி

காவியின் மூலம் = நெய்தற் கிழங்கு

காவிரம் = அலரி

காவில் வாழ்வான் = தவசி முருங்கை

காவிளை = கொழுஞ்சி, காய்வேளை

காவீரகை = மனோசிலை

காவீரம் = அலரி

காவு = பீதரோகணி

காவேளை = கொழிஞ்சி, காவேளை

காழகன் = கழுதை

காழம் = நஞ்சு

காழ்கோளி = நெட்டிலிங்கம்

காழ்ப்பு = வயிரம், தழும்பு

காளகண்டகி = அவுரி

காளகண்டம் = குயில், மருக்காரை

காளகந்தம் = வெள்வேல்

காளகம் = மருக்காரை, மரக்காரை

காளகன் = கழுதை

காளகூடம் = நஞ்சு

காளஸ்வாமை = கட்டுக்கொடி

காளடம், காளபதம் = மருக்காரை

காளமேகம் = கழுதை விட்டை

காளம் = எட்டி, நஞ்சு, காளான், மருக்காரை

காளவஸ்தை = காரை

காளவடிவழகி = பொன்னாங்காணி

காளவம் = மரக்காளான் செடி

காளவனம் = சுடுகாடு

காளவாயன், காளவாய் = கழுதை

காளாம்பு = பீர்க்கு

காளாவனம் = சுடுகாடு

காளி = கரி, எட்டி, நஞ்சு, மணித்தக்காளி, பரிமள கந்தி, கக்கரி, அவுரி, கண்குத்திக்கிழங்கு, கஞ்சா

காளிகம் = மணித்தக்காளி

காளிகாளம் = ஆதண்டை

காளிகை = கருஞ்சீரகம்

காளிங்கபத்திரம் = தும்மட்டி இலை

காளிதம் = ஏலரிசி, மணித்தக்காளி

காளித்தம் = ஏலம்

காளிமை = தொட்டாற்சிணுங்கி

காளிமோகம் = திருநீற்றுப்பச்சை

காளியம் = பளிங்கு

காளினி, காளினியம் = கத்திரி

காளீயம் = கக்கரிக்காய், பளிங்கு

காறாடகம் = மருந்துப்புட்டி

காற்காந்தல் = காற்புண்

காற்கோடகி = கக்கரி

காற்சிகம் = நாயுருவி

காற்பகம் = எட்டி

காற்பரி = பூசனி

காற்பாசம் = பருத்தி

காற்புத்தி = தாளகம்

காற்றகண்டுப்பமூலி = பிரண்டை

காற்றன் = துரிசு

காற்றாடி = வாழை

காற்றி = கால் தீ, காற்றும் நெருப்பும்

கானகக் குறத்தி = நிலப்பனை, தேன், தாய்ப்பால்

கானகண்டம் = குயில்

கானகத்து சோதி = சோதிமரம்

கானகத்து நெல்லி = கருநெல்லி

கானகத் தூமம் = கற்பாஷாணம்

கணகமான் = புங்கமரம்

கானகம் = கருஞ்சீரகம், திருகுக் கள்ளி, சதுரக்கள்ளி, மருக்காரை

கானகவல்லி = இருவாட்சி

கானகன் = கழுதை

கானகுதிரை = மாமரம்

கானக்குதிரை = மரை, மாமரம்

கானக்குறத்தி = தேன், முலைப்பால், நிலப்பனை, வல்லாரை

கானக்குறத்திப்பால் = தேன்

கானக்குன்று = வக்கிராந்தபாஷாணம்

கானக்கைதை = கட்டுத்தாழை

கானசரம் = நாணல்

கானத்தேரு, கானத்தேறு = மஞ்சள்

கானப்பத்திரம் = வில்வம்

கானப்பலா = காட்டுப்பலா

கானப்பயிறு = கொள்ளு

கானப்பால் = தில்லைப்பால்

கானமங்கை = மயில்

கானமரி = பன்றி

கானமுல்லை, கானமௌவ்வல் = காட்டு மல்லிகை

கானம் = மரமஞ்சள், பொன்

கானலக்கினி = சிவப்பு சதுரக்கள்ளி

கானல்கன்னி = சிவப்பு மருக்கொழுந்து

கானல்மிருகம் = கொக்கு, மந்தாரை

கானவல்லி = குரங்கு, இருவாட்சி

கானவல்லை, கானபனோகம் = குரங்கு

கானவாழை = எருக்கிலை

கானவருக்கு = பாதிரி

கானவிந்திரன் = கொடிவேலி

கானவிருக்கம், கானவிருட்சம், கானவிருத்தம் = பாதிரி

கானற்பேச்சி = பேய்த்தும்பை

கானன தானா = கூத்தன் குதம்பை

கானன ரோகிதம் = கொள்ளிக்காய் வேளை

கானனுசாரி = நன்னாரிவேர்

கானாங்கள்ளி = இலைக்கள்ளி

கானா வாழை = குழிப்புண், பெரும்பாடு போக்கும் மூலிகை

கானா வேளை = கண்ணோய் போக்கும் மூலிகை

கானிகம், கானிசம் = மணித்தக்காளி

கானியம் = கக்கரிக்காய்

கானியிலை = இலைக்கள்ளி

கானிலம் = கொடிவேலி

கானுசாரி = நன்னாரி வேர்

கான் = வண்டு, தேன், கானம்

கான்மரம் = ஆலமரம்

கிகனி = கருவிளங்காய்

கிகினி = காக்கணஞ்செடி, வலியான், கருவிளங்காய்

கிகீசாரை = துத்தி

கிக்கசி = துத்திவிதை

கிக்கிலம் = மலைதாங்கி

கிங்கரம் = வண்டு

கிங்காரம் = காசினிக்கீரை

கிங்கிசாலம் = வேலமரம்

கிங்கிணி = கிலுகிலுப்பைச்செடி

கிங்கிணிபலம் = காட்டு வாகை

கிங்கிலியம் = இரசம்

கிசகள் = மூங்கில்

கிசகன் = மூங்கில், குரங்கு

கிசபம், கிசம், கிசலை, கிசலையம், கிசாலம் = தளிர்

கிச்சிலி = ஒருவகை நாரத்தை பூலாங் கிழங்கு

கிச்சன் = நெருப்பு

கிச்சிலிக்கரணை = காட்டு மிளகு

கிஞ்சம் = புளியமரம், தாமரைக் கேசம்

கிஞ்சரம் = புளியமரம், புளிமா

கிஞ்சலகம் = தாமரைக்காய், சிறுநாகப்பூ

கிஞ்சலம் = தாமரைக்கிழங்கு

கிஞ்சி = வேம்பு, முதலை, முருக்கம்

கிஞ்சிகா = வேம்பு, முருக்கம்

கிஞ்சிரம் = புளியமரம்

கிஞ்சு = முருங்கை, முளை, முதலை, முருக்கு

கிஞ்சுகம் = பலாசு, முள்முருக்கு, முருக்கு, அசோகு, முருங்கு, கேகயப்புல், வேம்பு

கிஞ்சுகி = பலாசம்

கிடக்கை = மஞ்சள்

கிடமாரி = சிறுபுள்ளடி

கிடவம் = ஊமத்தை

கிடாரம் = கொப்பரை

கிடி = பன்றி, மருட்பன்றி

கிடிமம் = துத்தம்

கிடை = நெட்டி

கிட்டணம், கிட்டணு = திரிபலை

கிட்டாமரி = சிறுபுள்ளடி

கிட்டம் = புழுகுச்சட்டம், மண்டூரம்

கிட்டாயாமலம் = சிட்டக்கல்

கிட்டிக்கிழங்கு = சின்னிக்கிழங்கு

கிட்டிணசாரம் = திப்பிலி

கிட்டிண அல்லி = நன்னாரி

கிட்டிணன் = திப்பிலி

கிட்டியம் = கிட்டம், சிடலம், சிபம்

கிட்டிவம் = மயில்துத்தம்

கிட்டிரம் = நெருஞ்சி

கிட்டிவரன், கிட்டிவானம், கிட்டிவனம் = எட்டி

கிட்டிறம் = நெருஞ்சி

கிட்டிக்காய் = பாவட்டங்காய்

கிணவம் = பில்லியம்

கிதவம் = ஊமத்தை

கித்திகம் = திப்பிலி மூலம்

கிந்தி = கச்சோலம்

கிந்திகம் = திப்பிலி மூலம்

கிமம் = துத்தம்

கிமேலகம் = ஒட்டை

கிம்புரிசை = இரசகற்பூரம்

கிரகணம் = கிரகாகமம், கை, இந்திரியம்

கிரகச்சாரம் = நவச்சாரம்

கிரகணியம் = புளிநரளைக் கிழங்கு

கிரகதூமம் = ஒட்டறை

கிரகநாசனம் = ஏழிலை வாழை

கிரகந்நியை = காக்கட்டான்

கிரகபுட்பம் = வீட்டில் பயன்படும் ஒன்பது வகையான பூக்கள்- செந்தாமரை, வெண்டாமரை, வெள்ளாம்பல், கருங்குவளை, சண்பகம், மந்தாரை, வெண்காந்தள், செவ்வாம்பல், முல்லை

கிரகப்பிழை = பாலகிரக தோஷம்

கிரகம் = இசிவுவலி

கிரகரம் = விடதாரி, பிரம்பு

கிரகலாசன் = ஓணான்

கிரகாடிகை = பிடரி

கிரகிணி = பாற்சோற்றி

கிரகிர்த்தி = காட்டாமணக்கு

கிரக்கணி பித்தன் = பூசனிக்காய், சாதிக்காய்

கிரசதி = நிலவேம்பு

கிரசேமிரம் = பச்சைக்கற்பூரம், கற்பூரம்

கிரஞ்சகிரி = கிரவுஞ்சமலை

கிரஞ்சம் = வெள்ளுள்ளி

கிரஞ்சனம், கிரஞ்சனை = முருங்கை

கிரட்டி = பிரண்டை

கிரணப்பிரியன் = வெள்ளைநாகணம்

கிரணியம் = பொன்

கிரணைபேதை = கடுகுரோகணி

கிரதமாலம் = கொன்றைமரம்

கிரத்தி = நிலவேம்பு

கிரத்திணி = மருக்கொழுந்து

கிரந்தி = முடிச்சு, நிலவேம்பு, கச்சோளம், ஏலத்தோல், நெல்லிப் பருப்பு, மேகவூறல், சிலேட்டு மத்தில் நரம்பில் ஏற்படும் முடிச்சு கட்டி, கிரந்திப்புண் நெல்லிப் பருப்பு, மேகநோய், கிரந்தி நாயகம்

கிரந்திகந்தி = திப்பிலி மூலம்

கிரந்திகந்திகம் = மிளகு

கிரந்திகம் = திப்பிலிமூலம், புளிமா, நெபத்திகை, குங்கிலியம்

கிரந்திதகரம் = நெய்தல் இலை, நந்தியா வட்டை

கிரந்தி நாயகம் = தோல் நோய்க்குப் பயன்படுத்தும் ஒருவகை பூண்டு

கிரந்திபலம் = விளா, மணக்காரை

கிரந்தி பன்னம் = சந்தனவனம், பச்சிலை, மாசிபத்திரி

கிரந்தி பன்னி = பெரிய கச்சோளம்

கிரந்திப் பூண்டு = கிரந்தி நாயகம்

கிரந்தி முகம் = பாக்குமரம்

கிரந்தி மூலம் = ஒரு மூலநோய், கிரந்திகச்சோலம், திப்பிலி மூலம், வெள்ளைப் பூண்டு

கிரந்தியம் = கருந்தும்பை, விடதாரி, பிரம்பு

கிரந்திலம் = தூதுவளை, இஞ்சி, அறுகம்புல்

கிரந்தி விரணபகம் = பருத்தி

கிரந்தினி = கெட்டைக்கரந்தை

கிரந்தினிகம் = ஓர் கிழங்குப்பூடு

கிரப்படி = பிரண்டை

கிரமமூலபத்திரம், கிரமாமூலபத்திரம் = நெபத்திகை

கிரமசத்துரு = புரசம் விரை

கிரமிச்சம் = அனிச்சை, நாகமல்லி

கிரமுகம் = கமுகு, கிரந்திமுகம், சிகப்புலோத்திரம், ஒரு வகைக் கோரை பாக்கு

கிரம் = கிளி, பன்றி

கிரயந்தம் = திப்பிலி

கிரவாணம் = தாளிசபலம்

கிரவியபாதை = சடாமாஞ்சில்

கிரவுஞ்சம் = அன்றில் கொக்கு

கிராககன்னியம் = சோற்றுக் கற்றாழை

கிராகடம் = வானம்பாடி

கிராகதம் = நிலவேம்பு, கிராகதி, நாகமுட்டி

கிராகதி = நிலவேம்பு

கிராகம் = ஆமை, பெருமீன், பருந்து, ஆரை, தொடைவாதம், பெண்முதலை

கிராகி = நாவல், விளா, ஆட்டு செவிக்கள்ளி, வெண்ணெய், மூர்ச்சை

கிராகிபலம் = விளா

கிராகியம் = பச்சேந்திரியம்

கிராகிளம் = ஓணான், ஒருவகை வேலமரம்

கிராசகம் = தாழை, நீண்ட முள்ளுள்ள மீன்

கிராசம் = கவளம், ஆகாரம், சுருக்கு

கிராசலம் = அதிவிடையம், வசம்பு

கிராண வேதம் = வெண்கடுகு

கிராதம் = நிலவேம்பு

கிராதாசி = கருடன்

கிராதினி = சடாமாஞ்சில்

கிராதை = நிலவேம்பு

கிராத்தண்டுலம் = வாய்விடங்கம்

கிராந்தி = கிராதகம்

கிராம கோலம் = ஊர்ப்பன்றி

கிராமசடகம் = ஊர்க்குருவி

கிராமனை = அவுரி

கிராமாது = கழுதை மூத்திரம்

கிராமிய தர்மம் = புணர்ச்சி

கிராமிய பலாசை = துளசி

கிராம்பு = இலவங்கம், காட்டு இலவங்கம், நீர்க் கிராம்பு, பன்னி, கடலடி புஷ்பம்

கிராம்புப்பூண்டு = நீர்க்கிராம்பு

கிராம்பூ = இலவங்கப்பூ

கிராயதி = கிரியாத்து

கிராவகம் = நரளை

கிராவணத்துக்காதி = வசம்பு

கிராவம் = மலை தாங்கிப் பூடு

கிராவரோகசம் = மலைமேல் முளைக்கும் ஒருவகை பூண்டு, அமுக்கிரா

கிரி = பன்றி, மலை, முடியண்டம், மருட் பன்றி, சிறுசவுக்கு, புழு

கிரிகர்ணி = மலைய முக்கி, காக்கட்டான்

கிரிகள்ளி = வெள்ளைக் காக்கணம், எருக்கு, கருங்காக் கட்டான்

கிரிகன்னி = வெள்ளளைக் காக்கணம்

கிரிகண்ணிகை = கருங்காக்கட்டான், வெண்காக்கட்டான்

கிரிகாயம் = சிறுபுங்கு

கிரிகாரிகை = தக்காளி

கிரிகோலம் = அழிஞ்சில்

கிரிசந்தண்டு = செஞ்சந்தனம்

கிரிசம் = குடசப்பாலை, சிலாசத்து, மண்டூரம், மலை வேம்பு

கிரிசனம் = இருசீரகம்

கிரிசாங்கி = நீர்க்கோழி

கிரிசாணாகை = சிறுபுங்கு

கிரிசிந்தூரம் = மலைசிந்தூரம்

கிரிச்சரீடம் = சாதிக்காய்

கிரிச்சரீட்டம் = கரிச்சரீடம், கிரிச்சரீடம்

கிரிச்சீரிடம் = சாதிக்காய்

கிரிடம் = உத்தாமணி

கிரிடலவணம் = செய்யுப்பு

கிரிடி = கோழி, காட்டீச்சம்பழம்

கிரிடை = பாலைமரம்

கிரிட்டமசுந்தரி = செருப்படை

கிரிட்டி = பிரண்டை

கிரிதவேணி = பீர்க்கு

கிரிதாங்கி = மலைதாங்கி

கிரிதி = வமரை

கிரித்தவம் = இருள்

கிரிநெல்லி = குருநெல்லி

கிரிபத்திரம் = வேம்பு

கிரிபயம் = மரப்பொது

கிரிபுட்பகம் = சாம்பிராணி

கிரிமகுண்டம் = வாலுளுவை

கிரிமஞ்சரி = குப்பைமேனி

கிரிமல்லி = குடசப்பாலை, வெட்பாலை, கொடிப் பாசி, கடிபாலை, மலைமல்லிகை

கிரிமல்லி பாலை = வெட்பாலை

கிரிமி = புழுகு, புழு, வாயு, விஷம்

கிரிமிகுலாம் = காட்டுப்பயறு

கிரிமிகை = பாகல், வாய்விடங்கம்

கிரிமிக்கினி, கிரிமிக்குன்றம் = வாலுளுவை

கிரிமித்ததம் = கருப்பகில்

கிரிமியரிநாசி = புங்கை நாறி, பீநாறி

கிரிமேதம் = கத்தூரி

கிரியன்வல்லி = சிறுநன்னாரி

கிரியிக்கினி = வாலுளுவை

கிரியேந்திரியம் = கருமேந்திரியம்

கிரிராளி = பச்சைக்கற்பூரம்

கிரியசன் = இருசீரகம்

கிரிவானம் = நீலாஞ்சனக்கல்

கிரிவாத்தியம் = முடக்கத்தான்

கிரிவாரிணி = இரத்தமாஞ்சில்

கிரிவாலுகம் = சுக்கான்

கிரிவிளவல்லி = சிறுநன்னாரி

கிரிவின்வல்கி = நன்னாரி

கிரிவேம்பு = மலைவேம்பு

கிரீச்சரிட்டம் = சாதிக்காய்

கிரீடபம் = தாளிப்பனை

கிரீடம் = உத்தாமணி, வேலிப் பருத்தி

கிரீடை = புணர்ச்சி

கிரீட்டி = பிரண்டை

கிரீஷ்ம சுந்தரகம் = பற்பாடகம்

கிரீஷ்மசுந்தரி = சிறுசெருப்படை

கிரீதம் = மென் சுண்ணம்

கிரீவநாடி = கழுத்து நாடி

கிரீவம் = கழுத்து

கிருகக்குழி = தொண்டைக்குழி

கிருகம் = மிடறு, சுவாசக்குழல், வீழி எனும் மருந்துச் செடி

கிருகரம் = குழந்தைகளுக்குக் காணும் வலிப்பிருமல்

கிருகவாகு = பல்லி, மயில்

கிருகனம் = கவுதாரி

கிருசம் = மெலிவு

கிருசயம் = மலைப்பூவரசு

கிருசரம் = எள்

கிருசரான்னம் = எள்ளுச்சாதம்

கிருசலகம் = தாமரைக்காய், சிறுநாகப்பூ

கிருசா = இரும்பு

கிருசாணு = பவளக்கொடி

கிருசாந்தன் = நெருப்பு

கிருசுல்கம் = தாமரைக்காய், சிறுநாகப்பூ

கிருடக்கொடி = தலைச்சுருளி

கிருடம் = பிரண்டை

கிருடி = சிராவணி

கிருட்டி = பன்றி, பிரண்டை, மருட்பன்றி, ஓரீற்றுப் பசு, ஒருபறவை

கிருட்டிகம் = கொட்டையில்லா முந்திரி

கிருட்டிசாரம் = தீம்பிரண்டை

கிருட்டிணகந்துகம் = கடலை

கிருட்டிணகேழி = ஒரு வகை பன்றிப்பூடு

கிருட்டிண சகுனி = காக்கை

கிருட்டிண சகுசபம் = கறுப்புக்கடுகு, புள்ளிமான்

கிருட்டிண சாபம் = சதுரக்கள்ளி, கண்விழி

கிருட்டிண சாலி = ஒரு கருப்பு நெல்

கிருட்டிண சிரம், கிருட்டிண சீரகம், கிருட்டிண சீரகை = கருஞ்சீரகம்

கிருட்டிண சூரணம் = இரும்புத்துரு

கிருட்டிண சேகரம் = கிராம்பு

கிருட்டிண சோபிதம் = சம்பங்கிப்பூ, கொடிச்சம்பங்கி

கிருட்டிண தண்டுலம் = ஒருவகைபூடு, திப்பிலி

கிருட்டிணதிலம் = கறுப்பெள்ளு

கிருட்டிணதுளசி = கருந்துளசி

கிருட்டிண நயனம் = கறுப்புவாற் கோதுமை

கிருட்டிண நாமகம் = சவ்வர்ச்சலவணம்

கிருட்டிணபட்சம் = தேய்பிறை

கிருட்டிண பரணி = ஒருவகைத் துளசி

கிருட்டிண பலம் = காட்டுச்சீரகம்

கிருட்டிண = பெருங்களை பாகபலம் (பெருங்களாச்செடி)

கிருட்டிணபாஷம் = அரசமரம்

கிருட்டிண பாலம், கிருட்டிண பானம் = எட்டி

கிருட்டிண பூசிதம் = சந்தனம்

கிருட்டிண பூவிகம், கிருட்டிண பேடம், கிருட்டிண பேதம், கிருட்டிண பேதை = கடுகுரோகணி

கிருட்டிணமண்டலி = கருவிழி, ஒரு கறுப்பு விஷப்பாம்பு

கிட்டிண மல்லிகம் = துளசி

கிட்டிண மல்லிகை = கருநீலத்துளசி

கிருட்டிண மிருகம் = கருப்புமான்

கிருட்டிண மிலம் = கரும்புள்

கிருட்டிணமூலி = துளசி, நன்னாரி, கருஞ்சீரகம்

கிருட்டிணம் = இரும்பு, கறுப்பு, காகம், மிளகு, திப்பிலி, விஷப்பூச்சி, பெருங்குமிழ், கருவிழி, இருட்டு, அகரு, கறுநிமிளை, துரிசு, உருக்கு

கிருட்டிண லவணம் = கறுப்புப்பு, மிடாலவணம், துவ்வர்ச்சலவணம்

கிருட்டிண லோகம் = காந்தம், இரும்பு, இனிமத்தி

கிருட்டிண வசத்திரகை = கருங்குன்றி

கிருட்டிண வர்ணம் = இரும்பு மணல், கறுப்பு நிறம்

கிருட்டிண வல்லி = வல்லாரை, கருப்புக் கொடி, மரவள்ளி

கிருட்டிண விருட்சம் = வேங்கைமரம், வேல்

கிருட்டிண விருந்தை = பாதிரி, பெருங்குமிழ்

கிருட்டிண னோய்ந்தமிருகம் = கலங்கொம்பு

கிருட்டிணன் கை = கறுத்த கடுகு

கிருட்டிணா = காக்கணாஞ் செடி

கிருட்டிணாசனம் = மாந்தோல்

கிருட்டிணி = காக்கணஞ்செடி, காவேளை

கிருட்டிணகை = கறுப்புக்கடுகு

கிருட்டிணை = கடுகு, முந்திரிகை, வால் மிளகு, கறுப்பு அட்டை, முந்திரி

கிருட்டி தாமிகம் = நன்னாரி, கிருட்டிணவல்லி

கிருஷப்பம் = கடுகு

கிருஷாங்கி = நீர்க்கோழி, நீர்க்காக்கை, நீர்ப்பறவை

கிருஷ்ண கந்தம் = கறுப்பு அல்லி, முருங்கை

கிருஷ்ண கரதை = கோட்டம், வெண் முருங்கை

கிருஷ்ண கர்க்கடகம் = கறுப்பு நண்டு

கிருஷ்ண கற்பம் = மலைப்பூசனி

கிருஷ்ண காம்போகி = கருங்குன்றி, பூலா

கிருஷ்ண காயா = பனைமரம்

கிருஷ்ண கிருஷ்டம் = கருங்காலி

கிருஷ்ண குச்சம் = கண்பூ

கிருஷ்ண கெந்தம் = பனைமரம்

கிருஷ்ண கெந்தி = முருங்கை

கிருஷ்ண கோழி = ஒருவகைச் செடி

கிருஷ்ணகை = கடுகு

கிருஷ்ணஹரித் துருமம் = பேய்த்தும்பை

கிருஷ்ண சடை = சடாமாஞ்சில்

கிருஷ்ணசம் = ஈயம்

கிருஷ்ணசிரசபை = கருங்கடுகு

கிருஷ்ண சாரம் = கறுப்புமான், துமிக்கி, பெருங்காயம்

கிருஷ்ண சாலிச்சம் = நல்லரிசி, கருப்பரிசி, புட்டரிசி

கிருஷ்ண தத்தூரி, கிருஷ்ண தாரி = கருவூமத்தை

கிருஷ்ண துளசி = கருந்துளசி

கிருஷ்ண தோஷம் = விஷசுரம்

கிருஷ்ண நிம்பம் = கருவேப்பிலை

கிருஷ்ண பலம் = கார்போகவரிசி

கிருஷ்ண பலி = காரெள்

கிருஷ்ண பலை = பெருங்களா, பிடங்குநாரி, கடல் கச்சக்காய், திராட்சை, பாவைக் கொடி, பாகல்கொடி

கிருஷ்ண பாகம் = வெண்பூலா, கருவேப்பிலை

கிருஷ்ணபாகி = களா, கருங்குன்றி

கிருஷ்ண பானம் = எட்டி

கிருஷ்ணபிரம் = கறுப்புவாகை

கிருஷ்ண பிரியம் = கொடிமுந்திரிகை

கிருஷ்ண புட்பபீசம் = கரூவூத்தை

கிருஷ்ண புஷ்மிசை = கருவூமத்தம்

கிருஷ்ணபேடம், கிருஷ்ணபேதி = கடுகுரோகணி

கிருஷ்ணப் பிரசோதக்கரு = கருவேல்

கிருஷ்ண மாது = கருந்துளசி

கிருஷ்ணமாலகம், கிருஷ்ணமாலுகம் = கருநீலத்துளசி

கிருஷ்ண முறகை = கரும்பயறு

கிருஷ்ண மூக்கா = பனிப்பயறு

கிருஷ்ண மூஷணம் = மிளகு

கிருஷ்ணம் = குயில், துரிசு, திப்பிலி, மிளகு, இரும்பு, நாகமணல், கருப்பு, கருநீலம், மான்

கிருஷ்ண யகம் = இரும்பு

கிருஷ்ண யத்திகை = கருங்குன்றி

கிருஷ்ணரசம் = கிருஷ்ணபற்பம்

கிருஷ்ணரத்தி = வெட்பூலா

கிருஷ்ணரேகடை = கறுப்புமணல்

கிருஷ்ணலை = மணிக்குன்றி

கிருஷ்ணவிருச்சகம் = கருவேல்

கிருஷ்ண விருத்திகை = பூசனி, பெரும்பூசனி

கிருஷ்ணை = கருப்பரக்கு, திராட்சை, பண்ணை

கிருதகித்திரை, கிருதசோசாதகி = பேய்ப்பீர்க்கு

கிருதஞ்சம் = முருங்கை

கிருததிரமசம் = பாடாலவணம்

கிருதபலம் = தக்கோலம்

கிருதமண்டாது = சிறுபுள்ளடி

கிருதமண்டால காரசம் = செருப்படை

கிரதமாலிகா, கிருதமாலிகை = கொன்றை

கிருதம் = பீர்க்கு, நெய், செங்கொன்றை, மருந்து நெய், செம் முருங்கை, சிறுதேக்கு

கிருதவம் = அகில்

கிருதவேதனா = பேய்ப்பீர்க்கு

கிருதாளி = தாளிப்பனை

கிருதிமாசம் = யானைத்திப்பிலி

கிருது வேதன் = பீர்க்கு

கிருத்தி = மான் தோல், தோல்

கிருத்திமம் = தோல்

கிருத்திரம் = வாசனைப்புகை, உப்பு, துரிசு, இராசாளி

கிருத்துருணி = பம்பந்திராய்

கிருந்தி = கஞ்சாங்கோரை

கிருமி = புழு

கிருமி அரா = பருத்தி

கிருமிகிருட்டன் = பிரண்டை

கிருமிக்கினம் = வாய்விடங்கம்

கிருமிக்கினி, கிருமிக்குன்றம் = வாலுளுவை

கிருமிசத்ரு = பூவரசம் விரை, புரசன்விரை, குரோசாணி ஓமம்

கிருமிசத்தரு = ஆடுதின்னாப்பாளை, ஆலாத்திக் கற்பூரம், புரசம்விரை, பூவரசம் விரை

கிருமிசம் = வாய்விடங்கம்

கிருமிசம்தை = அகில்

கிருமிசிது = வாய்விடங்கம்

கிருமிசுத்தி = கிளிஞ்சில்

கிருமிசேணம் = புழுக்கொல்லி

கிருமிசை = அரக்கு

கிருமிஞ்சிப்புழு = சப்பாத்திப்புழு

கிருமிதாரு = கருப்பகில்

கிருமிநாசகி = ஆடுதின்னாப்பாளை

கிருமிநாசத்திரயம் = வேப்பம் விரை

கிருமி நாசம் = ஓமம், குரோசாணி, பேய்ப்பீர்க்கு, வேப்பீர்க்கு, பலாசம் விதை, பங்கம்பாளை, ஆடுதின்னாப்பாளை

கிருமி நாசி = நிலவாகை

கிருமிநாயகம் = ஆடுதின்னாப்பாளை

கிருமிநிஷத்தினி = திப்பிலி

கிருமிபோஷாணம் = அரக்கு

கிருமிமனதத்தகம் = தவளை

கிருமிமனை = பாக்கு

கிருமி மூலம் = பல்லிப்பூடு

கிருமியரி = வாய்விளங்கம்

கிருமியர்பாசனம் = நரிமுருக்கு

கிருமிருஷ்டங்கி = ஒட்டைமரம்

கிருமுகம் = பாக்குமரம்

கிருமுதலாடை = பொடுதலை

கிருமேளகம் = ஒட்டகம்

கிருனம் பீரம் = உள்ளி

கிரேசமாம், கிரேசமிரம் = பச்சைகற்பூரம்

கிரேந்தி = கச்சோளம்

கிரௌங் சாதனம் = திப்பிலி, தாமரைக்கொட்டை

கிர்முகம் = கமுகு

கிலபாதிகை = சிறுபாம்பு

கிலம் = சிதைந்தது

கிலாசம் = தேமல்

கிலாயு = கபத்தால் ஏற்படும் தொண்டை அடைப்பு

கிலிகை = சிற்றெலி

கிலிங்கி = கிலுகிலுப்பை

கிலிதகம் = பிடாலவணம்

கிலிதசிகை = அவுரி

கிலிபாசிலை = நுரை

கிலீடகம் = ஓர்பூடு

கிலுகிலுப்பை = பேய்மிரட்டி

கிலேசம் = வெண்குட்டம்

கிலேதகம் = ஈரம், வயிற்றுக்கோழை

கிலேதம் = திரிதோஷம்

கிலேதனம் = கபம், அதிமதுரம்

கிலோபம் = மூத்திரப்பை

கில்லம் = கழுத்து

கிழங்குக் கொடி = வள்ளிக்கொடி, பிரண்டைக்கொடி, காட்டு மருக்கொழுந்து

கிழங்குக் கோவை = ஆகாச கருடன் கிழங்கு

கிழங்குத் தைலம் = பிண்டத்தைலம்

கிழங்கு மஞ்சள் = பூசுமஞ்சள்

கிழத்திரி = பெண்குறி

கிழவரி = தண்ணீர்விட்டான் கிழங்கு

கிழவன்குடி = பற்பாடகம்

கிழவன்தாடி = காட்டு மருக்கொழுந்து

கிழவி = வயது முதிர்ந்தவள், முருங்கை, கல்லாரை, தாய்க்கிழங்கு

கிழவிகாத்தட்டை = நாணற்தட்டை

கிழவிதானிகம் = முருங்கை

கிழவேர்வரி = ஆண்குறி

கிழாலை = களர்நிலம்

கிளதி = கிலுகிலுப்பை

கிளவம் = ஊமத்தை

கிளரவர் = தண்ணீர்விட்டான்

கிளவி = முருங்கை

கிளகட்டல் = மருந்துகளின் சத்து இறங்கும்படி எரிப்பதற்காகவோ தண்ணீரில் கரையும் படி செய்யவோ துண்டுத்துணியில் தளர்ச்சியாக முடித்தல்

கிளிதகை = அதிமதுரம், அஷ்டிமதுரம்

கிளிமுகன் = கற்றாழை

கிளிமுருக்கு = முள்முருக்கு, கல்யாண முருக்கு

கிளிமூகிகம் = நுணா

கிளிமூக்கன் = மாவினத்தில் ஒரு வகை, காற்றாழை, தக்காளி

கிளிமூக்கன் கிழங்கு = ஆகாசக் கருடன் கிழங்கு

கிளிமூக்கு = பருத்தி, ஒருவகை வெற்றிலை

கிளிமூக்குக் கிழங்கு = ஆகாசக் கருடன் கிழங்கு

கிளியுறை = கிளியூறல்

கிளியூரல் = குந்தம், குருந்தமரம்

கிளிரசிருங்கி = கடுக்காய்பூ

கிளிராசன் = இருசீரகம்

கிளை = தளிர், மூங்கில், வாலுளுவை, பூங்கொத்து, மரக்கிளை

கிளைவேரி = சதாவேரி

கிள்ளை = கருங்கிளி, கிளி, துதிநா, கிளிப்பிள்ளை, குதிரை, சாதிபத்திரி, சாதிபாதிரி

கிறசியை = கள்ளி

கிறட்டி = பிரண்டை

கிறத்தி = நிலவேம்பு

கிறநாடை = ஈரவுள்ளி

கிறமுகம் = பாக்குமரம், பூவரசு

கிறா = நறுங்குறிஞ்சி

கிறாத்தித்தசம், கிறாத்தித்தம் = நிலவேம்பு

கிறாமிய பாலகம் = துளசி

கிறாமிளிகம் = ஒட்டொட்டி

கிறிகள்ளி = வெள்ளைக்காக்கணம்

கிறிசமை = சுரப்பிப்பு

கிறிச்சிறடம், கிறிச்சிரீடம், கிறிச்சீறிட்டம் = சாதிக்காய்

கிறிஷடமகாவல்லி = பெருமல்லிகை

கிறிஞ்சன் = இருக்கிரகம்

கிறிடம் = உத்தாமணி

கிறிதவேணி = பீர்க்கு

கிறித்துவ விந்தை = வில்வம், சாதி, பெருவில்வம், முட்சாதிப்பூ, ஓமம், விரை

கிறத்துவனிம் = அகில்

கிறிமல்லி = குடசப்பாலை

கிறிமக்கினி = வாலுளுவை

கிறிமிஜ போசனம் = அரக்கு

கிறிமுகம் = கமுகு

கிறிராசனவல்லி, கிறிவினவள்ளி = சிறுநன்னாரி

கிறுகரன் = திசைவாயுவிலொன்று

கிறுகொடி = தலைச்சுருளி

கிறுக்கு நோய் = ஒருவகை ஆட்டு நோய் வைத்தியம்

கிறுசந்திரன் = நீர்ப்பாசி

கிறுசன் = மஞ்சள், குங்குமப்பூ

கிறுசா = கிராம்பு

கிறுசார் = மஞ்சள்

கிறுதம் = சிறுதேக்கு, நெய், செம்முருங்கை

கிறுதவம் = அகில்

கிறுதநாசம் = கிரந்திகம், திப்பிலிமூலம்

கிறுதாகிசம் = நீர்முள்ளி, முருங்கை, மஞ்சள்

கிறுதாசிகம் = நீர்முள்ளி

கிறுதுகம் = பீர்க்கு

கிறுத்துவம் = அகில்

கிறுநாம் = முருங்கை

கிறுநாதிதம் = மஞ்சள்

கிறுமி = எட்டி

கிறுமியம் = அவுரி, நீலமணி

கிறுவேலி = பீர்க்கு

கினமுகதி = கச்சோளம்

கினவரி = தண்ணீர்விட்டான்

கினிதி = கிலுகிலுப்பை

கினிப்புல் = சோனைப்புல்

கினை = விளாமரம், புடம் போடுவதற்குமுன் காற்றுப்புகாதபடி மருந்துடைய பாண்டத்திற்கு மேலேயிடும் சீலை மண்

கினைசாரம் = விளாம்பழம்

கீடநாமன் = நறளை

கிடப்பகை = வாய்விடங்கம்

கீடமணி = மின்மினிப்பூச்சி

கீடமாதை, கீடமாறி = சிறுபுள்ளடி

கீடம் = புழு, கோற்புழு, வண்டு, கோரப்பூ மூங்கில்

கீடரி = கந்தகம்

கீட்டகம் = புழு

கீதம் = மூங்கில், வண்டு

கீதலகம் = அஷ்டிமதுரம்

கீதவம் = ஊமத்தை

கீதை = கருங்காலி

கீரணை = கற்பூர வழுதலை

கீரமம் = கருங்கிளி, கிளி, பால்

கீரம் = கிளி, பால், மழைநீர்

கின்னம் = தூக்கணாங்குருவி

கின்னரம் = இசைப்பறவை, ஆந்தை, நீர்ப்பறவை

கின்னரி = ஆந்தை

கின்னிக்கோழி = வான்கோழி

கீசகம் = குரங்கு மூங்கில், எலும்பு, வண்டு

கீசகலை, கீசகன் = மூங்கில், குரங்கு

கீசபர்னி = நாயுருவி

கிசரம் = இரும்பு

கீசரன், கீசரி = சரக்கொன்றை

கீச்சுத்தாரா = செங்கிளுவை

கிஞ்சல்கம் = சிறுநாகப்பூ, தாமரைக்காய்

கீடகம் = புழு

கீடசத்துரு = வாய்விடங்கம்

கீராசன் = மஞ்சள்

கீராட்டி = பிரண்டை

கீரி = கள்ளி, கீரிப்பிள்ளை, திருக்கொன்றை, கருவாலி, கீரிபுரண்டான், நெட்டிலிங்கமரம்

கீரிகள்ளி = வெள்ளைக்காக்கணான்

கீரிகண்ணி = வெண்காக்கணம்

கீரிகம் = வேப்பிலை

கீரிசிரீடம் = சாதிக்காய்

கீரிடம் = உத்தாமணி

கீரிட்டம் = மாங்காய்

கீரிதம் = வெண்பீர்க்கு

கீரிதாவேனி = பீர்க்கு

கீரிநங்கை = சிறியா நங்கை

கிரிநாயகம் = ஆடுதின்னாப்பாளை, நஞ்சறுப்பான், பங்கம்பாளை

கிரிநாயகன் = நஞ்சறுப்பான்

கீரிமல்லி = குடசப்பாலை

கீரிமரம் = நெட்டிலிங்கமரம்

கீரிமிகுண்டம், கீரிமிக்கினி = வாலுளுவை

கீரிவள்வல்லி = சிறுநன்னாரி

கீரினவல்லி = நன்னாரி

கீரிளசன் = இருசீரகம், சிறுநன்னாரி

கீருசம்பளி = பீர்க்கு

கீருடன் முதலி = துளசி

கிருதம் = செம்முருங்கை

கீரை = ஈயக்கொழுந்து

கீரைக்காய் = வெள்ளிரிக்காய்

கீரைச்சிறுமி = சிறுகீரை

கீரைப்பாம்பு = கீரிப்பாம்பு

கீர்த்தி = குடசப்பாலை

கீர்த்திக்கொடி = ஈசுரமூலி

கீலகம் = பொருத்து, சிம்பு, ஊசிமுகக்கட்டி, பிசினி

கீலகாவகம் = தடரிப்பூடு

கீலம் = பிசின், பிளவு, குதத்தில் உண்டாகும் பிளவை, வெட்டு, முழங்கை, ஓர்கழலை

கீலரோசகம் = கிச்சிலிக்கிழங்கு

கீலாயம் = உதிரம், காடி, நீர்

கீலாம் = தண்ணீர்

கீலாலம் = தண்ணீ ர், இரத்தம், காடி, நீர், தேன், தித்திப்புக்குடிநீர்

கீலிதகிகை = அவுரி

கீழறுப்பான் = இராசபிளவை

கீழாநெல்லி = கீழ்க்காய்நெல்லி

கீழுப்பு = அமுரியுப்பு, பாறையுப்பு

கீழோசகம் = நஞ்சுமுறித்தான், அவுரி

கீழ்நோக்கி = நேர்வாளம், அபானவாயு

கீழ்ப்பாலா = ஆசினி, ஈரப்பலா

கீழ்மூக்கன் = கற்றாழை

கீழ்வரி = தண்ணீர் விட்டான்

கீழ்வாய் நெல்லி = கீழாநெல்லி

கீளகம் = தண்ணீர்

கீளத்தி = வல்லபம்

கீளை = வாலுளுவை

கீள்வரி = தண்ணீர்விட்டான்

கிள்ளி = வாலுளுவை

கீறணை = கற்பூர வழுதலை

கீறதம் = நெய்

கீறதி = வல்லபம்

கீறந்தி = கச்சோளம்

கீறிடம் = உத்தாமணி

கீறி நாயான் = நஞ்சறுப்பான்

கீறுகாள் = தசவாயுவில் ஒன்று

கீறுசன் = மஞ்சள்

கீறுதுவம் = அகில்

கீனவரை = தண்ணீர்விட்டான்

குகநன் = எலி, பாம்பு

குகம் = குகை

குகரம் = கோடகசாலை, குரல் வளை, மலைக்குகை

குகலா, குகலாத்தோளி = கடுகுரோகணி

குகறம் = கோடகசால

குகறுமுளிம்பம் = நல்லமாதுளை

குகனகக்குறம் = கஞ்சா

குகனம் = கரிசலாங்கண்ணி

குகனன் = எலி, பாம்பு

குகனவேர் = வேலமரம்

குகாட்டம் = அதிவிடையம்

குகான் = நாய்

குகியம் = குய்யம்

குகு = எலுமிச்சை

குகுரன் = நாய்

குகுலா = கடுகுரோகணி, தேன்

குகுலாத்தெளி = கடுகுரோகணி

குகுவிந்தம் = முத்தக்காசு

குகை = கோலப்புன்னை, நரிவாற்புல்

குகைக்காமன் = கல்நார்

குகைச்சீ = புற்றாஞ்சோறு

குகைவீசம் = கல்நார்

குக்கம் = இந்திரகோபம்

குக்கல் = இருமல், கக்குவான், நாய், வலியிருமல்

குக்கலாதி = வாலுளுவை

குக்கலாதிதம் = நெற்பொரி

குக்கலிங்கே = கொம்மட்டி

குக்கன் = நாய்

குக்கிடம் = கோழி, புளியாரை

குக்கிடமஷ்தகம் = செவ்வியம்

குக்கிடவண்டம், குக்கிடாண்டம் = கோழிமுட்டை

குக்கிலம் = அதிவிடையம்

குக்கிலா = மைசாட்சி

குக்கிலாற்கண் = செங்கண்

குக்கிலு = குங்கிலியம்

குக்கில் = குங்கிலியம், செம்போத்து, கள்ளிக் காக்கை, மைசாட்சி, அதிவிடையம், மயிரோசனை, வயிறு

குக்கில்பால் = குங்கிலியம்

குக்குடசரபம் = பறவை, நாகம்

குக்குடச்சூடு = கோழித்தலைக் கெந்தகம்

குக்குடத் தண்டம் = கோழிமுட்டை

குக்குடத்தவரை = கோழியவரை

குக்குடபுடம் = கோழியுரம், வரட்டியடுக்கிப் புடமிடல்

குக்குடம் = கோழி, சேவல்

குக்குடி = இலவமரம், குலவு மரம், பெட்டைக் கோழி, நரம்பு

குக்குடு = கோழி

குக்குட்பிசினி = குங்கிலியம்

குக்குமுளம் = அரக்காம்பல்

குக்குரம் = கோடகசாலை

குக்குரன் = நாய்

குக்குலு = குங்கிலியம், மைசாட்சி

குக்குல் = மைசாட்சி

குக்குவண்டம் = கோழிமுட்டை

குக்குறம் = குடசபாலை, சந்தனமரம், பச்சிலை, சாதிக்காய்

குக்குறுப்பான் = ஆந்தை

குக்கைக்குரம் = கஞ்சா

குங்கலு = குங்கிலியம்

குங்கலுகம் = வாலுளுவை

குங்கிலி = செம்போத்து, காட்டுமா

குங்கிலியம் = குக்கில், வாலுளுவை

குங்கிலு = குங்கிலியம்

குங்கிளம் = குங்கிலிகம், சாதிலிங்கம், சாதிலிங்கக் குப்பி, காரைச்செடி

குங்கிளி = வெண்சிறு வழுதலை, கத்தரி

குங்கிளிவம் = வாலுளுவை

குங்குமச்சம்பா = மஞ்சள்சம்பாநெல்

குங்குமச் செம்மலர் = சிகப்புக்கொன்றை

குங்குமதூபம் = வெள்ளை போளம்

குங்குமபாஷாணம் = அஞ்சற்குளச்சி

குங்குமபாஷாதம் = செந்துளசி

குங்குமப்பருத்தி = செம்பருத்தி

குங்குமப்பூ = சீமைமஞ்சள்பூ

குங்குமப் பேரிகம் = சிவப்பாத்தி

குங்குமம் = செஞ்சாந்தம், இரத்தம், குங்குமப்பூ, சாப்பிராவிதை, குரங்கு மஞ்சள்நாறி, சிவப்பு

குங்குமவர்ணி = அரிதாரம், மஞ்சட்கல், இரத்தபுளி

குங்குமவர்ணிச்சி = தாளகம், அரிதாரம்

குங்கும வலரி = செவ்வலரி

குங்குலிகம் = வாலுளுவை

குங்குலு = குங்கிலியம்

குசகம் = கணுப்புல்

குசக்கலத்தி = மண்பாண்டவோடு

குசக்கிரம் = தருப்பை நுனி

குசந்தனம் = பச்சிலை, கொடிப் பட்டை, தேவதாரி

குசடதச்சன் = எட்டி

குசடம் = வெட்பாலை அரிசி

குசத்தி = சவர்க்காரம், பூவழலை, ஓடு, சாதிக்காய், பூநீறு

குசத்திரசத்தி = தாமரை வளையம்

குசத்தின் பாகி = சிறுபுள்ளடி, பற்பாடகம்

குசத்தின்பாதி = சிறுபுள்ளடி

குசந்தம் = தருப்பைப்புல்

குசந்தனம் = செஞ்சந்தனம்

குசந்தின்பாதி = சிறுபுள்ளடி

குசபலம் = மாதுளைமரம், விளா

குசப்பிரியம் = பவளம்

குசப்புல் குசமரம் = தருபபைப்புல்

குசமாம் = குதப்பைப்புல்

குசம் = நீர், புளிநறளை, காட்டுத்துளசி, மரம், முலை, நீர், தொப்புள், சாமைப்புல், மூடம், குற்றம், தருப்பைப் புல், துவரை

குசம்பு = நறளை

குசரப்பிஞ்சு = அத்திப்பிஞ்சு

குசலம் = மாயவித்தை

குசலா = காஞ்சொறி

குசலி = ஆரைமரம்

குசவன் = கல்லுப்பு, வழலையுப்பு

குசவிருஷ்தகம் = மலைமாங்காய்

குசவீசம் = காட்டாத்தி

குசன் = தருப்பைப்புல்

குசா = வசம்பு

குசாச்சம் = குரங்கு

குசாடு = தருப்பைப்புல்

குசாமியம் = மலைமா

குசாரன் = நாரத்தை

குசாலமலகம் = காட்டு மாங்காய், மலை மாங்காய்

குசிகம் = குதிரைச்செவி, குங்கிலியமரம், இசுபகோல், எண்ணெய் கடுகு, தான்றி

குசிம்பிகை = அரக்கு

குசினி = சிறுபயறு

குசுட்டை = மரமஞ்சள், கோஷ்டம்

குசுண்டம் = வெண்கருங்காலி

குசுபம் = பூ, அகத்தி

குசுமசத்தம் = நாணல்

குசுமபனை = மரமஞ்சள்

குசுமம் = காயாமலர், காயா மலையிலுப்பை, சங்கங்குப்பி, மாதுளை ரசம், சாதிப்பூ

குசுமாகவம், குசுமாசவம் = தேன்

குசுமாஞ்சனம் = புஷ்பாஞ்சனம்

குசுமாரகம் = வெயிற்காலம்

குசுமாலிகை = தாமரைச்செடி

குசுமோ = சங்கங்குப்பி

குசுமோபனம் = தருப்பைப்புல், குசப்புல்

குசும்பம் = செந்துருக்கம், குங்குமப்பூச்செடி

குசும்பாப்பு = லாலாப்பூ

குசும்பிகை = அரக்கு

குசுரணம் = குங்குமப்பூ

குசுலம் = குதிரை

குசூவம் = கீரிப்பாம்பு

குசேகம், குசேசம் = தாமரை

குசேகயம் = தாமரைப்பூ

குசேசியம் = தும்பை

குசேயம் = தாமரைப்பூ

குசேலிகை = வட்டத்திருப்பி

குசை = நாணல், தருப்பைப் புல், குதிரைமயிர்

குச்சகம் = நாணல், தருப்பைப் புல், பற்பாடகம், குன்றி, அலர்ந்தபூ

குக்ககாகிதம், குச்சகாதிகம் = சத்திசாரணை

குச்சதந்திகம் = வாழை

குச்சத்தின்பாதி = சிறுபுள்ளடி

குச்சபலம் = தேற்றான், கணுப்பாலை, திராட்சை, முள்ளி, கண்டங்கத்திரி

குச்சபாதி = சிறுபுள்ளடி

குச்சபுட்கம், குச்சபுட்பம் = ஏழிலைப்பாலை, புங்கு, தாதகிபுட்பம்

குச்சபுரதி = ஏழிலைப்புன்னை

குச்சப்பாலை = வெட்பாலை

குச்சம் = குன்றிமணி, மலர்க் கொடி, நாணற்புல், பற்பாடகம், மலை மல்லிகை, வெட்பாலை, தர்ப்பைப் புல், பேய்ப்பீர்க்கு, பூங்கொத்து, பிரம்பு

குச்சனர் = குன்றிமணி

குச்சாகரம் = செந்துவரை

குச்சி = சீனக்காரம், மயிற் சிகைப்பூண்டு, பூவழலை, அரிவாள் மனைப் பூண்டு

குச்சிதம் = கடம்பு

குச்சிதாங்கம் = கடம்பை

குச்சிராகிதம் = சந்திரகாந்தம்

குச்சு = நாராயணன், சுள்ளி, சிற்றாமுட்டி

குச்சை = குன்மகேசரி

குச்சைகுரம், குச்சைக்குப்பம் = காசா

குச்சோ = புங்கமரம்

குஷ்டம் = கோஷ்டம்

குஞ்சகம் = குன்றிமணி

குஞ்சகாரம் = புளிநரளைக்கிழங்கு

குஞ்சகிவம் = நெபத்திகை

குஞ்சடிகம் = வேலிப்பருத்தி

குஞ்சணம் = சிவதை

குஞ்சத்தான் = சீதாங்கபாஷாணம்

குஞ்சந்தனம் = செஞ்சந்தனம்

குஞ்சப்புல் = காட்டுக் கேழ்வரகு

குஞ்சம் = குன்றிமணி, தந்தம், புளிநரளை, மருள், குன்றிக்கொடி, குஞ்சப் புல், கூன், பூங்கொத்து, சீதாங்க பாடாணம், நரளை, குட்டை

குஞ்சரகணம் = யானைத்திப்பிலி

குஞ்சரசன் = அரசு

குஞ்சரதிப்பிலி = யானைத்திப்பிலி

குஞ்சரத்தி = அதிகபசியை எழுப்பும் ஒரு நோய்

குஞ்சரபிப்பிலி = யானைத்திப்பிலி

குஞ்சரபுட்பி = கருங்கொடி

